திருமலை-திருப்பதி தேவஸ்தான வெளியீடு.



# செம்பொருள்

ஆசிரியர் :

பண்டிதை - எஸ். கிருஷ்ணவேணியம்மையார்.

1952

திருமலை - திருப்பதி தேவஸ்தான வெளியீடு.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# செம்பொருள்

ஆசிரியர்:
சென்னை ஸ்ரீ வைணவப்பெண்கள் சங்கத்தின் தலைவியாரும்,
முன்னைய மகளிர் இல்லத் தலைவியாரும்,
சென்னை - லேடி - வில்லிங்டன் போதனாமுறைக் கல்லூரித்
தலைமைத் தமிழ் ஆசிரியருமாகிய
**பண்டிதை - எஸ். கிருஷ்ணவேணியம்மையார்**

திருமலை - திருப்பதி தேவஸ்தானம் ட்ரஸ்ட் போர்டார் சார்பில்
எக்ஸிகியூட்டிவ் ஆபீஸர்:
C. அண்ணாராவ், B.A., அவர்களால்
பிரசுரிக்கப்பட்டது.

**1952**





# பொருளடக்கம்

## 1. திருமந்திரம்

பொருள் பக்கம்

## 2. துவயம்

## 3. சரமசுலோகம்

| பொருள் | | பக்கம் |
|---|---|---|

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# முன்னுரை

—(0)—

ஸ்ரீவைஷ்ணவராய்ப் பிறந்து வீட்டின் பேற்றைப் பெற அவாவி நிற்கும் ஒவ்வொருவரும் திருமந்திரம், துவயம், சரமசுலோகம் ஆகிய இரகசியங்கள் மூன்றன் பொருளையும் அறிய வேண்டுவது இன்றியமையாததாகும். இவற்றுள் ஒவ்வொன்றன் சிறப்பியல்புகளும் அதனதன் தோற்றுவாயில் வெளியிடப்பட்டுள்ளன. இது நிற்க.

ஆசாரியர் நம்பிள்ளையின் கடாட்சத்தினால், வடக்குத் திருவீதிப்பிள்ளைக்குப் பிள்ளை லோகாசாரியர் திருக்குமாரராய் அவதரித்தருளினர்; இவர் பதினெட்டு இரகசியங்களையும் வெளியிட்டுள்ளார். அவற்றுள் இம்முமுட்சுப்படியும் ஒன்று. நுண்பொருள்கள் பல பொதிந்துள்ள இக்கிரந்தத்தின் சூத்திரங்களுக்கு ஸ்ரீமணவாள மாமுனிகள் சிறந்த வியாக்கியானம் (விளக்கவுரை) எழுதியுள்ளார்கள். ஆயினும், இச்சூத்திரங்களும், வியாக்கியானமும் சாத்திர ஞானமுடையவர்க்கே பெரிதும் பயனளிப்பனவாகும். ஆதலின், சாமானிய ஞானமுடையவரும் இதன் (முமுட்சுப்படியின்) பொருளை அறிந்து பயனடைதற்பொருட்டு, ஸ்ரீமணவாள மாமுனிகளின் வியாக்கியானத்தைத் தழுவி இயன்றமட்டும் தமிழ்ப்போக்கிலேயே இந்நூல் வரையப்பட்டுள்ளது. அங்ஙனமிருப்பினும், சிற்சில இடங்களில் வடமொழிகளையும், சாத்திரக் கருத்துகளையும் அங்ஙனமே எடுத்து ஆண்டுகொள்ள வேண்டிய இன்றியமையாமையும் ஏற்பட்டது. அவைகளும் கூடியவரை விளக்கப்பட்டுள்ளன.

இந்நூல், கதைநூல், காவியநூல், ஆராய்ச்சிநூல் ஆகியவற்றைச் சேர்ந்ததன்றாதலின், இதில் முறையே உலகப்போக்கையோ, கற்பனையையோ, வேறு பல நூல்களிலிருந்து தெரிந்துகொண்ட நுட்பங்களையோ நுழைத்துப் படிப்பவருக்கு வினோதத்

தையும், களிப்பையும், இன்பத்தையும் ஊட்டுதற்கில்லை. இது, சாத்திரமுறைக்குச் சிறிதும் மாறுபடாமல், உள்ளதை உள்ளவாறே இயம்ப வேண்டிய ஒரு தத்துவநூல். தவிர, இது மற்ற வைணவக் கிரந்தங்கள் யாவற்றிலும் தலைநின்றதும், ஒரு சேதனன் இன்றியமையாது அறிய வேண்டிய பொருள்களைத் தெரிவிப்பதில் முதன்மையுற்றதுமாகும். இத்துணைச் சீர்மை வாய்ந்ததும், தத்துவங்கள் நிரம்பியதுமான இந்நூல், இயன்றமட்டும் படிப்பவருக்கு விளக்கமுற்று, இன்பமூட்ட வேண்டுமென்னும் கருத்தைக் கொண்டே, இஃது அவதாரிகை, மூலம், பொருள், விளக்கம் என்ற அடைவில் அமைக்கப்பட்டுள்ளது.

இங்ஙனம் அமைக்கப்பட்ட இக்கிரந்தத்திற்குச் 'சேம்போருள்' என்னும் பெயர் ஒருவாறு பொருத்தமானதாகும் எனக் கருதியே இதற்கு இத்திருநாமம் சூட்டப்பட்டது.

முதன்முதல் அடியாளுடைய பஞ்சஸம்ஸ்கார ஆசாரியர் ஸ்ரீ உ. வே. திருமழிசை கந்தாடை சுத்தசத்வம் ஸ்ரீகிருஷ்ணமாசாரிய சுவாமிகள் சன்னிதியில், 1929—ஆம் ஆண்டு இம்முமுட்சுப்படியைச் சுருக்கமாய்க் கேட்கும் புண்ணியம் அடியாளுக்குக் கிடைத்தது. ஆயினும், இதன் விரிந்த பொருளை நன்கு தெரிந்துகொள்ள வேண்டுமென்பதில் அடியாளுக்கேற்பட்ட பேரவா, 1930—ஆம் ஆண்டு பிரபன்ன வித்துவான் - திருப்புறம்பயம் D. இராமசாமி நாயுடு அவர்களாலேயே முற்றுப்பெற்றது. அடியாளுக்கு எம்பெருமான் புரிந்த நிர்ஹேதுக கடாட்சங்களுள் இஃதும் ஒன்ருகும். இப்பெரியார், ஏறக்குறைய மூன்று திங்களில் இக்கிரந்தத்தை எங்கள் குடும்பத்தினருக்கும் அடியாளுக்கும் தெள்ளத்தெளியப் போதித்தனர். ஆயினும், அடியாளின் அற்ப அறிவாகிற கலம், இதன் நுட்பப் பொருள்கள் யாவற்றையும் நிரப்பிக்கொள்ளுதற்கேற்ற அளவுடையதாயில்லை. ஆனல், இக்கிரந்தத்தை மேற்கூறிய பெருந்தகையாரிடம் கேட்டதும், "கடினமானதும், சிறந்ததும், ஆன்ம உய்விற்கு இன்றியமையாததுமான இதை நம்மனோர்க்கு எடுத்துரைக்கும் தொண்டை மேற்கொள்ள வேண்டும்," என்னும் ஆர்வத்தினல், திருவல்லிக்கேணிப் பெரிய தெருவிலிருக்கும் மகளிர் இல்லத்தில் 1931—ஆம் ஆண்டு இம்மூன்று இரகசியங்களும் அனுபவிக்கப்பட்டுச் சாத்தும் முற்றுப்பெற்றது.

அன்றியும், ஆசாரியர் அருளை முன்னிட்டு அடியாள் அற்ப அறிவிற்கேற்ப இக்கிரந்தத்தை எளிய தமிழ் நடையில் வெளியிட்டுப் பலருக்கும் பயன்படச் செய்ய வேண்டும் என்னும் எண்ணம் 1940 - ஆம் ஆண்டு தோன்றிற்று. இக்கருத்தை மேற்படி திருப்புறம்பயம் சுவாமிகளிடம் விண்ணப்பித்த போது, அப்பெரியார் இக்கருத்தை மகிழ்வுடன் வரவேற்றனர். ஆனால், அத்தூயோர் இப்போதிருந்து இத்தொண்டைக் கடாட்சிக்கும் பேற்றை அடியாள் பெருமைக்குப் பெரிதும் வருந்துகிறேன்!

பின்பு 1941-ஆம் ஆண்டு (அப்பா அண்டு கம்பெனி) ஸ்ரீமான் K. வேங்கடசாமி நாயுடு B.A.B.L., & M,L.A., அவர்கள் வெளியிட்ட தரிசனம் என்னும் மாத இதழில் 'திருமந்திரப் பிரகரணமும்,' ஸ்ரீமத் வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரிய சுவாமிகளின் மணிவிழாவில் வெளிவந்த நினைவு மலரில் 'துவயப் பிரகரணமும்' மிகச் சுருக்கமான முறையில் வெளியிடப்பட்டன. ஆயினும், இத்தொண்டுகள் அடியாளுக்கு அத்துணை மனநிறைவை அளித்தில, அதனால், "இம்மூன்று இரகசியங்களையும் சிறிது விரித்தெழுதி, ஒரு தனி நூலாக அச்சிட வேண்டும்," என்னும் ஆர்வம் மேலிட்டது. "இது தத்துவ விஷயமாதலின், இதை நன்கு கற்றுத் தேர்ந்த ஓர் அறிஞருக்குக் காண்பியாமல், அச்சிடுதல் அறிவுடைமையன்று," என்னும் எண்ணம் அதைத் தடுத்தது. இதனால், மேற்கூறிய ஸ்ரீமத்-வை. மு. கிருஷ்ணமாசாரியருக்குத் துவயத்தை மட்டும் ஒரு முறை படித்துக் காட்டினேன். அப்பெரியார், "நன்றாக இருக்கிறது! அச்சிடலாம்," என்றனர். அப்போதுதான் அரைப்பங்கு அச்சம் நீங்கிற்று.

ஆயினும், இதன் நுட்பப் பொருளைக் காண்பதில் துறைபோயவரும், ஒன்றும் தெரியாதவருக்கும் பொருள் புரியுமாறு இதைப் போதிப்பவரும், அரிய தத்துவங்களையும் எளிய முறையில் எடுத்தியம்பி மக்கட்கு ஞானமூட்டுபவரும், ஸௌலப்பியத்தையே அணியெனக் கொண்டவருமான காரப்பங்காடு உ. வே. ஸ்ரீமத் வேங்கடாசாரிய சுவாமிகள் இதை ஒரு முறை கடாட்சித்தல் நலமென்பது மனத்திற்பட்டது.

முற்கூறிய திருப்புறம்பயம் சுவாமிகள் திருநாடு அலங்கரித்த பின்பு, இவ்வாசிரியரிடம், பகவத்கீதை, திருவாய்மொழி, ஆசாரிய ஹிருதயம் முதலியவற்றின் காலக்ஷேபங்களைக் கேட்டுக்கொண்

டிருப்பினும், சுவாமிகளோடு நெருங்கிப் பழகியதோ, வார்த்தை யாடியதோ இல்லாமையின், பெரியாரை நேராகக் கேட்க அச்சமா யிருந்தது. இதற்குப் புருஷகாரம் செய்தவர், ஸ்ரீமான் அரங்கசாமி அய்யங்கார் ஆவார். அவர் புருஷகாரத்தின் உறுதி என்றும் மறக்கற்பாலதன்று.

சுவாமிகள், தங்களுக்குள்ள பல தெய்வத் தொண்டுகளுக் கிடையில் இச்செயலைப் புரிய மிக்க அன்புடன் உடன்பட்டார்கள். இதற்குச் சுவாமிகளின் அருட்டன்மையையன்றி, வேறெதனைக் காரணமாக இயம்ப இயலும்! சுவாமிகள், ஒவ்வொரு பகுதியையும் ஊன்றிப் பார்த்துச் சாத்திரக் கருத்து மாறுபடும் இடங்களில் திருத்தஞ் செய்தார்கள். அன்றியும், இக்கிரந்தம் முடியுமட்டும் ஒரு சிறிதும் சோர்வின்றி, முகமலர்ச்சியுடன் புரூப்புகளை ஊன்றிப் பார்த்துதவிய சுவாமிகளின் பெருந்தகைமை பாராட்டற்குரிய தாகும். இக்கிரந்தத்தில் அமைப்பு, பொருட்பொருத்தம் ஆகியன செம்மைப்பட அமைந்திருக்கின்றன என அறிஞர் கருதுவரேல், அப்பெருமை சுவாமிகளுக்கே உரியதாகும். இத்துணை நலம் புரிந்த சுவாமிகளுக்கு அடியாள் செய்யும் கைம்மாறு யாதுளது!

“கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்<br>
டென்னாற்றுங் கொல்லோ உலகு!”

என்னும் குறளின்படி “இச்சீரியர் செய்த உதவியும் பயன் கருதா ததே!” என வாளா இருக்க வேண்டுபவளாயுள்ளேன். ஆயினும், சுவாமிகளுக்குப் பல நலன்களும் உண்டாக அருள் புரிய வேண்டு மெனப் பார்த்தசாரதிப் பெருமானை இறைஞ்சுகின்றேன்!

அடியாளுக்கு முதன்முதலில் தமிழறிவை ஊட்டிய ஆசிரியர் செந்தமிழ் - இரத்தினகரம் - வல்லை - சண்முகசுந்தர முதலியாருக் கும், அடியாள் இச்சிறு அறிவையேனும் பெறுதற்குப் பல வழிகளி லும் முயன்ற என் பெற்றோருக்கும், இத்தகைய தொண்டுகளைப் புரிய ஊக்கமளித்துவரும் தங்கை திருவாட்டி T. பதுமாவதியம்மா ளுக்கும் என் நன்றியைச் செலுத்துகிறேன். அடியாள் கூடிய மட்டும் பிழையின்றி எழுதுதற்குச் சில இலக்கண முறைகளைக் காட்டித் தந்த திருவாளர் வித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளையவர்கள் தொலைவிலிருத்தலால், யாவற்றையும் நோக்க முடி யாமற்போயினும், தமக்குக் கிடைத்த புரூப்புகளை உடனுக்குடனே திருத்தஞ்செய்து அனுப்பியமைக்கு என் மனமார்ந்த வணக்கத்தை யும் நன்றியறிதலையும் அவருக்குச் செலுத்தப் பெரிதும் கடமைப் பட்டுள்ளேன். வேறொரு சிறு பயனையும் கருதாது அடியா ளுக்கு இத்தகைய தெய்வத் தொண்டுகளில் உதவி புரிந்து வரும் மேற்படி பிள்ளையவர்கட்கு இறைவன் அருள் கூடுவதாக!

இம்முமுட்சுப்படியைச் சிறிதளவிலேனும் பிறருக்கு எடுத்துச் சொல்வதற்கும், நூலளவில் எழுதுவதற்கும் அறிவை ஊட்டி என் ஆன்மாவை உய்யச் செய்த பிரபன்ன வித்துவான் - திருப்புறம்பயம் சுவாமிகளை ஒரு நாளேனும் மறத்தற்கியலுமோ? இச்சீரியரை என்றும் மறவாதிருக்கப் பகவான் அருள் புரிவானாக.

பலருக்கும் பயன்படக் கூடியதும், பலரையும் உய்விக்கத் தக்கதுமான இக்கிரந்தத்தை இலவசமாக அச்சேற்றி வெளிப்படுத்திய திருமலை - திருப்பதி தேவஸ்தான எக்ஸிகியூட்டிவ் ஆபீஸர்- C. அண்ணாராவ், B.A., அவர்கட்கு என் மனமார்ந்த வணக்கத்தையும் என் நன்றியையும் உரித்தாக்குகிறேன். இதற்கு மூல காரணமாயிருந்த சகோதரர் கனம் - அமைச்சர் K. வேங்கடசாமிநாயடு, B.A.,B.L., M.L.A. அவர்கள் மேன்மேலும் இத்தகைய தெய்வத் தொண்டுகளைப் புரிய ஸ்ரீநிவாசன் அவர்கட்கு நீண்ட ஆயுளையும், ஆழ்ந்த ஞானத்தையும், உயரிய பதவியையும் அளிப்பானாக!

சீரியதும் அரியதுமான தம் வியாக்கியானத்தைத் தழுவி, 'செம்பொருள்' என்னும் இந்நூலை எழுத அடியாளுக்கு அருள் புரிந்த ஸ்ரீமணவாள மாமுனிகள் திருவடிகளுக்குச் சொரூபாநுரூபமான நமஸ்காரத்தைச் சமர்ப்பிக்கின்றேன். மேன்மேலும் இத்தகைய தொண்டுகள் புரிதற்குச் சுவாமிகளின் அருள் பொழிவதாக. இந்நூலை அச்சேற்றுங்கால், அடியாள் விரும்பியவாறு புரூப்புகளை அனுப்பி, பெரும்பான்மையும் திருத்தங்களை அமைத்து, நூல் செவ்விய முறையில் வெளி வருதற்கு அடியாளுடன் ஒத்துழைத்த அச்சகத் தலைவர் அவர்கட்கு என் மனமார்ந்த வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

கம்பர் "ஆசைபற்றி அறையலுற்றேன்" எனச் செப்பியவாறு, ஆர்வம் ஒன்றையே காரணமாகக் கொண்டு வெளியிட்ட இக்கிரந்தத்தில் அடியாளின் கல்விக் குறைவாலும், அறியாமையாலும், ஊன்றிய சாத்திர ஞானமின்மையாலும் குற்றங்கள் பல காணப்படலாம். அவற்றைத் தள்ளிக் குணங்களை மட்டும் ஏற்றுக் கொள்ளுமாறு அறிஞரைப் பிரார்த்திக்கின்றேன்.

இக்கிரந்தத்தை, தோன்றாத் துணையாயிருந்து அரிய பொருள்களையும் அறியுமாறு அருள் புரிந்த ஸ்ரீவேங்கடேசன் திருவடித் தாமரைகளுக்குக் காணிக்கையாகச் சமர்ப்பிக்கின்றேன்.

S, கிருஷ்ணவேணி.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அணிந்துரை

சாஸ்த்ரம் சாஸ்த்ர தாத்பர்யம் எனத் தத்துவநூல் இருவகைப் படும்: வேத வேதாந்தங்களைச் சாஸ்த்ரம் என்றும், திருமந்த்ரம் முதலிய ரஹஸ்யங்களைச் சாஸ்த்ர தாத்பர்யம் என்றும் அருளிச் செய்வர் ஆன்றோர்.

"பரம புருஷனே, வ்யாஸரிடம் அந்தர்யாமியாய் நின்று, சாஸ்த்ரமான வேதவேதாந்தங்களையும், அவற்றின் பொருள்களையும் ஸ்ரீ பதரிகாச்ரமத்தில் நாராயணனாய் அவதரித்து, சாஸ்த்ர தாத்பர்ய மான திருமந்திரத்தையும் வெளியிட்டருளினான்," என்பது,

"முனிவரை யிடுக்கியும் முந்நீர் வண்ணனாயும் வெளியிட்ட சாஸ்த்ர தாத்பர்யங்களுக்கு விசிஷ்ட நிஷ்க்ருஷ்ட வேஷங்கள் விஷயம்."

என்னும் ஆசார்ய ஹ்ருதய ஸூத்திரத்தால் நன்கு புலனாகும். இந்த ஸூத்ரம், சரீரத்தோடுங் கூடிய ஆத்மாவைப் பற்றியது சாஸ்த்ரம் என்றும், தனி ஆத்மாவை மட்டும் விஷயமாய்க் கொண் டுள்ளது சாஸ்த்ர தாத்பர்யம் என்றும் சொல்லுகிறது.

இங்ஙனம் மிகச்சிறப்பமைந்த திருமந்த்ரம் என்னும் ரஹஸ் யத்தையும், இதன் விரிவாயுள்ள மற்ற இரு ரஹஸ்யங்களையும், இவற் றின் சீரிய பொருள்களையும் எம்பெருமானாருக்கு முன்புள்ள ஆசாரி யர்கள், தகுதி வாய்ந்தவருக்கு ரஹஸ்யமாகவே உபதேசம் செய்து வந்தார்கள் என்பதும், எம்பெருமானாரோ இவற்றின் சீர்மையை நோக்காது, ஸம்ஸாரி சேதனர் படும் துன்பங்களையே நோக்கி, பலரும் இவற்றை அறிந்து உஜ்ஜீவிக்கும்படி உபதேசம் செய்தருளி னார் என்பதும் குருபரம்பரை முதலிய க்ரந்தங்களால் நாம் நன்கு அறியலாம்.

எம்பெருமானாருக்குப் பின்புள்ள ஆசாரியர்களுள் மிகச் சிறந் தவரும், கூரத்தாழ்வான் திருக்குமாரரும், ஸர்வஜ்ஞருமான

ஸ்ரீ பராசர பட்டரோ, அங்ஙனம் உபதேசிப்பதுடன் நில்லாமல், தமக்குப் பின்புள்ளாரும் இதைத் தெள்ளிதின் அறிந்து ஆத்மோ ஜ்ஜீவனம் பெறுமாறு அஷ்ட ச்லோகீ (எட்டுச் சுலோகங்களடங்கி யது) என்னும் ஸம்ஸ்க்ருத க்ரந்தத்தை அருளிச் செய்தது ஸ்ரீவைஷ் ணவ உலகத்தில் ஸுப்ரஸித்தமானது.

இம்மஹானுக்கு (பட்டருக்கு) முற்காலத்திலும் பிற்காலத்தி லும் ஸமகாலத்திலும் இருந்த சில ஆசாரியர்கள், ரஹஸ்ய க்ரந்தங்கள் சிலவற்றை அருளிச் செய்ததாய் ஊஹிக்க இடமிருப் பினும், பெரியவாச்சான் பிள்ளைக்கும், பிள்ளை லோகாசார்யருக்கும் முந்தின மஹான்களின் ரஹஸ்ய வ்யாக்யான க்ரந்தங்கள் இக்காலத் தவரான நமக்கு அனுபவ யோக்யங்களாய் இல்லை.

பெரியவாச்சான்பிள்ளை, பின்புள்ளாருக்குப் பயன்படுமாறு பல ரஹஸ்ய வ்யாக்யானங்களை உபகரித்த மஹாநுபாவர் என்பது ஸ்ரீவைஷ்ணவர்கள் அறிந்ததேயாம்.

இம்மஹாநுபாவருக்கு ஸப்ரஹ்மசாரியான வடக்குத் திரு வீதிப் பிள்ளைக்குத் திருக்குமாரரும், தேவப் பெருமாளுடைய அபராவதாரமென்று ஸுப்ரஸித்தரும், மஹாப்ராஜ்ஞருமான பிள்ளை லோகாசார்யரே அஷ்டாதச ரஹஸ்ய க்ரந்தங்களை அழகாகவும் அநவத்யமாகவும் அருளிச்செய்தவராவர் :

இந்த அஷ்டாதச ரஹஸ்ய க்ரந்தங்களுள் முமுக்ஷுப்படி என்னும் இத்திவ்ய க்ரந்தமே பலபடியாலும் வீறுபெற்றுள்ளது.

இங்ஙனம் சிறப்புப் பெற்ற இக்கிரந்தத்திலுள்ள ஸூத்ரங்கள் ப்ருஹ்ம ஸூத்ரங்கள் போன்றுள்ளன. ஆதலின், வ்யாக்யான மின்றி இதன் பொருளை யாவருக்கும் அறிதலரிது என்பதைத் திருவுள்ளம் பற்றி எம்பெருமானருடைய அபராவதாரமென்று ஸுப்ரஸித்தரும், ஸகல சாஸ்த்ரபாரங்கதரும் ,விசதவாக்சிகாமணியு மான மணவாள மாமுனிகள் இதற்கு மிகச் சிறந்த வ்யாக்யா னத்தை அருளிச்செய்துள்ளார்கள். இது நிற்க.

'செம்பொருள்' என்னும் இம்முமுக்ஷுப்படி வ்யாக்யான க்ரந்தம் மாதுஸ்ரீ - பண்டிதை - S. கிருஷ்ணவேணியம்மையாரால் இயற்றப் பெற்றுள்ளது.

'செம்பொருள்' என்னும் இச்சொற்றொடர் செம்மையான பொருள் என விரியும். "இதற்குமேல் செவ்விய பொருள்

வேறொன்றுமில்லை," எனச் செப்புதற்கான செம்மை உடையது எது? ஸ்ரீய: பதியான பரம புருஷன் என்னும் உயரிய பொருளே ஆகும். அதற்கு அவ்வருகு போதற்குப் பொருள் ஏது? இங்கு, "உயர்வற உயர்நலமுடையவன் யவன்" என்னும் ஆழ்வார் திருவாக்கு நினைவிற்கு வருகிறது. ஆதலின், 'செம்பொருள்' என்னும் இது பகவானைக் குறிக்கிறதெனக் கொள்ளல் வேண்டும். இப்பரமனை உள்ளபடி அறிந்துகொள்வதுதான் உண்மை அறிவாகும்.

இம்முறையில் பிறவிக்கு முதற்காரணமாயுள்ள அறியாமை நீங்குதற்கும், வீட்டின் பேற்றைப் பெறுதற்கும் முக்ய காரணமாயும், தூயதாயும், என்றும் ஒரே தன்மையதாயுமுள்ள செம்பொருளை (ஈச்வரனை) அறிவதே ஒருவனுக்கு உண்மை அறிவு என்பதை,

> " பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
> செம்பொருள் காண்ப தறிவு."

என்னும் குறட்பாவினால் தெய்வப் புலவர் காட்டியுள்ளார். இஃதே இதற்குத் தக்க சான்றாகும்.

ஒருவன், இவ்வுண்மை அறிவைப் பெற வேண்டுமானால், பரம தத்துவமாயும், பரம ஹிதமாயும், பரம புருஷார்த்தமாயுமுள்ள ப்ரம புருஷனையும், அப்பரமனுக்குச் சேஷப் பொருளாயுள்ள ஜீவாத்மாவையும், பகவானை அடைதற்குத் தடையாயுள்ள ப்ரக்ருதியினடியாக ஏற்படும் அஹங்கார மமகாரங்களையும் இன்றியமையாது அறிதல் வேண்டும் என்பர் அறிஞர்.

இவற்றை, இந்நூல், முமுக்ஷுப்படி என்னும் மூல க்ரந்தத்தையும், மணவாள மாமுனிகள் அருளிச்செய்த வியாக்யான க்ரந்தத்தையும் தழுவி விரித்துரைக்கின்றமையின் இப்பெயர் இதற்கு நன்கு பொருந்தும்.

இந்நூலை அச்சிடுவதற்கு முன்பும், அச்சிடுங்காலத்திலும் பன்முறை அனுபவித்ததுண்டு. உண்மையில் மிக மகிழ்ந்தேன்!

சிலர் தமக்குள்ள புலமையைக் காட்டுதற்கென்றே ஒருவாறு கடுஞ்சொற்களைப் பெய்து, பொருள்களையும் மறைத்து எழுதிப் போருவர். இந்நூலாசிரியரான இவரோ, அங்ஙனமன்றித் தமது அறிவும் ஆற்றலும் அனைவர்க்கும் பயன்படுமாறு, விசால நோக்கு

கொண்டு, சீரிய பொருள்களைச் சிற்றறிவினரும் எளிதில் தெளிவாய் அறிந்து அகமகிழுமாறும், ஆத்மோஜ்ஜீவனம் பெறுமாறும் மிக இனிய எளிய நடையில் பூர்வாசாரியர்களின் திருவுள்ளக் கருத்துகளுக்குச் சிறிதும் முரண்படாது இதை அமைத்திருக்கும் அழகு மிகவும் போற்றத் தக்கதாகும்!

இந்நூலை ஆஸ்திகர் அனைவரும் ஆழ்ந்து அனுபவித்து அகங் குழைந்து, ஆத்மோஜ்ஜீவனம் அடையுமாறு ஸ்ரீவேங்கட க்ருஷ்ணன் இன்னருள் புரிவானாக! இந்நூலாசிரியரான இவருக்கும் இன்னும் இங்ஙனம் உள்ள ஸ்ரீவைஷ்ணவத் தொண்டுகளை மேன்மேலும் க்ருபை செய்வானாக வேணுமென்று ப்ராத்திக்கும்

கோதா நிலையம்
மாதவன் ஸந்நிதி ஸமீபம், மயிலை.
24—2—52

வேங்கடாசாரியார்,
காரப்பங்காடு.









ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# முமுட்சுப்படி

## தோற்றுவாய்:

உலகம் தோன்றிய காலத்திலிருந்து மக்களிடையே சமயம் என்பது ஒன்று உலவி வருகின்றது. எங்ஙனம் பகலவனையும் கதிர்களையும் வெவ்வேருகப் பிரித்தற்கியலாதோ, அங்ஙனமே சமயத்தையும் மக்களையும் தனித்தனியே பிரித்தற்கியலாது. சமயம் அவர்கள் உயிரோடும் உடலோடும் ஒன்றி நிற்கின்றது. இதை அறியாத சிலர், "சமயம் தனிப்பட்டது. இதை மேற்கொண் டொழுகுவது மிகக் கடினம். இதைப் பற்றுதற்கு வயது முதிர்ந் தவர்க்கும் துறந்தவர்க்குமே முடியும்," எனச் சொல்லி மக்க ளுக்கு அச்சத்தை உண்டாக்குகின்றனர். சிலர் இங்ஙனம் பகர்ந்து கொண்டிருப்பினும், சமயம் மக்களை விடாமற்பற்றிக்கொண் டிருப்பது உண்மை. அவர்களும் அதை விட்டுத் தனித்து வாழ இயலாதவர்களாகவே இருக்கின்ருர்கள்.

சமயம் என்பது யாது? சமயம் என்பதற்கு நெறி, கொள்கை என்னும் சில பொருள்கள் உள்ளன. ஒருவர் நாடோ றும் தம் வாழ்க்கையை ஒழுங்கு பெற நடத்துதற்குச் சில நன் னெறி அல்லது நற்கொள்கைகளை வகுத்துக்கொள்ள வேண் டாவா? அன்றேல், அவர் வாழ்க்கை, முறையோடு நடை பெறுமா? இந்த நன்னெறிகளின் கூட்டமே சமயம் எனச் செப் பப்படுகிறது. இம்முறையில், சமயம் என்பது, ஒவ்வொருவர்

வாழ்க்கையோடும் பிரிக்க முடியாத நிலையில் பிணிப்புண்டிருக்கின்றன எனக் கூறுதற்கு ஐயம் யாது?

இங்ஙனம் மக்கள் வாழ்க்கையுடன் தொடர்புற்றிருக்கும் சமயங்கள் பலவாகும். அவற்றுள் வைணவ சமயமும் ஒன்று. இது பல உயரிய கொள்கைகளைத் தன்னகத்தே கொண்ட ஒரு பரந்த சமயமாகும். இச்சமயம் விஷ்ணுவை முதற்கடவுளாகக் கொண்டுள்ளது. விஷ்ணு என்பதற்கு எங்கும் நிறைந்தது என்பது பொருள். இதனால், ஒவ்வொரு பொருளின் உள்ளும் புறமும் நிறைந்து அதைக் காத்துக்கொண்டிருக்கும் பொருளுக்கே விஷ்ணு என்னும் பெயர் அமைந்துள்ளது என்பதை அறிந்தாம்.

பெரிய பிராட்டியாரின் தலைவனாய், ஸ்ரீ வைகுண்ட வாசனாய், நித்திய முத்தர்களால் அனுபவிக்கப்படுபவனாய், அளவு கடந்த ஆனந்தமுடையவனாய் இருக்கும் ஈசுவரன், சமுசாரத்தில் உழன்று கொண்டிருக்கும் மக்களை நோக்குகின்றான். அவர்களிடத்தில் அவனுக்கு இரக்கம் உண்டாகிறது. "அந்தோ! நித்திய சூரிகளைப் போன்றே நம்மை அனுபவித்து, நமக்கு நாளும் கைங்கரியம் புரிந்து, இன்புற்று வாழ்தற்கேற்ற உரிமை இம்மக்கட்கிருந்தும், அதை இழந்து இங்ஙனம் துன்புற்று வாழ்கின்றனரே!" என்னும் அனுதாபத்தைக் கொள்கின்றான்; அதனால் இறகில்லாத பறவைகளைப்போன்று பிரகிருதியில் மயங்கிக் கிடக்கும் ஆன்மாக்களுக்கு முன் கூறியபடி உடல் முதலியவற்றை ஈந்து, அவர்களை உலகில் உதிக்கச் செய்கின்றான்; உதித்தவர்கள், உயர்நெறியை மேற்கொண்டு ஒழுகுதற்கு வேதம், ஸ்மிருதி (தரும சாத்திரங்கள்), இதிகாசம், புராணம் முதலியவற்றையும் உதவுகின்றான்.

ஆயினும், அவற்றைக் கற்றுத் தெளிந்து அவற்றின்படி நடத்தற்கு மக்களுக்குப் பல தகுதிகள் வேண்டும். ஆதலின், அவற்றின் மூலம் ஞானம் பிறந்து சேதனர் உய்தல் அரிதாயிருந்தது. இதை மனங்கொண்ட பகவான், சேதனர், எல்லாச் சாத்திரங்களின் கருத்தையும் எளிதில் அறியச் செய்ய வேண்டுமெனக் கருதி, ஆன்ம நிலை, உபாய நிலை (ஈசுவரன்), உபேய நிலை (பலம்) ஆகிய மூன்றன் உண்மைகளையும் தெள்ளிதின் உணர்த்துகின்ற **திருமந்திரம், துவயம், சரமசுலோகம்** என்னும் மூன்றையும் தானே ஆசாரியனாய் நின்று வெளியிட்டருளினான்.

இவற்றுள் திருமந்திரத்தைப் பதரிகாசிரமத்தில் நரனுக்கும், துவயத்தை ஸ்ரீ விஷ்ணு லோகத்தில் பெரிய பிராட்டியாருக்கும், சரமசுலோகத்தைத் திருத்தேர்த் தட்டில் தன்னையே சரணென்று பற்றிய அருச்சுனனுக்கும் உபதேசித்தருளினான். இதனாற்றான், பகவான் குருக்களின் வரிசையில் முதற்குருவாகச் சொல்லப் படுகிறான்.

இவைகள் மூன்றும் முறையே எட்டு, இருபத்தைந்து, முப்பத் திரண்டு திருவட்சரங்களைப் பெற்று, எளிமையுடையனவாய் இருக் கின்றன. ஆனால், இவற்றுள் அடங்கி இருக்கும் பொருள்கள் மிக நுட்பமானவை. ஒருவனுக்கு இப்பொருளைத் தன் சொந்த அறிவினா லும், சாத்திரங்களின் உதவியினாலும் தானே அறிந்துகொள்ளுதற்கு இயலாது. இப்பொருளை அறிந்தாலொழிய, அவனுக்கு உய்வு உண்டாகாது.

இத்துணைப் பெருமை வாய்ந்த இந்த இரகசியங்கள் மூன்றன் பொருள்களையும், நம் பூருவாசாரியர் தம் சிஷ்யர்களுக்கு உபதேசித் தருளினர். அங்ஙனம் அவர்கள் பரம்பரையாய் உபதேசித்த விசேஷார்த்தங்கள், யாவருக்கும் எளிதாகவும் தெளிவாகவும் தெரியு மாறு, **பிள்ளை லோகாசாரியர்**, தமது மிக்க கருணையினால் இப்பிரபந் தத்தின் மூலம் அருளிச் செய்தார்; இவர், இதற்கு முந்தியே, இம் மந்திரங்களின் பொருளை **யாத்ருச்சிகப்படி, பரந்தபடி, ஸ்ரீயப்பதிப்படி** என மூன்று பிரபந்தங்களால் வெளியிட்டுள்ளார். ஆனால், யாத்ருச் சிகப்படி அதிக சுருக்கமாயும், பரந்தபடி அதிக விரிவாயும் இருந் தன. ஸ்ரீயப்பதிப்படியோ, முற்கூறிய இரு குற்றங்களும் அற்ற தாயிருப்பினும், அதில் வடமொழி வாக்கியங்கள் நிறைந்திருத்த லின், அவ்வடமொழி, கல்லாதவருக்கு அதன் பொருளறிதல் கடின மாயிருந்தது. ஆதலின், இறுதியாய் இம்மூன்று குற்றங்களும் இல்லாததாயும் யாவரும் எளிதில் தெரிந்துகொள்ளக் கூடியதாயும் உள்ள முமுட்சுப்படி என்னும் இப்பிரபந்தத்தை வெளியிட்டார்; அன்றியும், அம்மூன்று பிரபந்தங்களிலும் சொல்லப்படாத பல அர்த்தங்களையும் இதில் புலப்படுத்தியுள்ளார். இதனாற்றான், மற்றப் பிரபந்தங்கள் இருக்கவும், இதையே யாவரும் கற்க விரும்புகின்ற னர்.

இதற்கு மணவாள மாமுனிகள் விளக்கமான ஒரு வியாக்கி யானம் (விரிவான பொருள்) செய்துள்ளார்கள்.

பலருக்கு இதன் பொருளைத் தெரிந்துகொள்ள வேண்டு மென்னும் அவா உள்ளது. ஆயினும், இதை ஓர் ஆசாரியர் மூல மாய்க் கற்றவர்கள் பிறருக்கு எடுத்துரைத்தாலல்லாமல், இதி லுள்ள நுட்பப் பொருளைத் தாமே படித்து அறிந்துகொள்ளப் பெரும்பாலாருக்கு முடியவில்லை. அன்றியும், ஒவ்வொரு வைணவ ரும் தம் சமயத்தைப்பற்றிய தத்துவங்களை அறிய வேண்டுவது இன்றியமையாததாலால், இம்முமுட்சுப்படியையும் வியாக்கியா னத்தையும் தழுவிச் சிறிது விளக்கமாயும், இக்காலத்தவர் அறிந்து கொள்வதற்குத் தக்கதாயும் இந்நூல் செய்யப்பட்டுள்ளது.

S. கிருஷ்ணவேணி.

# முமுட்சுப்படி

## திருமந்திரம்

அவதாரிகை : மோட்சத்தில் இச்சையுடையவன் இன்றியமையாது அறிந்துகொள்ள வேண்டுவன யாவை? என்னில், அவற்றை அருளிச் செய்கிறார் :

**மூலம் : 1. முமுட்சுவுக்கு அறிய வேண்டும் ரஹஸ்யம் மூன்று.**

பொருள் : மோட்சத்தை அடைய விரும்புகின்றவன் திருமந்திரம், துவயம், சரமசுலோகம் ஆகிய மூன்று இரகசியங்களையும் தெரிந்துகொள்ள வேண்டும்.

விளக்கம் : உலகத்தில் வாழும் மானிடர், கருத்தாலும் செயலாலும் பல திறப்பட்டவராய் இருத்தலைக் காணலாம். சிலர், பொருள் திரட்டுவதிலேயே காலங்கழிப்பர்; சிலர், இவ்வுலக இன்பத்திலேயே ஆழ்ந்திருப்பர்; சிலர், கல்வி அறிவைப் பெருக்குவதிலேயே காலங்கழிப்பர். ஆனால், ஒரு சிலருக்கு இறைவனருளால், அழிந்து போகக்கூடியதும் துன்பம் நிறைந்ததுமான இவ்வுலக வாழ்க்கையில் வெறுப்பும், அழியாததும் இன்பம் நிறைந்ததுமான வீடு பேற்றில் (மோட்சத்தில்) விருப்பும் உண்டாகின்றன. இவர்களே 'முமுட்சுக்கள்' எனப்படுவார்கள். சுருங்கச் சொல்லின், மோட்சத்தில் இச்சையுடையவர்களுக்கு 'முமுட்சுக்கள்' என்பது பெயர்.

துன்பங்கலவாத இன்பம் எதுவோ, அதுவே 'மோட்சம்' எனப்படும். இந்த இன்பம், ஆன்மானுபவம், ஈசுவரானுபவம் ஆகிய இரண்டிலும் உண்டாகின்றது. இவ்விரண்டனுள், ஆன்மானுபவத்தில் விருப்பமுள்ளவனுக்குக் கைவல்யார்த்தி என்பதும், ஈசுவரானுபவத்தில் இச்சையுள்ளவனுக்குப் பகவத் பிராப்தி காமன் என்பதும் பெயர். இவ்விரு திறத்தினரும் முமுட்சுக்கள் எனப்படுவர். கைவல்யார்த்திக்குத் திருமந்திரம், துவயம், சரமசுலோகம் ஆகிய இம்மூன்று மந்திரங்களின் பொருளையும் அறிந்துகொள்ள வேண்டிய அவசியமில்லை. ஆதலின், பகவானைக் கிட்டப்

பெற்று, அவனுக்கு அநுபவ கைங்கரியங்களைச் செய்து, அவனுடைய முகோல்லாசத்தைப் பெற வேண்டும் என்னும் இச்சையால் சமுசாரத்தில் வெறுப்புக் கொண்டவனாகிய முமுட்சுவே இங்குச் சொல்லப்படுபவன். அவனுக்கு, ஆன்மசொரூபம்[1] இன்னது என்றும், அவ்வான்மா நலமடைதற்கு உபாயம் இன்னது என்றும், அவ்வுபாயத்தைப் பற்றுவதனால் உண்டாகும் பயன் இன்னது என்றும் தெரிய வேண்டும். இவற்றைத் தெரிவிப்பன இந்த மூன்று இரகசியங்களே ஆகும்.

திருமந்திரம், துவயம், சரமசுலோகம் ஆகிய இம்மூன்றும், சகல வேதங்களின் சாரமான பொருளைத் தெரிவிப்பதனாலும், இவற்றின் பெருமையை உணராதார் காதில் விழாதவாறு இவற்றை மறைக்க வேண்டியிருத்தலினாலும் இவைகள் 'இரகசியங்கள்' என்னும் பெயரைப் பெற்றன.

இம்முதற்சூத்திரத்தினால், இம்மந்திரங்கள் மூன்றற்கும் அதிகாரிகள் இன்னார் என்பதும், அவ்வதிகாரிகள் அறிய வேண்டுவன இவை என்பதும் வெளிப்படுத்தப்பட்டன.

அவதாரிகை: 'இம்மூன்று இரகசியங்களுள்ளும் முதலில் அறியத்தக்கது எது?' என்ன, இயம்புகிறார்:

**மூலம்: 2. அதில் ப்ரதம ரஹஸ்யம் திருமந்த்ரம்.**

**பொருள்:** இம்மூன்று மந்திரங்களுள் முமுட்சுவானவன் முதலில் தெரிந்துகொள்ள வேண்டுவது திருமந்திரமாகும்.

**விளக்கம்:** ஆன்மாவின் உண்மைச் சொரூபம் இன்னதென்பதையும், அந்நிலைக்கேற்பச் சேதனன்[2] விட வேண்டுவன இவை என்பதையும், பற்ற வேண்டுவன இவை என்பதையும் தெரிவிப்பது இம்மந்திரமேயாகும். இவற்றை நன்கு அறிந்தவருக்கே துவயம், சரமசுலோகம் ஆகிய மற்ற இரண்டு மந்திரங்களிலும் சொல்லப்படும் உபாயத்திலும் பலத்திலும் விருப்பம் ஏற்படும். ஆதலின், ஆன்மாவின் உண்மைச் சொரூபத்தைத் தெரிவிக்கும் இத்திருமந்திரமே முதலில் அறியத்தகுந்த இரகசியம் எனக் கூறுவதில்

---

குறிப்பு: 1. ஆன்மசொரூபம்—சரீரத்தைக்காட்டிலும் வேறுபட்ட ஆன்மா, தனக்கும் பிறருக்கும் உரிமையுடையதாயில்லாமல், ஈசுவரனுக்கே அடிமைப்பட்டதாய் (சேஷபூதனாய்) இருத்தல்.

2. சேதனன் - அறிவுள்ளவன்.

குறையில்லை. இன்னும், மேற்கூறிய இம்மூன்று இரகசியங்களும் ஒன்றையொன்று விரித்துரைக்கும் முறையில் அமைந்துள்ளன.

முதலில் உள்ள திருமந்திரத்தில், 'ஓம்' 'நமः' 'நாராயணாய' என்னும் மூன்று பதங்கள் அடங்கியுள்ளன. இவற்றுள் 'ஓம்' என்னும் பதத்தின் பொருளையே, 'நமः' 'நாராயணாய' என்னும் மற்ற இரு பதங்களும் நன்கு விரிவுபடுத்துகின்றன. இவ்விருபதங்களின் பொருளையே துவயம் விரிக்கிறது. இத்துவயத்தின் பொருளையே சரமசுலோகம் விரிக்கிறது. இதனாலும் திருமந்திரத்தின் முதன்மை விளங்குகிறதன்றோ? இவை ஒன்றற்கொன்று விளக்கமாயிருத்தலின் தன்மை பின்னர்க் கூறப்படும்.

இத்திருமந்திரம், தன்னை ஜபிக்கின்றவருக்கு இரட்சகமாயிருத்தலின், 'மந்திரம்' எனப் பெயர் பெற்றது.

சிலர், இம்மந்திரத்தைக்கொண்டு ஜபம்[1] ஓமம்[2] முதலியவைகளைச் செய்து, ஈசுவர பத்தியின் உற்பத்தியைத் தடை செய்யும் பாவங்களிலிருந்து விலகித் தம்மைத் தூய்மைப்படுத்திக்கொள்ளக் கருதுகின்றனர். அவர்கட்கு உபாஸகர்[3] என்பது பெயர். அவ்வுபாஸகர்க்கு இத்திருமந்திரம் தன் சத்தசத்தியினால் இரட்சகமாகிறது.

சிறந்த ஞானிகள், "ஈசுவரனாகிற உபேயத்தை (பலத்தை) அடைவதற்கு, ஜபம் ஓமம் முதலியன உபாயங்களாகா; அவனே உபாயமாய் இருக்கிறான் (ஈசுவரனே உபாய உபேயம்)" என நினைக்கின்றார்கள். அவர்கட்குப் பிரபன்னர் என்பது பெயர். அப்பிரபன்னருக்கு இத்திருமந்திரம் அர்த்தஞானத்தை ஊட்டுமுகத்தான் இரட்சகமாகிறது.

---

குறிப்பு: 1. ஜபம்—அருகில் இருப்பவர் செவியிலும் விழாதபடி தனக்கு மட்டும் கேட்குமாறு மந்திரங்களை உச்சரித்தல்.

2. ஓமம்—மந்திரங்களை உச்சரித்துக்கொண்டே, பரமாத்துமாவைக் குறித்துப் பால் நெய் பொறி முதலியவற்றுள் ஏதாவதொன்றை அக்கினியில் சேர்ப்பது.

3. உபாஸகர்—உபநிஷத்துகளில் மோட்சத்திற்குச் சாதனமாய்ச் சொல்லப்பட்ட தகர வித்தை முதலியவற்றுள் ஏதாவதொன்றை மேற்கொள்பவர்.

இத்திருமந்திரம் உபாஸகருக்கு அதிருஷ்டவிதயா[1] உபகாரகத்தையும், பிரபன்னருக்குத் திருஷ்டவிதயா[2] உபகாரகத்தையும் புரிகிறது.

அவதாரிகை : இம்மந்திரத்தின் பெருமையை விரிவாகச் சொல்ல உளங்கொண்டு, முதலில் இதனுடைய அநுசந்தானத்தின் முறையைப் பகருமுகத்தான், இதன் சிறப்பை வெளியிடுகிறார் :

**மூலம் : 3. திருமந்த்ரத்திநுடைய சீர்மைக்குப் போரும் படி ப்ரேமத்தோடே பேணி அநுஸந்திக்க வேணும்.**

பொருள் : இத்திருமந்திரம், எல்லா வேதங்களின் சுருக்கமாய், அறிய வேண்டுவனவாகிய எல்லா அர்த்தங்களையும் (அர்த்த பஞ்சக ஞானத்தையும்[3]) தெரிவிப்பதாய், எல்லா மந்திரங்களிலும் மேலானதாய், தூய்மையானவற்றுள் மிக்க தூய்மையுடையதாய் உள்ளது. ஆதலின், ஒருவன் இதன் சீர்மைக்கேற்ப, மனமாசற்றவனாய், மனத்தை வேறெவ்விடத்திலும் செலுத்தாமல், இத

---

குறிப்பு : 1. அதிருஷ்டவிதயா உபகாரகம்—உபாஸகர் இத்திருமந்திரத்தைக்கொண்டு ஜபம் ஓமம் முதலியவற்றைச் செய்யுங்கால், இது பகவானுடைய அருள் மூலமாய்ப் பத்தி உற்பத்திக்குத் தடையாயுள்ள பாவங்களைப் போக்கி, அவர்கட்குத் தூய்மையை உண்டுபண்ணுகிறது.

2. திருஷ்டவிதயா உபகாரகம்—பிரபன்னருக்கு இத்திருமந்திரத்தின் பொருளைப்பற்றிய அறிவு, 'தேகமே ஆன்மா' என்னும் நினைவையும், தனக்குத்தான் உரியன் என்னும் எண்ணத்தையும், தான் மற்றவருக்கு அடிமை என்னும் புத்தியையும், தன் இரட்சணத்திற்குத் தான் உரியவன் என்னும் கருத்தையும், அழியும் சுற்றத்தினரிடம் வைக்கும் அன்பையும், ஐம்புலன்களிடத்திலும் செலுத்தும் ஆசையையும் அறவே ஒழிக்கிறது. இம்முறையில், இது பிரபன்னருக்கு உண்மையான சொரூபஞானத்தை உண்டுபண்ணி, அதன்படி ஒழுகுமாறும் உதவி புரிகிறது.

3. அர்த்த பஞ்சகம்—(1) ஆன்மாவின் இயல்பு, (2) ஈசுவரனது இயல்பு, (3) ஆன்மா அடையும் பயன், (4) அப்பயனை அடைதற்கு உபாயம், (5) அப்பயனை அடைதற்குப் பகையாய் உள்ளவைகள். இவை முறையே (1) ஆன்ம சொரூபம், (2) ஈசுவர சொரூபம், (3) பல சொரூபம், (4) உபாய சொரூபம், (5) விரோதி சொரூபம் எனப்படும். இவற்றைக் குறித்து விளக்கமாகத் தெரிந்துகொள்வதே 'அர்த்தபஞ்சகஞானம்' எனப்படும்.

னிடத்திலேயே முழு மனத்தையும் இருத்தி, தகுதியற்றவர் செவியில் விழாதபடி இதை மிக்க அன்புடன் பாராட்டி அநுஸந்திக்க வேண்டும்.

அவதாரிகை: 'இங்ஙனம் இம்மந்திரத்தினிடத்தில் மட்டும் ஆர்வம் உண்டாயின், இஃது இவனுக்கு நலமளிக்குமோ?' என்ன, அதற்கு விடை பகருகிறார்:

**மூலம்: 4. "மந்த்ரத்திலும், மந்த்ரத்துக்குள்ளீடான வஸ்துவிலும் மந்த்ரப்ரதனான ஆசார்யன் பக்கலிலும் ப்ரேமம் கநக்க உண்டானால் கார்யகரமாவது."**

போருள்: அறிய வேண்டுபவைகளை அறிவிக்கும் இம்மந்திரத்திலும், (1) **சேஷித்துவம்,** (2) **சரண்யத்துவம்,** (3) **பிராப்பியத்துவம்** ஆகிய இம்மூன்றையும் தனக்குத் தர்மமாய்ப் பெற்றுள்ள ஈசுவரனாகிற பொருளிலும், இம்மந்திரம் ஆசாரியருக்கு வசப்பட்டிருத்தலால், இதைச் (4) **சாத்திர முறைப்படி** தனக்கு அன்புடன் உபதேசித்த ஆசாரியரிடத்திலும் அவரவர் பெருமைக்கேற்ப ஒருவன் மிக்க பத்தி செய்ய வேண்டும். அப்போதுதான் இம்மந்திரம் அவனுக்கு நலமளிப்பதாகும்.

விளக்கம்: (1) **சேஷித்துவம்:** பிரணவத்தில் சேதனன் ஈசுவரனுக்குச் சேஷபூதன் என்னும் பொருள் சொல்லப்பட்டிருக்கிறதே தவிர, ஈசுவரன் சேதனனுக்குச் சேஷி என்னும் பொருள் சொல்லப்பட்டிலது. ஆயினும், சேதனன் ஈசுவரனுக்குச் சேஷபூதன் என்னில், ஈசுவரன் சேதனனுக்குச் சேஷி என்னும் பொருள், **துல்ய வித்தி வேத்யதயா*** தோன்றும். ஆதலின், பிரணவத்தில் ஈசுவரனுக்குச் சேஷித்துவம் உண்டு என்பது பெறப்படும்.

(2) **சரண்யத்துவம்** (ரக்ஷகத்வம்): திருமந்திரத்தின் மத்திம பதமான 'நமஃ' என்னும் பதத்தால் 'எனக்கு நான் இல்லை,' என்னும் பொருள் வெளிப்படும். இதனால், 'எனக்கு ஈசுவரன் உண்டு,' என்னும் பொருள் கிடைக்கும். அஃதாவது, இவனுக்கு ஈசுவரன் சரண்ய (ரக்ஷக)ப் பொருளாய் இருக்கிறான் என்பது.

---

**குறிப்பு: *துல்ய வித்தி வேத்யதயா—ஒரு மன்னனுக்கு ஒருவன் வேலைக்காரன் என்னில், அவ்வேலைக்காரனுக்கு அம்மன்னன் தலைவன் என்பது தோன்றுகின்றதன்றோ? அப்படித் தோன்றுவதைத்தான் 'துல்யவித்தி வேத்ய தயா' எனச் சொல்லுவர்.**

(3) பிராப்பியத்துவம் : இறுதியான 'நாராயண' என்னும் சொற்றொடர், 'நார + அயன' என்னும் சொற்கள் சேர்ந்து உண்டானது. 'நாராணும் + அயனம் + யஃ + ஸஃ' என்று புணர்ச்சி இலக்கணம் சொல்லும் போது, 'நாராயணஃ' என்றாகிறது. 'நார' என்னும் சத்தத்திற்கு அசித்தும் சித்தும் பொருளாயிருப்பினும், இங்கு அசித்தை விலக்கி, சித்துப் பொருளாகிய சீவான்மாக்களின் திரளையே கொள்ள வேண்டும். 'அயனம்' என்னும் சொல், 'இண்' என்னும் தாதுவிலிருந்தேனும், 'அய' என்னும் தாதுவிலிருந்தேனும் உண்டாகும் போது, கர்மணி வ்யுற்பத்தியில் ஈசுவரன் பிராப்பியப் பொருள் (அடையப்படும் பொருள்) என்பது விளங்குகிறது. இதனால், பகவானுக்குப் பிராப்பியத்துவம் உண்டு என்பது பெற்றும்.

பிராப்பியம், உபேயம், சாத்தியம் என்பன, ஒரே பொருளைக் குறிப்பன.

(4) சாத்திர முறைப்படி உபதேசித்தல் : ஓர் ஆசாரியர், தம் சிஷ்யனுக்கு உபதேசிக்குங்கால், தம்முடைய ஆசாரியருக்குப் பரதந்திரரான தம்மை இவனுக்கு ஆசாரியர் எனக் கருதாமல், தம் ஆசாரியரே இவனுக்கும் ஆசாரியர் என்றும், தம் ஆசாரியருக்குத் தம்மைப் போன்றே இவனும் சிஷ்யன் என்றும் நினைத்தல் வேண்டும்; சிஷ்யனுடைய பொருளையோ, அவன் தொண்டையோ தாம் விரும்புதல் கூடாது. இச்சிஷ்யன் ஈசுவரனுடைய மங்களாசாஸனத்திற்குத் தக்கவனாக வேண்டுமெனக் கருதுதலே முறையாகும். இவ்வாறன்றி, "இவனைத் திருத்தி நன்மார்க்கத்தில் செலுத்துவதனால், பகவானுக்கு முகோல்லாசம் ஏற்படுதலாகிய கைங்கரியம் நமக்குக் கிடைக்கும்," என்றேனும், "இவ்வுலகில் வாழும் நாட்களில் இவனோடு சேர்ந்திருத்தலாகிய கூட்டுறவு நமக்கு உண்டாகும்," என்றேனும் எண்ணுதல் கூடாது. இம்முறைகளைப் பின்பற்றி உபதேசித்தலே, சாத்திர முறைப்படி உபதேசித்தல் எனப்படும்.

அவதாரிகை : இம்மந்திரம் தோன்றிய முறையைச் சொல்லு முகத்தான், இதனுடைய ஒப்பற்ற மகிமையை வெளியிடுகிறார் :

**மூலம் : 5. "ஸம்ஸாரிகள் தங்களையும் ஈச்வரனையும் மறந்து, ஈச்வர கைங்கர்யத்தையும் இழந்து, இழந்**

தோமென்கிற இழவுமின்றிக்கே, ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலே விழுந்து நோவுபட, ஸர்வேச்வரன், தன் க்ருபையாலே இவர்கள் தன்னையறிந்து கரை மரஞ்சேரும்படி, தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று, திருமந்த்ரத்தை வெளியிட்டருளினான்."

பொருள் : சமுசாரிகள் பகவானுக்கு அடிமைப்பட்டிருத்தலையே (சேஷப்பட்டிருத்தலையே) இலட்சணமாயுடைய தங்கள் நிலையையும், தங்களுக்கு நிருபாதிக சேஷி[1]யாயுள்ள பகவானுடைய தன்மையையும் மறந்தார்கள். இங்ஙனம் மறந்ததனால், ஈசுவரனுக்குத் தாங்கள் புரிய வேண்டிய கைங்கரியமாகிற சிறந்த பலத்தையும் (புருஷார்த்தத்தையும்) இழந்தார்கள் ; இம்முறையில், "ஈசுவரத் தொண்டிற்கெனவே தோன்றிய நாம் எம்பெருமான் கைங்கரியத்தை இழந்துவிட்டோமே !" என்னும் கிலேசம் சிறிதுமின்றியே சமுசாரமென்னும் பெருங்கடலிலே விழுந்து ஆத்யாத்மிகம்[2] ஆதி பௌதிகம்[3] ஆதி தைவிகம்[4] என்னும் மூவகைத் துன்பங்களால் உழன்றுகொண்டிருந்தார்கள். இவ்வகைத் துன்பங்கட்குக் காரணம், முற்கூறிய அர்த்தபஞ்சக ஞானம் இன்மையேயாகும்.

அறிவுடைய சேதனர் இங்ஙனம் தம்முடைய கன்மங்களால் சுழன்றுகொண்டு, தம் காலத்தைப் பயனற்ற வழியில் கழித்தல்,

---

குறிப்பு : 1. நிருபாதிக சேஷி—ஒரு காரணமுமின்றியே ஆட்கொள்பவன். அஃதாவது, உயிர்களுக்கு இயற்கை வழியினாலேயே தலைமை பெற்றவன்.

2. ஆத்யாத்மிகம்—தன் சரீரத்தையும் மனத்தையும் பற்றி வரும் துன்பங்கள். இது சரீர ஆத்யாத்மிகம், மன ஆத்யாத்மிகம் என இரு வகைப்படும். சரீர ஆத்யாத்மிகம்—உடலைப் பற்றிக்கொண்டு வரும் தலைவலி, காய்ச்சல், குஷ்டம், இருமல் முதலிய பிணிகள். மன ஆத்யாத்மிகம்—காமம், குரோதம், பொறாமை முதலியன.

3. ஆதி பௌதிகம்—பிசாசம், துஷ்ட ஜந்துக்கள், மனிதர், இராக்கதர் முதலியவர்களால் ஏற்படும் துன்பங்கள்.

4. ஆதி தைவிகம்—காற்று, மழை, வெயில், இடி முதலியவற்றால் தெய்வ சங்கற்பமாய் உண்டாகும் துன்பங்கள்.

பரம கருணாநிதியாகிய ஈசுவரனுக்குத் தாங்க முடியவில்லை. ஆதலின், அநாதியாய் எல்லாப் பொருள்களோடும், ஈச ஈசிதவ்ய[1] சம்பந்தத்தையுடைய பகவான், இச்சேதனர்கள் தங்களையும் தன்னையும் அறிந்து, தானாகிற மரக்கலத்தைக்கொண்டு தங்கள் பிறவியாகிய கடலைக் கடந்து, வீடாகிய அக்கரையை அடைவதற்கேற்ற அறிவைப் பெறுதற்பொருட்டுத் தானே சிஷ்யனுமாய் ஆசாரியனுமாய் நின்று, அநாதியானதும் அர்த்தபஞ்சகத்தைச் சுருக்கமாய்த் தெரிவிப்பதுமான திருமந்திரத்தை வெளியிட்டருளினான்.

விளக்கம் : சமுசாரிகள் : அநாதி காலமாய் ஏற்பட்டிருக்கும் சரீரத் தொடர்பினால், பொருளில் வேறுபாடிருப்பினும், முன்பிருந்த பெயரோடும் உருவத்தோடும் வருகின்ற அவித்யா[2] கர்மம்[3] வாசனை[4] ருசி[5] ஆகிய இவற்றிற்கு வசப்பட்டுப் பிறப்பு இறப்பு முதலிய துன்பங்களில் உழல்கின்றவர்கள்.

வினா : சூத்திரத்தில் 'அறியாமல்' என்னாது மறந்து எனக் கூறுவது என் ?

விடை : சேதனன் அநாதி காலமாய்த் தனக்கும் ஈசுவரனுக்கும் ஏற்பட்டிருக்கும் உண்மைத் தொடர்பை நோக்கின், இச்சேதனன் முன்பு நினைத்திருந்த ஒன்றை இப்போது மறந்துவிட்டான் எனத்தான் கூற வேண்டும்.

---

குறிப்பு : 1. ஈச ஈசிதவ்ய சம்பந்தம்—இரட்சகன் இரட்சியன் என்னும் சம்பந்தம்.

2. அவித்யா—அஞ்ஞானம். தேகத்தையே ஆன்மா என எண்ணும் நினைவும், தான் ஈசுவரனுக்குச் சேஷப்பட்டவன் அல்லன், தனக்காகவே இருப்பவன் என்னும் அபிமானமுமாகும்.

3. கர்மம்—மேற்குறித்த அபிமானத்தினால் விளையும் புண்ணிய பாவங்கள்.

4. வாசனை—இஃது அவித்யா வாசனை, கர்ம வாசனை என இரு வகைப்படும். அவித்யா வாசனை—அரவம் முதலியவற்றைக் காணுங்கால் அஞ்சுதல் முதலியவற்றிற்குக் காரணமான அஞ்ஞான வாசனை. கர்ம வாசனை—துரும்பு முதலியவற்றைக் கிள்ளுதற்குக் காரணமாயுள்ள கர்ம வாசனை.

5. ருசி—பாவச் செயல்களையோ, புண்ணியச் செயல்களையோ அறிந்தே செய்தற்குக் காரணமாயுள்ள சுவை.

"மறந்தே னுன்னை முன்னம்"[1] என்பதை நோக்குக.

**வி௫:** இங்கு இழந்தனர் எனக் கூறுவதேன்?

**விடை:** சேதனர், முற்கூறிய அறியாமையினுல் தமக்கென வகுக்கப்பட்ட சேஷியான ஈசுவரன் விஷயத்தில் செய்ய வேண்டிய கைங்கரியத்தைச் செய்யப் பெருமலும், அக்கைங்கரியத்தின் பெருமையை நினையாமலும், இப்பலத்தைப் பெறுதற்பொருட்டே தாம் இருந்தும், அதைக் கருதாமலும், உலக விஷயங்களிலே இச்சையுடையராய்க் கிடக்கும் இவர்கள் நிலையை நினைத்து 'இழந்தனர்' என்கிருர்.

**வி௫:** இங்கு 'அருளிச்செய்தான்' எனக் கூருது, 'வெளியிட்டருளினுன்' எனச் செப்புதற்குக் காரணம் யாது?

**விடை:** இப்போது இவன் ஒன்றைப் புதிதாய்க் கற்பிதம் செய்து இயம்பினுன் அல்லன்; அனுதியாயும், சுருக்கமாயுமிருந்த ஒன்றை, மக்களுடைய துன்ப நிலையைக் கண்டு பொருது ஒளிரச் செய்தான் என்பது தோன்றுகைக்காகவே இங்ஙனம் கூறினுர்.

**அவதாரிகை:** எம்பெருமான் ஆசாரியனுய் நின்று இம்மந்திரத்தை வெளியிட்டருளியது போதாதோ? சிஷ்யனுய் நின்றது எதன் பொருட்டு?

**மூலம்:** 6. "சிஷ்யனுய் நின்றது சிஷ்யனிருக்கும் இருப்பு நாட்டாரறியாமையாலே, அத்தை அறிவிக்கைக்காக."

**பொருள்:** மேற்கூறிய சாத்திரமுறையின்படி உபதேசிக்கும் ஆசாரியனைச் சென்றடைந்து, தன் ஆன்ம உய்வின்பொருட்டு நல்லுபதேசங்களைப் பெறக் கருதும் உத்தம சிஷ்யனுக்குச் சில இலக்கணங்கள் அமைந்திருத்தல் இன்றியமையாததாகும். இவ்விலக்கணங்களை உலகத்தார் நன்கு அறிந்துகொள்ளாமையின், இவற்றைத் தன் செயல்களினுல் அறிவித்தற்பொருட்டே தான் சிஷ்யனுய் நின்ருன்.

அன்றியும், தான் ஆசாரியனுய் நின்று உபதேசம் செய்தலை மட்டும் மேற்கொண்டிருப்பின், "பகவான் தனக்குப் பெருமை

1. பெரிய திருமொழி—6: 2: 2.

யைத் தேடிக்கொள்ளுதற்பொருட்டே இங்ஙனம் நின்ருன்,'' எனச் சிலர் நினைக்கவும் கூடும்; அங்ஙனமன்றி, தானே சிஷ்யனுமாய் நின்று, அச்சிஷ்யன் இயற்ற வேண்டுவனவற்றைத் தான் செயலால் செய்து காட்டுங்கால், “இவை நமக்கும் வேண்டும்,'' எனச் சிஷயன் அறிந்து அவற்றை மேற்கொள்வதற்கு இடந்தருமன்ருே?

விளக்கம்: சிஷ்ய இலக்கணங்கள்: சாத்திர நம்பிக்கை, அறங்களை மேற்கொள்ளும் இயல்பு, விஷ்ணு பத்தி, ஆசாரியரிடம் அளவற்ற அன்பு, ஆசாரியருக்கு மகிழ்வை உண்டாக்குதற்கேற்ற சாதுரியம், ஆசாரிய கைங்கரியத்தில் விருப்பு, தன் உடல் பொருள் ஆவிகளையும், அறிவையும், குணங்களையும் ஆசாரியனுக்கே உரிமையாக்குந் தன்மை, இந்திரியங்களின் அடக்கம் முதலியனவாகும்.

இன்னும், மணவாளமாமுனிகள், ஸ்ரீவசனபூஷண வியாக்கியானத்தில், தன் ஆன்ம சொரூபத்திற்கு விரோதிகளான ஐசுவரிய கைவல்யங்களில் மறந்தும் தொடர்பு கொள்ளாதிருத்தல், ஆசாரியனைத் தவிர வேருெரு பலமும் இல்லையென்றிருத்தல், தனக்கு ஏற்பட்ட ஞானத்திற்கு விரோதியாயுள்ள இம்மண்ணுலகிலிருந்து விரைவில் நீங்காமையை நினைத்து வருந்துதல், ஆசாரியனைப் பிரிய நேருங்கால் ஆருத் துயரில் ஆழ்தல், ஆசாரியன் அருளிச் செய்த எம்பெருமான் குணங்களை அனுபவிப்பதில் அவாக் கொள்ளுதல், ஆசாரியனைக் காணுங்கால் மிக்க பசியுடையவன் சோற்றைக் கண்டது போல ஆனந்தித்தல், ஆசாரியன் பெருமையைக் கண்டு பொருமை கொள்ளாதிருத்தல் முதலியன உத்தம சிஷ்யனுடைய இலக்கணங்கள் எனத் தெரிவித்துள்ளார். அவற்றையும் இங்கு நினைப்பூட்டிக்கொள்ளுதல் வேண்டும்.

அவதாரிகை: இங்ஙனம் சிஷ்யனுய் நின்று, “இம்மந்திரத்தைக் கற்ருல்தான் ஞானம் உண்டாகுமோ? உலகில் எல்லாச் சாத்திரங்களும் ஞானத்தைத் தரக்கூடியவைகளாய் இருக்க, அவற்ருல் ஞானம் பிறந்தால் என்ன?'' என வினவுவாருக்கு, மற்றவைகளினல் பிறக்கும் ஞானத்திற்கும் இத்திருமந்திரத்தால் பிறக்கும் ஞானத்திற்கும் உள்ள ஏற்றத்தாழ்வை உதாரண முகத்தான் விளக்குகிருர்:

மூலம்: 7. "ஸகல சாஸ்த்ரங்களாலும் பிறக்கும் ஜ்ஞாநம் ஸ்வயமார்ஜிதம் போலே; திருமந்த்ரத்தால் பிறக்கும் ஜ்ஞாநம் பைத்ர்கதநம் போலே."

பொருள்: ஏனெனில், தத்துவஞானத்திற்குச் சுருதி ஸ்மிருதி முதலிய பல சாஸ்திரங்கள் காரணமாயிருப்பினும், அவற்ருல் உண்டாகும் ஞானம், தானுய்ப் பன்னுட்கள் உழைத்துத் தேடும் செல்வத்திற்கு ஒப்பானது. ஆசாரியனுல் உபதேசிக்கப்படும் இத் திருமந்திரத்தால் ஏற்படும் ஞானமோ, தன் முன்னோர் தனக்கெனத் திரட்டி வைத்த பெருநிதிக்கு ஒப்பானது.

விளக்கம்: தானுய் உழைத்துப் பொருள் தேடுங்கால் எங்ஙனம் பல விதத் துன்பங்கள் ஏற்படுகின்றனவோ, அங்ஙனமே சாத்திரங்களைப் படித்து அவற்றிலிருந்து உண்மை ஞானத்தைப் பெறுதற்குப் பல அருமைப்பாடுகள் உண்டாகின்றன. ஆதலின், அவற்ருல் மனச் சோர்வும் புத்திக் கலக்கமும் ஏற்படுகின்றன.

எங்ஙனம் ஒருவன், தன் முன்னோர் திரட்டிவைத்த நிதியைக் கொண்டு காலங் கழிக்குங்கால், அதைக் காக்குந் துன்பந் தவிர, அதைத் திரட்டும் துன்பம் முதலியன இல்லாமல், உடற்சுகத்தைப் பெற்று இவ்வுலக இன்பத்தைத் துய்க்கின்ருனே, அங்ஙனமே ஆசாரியனுடைய உபதேசமூலமாய் ஏற்பட்ட இத்திருமந்திரத்தின் உயர்ந்த ஞானத்தினுல், சேதனர், ஆன்ம நலத்தை எளிதிற் பெற்று வீட்டின்பத்தைத் துய்க்கின்றனர்.

அவதாரிகை: 'மற்றச் சாத்திரங்களைகாட்டிலும், திருமந்திரம் எளிதில் உண்மை ஞானத்தை உணர்த்துவதாயின், அச்சாத்திரங்களை விட்டுவிடுவோம். ஆயினும், பகவானுடைய மந்திரம் இஃதொன்று மட்டுமன்றே? இன்னும் பல இல்லையோ? அவற்றின் வழியாய் ஞானத்தைப் பெற்ருலென்ன?' என்னும் ஐயம் ஏற்பட, மற்ற மந்திரங்களைக்காட்டிலும் இத்திருமந்திரத்திற்குள்ள பெருமையைப் பகருகிருர்:

மூலம்: 8. "பகவந் மந்த்ரங்கள்தான் அநேகங்கள்."

பொருள்: எங்ஙனம் பகவானுடைய குணங்களும், அக் குணங்களைப் பிரகாசப்படுத்தும் அவதாரங்களும் அளவிறந்

தனவோ, அங்ஙனமே அக்குணங்களையும் அவதாரங்களையும் விளக்கப்படுத்தும் மந்திரங்களும் பலவாகும்.

**விளக்கம் :** பகவான் எண்ணிறந்த குணங்களையும் அவதாரங்களையும் உடையவன் என்பதைச் சாத்திரங்களினாலும், ஆழ்வார்கள் அருளிச்செயல்களினாலும் அறிகின்றோம். "பகவானே, உன்னுடைய குணங்களைக் கணக்கிட்டுச் சொல்லுதற்கியலாது. நீ அளவற்ற குணங்களை உடையவன். அங்ஙனமிருப்பினும், உனக்கு ஆறு குணங்களே முக்கியமானவை," என

"தவாநந்த குணஸ்யாபி ஷடேவ ப்ரதமே குணா:"

என்னும் விஷ்ணுதர்மசுலோகம் சொல்லுகிறது.

"யாவருக்கும் தலைவனும், மாயனும், தாமரை போன்ற கண்களையும், கனி போன்ற திருப்பவளத்தையும், நீல இரத்தினம் போன்ற நிறத்தையும் உடையவனும் இருக்கும் எம்பெருமான், மிக்க எளிமை தோன்ற திருமலையில் நிற்கின்றமையின், உயர்ந்த எண்ணிறந்த குணங்கள் வாய்ந்தவன்," என்றும், "தன் வாத்ஸல்யம் முதலிய குணங்களினால் அவர்களிடம் அருள்கொண்டு பல பிறவிகளை எடுத்தவன்," என்றும் ஆழ்வார் இயம்புகின்றார்.

"எண்ணில் தொல்புகழ்."[1]

"எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்."[2]

என்பவற்றை நோக்குக.

**அவதாரிகை :** 'பகவானுடைய மந்திரங்கள் யாவும் ஒரே இனத்தைச் சார்ந்தனவோ?' என, இயம்புகிறார் :

**மூலம் : 9. "அவைதான் வ்யாபகங்கள் என்றும் அவ்யாபகங்களென்றும் இரண்டு வர்க்கம்."**

**பொருள் :** அம்மந்திரங்கள் பலவாயிருப்பினும், அவைகள் யாவும் ஒரே தகுதியுடையன அல்ல. அவற்றுட்சில வியாபகங்களாயும், சில அவ்வியாபகங்களாயும் உள்ளன.

**விளக்கம் : வியாபகங்கள் :** சில மந்திரங்கள், எல்லாப் பொருள்களிலும் நிறைந்துள்ள பகவானை விளக்கமாய்த் தெரிவித்தலின், அவை வியாபகங்கள் எனக் கூறப்பட்டன.

---

1. திருவாய்மொழி—3 : 3 : 3. 2. திருவிருத்தம்—1.

அவ்வியாபகங்கள் : சில மந்திரங்கள், ஈசுவரனுடைய அவதாரங்களில் அமைந்த குணங்கள், லீலைகள் முதலியவற்றுள் ஏதாவதொன்றைத் தெரிவித்தலின், அவை அவ்வியாபகங்கள் எனக் கூறப்பட்டன.

அவதாரிகை : 'வியாபகம் அவ்வியாபகம் ஆகிய இரண்டும் ஒப்புடையனவோ ?' என, செப்புகிருர் :

மூலம் : 10. "அவ்யாபகங்களில் வ்யாபகங்கள் மூன்றும் ச்ரேஷ்ட்டங்கள்."

பொருள் : முன் சூத்திரத்திற்கூறியவாறு, பகவானுடைய அவதாரங்களில் அமைந்த குண லீலைகளுள் ஏதோ ஒன்றைத் தெரிவிக்கும் அவ்வியாபக மந்திரங்களைக்காட்டிலும், எல்லாவற்றிலும் நிறைந்திருக்கையாகிற பகவானுடைய வியாப்தியைத் தெரிவிக்கும் 'நாராயண' 'வாசுதேவ' 'விஷ்ணு' என்னும் வியாபக மந்திரங்கள் மூன்றும் விஷ்ணு காயத்திரியில் கூறப்படுகின்றமையின் சிறந்தனவாகும்.

விளக்கம் : விஷ்ணு காயத்திரி "நாராயணாய வித்மஹே வாஸுதேவாய தீமஹி, தந்நோ விஷ்ணுঃ ப்ரசோதயாத்" என்பது. இவ்வாக்கியத்திற்கு, "நாராயணனை உபாசிக்கின்றோம் ; வாசுதேவனென்னும் நாராயணனைத் தியானிக்கின்றோம். விஷ்ணுவானவன் நமக்கு அந்த நாராயண தியானத்தை நன்றாக நிறைவேற்றி வைக்கட்டும்," என்பது பொருள்.

அவதாரிகை : இவ்வியாபக மந்திரங்கள் மூன்றும் ஒன்றற்கொன்று ஒப்புடையனவோ ?

மூலம் : 11. "இவை மூன்றிலும் வைத்துக்கொண்டு பெரிய திருமந்த்ரம் ப்ரதாநம்."

பொருள் : அவ்வியாபக மந்திரங்களைக்காட்டிலும், சிறந்தாய் உள்ள இந்த வியாபக மந்திரங்கள் மூன்றனுள்ளும் திருமந்திரம் முக்கியமானதாகும்.

விளக்கம் : "எங்ஙனம் நாராயணனைக்காட்டிலும் மேலான தெய்வம் இல்லையோ, அங்ஙனமே திருவஷ்டாக்ஷரத்தைக்காட்டிலும் மேலான மந்திரம் இல்லை," எனச் சாத்திரங்களால் வரையறுக்கப்பட்டது.

2805



அவதாரிகை: 'மற்ற வியாபக மந்திரங்கள் இரண்டிற்கும் என்ன தாழ்வு?' என்ன, பகருகிறார்:

வினா: மற்றவை இரண்டு என்பன யாவை?

விடை: விஷ்ணு, வாசுதேவ என்னும் இரு மந்திரங்கள்.

வினா: இவை மந்திரங்கள் என்னில், 'ஓம் நமோ விஷ்ணவே, ஓம் நமோ பகவதே வாஸுதேவாய' என்னும் மந்திரங்களைக் குறிக்குமா? அன்றி, அம்மந்திரங்களிற்சேர்ந்த விஷ்ணு, வாசுதேவ என்னும் நாமங்களை மட்டும் குறிக்குமா?

விடை: நாமங்களை மட்டுமே குறிக்கும்.

வினா: அவைகள் மந்திரங்கள் என்றல்லவா சொல்லப்பட்டிருக்கின்றன? அங்ஙனமாயின், நாமங்கள் மட்டும் எப்படி மந்திரங்களாகும்?

விடை: பிரணவ நமஸ்ஸுகள், எல்லா மந்திரங்களுக்கும் இருப்பன போன்றே, இம்மந்திரங்களுக்கும் பொதுவானவை. விஷ்ணு மந்திரத்திற்கு விஷ்ணு நாமமும், வாசுதேவ மந்திரத்திற்கு வாசுதேவ நாமமும் முக்கியமானவை. ஆதலின், அந்த முக்கியம் தோன்ற, விஷ்ணு வாஸுதேவ நாமங்களையே விஷ்ணு மந்திரம் வாஸுதேவ மந்திரம் எனச் சொல்லலாம் என்பது ஆசாரியர்கள் கருத்து.

மூலம்: 12. மற்றையவை இரண்டுக்கும் அசிஷ்டபரிக்ரஹமும் அபூர்த்தியுமுண்டு.

பொருள்: விஷ்ணு வாஸுதேவ என்னும் மந்திரங்களில், நாராயண மந்திரத்தைப் போன்று, ஸ்வரூபம்[1] ரூபம்[2] குணம்[3] விபூதி[4] முதலியன சொல்லப்படாமல், ஸ்வரூபம் ஒன்று மட்டும் சொல்லப்படுகிறது. இதனால், 'பிரமத்திற்கு ரூப குணங்கள்

---

1. ஸ்வரூபம்—ஈசுவரனுடைய திவ்யாத்தும சொரூபம்.

2. ரூபம்—பகவானுடைய திவ்ய மங்கள விக்கிரகம்.

3. குணம்—ஆன்ம குணம், விக்கிரக குணம். ஆன்ம குணங்கள்—ஞானம் சத்தி முதலியன. விக்கிரக குணங்கள்—அழகு மென்மை முதலியன.

4. விபூதி—நியமிக்கப்படும் பொருள்

இல்லை; ஞானசொரூபம் ஒன்றே உள்ளது' என விதண்டாவாதம் பேசும் வைணவர் அல்லாத வேறு சில மதத்தினர், இவற்றை விரும்பிக் கொள்வதற்கு வழி உள்ளது. இதுதான் அசிஷ்ட பரிக்ரஹம் எனப்படும்.

'அசிஷ்ட பரிக்ரஹம்' என்பதற்கு, பால சரஸ்வதி என்பவர், 'சிஷ்டர்கள் (வைஷ்ணவ அதிகாரிகள்) நாராயண மந்திரத்தைக் கொள்ளுவது போன்று, இவ்விரண்டு மந்திரங்களையும் கொள்ளாமையின், இவற்றிற்குச் சிஷ்டர்களால் பெரும்பான்மையும் கொள்ளப்படாத குற்றம் உண்டு,' எனப் பொருள் சொல்லுகிறார்.

இனி, இம்மந்திரங்களின் அபூர்த்தியைக் குறித்துக் காண்போம்: எங்கும் நிறைந்த பொருள் எம்பெருமான் என்பதைத் தெரிவிக்கும் மந்திரம் 'வியாபக மந்திரம்' எனப்படும். நாராயண மந்திரத்தில், 'எங்கும்' என்னும் பொருளைக் குறிக்கும் 'நார' சப்தம் இருப்பது போன்று, விஷ்ணு வாசுதேவ என்னும் இவ்விரு மந்திரங்களிலும் இல்லாமையின், அச்சொல்லை வருவித்துக்கொண்டு பொருள் சொல்ல வேண்டியிருக்கிறது. ஆதலின், இவைகளுக்கு அபூர்த்தி (பூர்த்தியில்லாமை) உண்டு.

**விளக்கம்:** இவை இரண்டையும் தனித்தனியே நோக்குவோம்: 'விஷ்ணு' என்னும் சொல், "ஸர்வத்ர வேவிஷ்டே" என்னும் வியுற்பத்தியிலிருந்து தோன்றியுள்ளது. இவ்விஷ்ணு என்னும் சொல், ஈசுவரன் எங்கும் நிறைந்த பொருள் என்பதை மட்டும் தெரிவிக்கின்றதே அன்றி, அவன் என்னென்ன பொருள்களில், எவ்விதத்தில் வியாபித்திருக்கிறான் என்பதையும், அதனால் உண்டாகும் பயன் இன்னதென்பதையும், அந்த வியாபகனுடைய குணங்கள் இவை என்பதையும் தெரிவித்திலது. இச்சத்தத்திற்குப் பூர்ணத்துவம் இல்லை.

'வாஸுதேவ' என்னும் சொல், எங்கும் வியாபித்திருக்கும் விதத்தை ஸர்வத்ர வஸதி என்னும் கர்த்தரி வியுற்பத்தி[1]யால் சொல்

1. கர்த்தரி வியுற்பத்தி—'பகவான் எங்கே வசிக்கிறான்?' என்னும் கேள்விக்கு, 'பகவான் எல்லாப் பொருள்களிலும் வசிக்கிறான்' எனப் பகவானையே எழுவாயாய் வைத்துச் சொல்லுவது.

லினும், எப்பொருள்களில் வியாபித்துள்ளது என்பதற்குச் சொல் இல்லாமையின், 'எங்கும்' (ஸர்வத்ர) என்னும் சொல்லே வருவித்துக்கொள்ளவேண்டிய குறை இதற்கும் ஏற்படுகிறது. அங்ஙனம் இச்சொல்லே வருவித்துக்கொள்ளினும், இதில் குணம் சொல்லப்படாமையாலும், அதன்பொருட்டுப் பகவச் சத்தத்தைக் கூட்டிக்கொள்ள வேண்டியிருத்தலாலும் இதற்கும் பூர்ணத்துவம் இல்லே.

இன்னும், இந்த வாஸுதேவ மந்திரத்திற்குள்ள மற்ருெரு வியுற்பத்தியை ஆராய்வோம்: 'ஸர்வம் வசதி அஸ்மின்' என்பதே அவ்வியுற்பத்தியாகும். இஃது அதிகரணே வியுற்பத்தி[1] எனப்படும். இதில், பகவானே ஒழிந்த கலியாண குணங்கள், சேதனு சேதனங்கள் ஆகிய எல்லாப் பொருள்களும் எவனிடத்தில் இருக்கின்றனவோ, அவனே வாசுதேவன் என்னும் பொருள் ஏற்படுகிறது. இங்குக் கர்த்தரி வியுற்பத்தியில் சேர்த்துக்கொண்ட 'ஸர்வத்ர' என்னும் சொல்லில் உள்ள 'த்ர' என்பதை நீக்கி, 'ஸர்வம்' என வைத்துக்கொண்டு பொருள் கூற வேண்டியிருக்கிறது. அங்கு ஸர்வத்ர என்னும் சொல்லுக்குக் குணங்கள் கூறப்படாமையின், அதே சொல்லாகிய ஸர்வம் என்பதற்கும் குணம் சொல்லப்படவில்லே என்பது கூருமலே விளங்கும். ஆதலின், குணங்களுடையவன் என்பதைத் தெரிவிக்கும் பகவச் சத்தத்தை இத்துடன் சேர்த்துக்கொள்ள வேண்டியிருக்கிறது.

வினு: இதில் என் குணம் சம்பந்தப்படாது? அதன் பொருட்டுப் பகவச்சத்தத்தைக் கூட்டிக்கொள்ள வேண்டிய அவசியம் என்ன?

விடை: ஸர்வத்ர வஸதி (எங்கும் இருப்பவன்) என்னும் கர்த்தரி வியுற்பத்தியில் உள்ள ஸர்வத்ர என்னும் சொல்லிற்கு, பகவான் தன்னிடத்திலுள்ள கலியாண குணங்கள் தவிர, மற்றச் சேதனுசேதனங்கள் யாவற்றிலும் வசிக்கிருன் எனப் பொருள்

---

1. அதிகரணே வியுற்பத்தி—'எவை பகவானிடத்தில் வசிக்கின்றன?' என்னும் கேள்விக்கு, எல்லாப் பொருள்களும் பகவானிடத்தில் வசிக்கின்றன எனப் பகவானிடம் ஏழாம் வேற்றுமையை ஏற்றிச் சொல்லுவது.

கொள்ள வேண்டும். அங்ஙனமன்றி, பகவான் எல்லாப் பொருள் களிலும் வசித்தல் போன்றே, தன் குணங்களிலும் வசிப்பவன் எனப் பொருள் கொள்ளின், பகவத் தத்துவம் குணங்களை விட்டுப் பிரிக்க முடியாத பொருளாதலால், குணங்களையுடைய ஈசுவரன் குணங்களிலும் வசிப்பவன் என்னும் பொருள் ஏற்படும். அப் போது குணங்களிலேயே குணங்கள் இருக்கின்றன எனக் கொள்ள வேண்டி வரும். அங்ஙனம் கொள்ளின், ஆதாராதேயங் கள்[1] ஒன்ருய் இருக்கும் ஆத்துமாச்ரயம் ஸம்பவிக்கும். இவ்வாறு ஒன்ருய் இருக்கவும் முடியாது. ஆதலின், ஸர்வத்ர வஸதி என்னும் கர்த்தரி வியுற்பத்தியால், ஸர்வத்ர என்னும் சொல்லிற்குக் கலி யாண குணங்கள் தவிரச் சேதனுசேதனங்களே பொருளென் பதை உறுதிப்படுத்தினேம்.

வினு: ஸர்வத்ர வஸதி என்னும் கர்த்தரி வியுற்பத்தியில் சேர்த்துக்கொண்ட ஸர்வத்ர என்னும் சொல்லில் த்ர என்பதை விலக்கி, ஸர்வம் என்று வைத்துக்கொண்டு, ஸர்வம் வசதி அஸ்மின் என்னும் வியுற்பத்தியில் பொருள் சொல்ல வேண்டியிருக்கிறது என்றீர்கள். அவ்வாறுதான் சொல்ல வேண்டுமென்னும் அவசி யம் என்ன?

விடை: ஸர்வம் வஸதி அஸ்மின் என்னும் அதிகரண வியுற் பத்தியில் ஸர்வம் என்னும் சொல் அவசியம் வேண்டியிருக்கிறது. ஸர்வத்ர வஸதி என்னும் வியுற்பத்தியில் சேர்த்துக்கொண்ட ஸர்வத்ர என்னும் சொல்லில் த்ர என்பதை விலக்கி, ஸர்வம் என்னும் அச்சொல்லை வைத்துக்கொண்டு இங்கும் பொருள் சொல்வது பொருத்தமாதலின், இவ்வாறு கூறவேண்டியதாயிற்று.

வினு: ஸர்வத்ர வஸதி என்னும் கர்த்தரி வியுற்பத்தியில் வருவித்துக்கொண்ட ஸர்வத்ர என்னும் சொல்லே, ஸர்வம் வஸதி அஸ்மின் என்னும் அதிகரணே வியுற்பத்தியில் ஸர்வம் என்னும் சொல் என்றீர்கள். என்? அதிகரணே வியுற்பத்தியில் வருவித்துக் கொண்ட ஸர்வம் என்னும் சொல்லே ஸர்வத்ர என்னும் சொல் லாக மாறி இருத்தல் ஆகாதோ?

---

1. தயிர்க்குடம்—குடம் ஆதாரம், தயிர் ஆதேயம்.

விடை : இந்த ஸர்வ சத்தத்திற்குக் கலியாண குணங்கள் சேதனுசேதனங்கள் ஆகிய எல்லாம் பொருள் என்று கொள்ள வேண்டும் ; அல்லது குணங்களை விலக்கிச் சேதனுசேதனங்களை மட்டுமாவது பொருளாய்ச் சொல்ல வேண்டும். இந்த ஸர்வ சத்தத்தை ஸர்வத்ர என்று வைத்து, 'ஸர்வத்ர வஸதி' என்னும் வியுற்பத்தியில் பொருள் கூற வேண்டியிருக்கிறது. முந்திய பொருளில் 'குணங்களில் குணங்களோடுங்கூடிய பகவான் இருக்கிருன்,' என்பது கிடைக்கின்றமையின், முற்கூறிய குற்றம் வந்து சேரும். பிந்திய பொருளில், குணங்களைக் காட்டும் சொல் இல்லாமையின், அவற்றைக் குறிக்கும் சொல்லாகிய பகவற் சத்தம் இன்றியமையாது வேண்டற்பாலதாகும்.

இனி நாராயண மந்திரத்திற்குப் பூர்த்தி உண்டு என்பதைக் காணலாம். எங்ஙனமென்னில், விண்ணும் மண்ணும் அவற்றி லுள்ள பொருள்களும் ஈசுவரனுக்கு விபூதிகள். அவற்றுள் ஈசு வரன் இருத்தலால், அவற்றை வியாப்பியப் பொருளென்றும், அவனை வியாபகப் பொருளென்றும், இங்ஙனம் எல்லாப் பொருள் களிலும் இருக்கும் அவனுடைய இருப்பையே வியாப்தி என்றும், அவன் ஒவ்வொன்றிலும் அந்தர்யாமியாயிருக்கையை வியாபித் திருக்கும் விதமென்றும், உடலுக்கு உயிர் போன்று ஒவ்வொரு பொருளிலும் அவன் ஆன்மாவாயிருந்து அந்தந்தப் பொருளின் சத்தை நிர்வகிப்பதையே பயன் என்றும் சாத்திரம் கூறு கின்றது.

இம்முறையில், நாராயண பதத்தில் உள்ள 'நார' என்பது வியாப்பியப் பொருள்களையும், வியாபகனுன பரமபுருஷனுடைய கலியாண குணங்களையும் குறிக்கும். 'நாரா:—அயநம்—யஸ்ய—ஸ:' என்னும் பஹுவ்ரீஹி ஸமாஸம், அந்தர்யாமியாயிருக்கும் நிலையைக் காட்டும். 'நாராணும்—அயநம்—ய:—ஸ:' என்னும் தத்புருஷ ஸமாஸம், ஒவ்வொரு பொருளின் சத்தை நிர்வகிப்ப தாகிய வியாப்தி பலத்தைத் தெரிவிக்கும். இவற்றைத் தெளி வாய்த் தெரிவிப்பதனுல், நாராய்ண பதத்திற்குப் பூர்த்தி உண்டு என்றும், இவற்றைத் தெளிவாய்த் தெரிவியாமையின், மற்ற இரண்டிற்கும் பூர்த்தி இல்லை என்றும் ஆச்சான்பிள்ளை அருளிச் செய்கிருர்.

அவதாரிகை: 'இந்த நாராயண மந்திரத்திற்குப் பெரியோர்களின்[1] அங்கீகாரம் உண்டோ?' என்ன, செப்புகிறார்:

**மூலம்: 13. "இத்தை வேதங்களும், ரிஷிகளும், ஆழ்வார்களும் ஆசார்யர்களும் விரும்பினார்கள்."**

பொருள்: இத்திருமந்திரமாகிய நாராயண பதத்தை, விஷ்ணு காயத்ரி, தைத்ரியோபநிஷத்து, மஹோபநிஷத்து, ஸுபாலோபநிஷத்து, என்பவைகள் பல வகையிலும் சிறப்பித்துச் சொல்லுகின்றமையின், எல்லா வேதங்களும் இதை விரும்பின என்பதை அறிகின்றோம்.

அஷ்டாக்ஷர பிரமவித்யை, கருட புராணம், பாரதம் முதலியன இந்நாராயண பதத்தையே கொண்டாடிக் கூறுகின்றமையின், வேதத்தை விளக்கமாய்த் தெரிவிக்க வந்த ரிஷிகளும் இதையே ஆதரித்துப் போந்தார்கள் என்பது தெரிகிறது.

அருளிச்செயல்களும், விஷ்ணு வாஸுதேவ மந்திரங்களைக் காட்டிலும் நாராயண பதத்தையே பாராட்டிச் சொல்லுகின்றமையின், ஆழ்வார்களும் இதையே விரும்பினார்கள் என்பது வெள்ளிடை மலை.

ஆழ்வார்களைப் பின் பற்றிச் சென்ற நாதமுனிகள் முதலிய ஆசாரியரும், இந்நாராயண மந்திரத்தையே தமக்குத் தஞ்சமாய்க் கொண்டது மட்டுமேயல்லாமல், தங்களை வந்தடைந்தவருக்கும், அவர்கள் உய்விற்கேற்ப இதையே உபதேசித்தல், தம் பின்னுள்ளாரும் இதன் பெருமையை அறிதற்பொருட்டு இதன் பொருளை நூல்களின் மூலம் வெளிப்படுத்தல் முதலியவற்றை மேற்கொண்

---

குறிப்பு: 1. வினா: இச்சூத்திரத்தில் சொல்லப்பட்ட ரிஷிகள், ஆழ்வார்கள், ஆசாரியர்கள் இவர்களைப் பெரியோர்கள் எனக் கூறுவது பொருந்தும். ஆயினும், வேதத்தை எங்ஙனம் பெரியோர் என உயர்திணையிற் கூறுவது?

விடை: வேதத்தை வேத புருஷன் என்றும், மகான் என்றும் கிரந்தங்களில் வழங்கி வரும் வழக்குண்டு. ஆதலின், வேதத்தையும் பெரியோர் கூட்டத்தில் சேர்த்து உயர்திணையாகவே சொல்ல வேண்டியதாயிற்று.

டமையின், அவர்களும் இதையே தமக்கு ஊன்றுகோலாகப் பற்றி னார்கள் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ!

**விளக்கம்:** மேற்கூறிய வியாபக மந்திரங்கள் மூன்றையும் சொல்லும் விஷ்ணு காயத்ரி, இந்நாராயண என்னும் சொல்லையே முதலிற் சொல்லி, இதற்கு முதன்மை கொடுத்திருக்கின்றது.

நாராயணனுவாகம், பரப்பிரமம், பரதத்துவம், பரஞ்சோதி, பரமாத்துமா என்னும் இந்நான்கு சொற்களும் ஈசுவரனைக் குறிக் கும் என்னும்போது நாராயண பதத்தை இட்டே சொல்லுகின்ற மையின், அதில் தமக்குள்ள ஆதரத்தைத் தெரிவிக்கின்றது.

"உலக முடிவு காலத்தில் பிரமனும், சிவனும் சுவர்க்கம் பூமி முதலிய லோகங்களும், ஆகாசம் முதலிய பூதங்களும், அவை களால் உண்டாகிய பௌதிகங்களும் இல்லை. நாராயணன் ஒருவன் மட்டுந்தான் இருந்தான்," என மஹோபநிஷத்து நாரா யணனுடைய அழிவில்லாத தன்மையைத் தெரிவிக்கும்போது நாரா யண சத்தத்தையிட்டே தெரிவிக்கின்றது.

"கண்ணும் காணப்படும் பொருள்களும், செவியும் கேட்கப் படும் பொருள்களும், திக்குகளும் மூலைத் திக்குகளும் நாராய ணனே என்று ஸுபாலோபநிஷத்தும், எவனுக்கு ஜீவாத்துமா, பூமி, மிருத்தியு முதலியன சரீரமாயிருக்கின்றனவோ, எவன் எல்லா ஆத்துமாக்களுக்கும் அந்தராத்துமாவாயும், அவற்றினுடைய தோஷங்கள் தன்னிடம் தட்டாதவனுயும், நிகரற்றவனுயும் இருக் கின்றானோ, அவனே நாராயணன்" என்று ப்ருஹதாரண்யமும் நாராயண சத்தத்தை இட்டே சொல்லுகிறது. சரீராத்துமபாவத் தையும், குற்றமற்ற தன்மையையும் பகவானுக்குச் சொல்லும் போது நாராயண சத்தத்தை இட்டே ஸுபாலோபநிஷத்து வெளிப் படுத்துகிறது. இங்ஙனம் பல பிரமாணங்களும் நாராயணனுடைய முதன்மையையும் சிறப்பையும் தெரிவிக்கின்றது மட்டுமேயல் லாமல், இதையே விரும்பின என்பதும் அறிகின்றோம்.

"எங்ஙனம் எல்லாத் தேவர்களுள்ளும் நாராயணனைக்காட்டி லும் மேலான தெய்வம் இல்லையோ, அங்ஙனமே எல்லா மந்திரங் களுக்குள்ளும் திருவஷ்டாக்ஷரத்தைக்காட்டிலும் மேலான மந்திர மில்லை. சமஸ்த வேதங்களினுடைய ஸாரமான அர்த்தத்தைப்

பிரதிபாதிப்பதும், சம்சாரமாகிற கடலைக் கடக்கச் செய்வதுமான திருவஷ்டாக்ஷர மந்திரமானது, மீண்டும் பிறவாமலிருக்கும்படி விரும்பும் முமுட்சுக்களான மனிதர்களுக்குப் புகலாகும். "'நமோ நாராயணாய' என்னும் மந்திரமானது, எல்லா அர்த்தங்களையும் சாதித்துக் கொடுக்கும்," என ரிஷிகள் யாவரும் ஒரு முகமாய்க் கூறிப் போந்தார்கள். இக்கருத்துகளை,

"யதா ஸர்வேஷு தேவேஷு நாஸ்தி நாராய ணாத்பரஃ |
ததா ஸர்வேஷு மந்த்ரேஷு நாஸ்தி சாஷ்டாக்ஷ ராத்பரஃ ||
ஸர்வ வேதாந்த ஸாரார்த்தஸ் ஸம்ஸா ரார்ணவ தாரகஃ |
கதிரஷ் டாக்ஷரோ ந்ரூணாம் அபுநர்ப் பவகாங் க்ஷிணாம் ||"

என்னும் சுலோகங்களால் அறியலாம்.

நம்மாழ்வார், பகவானை அனுபவித்துப் பேசும் போது, விஷ்ணு, வாசுதேவ என்னும் திருநாமங்களை இட்டுப் பேசாமல், "வண்புகழ் நாராயணன்", "செல்வ நாரணன்", "வாழ்புகழ் நாரணன்" என்றும்; பெரியாழ்வார், "நாடுநகரமும் நன்கறிய நமோ நாராயணாய" என்றும்; திருமங்கையாழ்வார், "நான்கண்டு கொண்டேன் நாராயணா என்னும் நாமம்" என்றும்; முதலாழ்வார்கள், "ஞானச் சுடர்விளக்கேற்றினேன் நாரணற்கு", "பகற் கண்டேன் நாரணனைக் கண்டேன்", "நாமம் பலசொல்லி நாராயணா" என்றும், நாராயணன் திருநாமத்தையே தமக்குள்ள ஆதரம் தோற்றப் பலகாலும் பேசிப் போந்தார்கள்.

அவதாரிகை: இம்மந்திரத்திற்குப் பொருளான ஈசுவரனைக் காட்டிலும், இம்மந்திரத்திற்குள்ள பெருமையை அருளிச் செய்கிறார்:

**மூலம்: 14. "வாச்ய ப்ரபாவம் போலன்று, வாசக ப்ரபாவம்."**

பொருள்: இம்மந்திரத்தால் சொல்லப்படுபவனாகிய ஈசுவரனுடைய பெருமையைப் போன்றதன்று, அவ்வீசுவரனைக் குறிக்கும் திருமந்திரத்தின் பெருமை.

விளக்கம்: அவ்வெம்பெருமானுடைய மேன்மையைக்காட்டிலும், அவனைக் குறிக்கும் திருநாமத்தின் மேன்மை உயர்ந்ததாகும்.

அவதாரிகை: 'அப்பெருமை யாது?' என, பகருகிருர்:

**மூலம்: 15. "அவன் தூரஸ்தனுனுலும், இது கிட்டி நின்றுதவும்."**

போருள்: இந்நாமத்திற்கு உரியவனுய்ச் சொல்லப்படும் எம் பெருமான் அருகிலில்லாமல் தொலேவிலிருப்பினும், அவனேப்பற்றிச் சொல்லுகிற இந்நாமம் அருகிலிருந்து தன்னேப் பத்தியுடன் சொன் வர்களுடைய விருப்பங்களே முற்றுப்பெறச் செய்யும்.

அவதாரிகை: 'ஈசுவரன் தொலேவிலிருக்க, அவன் திருநாமம் உதவி புரிந்த இடம் உண்டோ?' என்ன, இயம்புகிருர்:

**மூலம்: 16. "த்ரெளபதிக்கு ஆபத்திலே புடைவை சுரந்தது திருநாமமிறே?"**

போருள்: பெரிய அவையில் துச்சாதனன் துரோபதையின் ஆடைகளேக் களேயுங்கால், அவள், "சங்கு, சக்கரம், கதை முதலிய ஆயுதங்களேத் தாங்கிக்கொண்டிருப்பவனே, துவாரகையை இருப் பிடமாய் உடையவனே, ஆசிரிதரை நழுவ விடாதவனே, கோவிந் தன் என்னும் திருநாமத்தைப் பெற்றவனே, செந்தாமரை மலர் போன்ற கண்களே உடையவனே, உன்னேச் சரணமாய் அடைந்த என்னே இப்பெரிய ஆபத்தினின்றும் காப்பாயாக!" எனக் கண்ண னேச் சரணம்புக, அவன் வாராமல் தொலேவில் இருப்பினும், அக் கண்ணனுக்கு வாசகமாய் இருந்த அக்கோவிந்த நாமமன்றே அவளேக் கிட்டி, ஆடைகளேப் பெருகச் செய்து, அவள் மானத்தைக் காத்தது?

விளக்கம்: வினு: துரோபதை இறைஞ்சிய போது, சரணு கதிக்குப் பயனுய்க் கிருஷ்ணன் அருகில் வந்தே உதவினுன் என்று ஏன் சொல்லுதல் கூடாது?

விடை: இங்ஙனம் கண்ணனே வந்துதவியதாய்ச் சரிதத்திற் சொல்லப்படவில்லே. அஃதன்றியும், "துரோபதை தன் ஆபத்தில் மிக்க தொலேவில் இருந்த என் பெயரைச் சொல்லி, 'கோவிந்தா' என்று அழுதாள். அவ்வமயம் யானே போய் அவளுக்கு உதவி செய்ய என்னுல் முடியவில்லே. அது வட்டிக்கு வட்டியுள்ள கடனேப்போல என் மனத்தை விட்டு இன்றும் நீங்காது துன்

புறுத்துகின்றது!" என்று கண்ணனே கூறியுள்ளான். ஆதலால், அவன் நேரே வந்து உதவவில்லை என்பது தெரிகிறது.

வினா: நாராயண நாமத்தின் சிறப்பைக் காட்ட வந்த இடத்தில், கோவிந்த நாமத்தைச் சொல்வது எவ்வாறு பொருந்தும்?

விடை: நாராயண சத்தத்தில் அடங்கியுள்ள பல பொருள்களுள் இரண்டொன்றைக் கொண்டிருக்கும் இக்கோவிந்த நாமமே இத்துணைப் பெரிய நன்மையைப் புரிந்ததென்னில், நாராயண பதத்தைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?

அவதாரிகை: இன்னொரு வகையாலும் இதன் வைபவம் சொல்லப்படுகிறது:

**மூலம்: 17. "சொல்லும் க்ரமமொழியச் சொன்னாலும் தன் ஸ்வரூபம் கெட நில்லாது."**

போருள்: எம்மந்திரமும் தன்னைத் தஞ்சமென்று நினைத்துச் சொல்பவருக்குத் தவிர, மற்றவருக்குத் தன் ரக்ஷணமாகிற காரியத்தைச் செய்யாது. இத்திருமந்திரமோ, இதைச் சொல்ல வேண்டுமென்னும் எண்ணமின்றியே, தம் குழந்தைகளுக்கு இப்பெயரை இட்டு அழைக்கினும், பரிகாசமாகவோ, இழிவாகவோ, பொருளுணர்ச்சியின்றியோ சொல்லினும், ரக்ஷணமாகிற தன் காரியத்திலிருந்து தவறாது.

விளக்கம்: அஜாமிளன் என்னும் ஒருவன், தன் வாழ்நாட்களில் தெய்வ சிந்தனை சிறிதுமின்றிப் பல கொடுங்காரியங்களைச் செய்து வந்தான். அவனுக்கு அந்திய காலம் நெருங்கியதும், அவ்வமயமும் அவன், தன் பிள்ளையின்மேலிருந்த பற்றினால், நாராயணன் என்னும் பெயரையுடைய அவனை 'நாராயணா' என்றழைத்தான். உடனே, பகவானுடைய தூதுவர் வந்து அவனைச் சூழ்ந்தனர். அவன் கொடுந்தன்மையை நோக்கி வந்த காலனுடைய தூதுவருக்கும், பகவானுடைய தூதுவருக்கும் பல வாதங்கள் நிகழ்ந்தன. இறுதியில் பகவானுடைய தூதுவரே அவன் ஆன்மாவைப் பற்றிச்சென்றனர் என்னும் சரிதம் ஒன்று உள்ளது. இங்கு,

"நம்பி பிம்பி யென்று நாட்டு மானிடப் பேரிட்டால்
நம்பும் பிம்பு மெல்லாம் நாலு நாளி லழுங்கிப்போம்;

செம்பெருந் தாமரைக் கண்ணன் பேரிட் டழைத்தக்கால்
நம்பிகாள் நாரணன் தம்மன்னை நரகம் புகாள்."[1]

என்னும் திருவாக்கை நோக்குக.

இத்திருநாமத்தை, பரிகாசமாயும், ஏளனமாயும் அடிக்கடி கூறிக்கொண்டிருந்த சிசுபாலன் போன்றூர்க்கும் நற்கதி கிடைத்ததென்பதை அறிகின்றேம்.

சங்கீத வித்துவான்கள் பாட்டை முடிக்கும் போது தங்கள் ஆலாபனத்திற்கேற்ப யாதாவது ஒரு சொல்லைச் சொல்லி முடிப்பது வழக்கம். அது பொருளற்ற சொல்லாயிருப்பினும் இருக்கலாம். ஆனல், சிலர் அங்கு 'இராமா' என்னும் வார்த்தையை உணர்ச்சியின்றியே சொல்லி முடிக்கின்றனர். அவர்கட்கும் நன்மை ஏற்படுகிறது. ஆதலின், மற்ற மந்திரங்களைக்காட்டிலும் இது மிகச் சிறந்ததும், மகிமை உள்ளதுமாம் எனக் கொள்க.

வினு: ஆனல், "திருமந்திரத்தினுடைய சீர்மைக்குப் போரும்படி பிரேமத்தோடே பேணி அனுஸந்திக்க வேண்டும்," என மூன்றும் சூத்திரமும், "சொல்லும் கிரமமொழியச் சொன்னுலும் தன் ஸ்வரூபம் கெட நில்லாது," என இச்சூத்திரமும் ஒன்றற்கொன்று வேறுபாடு தோன்றச் சொல்லுகின்றனவே! இவ்விரண்டன் கருத்துகளும் எவ்வாறு பொருந்தும்?

விடை: தாய் விரும்பிய கைங்கரியங்களைச் செய்து, அவள் முக உல்லாசத்திற்கேற்ப நடந்துகொள்ள வேண்டுவது ஓர் உத்தம மகனுக்கு இன்றியமையாத கடமையாகும். ஆயினும், அவன் தன் அறியாமையினலோ, செருக்கினலோ அவளை அலட்சியஞ் செய்து நடப்பினும், அன்பும் அருளும் நிறைந்த அத்தாய் எங்ஙனம் அவனை விடாமல் அவனுக்கு நன்மைகளையே புரிவாளோ, அங்ஙனமே அருள் நிரம்பிய எம்பெருமான் திருநாமங்களும், முறை தவறித் தம்மைப் பயன்படுத்துபவருக்கும் நன்மைகளையே புரிகின்றன.

"திருமந்திரத்திலே பிறந்து, துவயத்திலே வளர்ந்து" என்னும் சொற்றெடரில் திருமந்திரத்தைத் தாயெனக் கூறியிருப்பதை நோக்குக.

அவதாரிகை: இம்மந்திரம் அவரவர் விரும்பியவற்றைத் தரும் பெருமையுடையது. அதைச் செப்புகிறூர்:

---

1. பெரியாழ்வார் திருமொழி—4 : 6 : 8.

மூலம்: 18. "இதுதான் 'குலந்தரும்' என்கிறபடியே எல்லா அபேக்ஷிதங்களையும் கொடுக்கும்."

பொருள்: இம்மந்திரந்தான், 'குலந்தரும்' என்னும் திருமங்கையாழ்வார் பாசுரத்தின்படி, அந்தந்தச் சேதனர் நிலைக்குத் தகுந்தவாறு அவரவர் விரும்பியவற்றைத் தருவதாகும்.

விளக்கம்: பாகவதருக்குத் ததியாராதனஞ் செய்தற் பொருட்டு வழிபறிக் கொள்ளையை மேற்கொண்டிருந்த திருமங்கை யாழ்வார் முன் திருவாலி மணவாளன் தோன்றி, அவர் செவியில் திருமந்திரத்தை உபதேசித்த போது அவ்வாழ்வார்,

"குலந்தரும் செல்வந் தந்திடும் அடியார்
படுதுய ராயின எல்லாம்
நிலந்தரஞ் செய்யும் நீள்விசும் பருளும்
அருளொடு பெருநில மளிக்கும்
வலந்தரும் மற்றும் தந்திடும் பெற்ற
தாயினு மாயின் செய்யும்
நலந்தருஞ் சொல்லை நான்கண்டு கொண்டேன்
நாராய ணாஎன்னும் நாமம்."[1]

எனப் பகர்ந்து போற்றுகிறார்.

இப்பாசுரத்தால், இந்நாராயண மந்திரத்தை அனுசந்திப்பவர்க்கு இது யாவரும் கொண்டாடும்படியான சேஷத்துவ ஞானமாகிற குலத்தையும், அக்குலத்திற்கேற்ற கைங்கரியமாகிற பெருஞ் செல்வத்தையும் அளிக்கும்; தொண்டர் அனுபவிக்கும் துக்கமென்னும் பெயரையுடைய எல்லாவற்றையும் தரை மட்டமாக்கும்; கைங்கரியத்திற்கு இடையீடின்றி மேன்மேலும் வளர்ந்தோங்கச் செய்வதான பரமபதத்தைக் கொடுக்கும்; இங்ஙனம் பரமபதத்தைக் கொடுத்தல் மட்டுமேயன்றி, தன் கிருபையால் தன்னை அனுபவிப்பதாலேற்படும் பேரானந்தத்தில் திளைக்கச் செய்யும்; தான் செய்யும் கைங்கரியத்திற்குத் தான் கருத்தா என்றும், அதை அனுபவிப்பவன் என்றும் நினையாமலிருத்தலாகிய வன்மையையும், சேஷத்துவ சொரூபத்திற்கு ஏற்ற மற்ற நன்மைகளையும் தரும்; பெற்ற தாயைக்காட்டிலும் பல நலங்களைப் புரியும் என்பதை அறிகின்றோம்.

---

1. பெரிய திருமொழி—1 : 1 : 9.

அவதாரிகை : மேற்சூத்திரத்திற் சொல்லியவற்றை விளக்கப்படுத்துகிறார் :

மூலம் : 19. "ஐச்வர்ய கைவல்ய பகவல்லாபங்களை ஆசைப்பட்டவர்களுக்கு அவற்றைக் கொடுக்கும்."

பொருள் : மக்கள் முதலிய இவ்வுலகச் செல்வம், சுவர்க்கம் முதலாகிய பரலோகச் செல்வம், ஆன்மானுபவமாகிற கைவல்யம், பகவானை அடைந்து அனுபவித்தலாகிற பகவல்லாபம் ஆகிய இவற்றுள் யார் யார் எதை எதை விரும்பி ஜபம் ஓமம் முதலியவற்றைச் செய்கின்றனரோ, அதை அதை அவரவர்க்குத் தருவதாகும்.

அவதாரிகை : கன்ம ஞான பத்திகளுக்குத் துணை புரியும் இதன் வைபவத்தைச் சொல்லுகிறார் :

மூலம் : 20. "கர்ம ஜ்ஞாந பக்திகளிலே இழிந்தவர்களுக்கு விரோதியைப் போக்கி அவற்றைத் தலைக் கட்டிக் கொடுக்கும்."

பொருள் : கன்ம ஞான பத்திகளுள் ஏதாவதொன்றில் புகுந்தவரும், இம்மந்திரத்தை உதவியாய்க் கொள்ளின், இஃது அவர் மேற்கொண்ட கன்ம ஞான பத்திகளில் யாதாவதொன்றை நடைபெறாதவாறு தடுக்கும் பாவங்களைப் போக்கி, நாளுக்கு நாள் அதை வளரச் செய்து, முற்றுப் பெறச் செய்யும்.

அவதாரிகை : பிரபன்னருக்கு இம்மந்திரம் புரியும் உபகாரத்தைத் தெரிவிக்கிறது :

மூலம் : 21. "ப்ரபத்தியிலே இழிந்தவர்களுக்கு ஸ்வரூப ஜ்ஞாநத்தைப் பிறப்பித்துக் காலக்ஷேபத்துக்கும் போகத்துக்கும் ஹேதுவாயிருக்கும்."

பொருள் : பிரபத்தியை மேற்கொண்டவர்க்கு, இத்திருமந்திரம், பகவத் பாரதந்திரிய ஞானத்தை விளக்கமாய்ப் பிறப்பித்தல் மட்டுமேயன்றி, இதன் பொருளை அநுசந்தித்துப் பொழுது போக்குகைக்குங் காரணமாயும், "எனக்கென்றும் தேனும் பாலும் அமுதுமாய திருமால் திருநாமம்" என்கிறபடியே போக்கியமாயும் இருக்கின்றது.

அவதாரிகை : எல்லா அர்த்தங்களையும் சொல்லுகையாகிற இம்மந்திரத்தின் சிறப்பை அருளிச்செய்கிறார் :

**மூலம் : 22. "'மற்றெல்லாம் பேசிலும்' என்கிற படியே அறிய வேண்டுமர்த்தமெல்லாம் இதுக் குள்ளேயுண்டு."**

பொருள் : "நின் திருவெட்டெழுத்தும் கற்று மற்றெல்லாம் பேசிலும்" என்கிறபடியே, ஆன்ம உய்விற்காக இன்றியமையாது அறிய வேண்டிய அர்த்தங்கள் யாவும் இம்மந்திரத்திற்குள்ளே உண்டு.

விளக்கம் : "திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கும் எம் பெருமானே, எட்டெழுத்தோடுங் கூடிய திருமந்திரத்தில் பல பொருள்கள் சொல்லப்பட்டிருப்பினும், அதைக் கற்றதனால் யான் அறிந்துகொண்ட பொருள், உன்னடியார்க்கு அடிமை என்பதாகும்," எனத் திருமங்கையாழ்வார் திருவாய் மலர்ந்தருளுகிறார். ஆகவே, திருமந்திரத்தின் சாரமாக அறியும் பொருள் பாகவதத் தொண்டேயெனக் கொள்க.

அவதாரிகை : 'இம்மந்திரத்தில் இன்றியமையாது அறிய வேண்டுவன யாவை ?' என்ன, பகருகிறார் :

**மூலம் : 23. "அதாவதஞ்சர்த்தம்."**

பொருள் : சேதனன் அறிய வேண்டிய அர்த்தங்கள் ஐந்தாகும். இதற்கு 'அர்த்த பஞ்சகம்' என்பது பெயர். இதன் விளக்கத்தை மூன்றாம் சூத்திரத்திற்கூறியுள்ளோம். வேதங்களும், இதிகாச புராணங்களும் இந்த ஐந்து பொருள்களையே சொல்லுகின்றமையின், அவ்வேதசாத்திரங்களின் சுருக்கமாகிய இத்திருமந்திரமும் அப்பொருள்களைத்தானே சொல்லுதல் வேண்டும் ?

அவதாரிகை : இம்மந்திரப் பொருளின் சிறப்புச் சொல்லப் படுகிறது :

**மூலம் : 24. "பூர்வாசார்யர்கள் இதிலர்த்தமறிவதற்கு முன்பு, தங்களைப் பிறந்தார்களாக நினைத்திரார்கள் ; இதிலர்த்தஜ்ஞாநம் பிறந்த பின்பு, 'பிறந்த பின் மறந்திலேன்' என்கிறபடியே இத்தையொழிய வேறொன்றால் காலக்ஷேபம் பண்ணியறியார்கள்."**

பொருள்: ஸ்ரீமந் நாதமுனிகள் முதலிய நம் பூருவாசாரியர்கள், இம்மந்திரத்தின் உண்மைப் பொருளை அறிவதற்கு முன்பு, "அன்று நான் பிறந்திலேன்" என்னும் திருமழிசையாழ்வார் வாக்கின்படி, தங்களை இவ்வுலகில் பிறந்தவர்களாகவே நினைத்திரார்கள்; இதன் பொருளை நன்குணர்ந்து ஞானம் பெற்ற பின்பு, "பிறந்தபின் மறந்திலேன்" என்னும் மேற்குறித்த ஆழ்வார் வாக்கின்படியே இம்மந்திரத்தின் பொருளை ஒழிய வேறொன்றாலும் பொழுது போக்குதலைச் செய்தறியார்கள்.

விளக்கம்: வினா: நம் பூருவாசாரியர்கள், வேத சாத்திரங்கள், ஆழ்வார்களின் அருளிச்செயல்கள் இவற்றால் பொழுது போக்கினார்கள் என்பது சரித்திரப் பிரசித்தமாயிருக்க, அவர்கள், "இத்தையொழிய வேறொன்றால் காலக்ஷேபம் பண்ணியறியார்கள்," என்பது எவ்வாறு பொருந்தும்?

விடை: அவர்கள் மேற்கூறியவற்றை அனுபவிக்கும் போதும், திருமந்திரத்தில் கூறியுள்ள அர்த்த விசேஷங்களை ஒட்டியே (அனுசரித்தே) பொழுது போக்கியதால், இத்திருமந்திரத்தைக்கொண்டே பொழுது போக்கினார்கள் என்பதில் தடையில்லை.

வினா: நித்தியமான ஆன்மாவிற்கு உடற்றொடர்புதானே பிறவி எனச் சொல்லப்படுகிறது? அதை விட்டு இங்கு ஞான சம்பந்தமே பிறவி எனச் செப்புதற்கு ஆதாரம் என்ன?

விடை: "எனக்கு ஸ்வாமியாயுள்ள எம்பெருமான் திருவூரகத்திலும், திருப்பாடகத்திலும், திருவெஃகாவிலும் முறையே நின்றருளியும், இருந்தருளியும், கண் வளர்ந்தருளியும் இருத்தலைப்பற்றி அன்புடன் சிந்தியாத அக்காலத்தில் யான் ஞானப் பிறவியைப் பெற்றேனில்லை. அந்த ஞானப் பிறவியைப் பெற்ற பின்போ, அவனை ஒரு போதும் மறந்தேனில்லை. ஆதலின், எம்பெருமான் மேற் கூறிய மூன்று திருப்பதிகளிலும் செய்த செயல்கள் யாவற்றையும் இப்போதும் என் நெஞ்சுள் செய்யாநின்றான்," எனத் திருமழிசையாழ்வார், "நின்றதெந்தை"[1] என்னும் பாசுரத்தில் வெளியிட்டுள்ளார்.

இவ்வாழ்வார் எழுநூறு ஆண்டுகள் இவ்வுலகில் உயிர் வாழ்ந்திருந்தாரெனக் குருபரம்பரை கூறுகிறது. ஆயினும், இவர் அவ்

1. திருச்சந்த விருத்தம், 64.

வாழ்க்கையை உயர்ந்ததெனக் கருதாமல், ஞான வாழ்க்கையையே சிறந்ததெனக் கருதியிருந்தார் என்பதை இப்பாசுரத்தினல் அறிகின்றேம்.

மதுரகவியாழ்வார், முதன்முதல் ஆழ்வாரைத் தரிசித்த போது, "செற்றத்தின் வயிற்றிலே சிறியது பிறந்தால், எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" என விண்ணப்பித்தருளினர்.

"சரீரத்திற்குப் பிராணவாயு போன்று, சீவான்மாவிற்குப் பரமாத்தும ஞானம் பிராணனுய் உள்ளது," என ஸ்ரீ பாஷ்யகாரர் திருவுள்ளம் பற்றுகிறர். இச்சரீரம் அசேதனப் பொருளாதலின், அந்த ஞானப் பிராணனுக்கு இது தகுதியற்றதாகும். இதனல், இங்குச் சொல்லிய 'செற்றது' என்பதற்கு, 'சரீரமாகிய அசித்து' என்பதே பொருள் என்பது பெறப்படுகின்றது.

இச்சொற்றெடரின் பொருளை நோக்குவோம்:

செற்றத்தின் வயிற்றில்—அசேதனமான சரீரத்தின் நடுவில் (இருதயத்தில்) இருப்பதான, சிறியது—அணுவாய், சேஷத்துவ பாரதந்திரியங்களாகிற தருமங்களை உடையதாய், ஈசுவரனல் ரக்ஷிக்கப்படும் பொருளாய், அறிவே வடிவாய் உள்ள ஜீவாத்துமா, பிறந்தால்—'ஶ்ரியப்பதியான பரம புருஷனுக்கே உரியவன் யான்' என்னும் அறிவால் சத்தைப் பெற்றிருக்குமாயின், எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?—எதைப் புருஷார்த்தமெனக் கருதி, எதை உபாயமாய் வேண்டிக் கொண்டிருக்கும்? என்பது இதன் பொருளாகும். இதனல், 'ஒருவனுக்குச் சரீரத்தோடுங் கூடிய பிறப்பு உயர்ந்ததன்று; சேஷத்துவ ஞானத் தொடர்பாகிய பிறப்பே சிறந்தது; அது கிடைப்பது அரிதாகும்,' என்பது தெளிவாகும்.

இதற்கு ஆழ்வார், "பொருள், புதல்வர், சுற்றத்தினர் நிறைந்த சமுசாரமாகிற கானலிலே, ஜீவாத்துமா, சேஷத்துவ ஞானத் தொடர்பாகிற பிறப்பைப் பெற்றவனுயிருப்பின், பகவானையே பயனுய்க்கொண்டு, அவனையே ரக்ஷகப் பொருளாய் உறுதிப்படுத்தியிருப்பான்" என்னும் பொருள் அடங்கிய, "கானலோடிய காட்

டிலே சிறியது பிறந்தால், அத்தைத் தின்று அங்கே கிடக்கும்," என்னும் வாக்கியத்தை அருளிச்செய்கிறார். இதனால், ஞான சம்பந்தமே உயர்ந்த பிறவி என்பது தெள்ளிதின் விளங்கும்.

அவதாரிகை: 'திருமந்திரமாகிற சொல்லே, ஐசுவரியம் முதலிய யாவற்றையும் தருவதாயிருக்கும் போது பூருவாசாரியர் இம்மந்திரத்தின் பொருளில் மனமிருத்துதற்குக் காரணம் யாது?' என, செப்புகிறார்:

**மூலம்: 25. "வாசகத்திற்காட்டில் வாச்யத்திலே ஊன்று கைக்கடி - ஈச்வரனே உபாயோபேயமென்று நினைத் திருக்கை."**

பொருள்: வினா: இம்மந்திரமே எல்லாப் பலன்களையும் தருதற்குக் காரணமாயும், கன்ம ஞான பத்திகளுக்குத் துணையாய் நின்று அவற்றை முடித்துத் தருதற்கு வன்மை பெற்றதாயுமிருக்க, நம் பூருவாசாரியர்கள் முன் கூறியபடியே இம்மந்திரத்தினுடைய பொருளில் (பகவானிடத்தில்) மனத்தை மிகுதியும் செலுத்துதற் குக் காரணம் யாது?

விடை: இவர்கள், பகவானைத் தவிர வேறு உபாய உபேயங் கள் உண்டு எனக் கருதுகின்றவர்களைப் போன்றல்லாமல், ஈசு வரனே உபாயமும் உபேயமும் எனக் கருதி இருப்பவர்களாதலால், இவர்கள் இம்மந்திரத்தின் பொருளாகிய பகவானிடத்தில் தங்கள் மனத்தைச் செலுத்துகின்றார்கள்.

விளக்கம்: சிலர், ஞானிகளுக்குப் புருஷார்த்தமாய் இருக் கும் பகவானை விட்டு, வேறேதேனும் பயனைப் பெறுதற்பொருட்டு இம்மந்திரத்தைக் கருவியாய்க் கொள்ளுகின்றனர். சிலர், ஈசுவரனை அடைவதற்குப் பிரபன்னரால் பற்றப்படுபவனாய் (உபாயமாய்) இருக்கும் அவனை (பகவானை) விட்டு, கரும ஞான பத்தி முத லிய வற்றுள் ஏதாவதொன்றைத் துணையாகக் கொள்ளுகின்ற னர். இத்தகையவருக்குப் இத்திருமந்திரமே துணையாய் இருந்து அவர் கருதிய காரியத்தை முடித்துத் தருகின்றமையின், இத் தொகுதியினர் இதன் பொருளில் ஊற்றமுடையவராய் இருத்தல் வேண்டும் என்னும் தேவையில்லை. நம் பூருவாசாரியர்களோ, ஈசுவரனை அடைவதற்கு அவனைத் தவிர வேறு உபாயத்தையும்

பலத்தையும் விரும்பாதவர்களாதலால், அவர்கள் பொருளை அறிந்துகொள்ளாமல், வெறும் மந்திரத்தைமட்டும் சாதனமாக அனுசந்திப்பதற்கு விருப்புற்றிலர். ஆதலின், அவர்கள் இத்திரு மந்திரத்தின் பொருளிலேயே ஊன்றி, இன்பக் கடலில் மூழ்கித் திளைப்பதையே தமக்குப் பொழுது போக்காகக் கொண்டார்கள்.

**தொகுப்புரை:** மூன்றும் சூத்திரத்திலிருந்து இருபத்தைந் தாம் சூத்திரம் வரையும் (3-25) இயம்பியவற்ருல், திருமந்திரத்தி னுடைய சீர்மைக்குத் தக்கவாறு இதை அன்புடன் காத்து அனுசந் திக்க வேண்டுமென்றும்; இம்மந்திரத்திலும், இதன் பொருளாகிய ஈசுவரனிடத்திலும், இதைத் தனக்கு உபதேசித்த ஆசாரியனிடத்தி லும் பத்தி செய்ய வேண்டுமென்றும்; சமுசாரிகளை உய்வித்தற் பொருட்டுப் பகவான் தானே சிஷ்யனுமாய் ஆசாரியனுமாய் நின்று திருமந்திரத்தை வெளியிட்டருளினன் என்றும்; சிஷ்யனுடைய இலக்கணங்களை உலகத்தாருக்கு அறிவித்தற்பொருட்டே பகவான் சிஷ்யனாய் நின்ருன் என்றும்; மற்றச் சாத்திரங்களால் உண்டா கும் ஞானத்தைக்காட்டிலும் திருமந்திரத்தால் உண்டாகும் ஞானம் சிறந்தது என்றும்; பகவந் மந்திரங்கள் ‘வியாபகங்கள், அவ்வியாப கங்கள்’ என இருவகைப்படும் என்றும்; இவற்றுள் வியாபக மந்தி ரங்கள் மூன்றும் சிறப்புடையன என்றும்; இம்மூன்றனுள் பெரிய திருமந்திரம் பிரதானமானதென்றும்; மற்ற இரண்டற்கும் சில குறைகள் உண்டு என்றும்; இத்திருமந்திரத்தை வேதங்கள், ரிஷி கள், ஆழ்வார்கள், ஆசாரியர்கள் விரும்பினார்கள் என்றும்; பகவா னுடைய பெருமையைக்காட்டிலும், அவனைக் குறிக்கும் இம்மந்தி ரத்தின் பெருமை உயர்ந்தது என்றும்; அவன் தொலையில் இருப்பி னும், இம்மந்திரம் அருகிலிருந்து பத்தரைக் காக்கும் என்றும்; இதற்குக் கோவிந்த நாமமே சான்ருகும் என்றும்; இதை முறை தவறிக் கூறினும், இது காத்தல் தொழிலிலிருந்து தவருது என்றும்; இஃது எல்லா விருப்பங்களையும் தருமென்றும்; அவரவர் நிலைகளுக்கேற்பப் பலன்களை நல்குமென்றும்; இதில் சேதனன் அறிய வேண்டிய அஞ்சர்த்தங்களும் உண்டு என்றும்; நம் ஆசா ரியர்கள் இதன் அர்த்தமறிவதற்கு முன்பு தங்களைப் பிறந்தவர்க ளென நினைத்திலர் என்றும்; இதன் அர்த்தத்தை அறிந்த பின்பு இதைக்கொண்டே தங்கள் காலத்தைக் கழிந்தார்கள் என்றும்; அவர்கள் ஈசுவரனே உபாய உபேயமெனக் கருதியவர்களாதலால்,

இம்மந்திரத்தின் பொருளாகிய ஈசுவரனிடத்திலேயே மனத்தைச் செலுத்தியிருந்தார்கள் என்றும் அறிந்தோம்.

அவதாரிகை : இனி இம்மந்திரத்திற்குப் பொருளை இரண்டு வகையில் சுருக்கமாக அருளிச்செய்கிறார் :

**மூலம் : 26. "இது தன்னில் சொல்லுகிற அர்த்தம், ஸ்வரூபமும், ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும் ; ஸ்வரூபமும், உபாயமும், பலமுமென்னவுமாம்."**

போருள் : இச்சூத்திரம் இரண்டு வாக்கியங்களாய் உள்ளது. இவ்விரண்டு வாக்கியங்களும், திருமந்திரம் தெரிவிக்கும் இருவகை வாக்கியப் பொருள்களைக் குறிப்பிக்கின்றன.

இத்திருமந்திரத்தில், ஆன்மாவிற்குச் சொரூபங்களாயுள்ள சேஷத்துவ 1. பாரதந்திரியங்களையும், 2. அச்சொரூபத்திற்கேற்ற பயனாகிய கைங்கரியத்தையும் 3. தெரிவித்தல் ஒன்று ; சேஷத்துவமாகிற சொரூபத்தையும், பகவானாகிற உபாயத்தையும், கைங்கரியமாகிற பலத்தையும் தெரிவித்தல் மற்றொன்று.

ஆக, இத்திருமந்திரம் இரண்டு விதப் பொருளைத் தெரிவிக்கின்றது.

**விளக்கம் : 1. சேஷத்துவம்** இது கட்டிப் பொன் போன்றது. கட்டிப் பொன் எப்படி அதை உடையவனுக்குப் பெருமையைத் தந்து, அவனுக்குப் பிரியமானபடி பயன்படுத்திக்கொள்வதற்குத் தக்கதாயும் இருக்கிறதோ, அப்படியே, ஜீவாத்துமா தன்னை உடைய ஈசுவரனுக்குப் பெருமையை ஈந்து அவன் இஷ்டப்படி வினியோகப் படுத்திக்கொள்வதற்குத் தகுதியுடையதாயுமிருக்கிறது.

2. பாரதந்திரியம் : அக்கட்டிப் பொன்னுக்குடையவன், அதை உருக்குதல், நீட்டுதல், குறுக்குதல், அணிகளாய்ச் செய்தல் முதலியவற்றுள் எதை மேற்கொள்ளினும், அஃது எங்ஙனம் அவனுடைய பிரியத்திற்கேற்ப வினியோகப்படுகிறதோ, அங்ஙனமே ஜீவான்மாவை ஈசுவரன் எவ்வாறு பணி கொள்ளினும் அவனுடைய விருப்பத்திற்கேற்ப வினியோகப்படுதல்.

**3. கைங்கரியம் :** பகவானுடைய முக உல்லாசத்திற்கேற்பச் செய்யும் தொண்டு.

**விளக்கம் :** இச்சூத்திரம் இரண்டு வாக்கியங்களாய் உள்ளது அல்லவா? அவற்றுள் முதல் வாக்கியம், 'ஓம் நமஃ நாராயணுய' என்னும் மூன்று பதங்களுள், ஓம் என்னும் பிரணவத்தினுல் சேஷத்துவம், நமஸ்ஸால் பாரதந்திரியம், நாராயணுய என்னும் பதத்தில் உள்ள ஆய என்னும் வேற்றுமையால் கைங்கரியம் ஆகிய மூன்றும் சொல்லப்படுகின்றன.

இரண்டாம் வாக்கியத்தில், பிரணவத்தினுல் சேஷத்துவமும், நமஸ்ஸால் உபாயமும், ஆய பதத்தால் பலமும் (கைங்கரியமும்) சொல்லப்படுகின்றன.

இந்த இரண்டு வாக்கியங்களின் பொருளேயும் நாம் ஊன்றி நோக்கும் போது, பிரணவத்தினுல் சேஷத்துவமும், ஆய என்னும் வேற்றுமையினுல் கைங்கரியமும் சொல்லப்படுகின்றன என்பது இரண்டிடங்களிலும் ஒத்திருக்கின்றமையின், இவற்றைப்பற்றி ஆராய வேண்டிய அவசியம் இல்லே. நாம் இங்குச் சிறிது ஆழ்ந்து நோக்க வேண்டுவது, இரண்டிடங்களிலும் வெவ்வேறு பொருள் களேக் காட்டுகின்ற நமப்பதத்தைப் பற்றியேயாகும்.

**வினு :** முதல் வாக்கியத்தில் நமப்பதம் பாரதந்திரியத்தைத் தெரிவிக்கின்றதென்பது யாங்ஙனம்?

**விடை :** **ஓம்** என்னும் பிரணவத்தில் அ, உ, ம் என்னும் மூன்று அட்சரங்கள் அடங்கியுள்ளன. இவற்றுள் ம் என்னும் அட்சரம் அறிவோடுங்கூடிய ஆன்மாவைத் தெரிவிக்கின்றது. அங்ஙனமாஞல், ஆன்மா அறிவுள்ளது என அறிகின்ருேம். ஆன்மா ஒருகால் ஒரு பொருளேக் காண்கின்றது. அவ்வான்மாவின் அறிவு காணும் பொருளினிடம் இச்சையை உண்டாக்குகிறது. அவ்விருப்பம் அப்பொருளே அடைதற்கேற்ற முயற்சியில் நுழைக் கிறது. அம்முயற்சி செயல் மட்டும் கொண்டு போகிறது. அஃது அனுபவத்தை உண்டாக்குகின்றது. இதஞல், அறிவு ஒருவனேச் சுதந்தரஞகச் செய்கிறது என்பதை அறிந்தாம். விருப்பத்தினுல் முயற்சியுடையனுய் இருத்தல் என்பதே, சுதந்தரத்தன்மையாகும். இவ்வகையில் ஆன்மா அறிவோடுங் கூடியதென்னில், அது சுதந்தரமுடையது என்பது தேறுகின்றதன்ருே?

நமஸ்ஸு என்பதை ந+மஃ எனப் பிரிக்குங்கால், இதில் மஃ எனக்கு உரியவன், ந அல்லன், அதாவது எனக்கு நான் உரியவன்

அல்லன் என்னும் பொருள் கிடைக்கிறது. 'எனக்கு நான் உரியவன் அல்லன்' என்னில், பிறனுக்கு (ஈசுவரனுக்கு) உரியவன் என்பது பெறப்படுகின்றதன்றோ? இம்முறையில், இந்நமஸ்ஸு ஈசுவர பாரதந்திரியத்தைத் தெரிவிக்கின்றது என்பது அறிந்தாம்.

வினா: இரண்டாவது வாக்கியத்தில் நமஃ என்பது உபாயத்தைத் தெரிவிக்கிறது என்று சொல்லப்படுகின்றதன்றோ? அஃதெப்படி?

விடை: இந்த நமஸ்ஸு, ஞானத்தால் ஏற்பட்ட சுதந்தரத்தன்மையை ஒழிக்கையாலே, அச்சுதந்தரத்தன்மை காரணமாய் ஏற்படும் தன்னைத்தான் காத்துக்கொள்ள முடியும் என்னும் எண்ணத்தை நீக்குகிறது. இனி, இவனைக் காத்து இரட்சிப்பவன், ஈசுவரனே ஆகவேண்டியிருத்தலினால், அவனே ரக்ஷணத்திற்கு உபாயனாகிறான். இம்முறையில், நமஸ்ஸில் அர்த்த பலத்தால் ஈசுவரனே உபாயம் என்பது கிடைக்கிறது.

அவதாரிகை: 'இப்பலத்தின் இயல்பு யாது?' என்ன, அருளிச்செய்கிறார்:

**மூலம்: 27. "பலமிருக்கும்படி ப்ரமேயசேகரத்திலும் அர்ச்சிராதி கதியிலும் சொன்னோம்."**

பொருள்: இவ்வாத்துமாவிற்குப் பலம் இன்னது என்பதை இவ்வாசிரியர் ப்ரமேயசேகரம் என்னும் கிரந்தத்தில் சுருக்கமாயும், அர்ச்சிராதிகதி என்னும் பிரபந்தத்தில் விரிவாயும் சொல்லியிருக்கிறார்.

விளக்கம்: சீவாத்துமா, அர்ச்சிராதி மார்க்கத்தாலே பரமபதம் சென்று, பரிபூர்ணமாய்ப் பகவானை அனுபவித்து, அப்பரிபூர்ண அனுபவத்தினால் உண்டாகும் பிரீதியினால் செய்யும் எல்லாத் தொண்டுகளினாலும் ஏற்படும் ஈசுவர முகமலர்த்தியே இச்சீவாத்மாவிற்குப் பலம் என்பது சொல்லப்படுகிறது.

அவதாரிகை: இனி, இம்மந்திரத்திலுள்ள எழுத்துகளின் எண்ணும், பதப் பிரிவும் சொல்லப்படுகின்றன:

**மூலம்: 28. "இதுதான் எட்டுத் திருவக்ஷரமாய், மூன்று பதமாயிருக்கும்."**

பொருள் : ஓம் என்னும் பதம் ஓர் அட்சரம் ; நமஃ என்னும் பதம் இரண்டு அட்சரம்; நாராயணுய என்னும் பதம் ஐந்து அட்சரம். ஆக, இத்திருமந்திரம் எட்டு அட்சரங்களாயும், மூன்று பதங்களாயும் உள்ளது.

விளக்கம் : சாத்திரங்கள் யாவும், பிரணவத்தையும் சேர்த்தே திருமந்திரம் எட்டு அக்ஷரங்கள் எனச் சொல்லியிருக்க, சிலர், நமஃ என்பதை இரண்டு எழுத்துகளாயும், நாராயணுய என்னும் பதத்தை நார + அயநாய எனப் பிரித்து ஆறு எழுத்துகளாயும் வைத்துப் பிரணவமில்லாமலே இஃது எட்டு எழுத்துகளாய் உள்ளது என்றும், வேதத்தில் அதிகாரமில்லாதவருக்கு இதையே உபதேசிக்க வேண்டுமென்றும் சொல்லுகின்றனர். ஆனுல், பிள்ளை லோகாசாரியரும், மணவாள மாமுனிகளுமோ, திருமந்திரம், பிரணவத்தைச் சேர்த்தே எட்டு அட்சரங்கள் என்றும், இதைச் சேர்த்தேயாவருக்கும் உபதேசிக்க வேண்டுமென்றும் வற்புறுத்திக் கூறுகின்றனர்.

அவதாரிகை : 'இம்மூன்று பதங்களும் எப்பொருளைச் சொல்லுகின்றன ?' என, பகருகிறுர் :

மூலம் : 29. "மூன்று பதமும் மூன்று அர்த்தத்தைச் சொல்லுகிறது."

பொருள் : மூன்று சொற்களும் மூன்று பொருள்களைக் குறிக்கின்றன.

அவதாரிகை : அவ்வர்த்தங்களைத் தெளிவாய் அருளிச் செய்கிறுர் :

மூலம் : 30. "அதாவது, சேஷத்வமும், பாரதந்த்ர்ய மும், கைங்கர்யமும்."

பொருள் : இம்மூன்று பதங்களுள், பிரணவம் சேதன னுடைய சேஷத்துவத்தையும், நமஸ்ஸு பாரதந்திரியத்தையும், நாராயணுய என்பது சேதனன் ஈசுவரனுக்குப் புரிய வேண்டிய கைங்கரியத்தையும் தெரிவிப்பனவாகும். இதை மனத்திற் கொண்டே 26-ஆம் சூத்திரத்தின் முதற்பொருள் அருளிச்செய்த தாகும்.

**மூலம் : 31. "இதில் முதற்பதம் ப்ரணவம்."**

**பொருள் :** இத்திருமந்திரத்தில் பிரணவம் முதற்பதமாய் உள்ளது.

**விளக்கம் :** நாராயணோபநிஷத்து, "அஷ்டாக்ஷரமென்னும் மந்திரம், பிரணவத்தை முதற்பதமாகவும், நம: என்பதை மத்திய பதமாகவும், நாராயணாய என்பதைக் கடைசிப் பதமாகவும் கொண்டுள்ளது," என்றும், "ஓம் என்பதை முதலிலும், நம: என்பதை அதன் பிறகும், நாராயணாய என்பதை அதற்குப் பிறகும் சொல்ல வேண்டும்," என்றும் இயம்பியுள்ளமையின், திருமந்திரத்திலுள்ள பிரணவம் முதற்பதமாகும்.

**அவதாரிகை :** பிரணவத்திற்குப் பொருளை விரித்தற்பொருட்டு, அது மூன்று அட்சரங்களைக் கொண்டது என அருளிச் செய்கிறார் :

**மூலம் : 32. "இது 'அ' என்றும், 'உ' என்றும், 'ம' என்றும் மூன்று திருவக்ஷரம்."**

**பொருள் :** இப்பிரணவம் பிரிந்திருக்கும் நிலையில் அ, உ, ம என மூன்று எழுத்துகளாய், இம்மூன்று எழுத்துகளும் மூன்று பதங்களாய், மூன்று பொருள்களைத் தெரிவிக்கும். சேர்ந்திருக்கும் நிலையில், ஒரே எழுத்தாய், ஒரே பதமாய், ஓரர்த்தத்தைத் தெரிவிக்கும்.

**விளக்கம் :** அகாரம் பகவானையும், அதில் ஏறி மறைந்துள்ள வேற்றுமை சேஷத்துவத்தையும், உகாரம் அந்தச் சேஷத்துவத்தின் **அநந்யார்ஹத்துவத்தையும்,**[1] மகாரம் ஞானவானாகிய சீவனையும் தெரிவிக்கின்றன.

**வினா :** இம்மந்திரத்தினுடைய அட்சரங்களின் எண்ணைக் குறிக்குமிடத்து, ஓம் என்பதை ஓரக்ஷரமாய்க் கீழே எழுதியுள்ளீர். 'ஓமித்யேகாக்ஷரம்' என்று நாராயண உபநிஷத்தும் சொல்லுகிறது. அங்ஙனமிருக்க, இப்போது மூன்று அட்சரங்கள் எனச் சொல்லுவது எங்ஙனம் பொருந்தும்?

---

1. அநந்யார்ஹத்துவம்—என்னில் மற்றவருக்கல்லாமல் ஈசுவரனுக்கே உரித்தாயிருத்தல்.

விடை : இந்த ஓம் என்னும் அட்சரத்திற்கு, ஸம்ஹிதாகாரம் (சேர்ந்திருத்தல்) அஸம்ஹிதாகாரம் (பிரிந்திருத்தல்) என இரு நிலைகள் உண்டு. பிரிந்திருக்கும் நிலையில் உள்ள உருவம் மூன்று அட்சரம்; சேர்ந்திருக்கும் நிலையில் உள்ள உருவம் ஓரட்சரம்.

அவதாரிகை : இவ்வட்சரங்களின் உற்பத்தி முறை சொல்லப்படுகிறது :

**மூலம் : 33. "மூன்று தாழியிலே தயிரை நிறைத்துக் கடைந்து வெண்ணெய் திரட்டுமாப்போலே, மூன்று வேதத்திலும் மூன்றக்ஷரத்தையும் எடுத்தது."**

பொருள் : மூன்று குடங்களில் தயிரை நிரப்பித் தனித் தனியே கடைந்து, அதன் ஸாரமான வெண்ணெயைத் திரட்டி ஒன்று சேர்த்தது போன்று, இருக்கு யஜுஸ் ஸாமம் ஆகிய மூன்று வேதங்களையும் ஆராய்ந்து, அவற்றின் உயிர் நிலையான இம் மூன்று எழுத்துகளையும் எடுத்து ஒன்று சேர்த்ததே இப்பிரணவமாகும்.

விளக்கம் : இச்சூத்திரம் உவமான உவமேயமாய் அமைந்துள்ளது. இதில், "மூன்று தாழியிலே தயிரை நிறைத்துக் கடைந்து வெண்ணெய் திரட்டுமாப்போலே," என்னும் வரையும் உவமானம்; "மூன்று வேதத்திலும் மூன்றக்ஷரத்தையும் எடுத்தது" என்பது உவமேயம்.

வினா : இத்தகைய வாக்கியங்களில் உவமானம் எந்த வேற்றுமையில் உள்ளதோ, அந்த வேற்றுமையிலேயே உவமேயமும் இருத்தல் வேண்டுமேயன்றி, வேறொரு சொல்லோ, உருபு முதலியனவோ அதில் சேர்க்கப்படுதல் கூடாதன்றோ? ஆனால், இச் சூத்திரத்திலோ, உவமான உவமேயங்கள் அங்ஙனம் ஒரே வேற்றுமையில் அமைந்திருந்தும், **மூன்று வேதத்திலும்** என உவமேயத்தில் உம்மை சேர்க்கப்பட்டிருக்கிறது. இங்ஙனம் உம்மையைச் சேர்த்துக் கூறியதற்குக் கருத்து யாது?

விடை : உவமானத்தில், மூன்று தாழி, தயிர், நிறைத்தல், கடைதல், வெண்ணெய் முதலிய சொற்கள் உள்ளன. உவமேயத்தில் மூன்று வேதம், மூன்று அட்சரம் என்பன உள்ளன. இவற்

றுள் எந்த உவமானச் சொற்களுக்கு எவை உவமேய சொற்களாய் உள்ளன என்பதை நாம் அறிதல் வேண்டும். தாழிக்கு வேதமும், அத்தாழியில் உள்ள தயிருக்கு அவ்வேதத்தில் சொல்லப்படும் அறம் பொருள் இன்பம் வீடுகளாகிற பலங்களும், அவற்றின் சாதனங்களும், நிறைத்து என்பதற்கு மேலெழுந்தவாரியாய்த் தோன்றும் தோற்றமும், கடைந்து என்பதற்கு உள் நுழைந்து விசாரிக்கும் விசாரமும், வெண்ணெய்க்கு அட்சரம் மூன்றும், திரட்டுதலுக்கு எடுத்தலும் உவமேயங்களாய் உள்ளன. மூன்று வேதத்திலும் மூன்றக்ஷரத்தையும் எடுத்தது என்பது யாங்ஙனம்? என்னில், இருக்கு யஜுஸ் ஸாமம் ஆகிய மூன்று வேதங்களையும் துருவிப் பார்த்ததில் இருக்கு வேதத்தின் ஸாரமாக பூ: என்பதும், யஜுர் வேதத்தின் ஸாரமாக புவ: என்பதும், ஸாம வேதத்தின் ஸாரமாக ஸுவ: என்பதும் தோன்றின. இம்மூன்றையும் கட்டிப் பொன்களாய்க் கொள்ள வேண்டும். இம்மூன்று பொற்கட்டிகளையும் ஒன்ருகச் சேர்த்து உருக்கி, அதைச் சுத்தத் தங்கமாக்குதற்கு ஓட வைத்தல் போன்று, ஈசுவரன் தன் ஸங்கற்பத்தினல் பூ: புவ: ஸுவ: என்னும் இம்மூன்றை (வ்யாஹ்ருதிகளை)யும் ஓட வைத்துத் தூய்மையாக்கி, அதிலிருந்து முதலில் அகாரத்தையும், இரண்டாவது உகாரத்தையும், மூன்ருவது மகாரத்தையும் தோன்றுமாறு செய்தான். பகவான் இங்ஙனம் அடைவே வெளியிட்டதை மனத்திற்கொண்டே, பிள்ளைலோகாசாரியர், 'மூன்று தாழியில் இருந்த தயிரைத் தனித்தனியே கடைந்து அவற்றின் ஸாரமான வெண்ணெயைத் திரட்டினது போன்று, மூன்று வேதத்திலும் மூன்று அட்சரங்களையும் எடுத்தது' என்ருர்.

அவதாரிகை: இதனல் தேறின பொருள் சொல்லப்படுகிறது:

**மூலம்: 34. "ஆகையால், இது ஸகலவேத ஸாரம்."**

பொருள்: இங்ஙனம் ஈசுவரன், எல்லா வேதங்களின் ஸாரமாய்க் கிடைத்த பூ: புவ: ஸுவ: என்னும் மூன்று எழுத்துகளையும் சேர்த்து, அதிலிருந்து ஸாரமாக அ, உ, ம என்னும் இம்மூன்று எழுத்துகளையும் தோற்றுவித்தான் ஆதலின், இப்பிரணவம் ஸகல வேத ஸாரமாயிற்று.

தொகுப்புரை: இருபத்தாறும் சூத்திரத்திலிருந்து முப்பத்து நான்காம் சூத்திரம் வரையும் (26—34.) செப்பியவற்ருல், இத்திரு

மந்திரம் இரண்டு அர்த்த விசேஷங்களைத் தெரிவிக்கிறதென்றும்; ஆன்மாவிற்குப் பலம் இன்னதென்பதை இவ்வாசிரியர் மற்ற இரு கிரந்தங்களிலும் சொல்லியிருக்கிறார் என்றும்; இத்திருமந்திரம் எட்டுத் திருவட்சரங்களையும், மூன்று பதங்களையும் கொண்டுள்ளதென்றும் ; இம்மூன்று பதங்களும் சேஷத்துவம், பாரதந்திரியம், கைங்கரியம் ஆகிய மூன்று பொருள்களையும் சொல்லுகின்றனவென்றும் ; இம்மந்திரத்தின் முதல் பதம் பிரணவம் என்றும், இதில் அ, உ, ம என்னும் மூன்று எழுத்துகள் உள்ளன என்றும் ; இவை மூன்று வேதங்களிலிருந்தும் எடுக்கப்பட்டன என்றும் ; ஆகையால், இது ஸகல வேதங்களின் ஸாரமென்றும் அறியக் கிடக்கின்றன.

அவதாரிகை : இம்மூன்று அட்சரங்களுக்கும் முறையே பொருளை அருளிச்செய்கிறார் :

**மூலம் : 35. "இதில் அகாரம் ஸகல சப்தத்துக்கும் காரணமாய், நாராயண பதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக்கையாலே, ஸகல ஜகத்துக்கும் காரணமாய் ஸர்வ ரக்ஷகனான எம்பெருமானைச் சொல்லுகிறது."**

**பொருள் :** இதில் அகாரம் ஸகல சத்தத்துக்கும் காரணமாயிருப்பதால், ஸகல சகத்துக்கும் காரணனாயுள்ள எம்பெருமானைச் சொல்லுகிறது என்றும், அவ்வகாரம் இரட்சகனான எம்பெருமானைக் குறிக்கும் நாராயண பதத்திற்கு ஸங்க்ரஹமாயிருக்கையாலே ஸர்வ ரட்சகனான எம்பெருமானைச் சொல்லுகிறது என்றும் இதை இரு வாக்கியங்களாகப் பிரிக்கலாம்.

இலௌகிக சத்தங்கள் எல்லாவற்றிற்கும் வேதமும், அவ்வேதங்களுக்குப் பிரணவமும், அப்பிரணவத்திற்கு அகாரமும் காரணம் எனக் கூறப்படுகின்றன. இம்முறையில், எல்லாச் சத்தங்களுக்கும் காரணமாயிருப்பது அகாரமென்பதை அறிகின்றோம். இவ்வகாரம் எல்லாப் பொருள்களுக்கும் காரணனான எம்பெருமானைச் சொல்லுகிறது.

உயிருள்ளன உயிரில்லன ஆகிய யாவற்றையும் தனக்குச் சரீரமாய்க் கொண்டவன் பகவான். இவ்வர்த்தத்தை நாராயண பதம் குறிக்கிறது. இதனால், பகவான் எல்லாவற்றிற்கும் ரட்ச

கன் என்பது கிடைக்கும். இங்ஙனமிருக்கும் நாராயண பதத்திற்கு அகாரம் சுருக்கமாய் இருத்தலின், இஃது எல்லா உலகங்களுக்கும் ரட்சகனுயிருக்கும் எம்பெருமானைச் சொல்லுகிறது.

இச்சூத்திரத்தை இன்னொரு விதமாகவும் பிரித்துப் பொருள் கூறலாம்.

இதில், அகாரம் சகல சத்தத்துக்கும் காரணமாயும், காரணனை எம்பெருமானைக் குறிக்கும் நாராயண பதத்துக்கு ஸங்க்ரஹமாயும் இருப்பதால், எல்லா உலகத்திற்கும் காரணமான எம்பெருமானைச் சொல்லுகிறது என்றும், இவ்வகாரம், தாது சத்தியாலும், இரட்சகனை எம்பெருமானைக் குறிக்கும் நாராயண பதத்திற்கு ஸங்க்ரஹமாயிருப்பதாலும் இரட்சகனை எம்பெருமானைச் சொல்லுகிறது என்றும் இதை இரு வாக்கியங்களாகவும் பிரிக்கலாம்.[1]

இயல்பாகவே அகாரம் எல்லாச் சொற்களுக்கும் காரணமாயிருப்பதனுலும், இயல்பாகவே பரப்பிரமமும் எல்லாப் பொருள்களுக்கும் காரணமாயிருப்பதனுலும் அகாரம் காரணப் பொருளான எம்பெருமானைத் தெரிவிக்கின்றது. இது பிரகிருதி சத்தியால் குறிக்கப்படுகிறதென விவரிப்பர்.

இச்சூத்திரத்திற்கு முதற்பொருளைச் செப்பிய இடத்தில், லௌகிக சத்தங்களுக்கு அகரம் பரம்பரையாய்க் காரணமெனக் கூறினேம்.

**வினு:** இக்காரணம் எத்தகையது? பருத்தி, நூலிற்கும் வஸ்திரத்திற்கும் காரணமாயிருத்தல் போன்று, அகரமாகிற சத்தமே மற்ற இ, உ, என்னும் எல்லாச் சத்தங்களுக்கும் காரணமாயிருக்கிறதா?

**விடை:** அன்று. ஏனெனில், அகங்காரத் தத்துவத்திலிருந்தே சத்தம் உண்டாகிறதென நம் சித்தாந்தம் பகருகின்றமையின், அகார சத்தத்திலிருந்து மற்ற ஓசைகளாகிற இ, உ முதலியன உண்டாகின்றன என்பது எத்தகையானும் பொருந்தாது. ஆதலின், இது மூல மூலி (சுருக்கம் விரிவு) முறையில் காரணமாகிறது எனவே செப்புதல் வேண்டும்.

---

குறிப்பு: 1. இச்சூத்திரத்தை இரு வாக்கியங்களாகப் பிரிக்கும் போது, படிப்பவர்க்குத் தெளிவாக விளங்குதற்பொருட்டு இடையிடையே சில சொற்கள் சேர்த்துச்சொன்னப்பட்டன.

வினா: இதற்கு ஏதேனும் ஒரு சான்று காட்ட முடியுமா?

விடை: ஆம், காட்டலாம். இராமசரிதையைப் பகர வந்த வான்மீகி முனிவர், ஸம்க்ஷேபத்திலே இராம சரிதம் முழுவதையும் சுருக்கமாய்க் கூறி, பின்பு அதையே பால காண்டம் முதலிய பல காண்டங்களினால் விரிவாய் வெளியிட்டுள்ளார். அதைப் போன்றே, இங்கு அகாரத்தைப் பிரணவமும், பிரணவத்தை வேதங்களும், வேதங்களை ஸ்மிருதி இதிஹாஸ புராணங்களும் விரிவு படுத்துகின்றன. ஆதலின், அகாரமாகிற சத்தமே மற்ற எழுத்துகளுக்குக் காரணமாயில்லை. அது சுருக்கம் விரிவு என்னும் முறையிலேதான் காரணமாயிருக்கிறது எனக் கொள்ள வேண்டும். "எழுத்தெல்லாம் அகர முதல," என இயம்பிய திருவள்ளுவரின் கருத்தும் இதுவேயாகும். எவ்வாறு பிரணவத்தில் பரமான்மா, ஆன்மா, உபாயம், உபேயம், விரோதி ஆகிய ஐந்து பொருள்கள் அடங்கியிருக்கின்றனவோ, அவ்வாறே அப்பிரணவத்தின் சுருக்கமான அகாரத்திலும் மேற்கூறிய இவ்வர்த்தபஞ்சகமும் (ஐந்தும்) அடங்கி இருக்கின்றன.

வினா: யாங்ஙனம்?

விடை: அகாரம் ஈசுவரனைச் சொல்லுகிறது. அந்த ஈசுவரன் சேதனருக்கு உபாயமாயும் உபேயமாயுமிருக்கிறான். இந்நிலையில், அகாரத்தில் பரமான்மா, உபாயம், உபேயம் ஆகிய மூன்றும் அடங்கி உள்ளன. ஈசுவரன், சித்து(ஞானமுள்ளவை) அசித்து (ஞான மற்றவை)களைத் தனக்குச் சரீரமாய்ப் பெற்றிருத்தலின், சித்தாகிற ஆன்மாவும், அசித்தாகிற விரோதியும் அகாரத்தில் சொல்லப்படும் பரமாத்துமாவினிடத்தில் சரீரப் பொருளாய் அடங்கி உள்ளன. அகங்கார மமகாரங்களுக்கு அசித்துக் காரணமாயிருத்தலின், அது விரோதி எனப்படும். இந்நிலையில் அகாரத்தில் ஐந்து பொருள்களும் சுருக்கமாய் அடங்கியுள்ளனவென அறிக.

அகாரத்தில் சொன்ன இவ்வர்த்தபஞ்சகம், பிரணவத்தில் விரிவாய்ச் சொல்லப்படுகிறது. இது பின்பு கூறப்படும். பிரணவத்தில் இயம்பப்படும் இவ்வர்த்தபஞ்சகம் வேதத்தில் விரிவாய்ப் பகரப்படுகிறது. வேதத்தில் சொல்லப்படும் இஃது, இதிஹாஸ புராணங்களில் விளக்கமாய்ச் சொல்லப்படுகிறது.

இதற்கு ஓர் உதாரணம் கூறலாம் : ஒருகால் யயாதி என்பவன் நூறு யாகங்களைச் செய்து, அவற்றின் புண்ணியத்தினுல் இந்திர பதவியை அடைந்தான். அவனை அப்பதவியிலிருந்து கீழே தள்ள வேண்டுமென நினைத்த இந்திரன், யயாதியை நோக்கி, "மண்ணுலகில் யாரை மிக்க தருமவான் எனப் பகருவர்?" என வினவினுன். இதைச் செவியேற்ற யயாதி, "உலகில் என்னைத் தான் மிக்க தருமவான் என்பர்," என இயம்பினுன். அஃது அவன் புண்ணியத்தை அழித்தது. உடனே அவன் கீழே தள்ளப்பட்டான். "இந்தச் சரிதம் அர்த்தபஞ்சகத்தில் எதைக் காட்டுகிறது?" என்று பட்டருடைய கோஷ்டியில் ஒரு கேள்வி பிறந்தது. அதற்குப் பட்டர், "இதில் அகங்காரமாகிற விரோதி சொல்லப்படுகிறது," என நிர்வஹித்தார் (தீர்மானித்தார்).

மனிதன் குடம் முதலிய இலௌகிக சத்தங்களுக்கும் வேத சத்தமே காரணமென்பதைக் கீழ் வரும் விஷயம் குறிக்கும் :

பகவான் பிரமனைத் தோற்றுவித்து அவனுக்கு வேதத்தை உபதேசஞ்செய்தான் என நாம் அறிகின்றோம். உலகப் பொருள்களை உண்டாக்குதற்பொருட்டு அவனைத் தோற்றுவிப்பினும், அவனுக்கு வேதத்தைப் போதிக்க வேண்டிய அவசியம் என்ன ? நான்முகன் சிருஷ்டிக்குத் தலைவன் அல்லவா? அக்காரியத்திற்கு வேதம் அவசியமாய் உள்ளது. ஆதலின், ஒரு குயவன் தன் புதல்வனுக்கு மட்கலங்களில் இன்னின்னவற்றை இன்னின்ன விதமாய்ச் செய்ய வேண்டுமெனக் கற்பித்தல் போன்று, ஈசுவரன் தேவ சரீரம் முதல் தாவரம் ஈருகவுள்ள எல்லாவற்றையும், இன்ன உருவத்துடனும், இன்ன நாமத்துடனும், இன்ன செயலுடனும் படைக்கவேண்டுமென்பதை நான்முகனுக்குக் கற்பிக்க வேண்டியிருக்கிறது. இவற்றை விளக்கமாய்ச் சொல்லுவது வேதமே. ஆகையால், அவ்வேதத்தைப் பகவான் நான்முகனுக்குப் போதிக்க வேண்டுவது இன்றியமையாததாயிற்று. ஒரு பெண் பாகசாத்திரத்தைப் பார்த்துப் பண்டங்களைப் பக்குவஞ் செய்தல் போன்று, நான்முகன் அவ்வேதத்தைப் பார்த்தே தேவதை விலங்கு மனிதர் தாவரம் ஆகிய சரீரங்களையும், பெயர்களையும், செயல்களையும் உண்டாக்குகிறுன். இங்கு, "நான்முகன் சிருஷ்டிக் காலத்தில், தேவர் முதல் தாவரம் ஈருக உள்ள உயிர்களுக்குப் பெயர்களையும், வடிவங்களையும், செயல்களையும் வேதத்தினுடைய சத்தங்களிலிருந்தே உண்

டாக்குகிருன்," என்பதைக் குறிக்கும், "நாமரூபஞ்ச பூதாநாம்" என்னும் விஷ்ணு புராணத்தின் சுலோகத்தை நோக்குக.

இரண்டாவது பொருளை இயம்பிய போது, காரணப் பொருளான எம்பெருமானை நாராயணபதம் குறிக்கின்றது என்றும், அகாரம் அதற்கு ஸங்க்ரஹமாயிருத்தலின், அது காரணப் பொருளான எம்பெருமானைச் சொல்லுகிறது என்றும் கூறினேம். நாராயணபதம் காரணப் பொருளான எம்பெருமானைக் குறித்தல் எப்படி ? பிரகிருதி சத்தியினுலும், நாராயண பதத்திற்கு ஸங்க்ரஹமாயிருப்பதனுலும் அகாரம் காரணப் பொருளான எம்பெருமானைக் குறிக்கிறதெனக் கொள்ள வேண்டும்.

மட்பாத்திரங்களைச் செய்யும் முறைகளை நோக்குங்கால், இக் காரியத்தில் மண் உபர்தான காரணமாயும், தண்டம் சக்கரம் முதலியன ஸஹகாரி காரணங்களாயும், குயவன் நிமித்த காரணனுயும் இருக்கக் காணலாம். ஆனல், பாத்திரம் போன்றதான உலகத்தைச் செய்யும் ஈசுவரனே, மேற்கூறிய மூன்று காரணங்களாயும் உள்ளான்.

வின: முன் சொன்ன முறையில், ஈசுவரன் ஸஹகாரி காரணமாயும், நிமித்த காரணமாயும் இருப்பதில் யாதொரு குற்றமுமில்லை. ஆனல், அவ்வீசுவரனே உபாதான காரணம் என்னில், மண்ணிற்குள்ள விகாரங்களைப் போன்ற விகாரங்கள் அவனுக்கும் உண்டாக வேண்டுமல்லவா ? அங்ஙனமாயின், பிரமம் விகாரமற்றது எனச் சொல்லும் சுருதி எவ்வாறு பொருந்தும்?

விடை: பிரமம் தனியாக நின்று உபாதான காரணமாதல் இல்லை. அதனை, ஸூக்ஷும சித்து அசித்துகளைச் சரீரமாய்க் கொண்டுள்ள நிலையில் உபாதான காரணமெனவும், ஸ்தூல சிதசித்துகளைச் சரீரமாய்க் கொண்டுள்ள நிலையில் காரியமெனவும் வழங்குவர்.

வின: இவை எவ்வாறு பொருந்தும் ?

உலகிற்குப் பிரளய தசை சிருஷ்டி தசை என இரு தசைகள் உண்டு. பிரளய தசையைக் காரணதசை என்றும், சிருஷ்டி தசையைக் காரிய தசை என்றும் சொல்லுவர். இச்சித்து அசித்துகள் காரண தசையில் சூக்கும நிலையையும், காரிய தசையில்

ஸ்தூல நிலையையும் அடைகின்றன. ஸத்துவம், ரஜஸு, தமஸு ஆகிய இம்முக்குணங்களும் ஏற்றத் தாழ்வின்றி ஸமமாய் இருக்கும் நிலையே ஸூக்ஷ்ம நிலை எனப்படும். மேற்கூறிய முக்குணங்களும் ஏற்றத் தாழ்வுடையனவாயிருக்கும் நிலையே ஸ்தூல நிலை எனப்படும். இம்முறையில் அசித்து, காரண தசையில் ஒரு வித வடிவத்தையும், காரிய தசையில் வேறொரு வித வடிவத்தையும் பெறுகின்றது. இவற்றால் அசித்திற்கு வடிவ வேறுபாடுண்டு என்பது தெரிகின்றது.

சித்தோ, பிரளய தசையில் இருக்குங்கால், அதன் ஞானம் சுருங்கிக் கிடக்கிறது. அது காரிய தசையில் இருக்குங்கால், அதன் ஞானம் மலர்ந்திருக்கிறது. இம்முறையில் சித்து, காரண தசையில் ஞான ஸங்கோசத்தையும், காரிய தசையில் ஞான விகாஸத்தையும் பெறுகின்றது. இவற்றால் சித்திற்கு ஸ்வபாவ வேறுபாடுண்டு என்பதை அறியலாம்.

சரீரத்திற்குள்ள பால்யம் முதலியன எங்ஙனம் ஆன்மாவைச் சாருதல் இல்லையோ, அங்ஙனமே சித்து அசித்துகளின் ஸூக்ஷ்ம ஸ்தூலத் தன்மைகளும் பரமான்மாவை ஒட்டுகின்றதில்லை. தனியான நிலையில் பிரமம் காரணமன்று என்பது ஏற்படுவதால், பிரமத்திற்கு விகாரம் உண்டாதல் இல்லை என்பதும், சிதசித்துகளைச் சரீரமாகவுடைய பிரமமே காரணம் என்பதும் கொள்ளக் கிடக்கின்றன. சிதசித்துக்களைச் சரீரமாகவுடைய பரம புருஷனை நாராயண பதம் குறிப்பதால், அவற்றைச் சரீரமாய்க் கொண்டுள்ள நிலையில் பகவான் உபாதான காரணம் என்பது தேறி நிற்கும்.

தன்னை ஒழிந்த சிதசித்துகளாகிற சரீரப் பொருள்களுள் ஒன்றையும் விடாமல் ஒவ்வொன்றிலும் ஆன்மாவாய் எழுந்தருளி இருப்பவன் பரமான்மா என்பதை நாராயண சத்தம் சொல்லுகிறது. சிதசித்துகளைச் சரீரமாய்க் கொண்டுள்ள நிலையில் மேற்சொல்லியபடி பகவான் உபாதான காரணமாயிருப்பதால், சரீராத்தும பாவத்தைக் குறிக்கும் நாராயண பதத்தில் உபாதான காரணத்துவம் தெளிவாகிறது. ஆக, உபாதான காரணமாயுள்ள பிரமத்திற்கு விகாரமில்லை; அப்பிரமத்திற்குச் சரீரமாயுள்ள சிதசித்துகளுக்கே விகாரமுண்டு என்பது தேர்ந்தது.

அகாரம் அவ ரக்ஷணே என்னும் தாதுவிலிருந்து உண்டானமையின், இது இரட்சகத்துவத்தையும் சொல்லுகிறது.

கீழ்ச்சூத்திரத்தில், காரணமாயும் ரக்ஷகமாயும் இருக்கும் எம் பெருமான், அகாரத்திற்குப் பொருள் என்பது கூறப்பட்டது. இவற்றுள் குடம் உண்டாதற்கு மூன்று காரணங்கள் இருத்தல் போன்று, இவ்வுலகம் உண்டாதற்கும் மூன்று காரணங்கள் உள்ளன. இம்மூன்று காரணங்களும் ஈசுவரனுகவே உள்ளான் எனக் கீழே காரணத்தைப்பற்றிக் கூறினமையின், இங்கு இரட்சகத்தன்மை மட்டும் கூறவேண்டுவதாயிற்று.

அவதாரிகை: இரட்சிக்கையாவது எது?

**மூலம்: 36. "ரக்ஷிக்கையாவது விரோதியைப் போக்குகையும், அபேக்ஷிதத்தைக் கொடுக்கையும்."**

பொருள்: இரட்சித்தல் என்பது, பிரியமற்றவைகளைப் போக்குதலும், விருப்பமுள்ளவற்றை அடையுமாறு செய்தலும் என இரு வகைப்படும்.

விளக்கம்: இவ்விரண்டனுள் ஏதேனும் ஒன்று மட்டும் நடைபெறின், அது காத்தலின்பாற்படாது. உயிர்களின் துக்கங்கட்குக் காரணமாயுள்ள தீமைகளைப் போக்குதற்கும், சுகங்களுக்குக் காரணமாயுள்ள நன்மைகளை ஈதற்கும் பகவான் ஒருவனே அமைந்துள்ளான். ஆதலின், இப்பகவானே உயிர்களுக்குப் பொருத்தமான இரட்சகன் என்பது இவ்வகாரத்தில் சொல்லப்படுகிறது.

அவதாரிகை: சேதனருக்குப் பகவான் போக்கும் பகை எது? ஈயும் பயன் எது?

**மூலம்: 37. "இவை இரண்டும் சேதநர் நின்ற நின்ற அளவுக்கீடாயிருக்கும்."**

பொருள்: மேற்குறித்த காத்தல் தொழில் ஒருபடிப்பட்டதன்று. வெறுக்கப்படுபவைகளைப் போக்குதல், விரும்பப்படுபவைகளைத் தருதல் ஆகிய இவை சேதனருடைய நிலைக்கு ஏற்றனவாயிருக்கும்.

அவதாரிகை: முன் சூத்திரத்தில் கூறியதைத் தெளிவாக அருளிச்செய்கிறார்:

**மூலம்: 38. (1) "ஸம்ஸாரிகளுக்கு விரோதி—சத்ருபீடாதிகள்; அபேக்ஷிதம்—அந்நபாநாதிகள்". (2)**

முமுக்ஷுக்களுக்கு விரோதி—ஸம்ஸார ஸம்பந்தம்; அபேக்ஷிதம்—பரமபத ப்ராப்தி. (3) முக்தர்க்கும் நித்யர்க்கும் விரோதி—கைங்கர்ய ஹாநி; அபேக்ஷிதம்—கைங்கர்ய வ்ருத்தி."

பொருள் : (1) ஸம்ஸாரிகளால் வெறுக்கப்படுவன, பகைவரால் ஏற்படும் துன்பங்கள் முதலியன ; விரும்பப்படுவன, சோறு, தண்ணீர், உடை முதலியன.

(2) முமுட்சுக்களுக்கு விரோதி, இந்த உடலுடன் இவ்வுலகில் இருப்பதாகிய ஸம்ஸார ஸம்பந்தம். அவர்களால் விரும்பப்படுவது, பகவானுடைய பூரண அநுபவத்திற்கு ஏற்றதான பரமபதத்தைப் பெறுதல்.

(3) முத்தருக்கும் நித்தியருக்கும் விரோதிகள், பகவான் திருவடிகளில் தம் சொரூபத்திற்கு ஏற்பப் புரியும் கைங்கரியங்களுக்கு உண்டாகும் தடைகள். அவர்களால் விரும்பப்படுவது, எப்போதும் புரிந்துகொண்டிருக்கும் அக்கைங்கரியத்தை மேன்மேலும் பெருக்குதல் (வளரச் செய்தல்). ஆகவே, இங்ஙனம் அநந்தச் சேதனரின் நிலைக்கு ஏற்பத் துன்பங்களைத் துடைத்து இன்பங்களை ஈபவன்எந்த ஈசுவரனோ அவனே இரட்சகனாகிறான்.

விளக்கம் : தேகமே ஆன்மா என அபிமானித்தும், தாம் சுதந்தரர் என நினைத்தும், உலகில் ஐம்புலன்களால் நுகரப்படும் விஷயங்களே பொழுது போக்கெனக் கருதியும் இருப்பவர் **ஸம்ஸாரிகள்** எனப்படுவர்.

இவ்வுடலை ஆன்மா என எண்ணியிருக்கும் பொய்யான எண்ணமின்றி, அவ்வெண்ணத்தினால் உண்டாகும் பயனற்ற செயல்களிலும் வெறுப்புற்று, பகவதநுபவத்தினால் பிறக்கும் அன்பிலும், அவ்வன்பின் காரியமான கைங்கரியத்திலும் விருப்புற்றிருப்பவர் **முமுட்சுக்கள்**.

இங்ஙனம் ஸம்ஸாரத் தொடர்பிலிருந்து நீங்கியவராயும், ஸம்ஸாரத் தொடர்பில் ஒரு நாளும் சிக்குண்ணாதவராயும் இருக்கும் இவ்விரு சாராரும், பகவதநுபவத்தினால் பிறக்கும் ஊன்றிய அன்பின் அடியாகத் தூண்டப்பட்டுக்' கைங்கரியத்தில் மனமூன்றியவராய்,பிராப்த சேஷியான ஈசுவரன் திருவடிகளில், அவன் முக

மலர்த்திக்கெனவே கைங்கரியம் செய்பவராகிய முத்தரும் நித்தியரு மாவர். ஆனால், இப்பேறு முத்தருக்குத் தாம் ஸம்ஸாரத் தொடர்பி லிருந்து நீங்கிய பின்பு ஏற்படுகிறது. நித்தியருக்கோ, இப்பேறு என்றும் இடையீடின்றி நித்தியமாய்ச் செல்லுகிறது.

வினா: இங்கு ஸம்ஸாரிகள், முமுட்சுக்கள், முத்தர், நித்தி யர் இவர்களைப்பற்றிச் சொல்லி, ஆன்மானுபவத்தில் ஊன்றியிருக் கும் கேவலரைக் குறித்து மட்டும் சொல்லாமல் விட்டதற்குக் காரணம் யாது?

விடை: இவர்களுள், மிகத் தாழ்ந்த நிலையில் இருக்கும் ஸம்ஸாரிகளுக்கேனும், படிப்படியாய் ஞானம் பிறந்து, தங்கள் ஸம்ஸாரத் தொடர்பு நீங்கி, ஒரு காலத்தில் எம்பெருமானை அணுகி அவனுக்குக் கைங்கரியம் புரிந்து வாழும் பேறு கிடைக்கும். கேவலருக்கோ, ஆன்மானுபவத்தோடு அவர்களுடைய இன்பம் நின்றுவிடுகிறது. அவர்கள் ஈசுவரனை அணுகி அவனுக்குத் தொண்டு புரிந்து வாழ்வதாகிய பேரின்பத்தை எக்காலத்திலும் அடைதல் இல்லை. ஆதலினாற்றான், ஆன்ம அனுபவமாகிற சிற்றின் பத்திலேயே ஆழ்ந்து இறை அனுபவமாகிற பேரின்பத்தை இழந்து நிற்கும் கேவலரைப் பிள்ளைலோகாசாரியர் ஒரு பொருளாகவே மதித்திலர். இதனாற்றான், இங்கு அவர்களைப்பற்றிப் பகராது விடுத்தார்.

வினா: "முத்தருக்கும் நித்தியருக்கும், பகவான் திருவடி களில் செய்யும் கைங்கரியங்களுக்கு ஏற்படும் இடையீடுகளே விரோதியாயுள்ளன," எனச் செப்பினீர். இத்தகைய உயர்நிலை யில் உள்ள இவர்கள் யாதும் குறைவற்ற பரமபதத்தில் ஈசுவர னுக்குச் செய்யும் தூய கைங்கரியத்திற்கும் விரோதிகள் உண்டா குமோ? அங்ஙனமாயின், அவை யாவை?

விடை: பரமபதத்திலும், தன்னுடைய இன்பத்தைக் கரு திச் செய்யும் கைங்கரியம், எம்பெருமான் முகவுல்லாஸத்தின் பொருட்டே புரியும் கைங்கரியம் எனக் கைங்கரியம் இரு வகைப் படும். இவற்றுள் முன்னது ஸ்வார்த்த கைங்கரியம் என்றும், பின்னது பரார்த்த கைங்கரியம் என்றும் பெயர் பெறும். ஸ்வார்த்த கைங்கரியத்தை மேற்கொள்ளுங்கால், பரார்த்த கைங்கரியத்தில் மனம் செல்லாது. இம்முறையில் ஸ்வார்த்த

கைங்கரியமானது பரார்த்த கைங்கரியத்திற்கு விரோதியாயுளது. இதுவே முத்தருக்கும் நித்தியருக்கும் பகையாகும்.

அவதாரிகை : ஈசுவரன்ருனு யாவரையும் காப்பவன்? உலகில் மாதா பிதா மற்றுந் தேவர் முதலியோர் இலரோ?

**மூலம் : 39. "ஈசுவரனையொழிந்தவர்கள் ரக்ஷகரல்ல ரென்னுமிடம் ப்ரபந்ந பரித்ராணத்திலே சொன்னோம்."**

பொருள் : உயிர்களுக்கு ஈசுவரன் ஒருவனே உண்மை இரட்சகன். அவனை ஒழிந்த பெற்றோர் சுற்றத்தினர் முதலியவரும், வேறு தேவர்களும் உண்மை இரட்சகர் ஆகமாட்டார்கள் என்பது பிரபந்நபரித்திராணம் என்னும் கிரந்தத்தில் சொல்லப் பட்டுள்ளது.

விளக்கம் : "ஒரு காரணத்தாலன்றி, இயல்பாகவே அமைந்த எல்லா உறவுமாய், எக்காலத்திலும் கைவிடாமல் கண்ணுங்கருத்து மாய் நோக்கிக்கொண்டு போகும் பகவானே, உயிர்களை இரட்சிக் கும் வன்மை வாய்ந்தவன். பூர்வ கன்மம் முதலிய சில காரணங் களினல் உறவினராயும், நமக்கு ஆபத்து வந்த காலத்தில் அஞ்சி ஒதுங்கி நிற்பவராயும் இருக்கும் பெற்றோரும், மற்றத் தேவர் களும் உயிர்களைக் காக்கும் வன்மை வாய்ந்தவர்கள் ஆகமாட் டார்கள்," என்பதை அறிதல் வேண்டும்.

அவதாரிகை : அகாரத்தில் தாது அர்த்தமான ஈசுவரனுடைய ஸர்வரக்ஷகத்துவத்தைச் செப்பிய பின்பு, அகாரத்தில் கிடைக்கும் ஸ்ரீயப்பதித்துவத்தை அருளிச்செய்கிருர் :

**மூலம் : 40. "ரக்ஷிக்கும்போது பிராட்டி ஸந்நிதி வேண்டுகையாலே, இதிலே ஸ்ரீ ஸம்பந்தமும் அநு ஸந்தேயம்."**

பொருள் : ஈசுவரன் உயிர்களைக் காக்குங்கால், கருணையையே வடிவாகவுடைய பிராட்டியின் கூட்டுறவு இன்றியமையாததாகும். ஆதலின், இரட்சகனை எம்பெருமானைக் குறிக்கும் அகாரத்தில் பிராட்டியாரின் தொடர்பும் உள்ளதெனக் கொள்க.

"கோவியற் றரும முங்கள் குலத்துதித் தோர்கட் கெல்லாம்
ஓவியத் தெழுத வொண்ணு வுருவத்தா யுடைமை யன்றே?
ஆவியைச் சனகன் பெற்ற அன்னத்தை அமிழ்தின் வந்த
தேவியைப் பிரிந்த பின்னைத் திகைத்தனை போலும் செய்கை!',
(கிஷ். கா. வாலி வதை—78.)

என்னும் கம்பர் வாக்கு இங்குக் கருதத் தக்கது.

விளக்கம்: ஈசுவரன் சேதனரைக் காக்குங்கால், சேதனரின் அளவற்ற குற்றங்களைக் கண்டோ, தன் ஸ்வாதந்தரியத்தினலோ அவர்களைப் புறக்கணிக்கவும் கூடும்! அவ்வமயம் ஈசுவரனுக்குச் சேதனரிடம் கருணை பிறக்குமாறு வேண்டியதை வேண்டியாங்குச் சொல்லிப் புருஷகாரம்[1] செய்யும் பிராட்டியார் அருகில் இருந்தே ஆக வேண்டும். அப்போதுதான் பகவான் தடையின்றிக் காத்தல் தொழிலை மேற்கொள்வான்.

ஆக, பகவானுடைய இரட்சகத்துவத்தைக் குறிக்கும் இவ் வகாரத்தில் பிராட்டியாரின் ஸம்பந்தமும் உள்ளதெனக் கொள்க. இச்சம்பந்தம் அகாரத்தில் அர்த்தபலத்தாலே கிடைக்கின்றது.

வினு: இங்ஙனம் அர்த்தபலத்தாலே கிடைப்பது என்பது எப்படி?

விடை: ஒருவர் ஒரு போது நீர் பருகுதற்கு ஒரு பாத்திரத் தைக் கொணருமாறு பகருகின்றூர்; இன்னொரு போது செம்மை செய்தற்பொருட்டு ஒரு பாத்திரத்தைக் கொணருமாறு இயம்பு கின்றூர். இவ்விரு முறை வேண்டப்படுவதும் பாத்திரம் என்னும் ஒரே பொருளாயிருப்பினும், ஒருவர் நீர் பருகுங்கால், தொளையற்ற பாத்திரத்தையும், செம்மை செய்யும் போது தொளையுற்ற பாத்தி ரத்தையுமே அவாவி நிற்பர் என்பது தெள்ளிதின் தெரிகின்ற தன்றே? இதை நாம் எங்ஙனம் அறிந்தோம்? அந்தந்த இடத்திற் கேற்ப அல்லவா? அங்ஙனமே, ஈசுவரன் ரக்ஷகன் என்று சொல்

குறிப்பு: 1. புருஷகாரம்: சேதனர் குற்றங்களைக் கண்டு சீறிச் சினந்து உதறித் தள்ளுபவன் பகவான். அந்நிக்கிரஹத்தை நீக்கி அன் போடு அங்கீகரிக்குமாறு தூண்டுபவர் பிராட்டியார். ஆதலின், இவ ருக்குப் 'புருஷகார பூதை' எனப் பெயர் அமைந்துள்ளது. புருஷ காரம்—ஒருவரை மற்றொருவர் ஏற்றுக்கொள்ளுமாறு செய்யும் காரியம். இவ்வார்த்தையின் பொருளைத் துவயத்தில் ஆராயலாம்.

லும் போது அவன் பிராட்டியோடு சேர்ந்திருந்தாலன்றி உயிர்களை இரட்சிக்க முடியாது. ஆதலின், பகவான் இரட்சகன் என்பதைக் காட்டும் அகாரத்தில் பிராட்டியின் தொடர்பும் அர்த்தத்தால் கிடைக்கிறது என்பதை நாம் காணலாம்.

திருமகளுக்குப் பல பெயர்கள் இருப்பினும், இவ்வாக்கியத்தில் "ஸ்ரீ ஸம்பந்தமும்" என்னும் தொடரில் 'ஸ்ரீ' என்பதைப் பொருத்தியிருத்தலை நோக்குதல் வேண்டும். ஸ்ரீ என்னும் பதம் ச்ரயத இதி ஸ்ரீ: ; ச்ரியத இதி ஸ்ரீ: என்றாகி, முன்னது பிராட்டியார் எம்பெருமானை எப்போதும் சேவித்துக்கொண்டு (ஆசிரயித்துக் கொண்டு) அவனை விட்டுப் பிரியாமல் இருக்கிறார் என்றும், பின்னது, சேதனரால் சேவிக்கப்படுபவராய் (ஆசிரயிக்கப்படுபவராய்) இருக்கிறாரென்றும் பொருள் தாராநிற்பதனால், எம்பெருமானைக் குறிக்கும் அகாரத்திலும் இவர் என்றும் அமைந்திருக்கின்றார் என்பதை அறிதல் வேண்டும்.

**அவதாரிகை :** இந்த அகாரத்தில் பிராட்டியாரின் தொடர்பு உண்டு என்பதைப் பெரியோர் வார்த்தையினால் நிலை நாட்டுகிறார் :

**மூலம் :** 41. "அத்ரபகவத் ஸேநாபதி மிச்ரர் வாக்யம்—அவன் மார்புவிட்டுப் பிரியில் இவ்வக்ஷரம் விட்டுப் பிரிவது."

**பொருள் :** "'அகலகில்லேன் இறையும்' எனச் சொல்லிக் கொண்டு ஒரிமையும் ஈசுவரன் மார்பை விட்டுப் பிரியாமல் வாழ்கின்ற பிராட்டியார், அவன் மார்பை விட்டுப் பிரியும்போதல்லவா, அவனைச் சொல்லுகிற இவ்வகாரத்தை விட்டுப் பிரிவது?" என்று ஞானாதிகரான ஸ்ரீஸேநாபதி ஜீயர் அருளிச்செய்வர்.

**விளக்கம் :** 'அகலகில்லேன் இறையும் என்று' என்னும் ஆழ்வார் பாசுரத்தில் **என்று** என்னும் சொல் இருக்கிறது. ஆயினும், அச்சொல் இப்பாசுரத்தில் இல்லையேனும், எப்படி அச்சொல்லைச் சேர்த்துக்கொண்டே பொருள் சொல்ல வேண்டுமோ, அங்ஙனமே இங்கு 'என்று' என்னும் சொல் இல்லாமலிருப்பினும், அதைச் சேர்த்துக்கொண்டே பொருள் சொல்ல வேண்டும்.

இதனால், எம்பெருமான் மார்பின் சேர்க்கை திருமகளாருக்கு என்றும் உள்ளமையின், அவன் தோன்றும் இடங்களில் எல்லாம் இவரும் தோன்றுதல் உறுதியாகையால், அவன் திருமார்பில்

ஸம்பந்தம் போன்றே, அவனைக் குறிக்கும் இவ்வகாரத்திலும் இவர் சேர்க்கை என்றும் உண்டு என்பது பெற்றோம்.

அவதாரிகை : இன்னும் எம்பெருமான் தோன்றும் இடங்களி லெல்லாம் பிராட்டியாரும் தோன்றுவர் என்னும் பொருளை நிலை நிறுத்தற்பொருட்டு, ஈசுவரனைச் சொல்லும் அகாரத்திலும் ஆன்மா வைச் சொல்லும் மகாரத்திலும் பிராட்டியாருக்கு உண்டாயிருக் கும் இடையீடில்லாத தொடர்பை உதாரண முகத்தால் காட்டு கிறார் :

**மூலம் : 42. "பர்த்தாவினுடைய படுக்கையையும் ப்ரஜை யினுடைய தொட்டிலையும் விடாதேயிருக்கும் மாதா வைப் போலே, ப்ரதம சரம பதங்களை விடாதே யிருக்குமிருப்பு."**

பொருள் : கணவருக்குத் தொண்டு பூண்டொழுகும் தம் இயல்பிற்கேற்ப, அவரை ஆனந்திப்பித்தற்பொருட்டு அவர் படுக்கையையும், குழந்தையைக் காக்கும் தம் இயல்பிற்கேற்ப அம்மகவின் தொட்டிலையும் விடாது பற்றி நிற்கும் தாயாரைப் போன்று, பிராட்டியாரும் இவ்விரண்டிடங்களிலும் தமக்குண் டான தொடர்பிற்கேற்ப முறையே இன்பூட்டுதல் காத்தல் ஆகிய செயல்களைச் செய்தற்பொருட்டு, தம் பர்த்தாவான ஈசுவரனைக் குறிக்கும் முதல் பதமான அகாரத்தையும், சேதனனைக் குறிக்கும் இறுதி பதமான மகாரத்தையும் விடாமல் பற்றிக்கொண்டிருக்கின் றார். இது 'ஸ்ரீ' என்னும் திருநாமத்தில் நன்கு விளங்கும்.

விளக்கம் : வினா : 'ஈசுவரன் தோன்றுமிடங்களிலெல்லாம் பிராட்டியாரும் தோன்றுவர்,' எனக் கூறிய ஆசிரியர், அவனுக்கு வாசகமல்லாத (அவனைச் சொல்லாத) மகாரத்தில் பிராட்டியாரும் தோன்றுவதை உதாரணமாய் உரைத்துள்ளனரே! இஃது எவ் வாறு பொருந்தும்?

விடை : சிலர், "ஈசுவரன் தோன்றுமிடங்களிலெல்லாம் பிராட்டியார் தோன்றுகை (சரதம்) உண்மை. ஆதலால், இவருக் குச் சேதனர் குழுவில் தொடர்பு இலது ; ஈசுவரக் கோடியிலேயே தொடர்பு உளது," எனச் செப்புகின்றனர். அவர்களுடைய பக்ஷத்தை (கருத்தை)க் கண்டித்துப் பிராட்டியாருக்குச் சேதனர்

குழுவிலேயே தொடர்புண்டு என்பதைத் தெரிவித்தற்பொருட்டே இவர் மகாரத்தில் பொருந்தியிருப்பதை இங்கு அருளிச்செய்கின்றூர். இதனல், மகாரமே பிராட்டியாரைச் சத்தசத்தியால் தெரிவிக்கின்றதென்றும், அகாரம் சத்தசத்தியால் தெரிவித்திலது என்றும் அறிகின்றேம்.

வினு: இங்ஙனம் அவனுக்கு வாசகமான சத்தம் இவருக்கும் வாசகமாகாவிடில், அவன் தோன்றுமிடங்களிலெல்லாம் இவரும் தோன்றுவது எங்ஙனே?

விடை: புருஷ: என்னும் ஒரு திருநாமம் பகவானுக்குள்ளது. இப்பெயருக்கு 'மிகுதியாய்க் கொடுக்குந் தன்மையுடையவன்' என்பது பொருள். எங்ஙனம் இப்புருஷ சத்தம், ஈசுவரன் மிகுதியாய்க் கொடுப்பவன் என்பதைத் தெரிவித்து அதன் மூலம் அவனுக்குள்ள ஞான சத்திகளைத் தெளித்துக் காட்டுகின்றதோ, அங்ஙனமே அகாரம் இரட்சகனுன ஈசுவரனைச் சொல்லி, அவ்வழியிலே அவன் பிராட்டியாரின் ஸம்பந்தமுடையவன் என்பதைத் தெளித்துக் காட்டுகின்றது. மரம் என்னும் சொல், எப்படி எல்லாருக்கும் எப்போதும் மரத்தையே குறிக்கும் சொல்லாயிருக்கிறதோ, அப்படியே அகாரம் பரமாத்துமாவையே குறிக்கும் சொல்லாயிருக்கிறது.

வினு: எம்பெருமானுக்கு 'ஈசுவரன்' என்னும் திருநாமம் உள்ளது போன்றே, பிராட்டியாருக்கும் 'ஈசுவரி' என்னும் திருநாமம் உள்ளமையின், ஈசுவரனுக்குச் சேதனுசேதனங்கள் எம்முறையில் சேஷப் பொருள்கள் எனச் சொல்லுகின்றேமோ, அம்முறையிலேயே பிராட்டியாருக்கும் அவைகள் சேஷப் பொருள்கள் எனக் கூறின் வரும் குற்றம் யாது?

விடை: அங்ஙனம் சொல்லுதல் கூடாது. பிராட்டியார் ஈசுவரனுக்குப் பத்தினியாயிருப்பதால், அவனுக்குரியனயாவும் இவருக்கும் உரியன என்னும் முறையில், சேதனுசேதனங்கள் இவருக்கும் அடிமைப்பட்டிருக்கின்றனவேயல்லாமல், அவைகள் இவரை நேர்முகமாய்ச் சேஷியாய்க் கொண்டில்லை. 'பிராட்டியார் விஷ்ணு பத்தினியாயிருத்தலின், இவர் இந்த உலகிற்கு ஈசுவரியார்' என்று சுருதி சொல்லுகிறது,

வினு: இஃதிங்ஙனமிருப்பினும், பிராட்டியார் உலகிலுள்ள சேதனுசேதனங்களுக்கு மாதா அல்லவா? அந்நிலையில் அவைகள் இவருக்குச் சேஷமாகவும், இவர் அவைகளுக்குச் சேஷியாகவும் இருக்கின்றூர் என இயம்புதற்குத் தடை யாது?

விடை: இஃதுண்மையே. ஆயினும், இதிலும் ஒரு குறைவு உள்ளது.

வினு: என்ன?

விடை: ஓர் இல்லத் தலைவன் எங்ஙனம் தந்தை என்னும் முறையில் தன் குழந்தைகளுக்குத் தலைமை பெற்றிருக்கின்றனனே, அங்ஙனமே இல்லத் தலைவியும் தாய் என்னும் உறவினுல், அம்மக்களுக்கு முதன்மை பெற்றிருக்கின்றுள். ஆயினும், அத் தலைவன் எண்ணத்தை இவள் பின் பற்றிக் காரியங்களைச் செய்ய வேண்டுமே தவிர, இவள் இச்சையின்படியே எதையும் செய்தல் கூடாது. அங்ஙனம் செய்யின், இவள் உத்தம பத்தினியாகமாட்டாள். இவ்வாறே இவ்வுலகமாகிய மக்களுக்கு ஈசுவரன் தந்தையாகவும், பிராட்டியார் தாயாராகவுமல்லவா இருக்கின்றனர்? அங்ஙனமாயின், பிராட்டியாரும் ஈசுவரனுடைய குறிப்பைப் பின்பற்றித்தானே செயல்களைச் செய்தல் வேண்டும்? இம்முறையிலும் இவருக்கு முதன்மை கூற இயலாதன்றே?

இவ்வுதாரணத்தினுல், ஒரு முறையில் பிராட்டியாருக்குத் தாயின் நிலை (மாத்ருத்துவம்) இருப்பினும், தந்தையின் நிலை (பித்ருத்துவம்) பிரதானம் (முதன்மை) ஆனதென்றும், இவருடைய தாயின் நிலை பிரதானம் (முதன்மை) அற்றதென்றும் அறிகின்றேம்.

இன்னும், ஓரிடத்திற்கு ஒரு தலைவன்தான் இருக்க முடியுமே தவிர, இரு தலைவர் இருத்தல் முடியாது. அங்ஙனமிருப்பினும், அவர்களுள் ஒருவர்தாம் முதன்மை பெற்றிருப்பர். மற்றெருவர், அவரினும் சிறிது குறைவுடையவராய்த்தான் இருப்பர். அஃதன்றியும், சேதனுசேதனங்களுக்குத் தலைமை பெற்றிருப்பவர், உயிர்களைத் தோற்றுவித்தல் காத்தல் முதலியவற்றைச் செய்தாக வேண்டும். இவற்றிற்கு அனுக்கிரஹம் நிக்கிரஹம் ஆகிய இரண்டும் இருத்தல் அவசியம். இவ்விரண்டும் ஈசுவரனிடத்தில் காணப்படுகின்றன. ஆனல், பிராட்டியாரோ, தண்டம் என்பதையே இன்னதென அறியாதவராய், அருளையே வடிவெனக் கொண்டவராய்

இருக்கின்றனர். இங்ஙனமிருத்தலின், இவர் கொடுமை வாய்ந்த நிக்கிரஹத்தை எவ்வாறு செய்ய முடியும்?

அவதாரிகை: முன் சூத்திரத்தில் சொன்ன உதாரணத்தை விளக்குகிறார்:

**மூலம்: 43. "ஸ்ரீ நந்தகோபரையும் க்ருஷ்ணனையும் விடாத யசோதைப் பிராட்டியைப்போலே"**

பொருள்: எங்ஙனம் யசோதைப் பிராட்டியார், மனைவியார் என்னும் தம் நிலைக்கு ஏற்ப, பர்த்தாவை இன்புறுத்தற்கு நந்த கோபரையும், தாயார் என்னும் தம் நிலைக்கு ஏற்ப, புதல்வனைக் காத்தற்குக் கண்ணனையும் விடாமல் தக்க முறையில் பரிபாலித்து வந்தனரோ, அங்ஙனமே பிராட்டியாரும் ஈசுவரனையும் சேதனரையும் பற்றிக்கொண்டு காரியங்களைச் செய்வர் என்பதை அறிக.

விளக்கம்: யசோதைப் பிராட்டியாரின் இச்செயலை நம் கோதையார் "அம்பரமே தண்ணீரே" என்னும் பாசுரத்தில் சித்திரித்துக் காட்டுகிறார்.

உலக உயிர்களுக்கு உண்டி, உடை, நீர் முதலியவற்றை ஈபவரும், கோபிகைகளுக்கு அரசரானவருமான நந்தகோபர் முதலில் உறங்குகிறார். ஒருகால் வானத்தை அளாவி வளர்ந்து உலகம் யாவையும் அளந்துகொண்ட தேவர்க்குத் தலைவனான கண்ணன் கடையில் துயில்கிறான். மங்கையர்க்குக் கொழுந்து போன்றவரும், விளக்குப் போன்று அக்குலத்தை ஒளிரச் செய்பவரும், யாவருக்கும் தலைமை வாய்ந்தவருமான யசோதையார், இடையில் கண் வளருகிறார் என்பதை 'அம்பரமே தண்ணீரே' என்னும் இப் பாசுரம் நன்கு விளக்குகிறது. யசோதையார் எங்ஙனம் இருவருக்கும் நடுவில் இருந்து அவரவர்க்குத் தக்கவாறு நடந்துகொள்ளுகிறாரோ, அங்ஙனமே பிராட்டியாரும் அகாரப் பொருளான ஈசுவரனுக்கும், மகாரப் பொருளான சேதனனுக்கும் இடையில் இருந்து கொண்டு இருவருக்கும் ஏற்பச் செயல் புரிந்துகொண்டிருக்கிறார்.

அவதாரிகை: இவ்வகாரத்தில், சேதனன் ஈசுவரனுக்குச் சேஷபூதன் எனச் சொல்லப்படுகிறதே தவிர, பிராட்டியாருக்கும் சேஷம் என்று சத்த சத்தியால் சொல்லப்பட்டிலது. அங்ஙனமாயின், சேதனன் பிராட்டியாருக்குச் சேஷம் எனக் கொள்ளுதல் யாங்ஙனம்?

மூலம்: 44. "ஒருவன் அடிமை கொள்ளும்போது க்ருஹிணிக்கென்றன்றே ஆவணையோலையெழுதுவது? ஆகிலும், பணி செய்வது க்ருஹிணிக்கிறே. அது போலே நாம் பிராட்டிக்கு அடிமையாயிருக்கும்படி."

பொருள்: வீட்டுத் தலைவன், ஒருவனை அடிமையாக ஏற்றுக்கொள்ளும் போது, அவன் தனக்கு மட்டும் அடிமை என விலையோலை எழுதிக்கொள்ளுவனே தவிர, அவ்வீட்டுத் தலைவியாகிய தன் இல்லாளுக்கும் அடிமை என்று எழுதிக்கொள்ளுவதில்லை. ஆயினும், அத்தொண்டன் தொழில் புரிவது பெரும்பான்மையும் அத்தலைவியின் உவப்பிற்கு ஏற்பவே ஆகும். இஃது அனுபவ விஷயம். இதற்குக் காரணம் என்ன? முன் கூறியவாறு பதிக்குச் சேஷமாயிருக்கும் யாவும் பத்தினிக்கும் சேஷம் என்னும் நியாயமே ஆகும். அங்ஙனமே, பதிபத்னி நியாயத்தால், ஈசுவரனுக்கு அடிமைப்பட்ட நாம் பிராட்டியாரின் முகவுல்லாஸத்தின்பொருட்டுத் தொண்டு புரிந்தே ஆக வேண்டும்.

ஆக, அகாரத்தில் அர்த்தபலத்தால் பிராட்டியாரின் தொடர்பு தோன்றுதல் போன்று, அகாரமாகிற பகுதியில், ஏறிக் கழிந்திருக்கும் ஆய என்னும் விகுதியாகிய சதுர்த்தியிலும் பதிபத்னி நியாயத்தால் நாம் பிராட்டியாருக்குச் சேஷப் பொருள் என்னும் பொருள் தோன்றுவதாகும்.

விளக்கம்: இதனால், பிராட்டியாருக்குச் சேஷித்துவமும், சர்வேச்வரித்துவமும், மற்றும் சுருதிகளில் சொல்லப்படும் சிறப்புகளும் விஷ்ணுவின் பத்தினியார் என்னும் தன்மையில் ஏற்பட்டுள்ளன என்று ஆசாரியர் அருளிச்செய்வர்.

அவதாரிகை: கீழ்க் காட்டிய காரணங்களினால் பிராட்டியாருக்கும் ஈசுவரனுக்கும் என்றும் பிரிவில்லை என்பதைக் காட்டுகிறார்:

மூலம்: 45. "ஆகப்பிரிந்து நிலையில்லை."

பொருள்: கீழ்க் கூறப்பட்டவைகளால் ஈசுவரனும் பிராட்டியாரும் என்றும் ஒருவரை விட்டு ஒருவர் பிரியாமல் சேர்ந்திருக்கின்றனர் என்பதை அறிந்தாம்.

அவதாரிகை: இப்பிரிவில்லாமைக்கு இரண்டு உதாரணங்கள் காட்டுகிறார்:

மூலம்: 46. "ப்ரபையையும், ப்ரபாவானையும், புஷ்பத்தையும், மணத்தையும் போலே."

பொருள்: ஒளிக்கும் பகலவனுக்கும், மணத்திற்கும் மலருக்கும் எங்ஙனம் பிரிவு இல்லையோ, அங்ஙனமே பிராட்டியாருக்கும் எம்பெருமானுக்கும் என்றும் பிரிவு ஏற்படுதல் இல்லை.

விளக்கம்: "ஆதித்தனிடத்திலிருந்து ஒளி நீங்காதது போல, சீதையானவள் என்னிடமிருந்து வேறுபடாதவளல்லவா?" என்று சக்கரவர்த்தித் திருமகனும், "சூரியனிடத்திலிருந்து பிரகாசம் எப்படிப் பிரியாதிருக்குமோ, அப்படியே யான் இராகவனிடத்திலிருந்து வேறுபடாதிருப்பவள்," எனப் பிராட்டியாரும் சொல்லும் இராமாயண வாக்கியங்களை நோக்குக.

அவதாரிகை: சேதனருக்கு வேண்டற்பாலது இன்னது என, அருளிச்செய்கிறார்:

மூலம்: 47. "ஆக இச்சேர்த்தி உத்தேச்யமாய்விட்டது."

பொருள்: ஆதலின், மேற்கூறிய காரணங்களினால், இவ்விருவர் சேர்த்தியே சேதனனுக்கு வேண்டற்பாலதாகும்.

விளக்கம்: இம்முறையில் சேதனர் இவ்விருவரையும் சேர்த்தே பற்றுதல் வேண்டும். இவர்களைத் தனித்தனியே பற்றுதல் எவ்வகையானும் விரும்பத் தக்கதன்று. அங்ஙனமன்றிச் சேதனர், ஒரோ ஒருகால் தம் அறியாமையினால், இருவரையும் தனித்தனியே பிரித்து விரும்பினால், சூர்ப்பணகை இராவணாதிகளைப் போன்று அழிவுறுவர். இருவரையும் பற்றினாற்றான் ஸ்ரீ விபீஷணாழ்வார் போன்று நல்வாழ்வு பெறலாம்.

தொகுப்புரை: முப்பத்திரண்டாம் சூத்திரத்திலிருந்து நாற்பத்தேழாம் சூத்திரம் (32-47) வரையும் பகர்ந்தவற்றால், இத்திருமந்திரத்திற்கு முதல் பதமான பிரணவத்தில், அ, உ, ம என்னும் மூன்று அட்சரங்கள் அமைந்துள்ளனவென்றும்; இம்மூன்று எழுத்துகளும் மூன்று வேதங்களிலிருந்து எடுக்கப்பட்டமையின்,

இப்பிரணவம் எல்லா வேதங்களின் ஸாரமென்றும்; இவ்வெழுத்துகளுள் அகாரம், எல்லா உலகங்களுக்குங் காரணமாய் ஸர்வ ரக்ஷகனான எம்பெருமானைச் சொல்லுகிறதென்றும்; இரட்சித்தல் என்பது, விரோதியைப் போக்கி விரும்பப்படும் பொருளைத் தருதல் என்றும்; இவ்விரண்டும் சேதனர் நின்ற நிலைக்கு ஏற்றனவாயிருக்குமென்றும், ஸம்ஸாரிகள், முமுக்ஷுக்கள், முத்தர், நித்தியர் இவர்கட்கு வெறுப்பிற்கு இடமானவை இவை என்றும்; விருப்பிற்கு இடமானவை இவை என்றும்; ஈசுவரனை ஒழிந்தவர் இரட்சகரல்லர் என்பது பிரபன்னபரித்ராணத்தில் சொல்லப்பட்டதென்றும்; இரட்சிக்கும்போது பிராட்டி ஸந்நிதியும் வேண்டுமாதலின், இவ்வகாரத்தில் இத்தொடர்பும் உள்ளது என்றும்; பிராட்டியார் பகவானை விட்டுப் பிரிந்தாற்றான் இவ்வகாரத்தையும் விட்டுப் பிரிவர் என்பது ஸேநாபதி மிச்ரர் கருத்து என்றும்; கணவனுடைய படுக்கையையும் பிள்ளையினுடைய தொட்டிலையும் விடாத தாயைப் போன்று, பிராட்டியார் பகவானையும் சேதனனையும் விடாமல் பற்றியிருக்கிறார் என்றும்; இதற்கு யசோதைப் பிராட்டியார் தக்க சான்றென்றும்; ஈசுவரனுக்குச் சேஷப்பட்ட நாம் பிராட்டியாருக்கும் சேஷமாயிருத்தல், வீட்டுத் தலைவனுக்குப் பணிபுரிய வந்தவன், அவ்வீட்டுத் தலைவிக்கும் பணி புரிதல் போன்றது என்றும்; ஆதலின், பகவானிடத்திலிருந்து பிராட்டியாரைப் பிரிக்க இயலாதென்றும்; சூரியனையும் ஒளியையும், மலரையும் மணத்தையும் போன்று இவ்விருவர் தொடர்பும் உள்ளதென்றும்; இச்சேர்த்தியே நமக்கு உத்தேச்யம் என்றும் அறிந்தாம்.

அவதாரிகை: முதலில் வேற்றுமைப் பொருளைச் சொல்லுதற்பொருட்டு அவ்வேற்றுமையை இன்னதெனக் குறிக்கிறார்:

**மூலம்: 48. "இதிலே சதுர்த்தி ஏறிக் கழியும்."**

பொருள்: அகாரத்தில் உள்ள நான்காம் வேற்றுமை உருபு புணர்ந்து கெட்டிருக்கிறது.

அவதாரிகை: இவ்வகாரத்தில் நான்காம் வேற்றுமை ஏறியது எங்ஙனம் என்னும் ஐயத்தை விளக்குகிறார்:

**மூலம்: 49. "சதுர்த்தி ஏறினபடி என்னென்னில்"**

பொருள்: வேற்றுமைகள் பல இருக்க, இவ்வகாரத்தில் நான்காம் வேற்றுமையே புணர்ந்து கெட்டதற்குக் காரணம் யாது?

அவதாரிகை : அதற்கு விடை பகருகிறுர் :

மூலம் : 50. "நாராயணபதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக் கையாலே."

பொருள் : இவ்வகாரம், ஆய என்னும் நான்காம் வேற்று மையை (சதுர்த்தியை) இறுதியில் பெற்றுள்ள நாராயணுய (நாரா யண + ஆய) என்னும் பதத்தின் சுருக்கமன்றோ? ஆதலின், நாரா யண பதத்திலுள்ள வேற்றுமை உருபு இவ்வகாரத்திலும் அடங்கி யிருக்கிறதென யூகித்தல் வேண்டும். அன்றேல், அகாரம் நாரா யண பதத்தின் சுருக்கம் என்பது பொருந்தாது.

அவதாரிகை : இதனுல், பெறப்படும் பொருள் என்ன?

மூலம் : 51. "இத்தால், ஈச்வரனுக்கு சேஷமென்கி றது."

பொருள் : இந்த வேற்றுமையால் சேதனன் ஈசுவரனுக்குச் சேஷபூதன் என்பது பெறப்படுகிறது.

விளக்கம் : ஈசுவரனுக்குச் சேதனன் எம்முறையில் சேஷ பூதனுயிருக்கிறுன் என்பதை நோக்குதல் வேண்டும் :

'ஈசுவரன், சித்து, அசித்து' எனத் தத்துவங்கள் மூன்றுய் உள்ளன. இவற்றுள், ஈசுவரனே விட்டு, மற்ற இரு தத்துவங்களே யும், 1. சித்து + சித்து எனவும், 2. அசித்து + அசித்து எனவும், 3. சித்து + அசித்து எனவும். 4. அசித்து + சித்து எனவும் பிரித்து, இவற்றிற்குச் சேஷ சேஷி பாவமாகிற ஸம்பந்தத்தைச் சொல்லுதல் வேண்டும். இவற்றை 1. சேஷி சேஷப் பொருள் களின் இச்சை, 2. சேஷி சேஷப் பொருள்களே மேற்கொள்ளும் புருஷனுடைய இச்சை, 3. சேஷப் பொருளுடைய இச்சை, 4. சேஷியினுடைய இச்சை என நான்காகக் கொண்டு ஆராய்தல் வேண்டும்.

1. மன்னனுக்கும் தொண்டனுக்கும் உள்ள ஸம்பந்தம் முதலில் குறித்த சேஷி சேஷ ஸம்பந்தமாகும். 'இவன் நமக்குத் தொழிலேச் செய்கிறுன். இது நம் சிறப்பிற்கு உறுப்பாகையால், இவன் நமக்கு வேண்டும்,' எனக் கருதும் மன்னருடைய இச்சை யாலும் ; "நான் தலேவனுக்குச் சிறப்பை உண்டுபண்ணுபவனுகை யால், அதற்குச் சேரப் பாங்காய் நடந்துகொள்ள வேண்டும்,"

என்கிற ஊழியனுடைய இச்சையாலும் ஊழியன் உபாதேயப் பொருளாயிருத்தலின், அவனுக்கு (ஊழியனுக்கு)ச் சேஷத்துவம் உண்டு. இது சித்துக்கும் சித்துக்கும் உள்ள தொடர்பு.

2. ஆசமனத்திற்கும் பிரக்ஷாளனத்திற்கும் உள்ள தொடர்பு அசித்திற்கும் அசித்திற்கும் உள்ள சேஷிசேஷ பாவமெனச் சொல்லப்படும்.

ஆசமனம் என்பது, 'அச்சுதாய நமஃ, அனந்தாயநமஃ, கோவிந்தாய நமஃ' என்னும் மந்திரங்களை உச்சரித்துத்தீர்த்தத்தை உள்ளங் கையில் எடுத்துப் புசித்து, 'கேசவாய நமஃ' முதலிய பன்னிரண்டு நாமங்களையும் சொல்லி, அந்தத்த இடத்தைத் துடைத்துக் கொள்ளல்.

பிரக்ஷாளனமென்பது, நீரினுல் கால் கைகளை அலம்பிக் கொள்ளுதல்.

இவ்விரண்டும் செயல்களாயிருத்தலின், அசித்துகளாகும். மேற்கூறிய மன்னன் ஊழியன் என்னும் இருவரிடத்திலும் இச்சையைக் காணுதல் போன்று, இவைகளினிடத்துக் காணுதற் கில்லை. ஆனுல், ஆசமனத்திற்குத் தூய்மையை உண்டாக்கும் வன்மை இருக்கிறது. அவ்வாசமனத்திற்குப் பிரக்ஷாளனம் இன்றி யமையாது வேண்டும். இங்ஙனம் அவசியமாய் வேண்டியிருக்கும் இதை மேற்கொள்ளும் புருஷன் இச்சையாலே பிரக்ஷாளனம் உபாதேயமாயிருத்தலின், இது சேஷப் பொருளெனச் சொல்லப்படு கிறது.

3. சித்திற்கும் அசித்திற்கும் உள்ள தொடர்பை, எஜமானன் அவன் செய்யும் யாகம் என்னும் இடத்தில் காணலாம். இது மூன்ருவதாய்ச் சொன்ன சித்திற்கும் அசித்திற்கும் உள்ள தொடர்பு. ஜைமினி மகரிஷி, யாகம் என்னும் செயலிற்குச் செய்பவ ணுகிய தன்மையில் எஜமானன் சேஷப் பொருள் என அபிப்பிராயப் படுகிருர். இங்கு யாகப் பொருளாகிய சேஷிக்கு இச்சை உண் டாதற்கு வழியில்லை. சேஷப் பொருளாகிய எஜமானன் யாகத் தின் தொடக்கமாகிற சிறப்பிற்குக் காரணமாதலின், "இந்த யாகத்திற்கு நாம் வேண்டும்," என்னும் தன்னிச்சையால் உபாதேயப் பொருளாய்ப் பார்க்கப்படுகிருன். அதனுல், எஜமான னுக்குச் சேஷத்துவம் உண்டு.

4. அசித்துக்கும் சித்துக்கும் உள்ள தொடர்பைப் பொன் பொன்னுடையவன், என்னும் இடங்களில் காணலாம். இங்குச் சேஷப் பொருளாகிய பொன்னுக்கு இச்சை உண்டாவதில்லை. சேஷியான பொன்னுடையவனே, "இப்பொன், பொன்னுடையன் என்னும் நம் சிறப்பிற்குடலாகையால், நமக்கு வேண்டும்," என்னும் தன் இச்சையால் பொன்னை எடுத்துக்கொள்ளுகிருன். இவ்விதம் பொன் உபாதேயமாயிருத்தலின், அதற்குச் சேஷத்துவம் உண்டு என்பது தெளிவு.

இவற்ருல், சித்து அசித்துகளுடைய சேஷ சேஷி பாவத் தொடர்பை அறிந்துகொண்டோம். இவற்றுள் சேதனன் ஈசுவரனுக்குச் சேஷபூதனுய் இருக்குந்தன்மை எப்பகுதியைச் சார்ந்தது என்பதைப் பார்க்கலாம்:

1. மன்னனுக்குக் கன்மத்தால் ஊழியன் சேஷப் பொருள் ஆகிருன். இங்கோ, ஈசுவரனுக்குச் சேதனன் அங்ஙனம் கன்மத்தால் சேஷப் பொருள் அல்லன். ஆதலால், ஈசுவரனுக்கும் சேதனனுக்கும் உள்ள தொடர்பு, மன்னனுக்கும் ஊழியனுக்கும் உள்ள தொடர்பு போன்றதன்று.

2. ஆசமனம் பிரக்ஷாளனம் இரண்டும் அசித்துப் பொருள்களாதலின், இங்குச் சித்துப் பொருள்களாகிற ஆன்ம பரமான்மாக்களைப்பற்றிக் கூறுதலின், இதுவும் பொருந்தாது.

3. தலைவன் அவன் செய்யும் யாகம் ஆகிய இரண்டில் அசித்துச் சேஷியாயும், சித்துச் சேஷப் பொருளாயும் இருத்தலின், சேஷியாய் இருக்கும் ஈசுவரன் சித்தாதலின், இதுவும் பொருந்தாது.

4. பொன் பொன்னுடையவன் இவற்றினும் ஒன்று சித்தாயும் மற்ருென்று அசித்தாயுமே உள்ளன. ஆயினும், சித்தாகிய பொன்னுடையவனுக்கு அசித்தாகிய பொன் எங்ஙனம் எல்லா வகையிலும் அவனுடைய இஷ்ட விநியோகங்களுக்குத் தக்கதாய் உள்ளதோ, அங்ஙனமே, சேதனனும் ஞானமிருப்பினும், தனக்கென ஒன்றையும் கொள்ளாதவனும், ஈசுவரன் பிரியத்திற்கேற்பவே விநியோகப்படத் தக்கவனும் இருக்கிருன். அங்ஙனம் இருத்தலே சேதனனுடைய சொரூபமாகும். ஆதலின், பொன்னின் நிலையிலேயே சேதனன் ஈசுவரனுக்குச் சேஷபூதனுய் இருக்கிருன்

என்பதைக் கொள்ளுதல் வேண்டும். இதுவே பொருத்தமானது மாகும்.

சக்கரவர்த்தித் திருமகனுகிய ஸ்ரீராமபிரான் கானஞ்சென்றதால், வஸிஷ்டர், பரதனை அரசு ஏற்றுக்கொள்ளுமாறு கூறினர். பரதன் வஸிஷ்டரை நோக்கி, "முனிவரே, அரசு எவ்வாறு ஸ்ரீராமபிரானுக்கு உடைமைப் பொருளோ, அவ்வாறே யானும் அவருக்கு உடைமைப் பொருளாயிருக்கிறேன். இம்முறையில் அரசை யான் ஆளவேண்டுமென்பதுதான் என்னே? அரசுதான் என்னை ஆளட்டுமே!" என இயம்பினன். இங்கு ஞானியாகிய பரதன், இராமனைப் பொன்னுடையவன் இடத்தில் வைத்துத் தன்னைப் பொன்னேடு ஒக்கக் கூறியுள்ளதைக் காண்க.

அவதாரிகை: இந்நான்காம் வேற்றுமையில் சொல்லப்பட்ட சேஷத்துவத்தையொட்டி இன்றியமையாது தெரிந்துகொள்ள வேண்டிய சில அர்த்தங்களை வினு விடை மூலமாக நான்கு சூத்திரங்களில் வெளியிடுகிறர்.

மூலம்: 52. "சேஷத்வம் துக்கரூபமாகவன்ரே நாட்டிற் காண்கிறதென்னில்"

53. "அந்த நியமமில்லை; உகந்த விஷயத்துக்கு சேஷமாயிருக்குமிருப்பு ஸுகமாகக் காண்கையாலே."

54. "அகாரத்திலே கல்யாண குணங்களைச் சொல்லுகையாலே, இந்த சேஷத்வமும் குணத்தாலே வந்தது."

55. "சேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம்."

விளக்கம்: பிரணவத்திலுள்ள அகாரத்தில், புணர்ந்து கெட்ட வேற்றுமையினல், சேஷியினுடைய இச்சைக்கேற்ப வினியோகங் கொள்ளத் தகுதியுடையதாயிருக்கையே சேஷத்துவம் என மேலே தீர்மானிக்கப்பட்டது. இம்மந்திரத்தில் நாராயணுய என்னும் பதத்தில் காணப்படும் ஆய என்னும் வேற்றுமையும் இச்சேஷத்துவத்தையே குறிக்கிறது. ஆனல், இவ்வேற்றுமையில், ஈசுவரன், சேதனனைக்கிட்டி வினியோகங் கொள்ளுங்கால், ஈசுவரன் மகிழும்

படி சேதனன் செய்யும் அடிமைத் தொழில் என்பது நேராகத் தோன்றும் பொருளன்று; அபிப்பிரேதமாகத்[1] தோன்றும் பொருள் என ஆசாரியர்கள் கருதுகின்றார்கள்.

வினா: இந்த அடிமைத் தொழில், பிரணவத்தில் வந்த வேற்றுமையின் பொருளான சேஷத்துவத்தைப்பற்றிச் சேஷபூதனை இவனிடத்தில் பார்க்கப்படுகிறது. இச்சேஷ விருத்தி, உலகப் போக்கில் துன்பந்தருவதாய் இருத்தலினாலும், ஒருவருக்குத் தொண்டு பூண்டொழுகுவது துன்பமயமானது எனச் சாத்திரங்களில் சொல்லப்படுவதாலும், மனு, தருமர் முதலிய பெரியோர் தொழில்களிலெல்லாம் சேஷ விருத்தி கடைப்பட்டது துன்பமானது என இயம்பி இருத்தலாலும், அடிமைத் தொழில் என்பது துக்கந் தருவதொன்று என்பது தெள்ளிதின் புலப்படுகின்றது. அங்ஙனமிருக்க, துன்பங்கலவாத பேரின்பத்தையே அநுபவித்துக் கொண்டிருக்கும் மோட்சதசையிலும், சீவனுக்கு இச்சேஷ விருத்தியும் சேஷத்துவமும் உண்டு எனச் சொல்லப்படுகிறதே, இது பொருந்துமாறு யாங்ஙனம்?

விடை: நீர், அடிமைத் தொழில் துக்க ரூபமாகவே இருக்கும் எனக் கருதுவதால், இங்ஙனம் வினவுகின்றீர். இத்தொழில் எங்கும் துன்பந் தருவதாகவே இருக்கும் என்பது இல்லை. காளிதாஸர் தம் அபிமதவிஷயத்திற்குத் தண்ணீர் முகந்து தருதல் முதலிய தொண்டுகளை மிக்க மகிழ்வுடனும் இன்பத்துடனும் செய்து வந்தார் என்பது சரித்திர உண்மை. அதைப் போன்றே பகவானுக்குச் செய்யும் அடிமைத் தொழிலும் ஸுகரூபமாகவே இருக்கும்.

வினா: காளிதாஸர் தம் அபிமத விஷயத்தின் குணங்களில் ஈடுபட்டு, அவ்வுவப்பினால் தாம் உகந்த விஷயத்தில் தொண்டு புரிந்ததால், அவ்வடிமைத் தொழில் ஸுகமாகக் காணப்படக் கூடும்! "ஈச்வரன் நிர்க்குணன் (குணங்களற்றவன்)" என வேதாந்தத்தில் சொல்லப்படுகிறது. அங்ஙனம் குணமற்ற பொருளில் சேதனனுடைய நெஞ்சம் ஈடுபடுதல் யாங்ஙனம்? மனக்கவர்ச்சி உண்டாகாத இடத்தில் உவப்புத் தோன்றுதல் எப்படி? உவப்புக் கொள்

---

குறிப்பு: 1. அபிப்பிரேதம் - பொருத்தத்தால் சொல்லப்படுவது.

ளாத பொருளில் புரியும் தொண்டு இன்பமாய்த் தோன்றுவதுதான் எவ்வாறு?

விடை: "பகவான் குண பூர்ணன், நிறைந்த கலியாண குணங்களையுடையவன்" என்பது அகாரத்தில் சொல்லப்படுகிறது. அன்றியும், ஈசுவரன் குணமற்றவன் என்பதற்குக் குணங்கள் இல்லாதவன் என்பது பொருளன்று. 'ஹேய குணங்கள் இல்லாதவன்' எனவே பொருள் கொள்ளுதல் வேண்டும். அக்குணங்களுக்கு வசப்பட்டே சேதனன் அவனுக்குத் தொண்டு புரிகின்றான். ஆதலின், சேதனன் ஈசுவரனுக்குச் செய்யும் அடிமையும் ஸுக ரூபமாகவே இருக்குமென்பதில் ஐயமில்லை.

வினா: சரி; நீர் இப்போது கூறியவற்றால், "ஈசுவரனுக்குக் குணமுண்டு. அக்குணங்களைப்பற்றியே சேதனன் அவனுக்குச் சேஷ விருத்தியைச் செய்கிறான்," என்பது தேறிற்று. ஆனால், இவற்றால், 'சீவன் ஈசுவரனுக்கு நிருபாதிகச் சேஷப் பொருள்; அதைக் குறித்து இவன் அவனுக்குச் சேஷ விருத்தியைச் செய்கிறான்' என்பது தேறவில்லையே?

விடை: அடிமைத் தொழில் ஸுகமாகவே இருக்கும் என்பதை நீர் மனத்தில் கொள்ள வேண்டும். ஆனால், "ஒரு மன்னனுக்கு ஓர் ஊழியன் வேலை செய்யுங்கால், அது துன்பமாகவன்றோ உள்ளது? அதற்குக் காரணம் என்ன?" என நீர் வினவலாம்? அந்த மனிதனே தன் மனைவி மக்களுக்கு ஊழியம் புரியும்போது அதை இன்பமாய்க் கருதுவது மட்டுமேயன்றி, அதை மிக்க விருப்பத்துடனும் செய்கிறான். ஒருவனுக்கே இவ்விருசாராரிடமும் இருக்கும் குணக் குறைவு குண நிறைவுகளைக் காரணமாய்ச் சொல்லுதற்கில்லை. ஆனால், இந்நிலைகள் உண்டாதற்குக் காரணம் என்ன? மன்னன் தன்னைச் சாராத அன்னியனாகவும், மனைவி மக்கள் தன்னைச் சார்ந்த உறவினராகவுமிருத்தலைத்தானே இதற்குக் காரணமாகச் சொல்லுதல் வேண்டும்?

இவற்றுள் முன்னது அப்பிராப்தம் (வகுக்காத விஷயம்) என்றும், பின்னது பிராப்தம் (வகுத்த விஷயம்) என்றும் சொல்லப்படுகின்றன. இதனால், அப்பிராப்த விஷயத்தில் செய்யும் தொண்டு துன்பமுடையதாயிருக்கிறதென்பதைத் தெரிந்துகொண்டோம்.

வினு: அடிமைத் தொழில் எவரிடத்திலும் எப்போதும் துக்க ரூபமாகவே இருக்கும். காளிதாஸர் செய்தற்குக் குணமே காரணம் என ஏன் கொள்ளுதல் கூடாது?

விடை: ஒரு தந்தை ரூபமற்றவனுயும், பொருளற்றவனுயும், வயது முதிர்ந்தவனுயும், குணமற்றவனுயும் இருக்கிருன். அவ்வாறிருப்பினும், உத்தம புதல்வன் ஒருவன் அத்தந்தைக்குத் தொண்டு செய்யாமல் இருப்பதில்லை. அங்ஙனம் செய்யவில்லையேல், அவனை உத்தம புதல்வன் எனச் சொல்லவும் முடியாது. ஆதலின், அம்மகன் தன் தந்தைக்குச் சிறிதும் வெறுப்பின்றி ஊழியங்களைப் போக ரூபமாகவே புரிகின்ருன். ஆதலின், தொண்டு போக ரூபமாயிருத்தற்குக் குணம் காரணம் என்று சொல்வதற்கில்லை. அதைப்போன்றே ஈசுவரன் குணமற்றவனுயிருப்பினும், சேதனன் தன்னிலைக்கேற்பச் செய்யும் சேஷ விருத்தி சொரூப ஞானம் பெற்ற சேதனனுக்கு ஸுகமாகவே இருக்கும். அதனுல், ஸித்திக்கும் சேஷத்துவம் இவனுக்கு எப்போதும் உள்ள தருமம் என்பதும், நிருபாதிகம் என்பதும் ஏற்படுகின்றன. இக்கருத்தையே வினு விடை மூலமாக மேற்கூறிய நான்கு சூத்திரங்களால் ஆசிரியர் தெரிவித்தார்.

விளக்கம்: வினு: அகாரத்தில் பகவானுடைய காரணத்துவ ரக்ஷகத்துவங்கள்தாமே சொல்லப்படுகின்றன? இவற்ருல், பகவான் கலியாண குணங்களையுடையவன் என்பது எவ்வாறு தேறும்?

விடை: ஒரு குயவன் மட்பாத்திரங்களைச் செய்தற்குக் காரணனுயிருக்கிருன் என்னில், அப்பாண்டங்களைச் செய்வதற்கு அவனுக்கு அதற்கேற்ற ஞானமும் வன்மையும் வேண்டுமல்லவா? இன்னும் ஒரு மன்னன் தன் குடிகளைக் காக்கிருன் (ரக்ஷிக்கிருன்) என்னில், அவனுக்கு அந்த இரட்சணத்திற்கு வேண்டிய தயை, வாத்ஸல்யம் முதலியன இருக்க வேண்டுமல்லவா? இவ்வுதாரணங்களினுல், ஈசுவரனுடைய காரணத்துவம் இரட்சகத்துவம் சொல்லப்படும் அகாரத்தில் குணங்களும் அமைந்துள்ளன என்பது புலப்படவில்லையா? இதனுல், பகவான் குணங்களையுடையவன் என்னும் அர்த்தம் அகாரத்தில் அர்த்தபலத்தால் கிடைக்கிறது என்பதும், குணங்களோடுங் கூடிய ஈசுவரனுக்குச் சேஷப் பொருள் சேதனன் என்பதும் தெரிகிறது.

வினா: ஆயினும், சேதனர் பகவானுடைய குணங்களுக்குத் தோற்றே அவனுக்கு அடிமை செய்கின்றனர் என்பது எப்படித் தேறும்?

விடை: பொருளுடையவன் இன்பந் துய்ப்பான் என்னும் உதாரணத்தைக் கொள்ளின், இங்குப் பொருளிற்கும் இன்பத்திற்கும் தொடர்பு உள்ளதன்றோ? அதைப் போன்றே குணத்திற்கும் சேஷ விருத்திக்கும் காரண காரியத் தொடர்பு ஏற்படும் என்பது ஆசாரியர் கருத்து. இக்கருத்து 'நான் குணங்களுக்குத் தோற்ற அடியவன்' என்பதைத் தெரிவிக்கும், "குணை: தாஸ்யம் உபாகத:" என்னும் இளைய பெருமாள் சுலோகத்தில் விளங்குகிறது.

இதுகாறும் நீர், 'சேஷத்துவம் ஆன்மாவிற்கு எப்போதும் நிலை நின்ற ஆகரம் அன்று' என்னும் எண்ணத்தோடு வாதம் பண்ணியுள்ளீர். ஆதலின், எத்தன்மை ஆன்மாவிற்கு இல்லையென்று பகர்ந்தீரோ, அத்தன்மையே அதற்கு நிலை நின்ற ஆகரம் என்பதைக் காட்டுதற்குத்தான் சேஷத்துவமே ஆன்மாவிற்குச் சொரூபம் என ஆசாரியர் இயம்புகிறார்.

பரமான்மா, ஆன்மா இவைகளின் இயல்பைத் தனித்தனியே நோக்குங்கால், பரமான்மாவிற்குத் தலைமை நிலையும் (சேஷித்துவமும்), ஆன்மாவிற்கு அடிமை நிலையும் (சேஷத்துவமும்) இயற்கையாகவே அமைந்துள்ளன என்றும், தன் உய்வில் விருப்பமுடையவன், 'ஆன்மாவிற்கு அடிமைத் தன்மை இயல்பானது' என எப்போதும் நினைக்க வேண்டும் என்றும், ஆன்மாவிற்கு உள்ள ஞானத்தன்மை ஆனந்தத்தன்மைகளைக்காட்டிலும், சேஷத்துவமே சிறந்ததென்று சாத்திரங்கள் பகருகின்றன என்றும் கொள்ளுதல் வேண்டும்.

எங்ஙனம் ஒரு குடியில் தோன்றிய மகன், சில காரணங்களினால் வேறொரு குடியைச் சார்ந்து, அதற்காகிய செயல்களில் உழன்றுகொண்டிருப்பினும், அவனுக்கு இயற்கையாய் அமைந்த குடியின் குணங்கள் அவனை விட்டு விலகாமல் அவனிடம் பொருந்தியிருக்குமோ, அங்ஙனமே மக்கள் உலகப் பற்றில் ஆழ்ந்து, உலகக் காரியங்களில் சுழன்றுகொண்டிருப்பினும், ஆன்மாவிற்கு இயல்பாய் அமைந்துள்ள ஈசுவர சேஷத்துவம் அவர்களை விட்டு நீங்காது. அன்றியும், இவ்வான்மா உலகப்பற்றி

லிருந்து நீங்கிப் பரமபதத்தில் இன்புற்றிருக்கும்போதும் இதற்கு இயல்பாய் அமைந்துள்ளது இச்சேஷத்துவமே ஆகும். இவ்வான்மா பரமபதத்திற்குச் சென்று ஈசுவரனுக்குக் கைங்கரியம் செய்து, அதனால் அவ்வீசுவரன் அடையும் ஆனந்தத்தைக் கண்டு, தான் மகிழ்தலைத்தானே ஸ்ரீவைஷ்ணவர்கள் மோட்சமெனப் பகருகின்றார்கள்? இதனால், அங்கும் இச்சேஷத்துவமே நிலை நிற்கிறதென்றும், இஃது ஆன்மாவை விட்டுப் பிரியாததொன்றென்றும் புலப்படவில்லையா? ஆதலின், சொரூபத்தின் உண்மை நிலையை நன்குணர்ந்த ஆழ்வார் கைங்கரியத்தையே என்றும் வேண்டி நிற்பர் :

"ஒழிவில் காலமெல் லாம்உட னாய்மன்னி
வழுவி லாவடி மைசெய்ய வேண்டும்நாம்
தெழிகு ரலரு வித்திரு வேங்கடத்து
எழில்கொள் சோதிஎந் தைதந்தை தந்தைக்கே."

(திருவாய்மொழி. 3 : 3 : 1.)

அவதாரிகை : "அர்ச்சுனனே வில்லாளி" என்றபடி, சேஷத்துவமே ஆன்மாவுக்குச் சொரூபம் என்னும் வாக்கியத்தில் சேஷத்துவம் தவிர மற்றொன்றும் ஆன்மாவிற்குச் சொரூபமன்று என்னும் பாவமுந்தோன்றுகிறதன்றோ? 'ஆனால், ஆன்ம வஸ்துவில், ஞானத் தன்மை, ஆனந்தத் தன்மை இயல்பாகவே இருக்க, வேறொன்றும் ஆன்மாவிற்குச் சொரூபமன்று என்னும் இக்கருத்து பொருந்தும்படி யாங்ஙனம்?' என்பதற்குச் சமாதானம் அருளிச் செய்கிறார் :

மூலம் : 56. "சேஷத்வமில்லாத போது ஸ்வரூபமில்லை."

57. "ஆத்மாபஹாரமாவது—ஸ்வதந்த்ரமென்கிற நினைவு; ஸ்வதந்த்ரமாம்போதில்லையாய்விடும்."

இவ்விரு சூத்திரங்களுக்கும் பொருளைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளுதற்பொருட்டு இது முதலிலேயே வினா விடையாய்த் தொடங்கப்படுகிறது.

பொருள் : வினா : ஆன்மாவிற்குச் சொரூபம் எனச் சொல்லப்படும் இச்சேஷத்துவம், குண்டலத்தைப் போன்று ஆன்

மாவை விட்டுப் பிரிக்கக் கூடியதா, அன்றி ஜாதி குணங்களைப் போன்று பிரிக்க முடியாததா?

விடை: இச்சேஷத்துவம், வேண்டிய போது தரித்துக் கொள்ளக் கூடியதும், வேண்டாத போது களைந்துவிடக் கூடியதுமான குண்டலத்தைப் போன்றதன்று. என்றும் எக்காரணத்தினாலும் ஒரு பொருளை விட்டுப் பிரிக்க முடியாத ஜாதி குணங்களைப் போன்றது.

வினா: 'சேஷத்துவம் இல்லாத போது' என்னும் சொற்றொடரில், இல்லாத போது என்னும் ஒரு தொடர் உள்ளதே. அது சேஷத்துவம் உள்ளகாலம் ஒன்று, இல்லாத காலம் ஒன்று என்பதைக் குறிப்பிக்கவில்லையா? அங்ஙனமாயின், சேஷத்துவம் ஆன்மாவை விட்டுப் பிரிக்க முடியாத தருமம் என்பது எவ்வாறு பொருந்தும்?

விடை: 'சேஷத்துவம் இல்லாத போது' என்னும் இச்சொற்றொடருக்குச் 'சேஷத்துவ ஞானம் இல்லாதபோது' என்பது கருத்து. இரணிய கசிபு, சிசுபாலன் முதலியவர்கள், தாங்கள் சுதந்தரர்கள் என்றும், ஈசுவரனுக்குச் சேஷபூதர்கள் அல்லர் என்றும் கருதியே பகவானுக்கு விரோதமாய்ப் பல செயல்களைப் புரிந்து காலங்கழித்தார்கள். ஆனால், எல்லா ஆன்மாக்களிலும் ஆன்மாவாய்க் கலந்து ஒவ்வோர் ஆன்மாவையும் தனக்குச் சேஷமாய்க் கொண்டுள்ள பகவான் அவர்களிடம் மட்டும் இல்லாமலிருந்தனனோ என்னில், அவ்வாறு பகருதற்கில்லை. அங்ஙனமாயின், 'எங்கும் உளன் கண்ணன்,' என்னும் அவனுடைய இலட்சணத்திற்குக் குறைவு எற்படும். அன்றியும், இல்லையென்று சொல்லியவன் எவனோ, அவன் தட்டிய தூணிலேயும் பகவான் தோன்றினான் என்பதும் பொருந்தாது. ஓர் அரச குமாரன் வேறொருவனால் களவாடி வளர்க்கப்படுகிறான் என வைத்துக்கொள்வோம். அவ்வமயம் அவனுக்கு, 'நாம் மன்னன் புதல்வன்,' என்னும் எண்ணம் இல்லாமலிருக்கலாம். அதனாலேயே அவன் அரச புதல்வன் அல்லன் எனக் கூற முடியுமா? அது போன்று, பகவான் அவர்களிடமும் அந்தராத்துமாவாய்ப் பொருந்தியிருப்பினும், அவர்களுக்கு நாம் ஈசுவரனுக்குச் சேஷபூதர்கள் என்னும் ஞானம் இல்லை. அக்காரணத்தினாலேயே அவர்கட்குச் சேஷத்துவம் இல்லை எனச் சொல்லிவிடுதல் யாங்ஙனம்? பத்த நிலையில் பல கொடுமை

களையும் செய்துழன்ற சிசுபாலன் போன்றாரும், மோட்ச தசையில் ஈசுவரனுக்கு அடிமைத் தொழில் புரிந்து வாழ்பவரேயாவர்.

வினா: ஒருகால் சேஷத்துவ ஞானமில்லாவிடினும், ஆன்மாவை விட்டுப் பிரிக்க முடியாத ஞானத்தின் தன்மையும் ஆனந்தத்தின் தன்மையும் இருக்கின்றன அல்லவா? அவை ஆன்மாவின் தருமங்கள் ஆகாவா? அவைகள் ஆன்மாவை விட்டுப் பிரியாமல் இருக்குங்கால், ஆன்மாவிற்குச் சொரூபம் இல்லை என்பது எங்ஙனம் பொருந்தும்?

விடை: உலகில் சாமானிய மக்களின் பொருளைக் களவாடுவதினும், ஒரு நாட்டிற்கு மன்னனாய் இருப்பவனுடைய பொருளைக் களவாடுவது அதிகக் குற்றமன்றோ? அம்மன்னனுடைய ஏதேனும் ஒரு சிறு பொருளைக் களவாடுவதினும், அவனுடைய இரத்தினாபரணத்தைக் களவாடுவது அதினும் மிக்க குற்றமன்றோ? அங்ஙனமாயின், எல்லா உலகிற்கும் தலைவனாய் இருக்கும் பகவானுடைய பொருளைக் களவாடுவது எத்துணைக் குற்றமாகும்? அதினும், அப்பகவானுக்கு உரிய சொத்தாயுள்ளதும், அவனுடைய கௌஸ்துபாபரணத்திற்கு ஒப்பானதுமான ஆன்மப்பொருளை அவனுக்கு இல்லையாகச் செய்து தனக்கு உரியதாக நினைத்து அதைக் கவர்வது எவ்வளவு கொடிய பாவச் செயலாகும்? இக்குற்றத்தை எவ்வகையாலேனும் அளவிட்டுக் கூற, யாராலேனும் இயலுமா? இத்தகையவன் எல்லாப் பாவங்களையும் செய்தவனாகின்றான் எனப் பாரதம் தெரிவிக்கின்றது.

பகலவன்முன் மின்மினியும், ஒரு பெரிய பருவதத்தின்முன் சிறுகடுகும் இருப்பினும், எங்ஙனம் இல்லாத பொருள்களாகக் கருதப்படுமோ, அங்ஙனமே சேஷத்துவஞானமில்லாத காலத்தில் மற்றவை இருப்பினும் இல்லாதனவாகவே எண்ணப்படும். ஏன்? ஒருவனுக்குச் சேஷத்துவ ஞானமில்லாத காலத்தில், (பகலில்லாத போது இரவே காணப்படுவது போல) ஸ்வாதந்தரிய ஞானம் இருந்தே தீருமாதலால், அவன் ஞானவானாயிருப்பினும், இல்லாதவனாகவே சாத்திரக் கண்ணால் பார்க்கப்படுவான். அவனே இல்லாத போது அவன் தருமங்களான, ஞானத்தன்மை ஆனந்தத் தன்மை இல்லையெனக் கூறுவதில் குறை யாது?

தான் ஈசுவரனுக்கு அடிமைப்பட்டவன் என்னும் பகவச் சேஷத்துவ ஞானமில்லாத போது, இவனுக்குத் தனக்கு மேற்

பட்டவர் ஒருவருமிலர் ; தான் ஒருவருக்கும் அடங்கினவன் அல்லன் ; தனக்கே உரியன் ; தான் சுதந்தரன், என்னும் பல எண்ணங்கள் தோன்றுநிற்கும். இந்நிலையில், சேதனன் ஈசுவரனுக்கு உரியதான ஆன்மப் பொருளைத் தன்னுடையதெனக் கருதும் கள்வனாகின்றான்.

தொகுப்புரை : நாற்பத்தெட்டாம் சூத்திரத்திலிருந்து ஐம்பத்தேழாம் சூத்திரம் (48-57) வரையும், பிரணவத்தின் முதல் பதமான அகாரத்தில் நான்காம் வேற்றுமை புணர்ந்து கெட்டிருக்கிறதென்றும் ; இங்ஙனம் நான்காம் வேற்றுமை புணர்ந்ததற்குக் காரணம், இவ்வகாரம் நாராயணபதத்திற்குச் சுருக்கமாயிருத்தலின் என்றும் ; இவ்வேற்றுமை சேதனன் பகவானுக்குச் சேஷபூதன் என்பதைத் தெரிவிக்கிறதென்றும் ; ஒருவருக்கு அடிமை பூண்டிருத்தல் துன்பமுடையதாயினும், தான் விரும்பிய விஷயத்தில் அடிமைப்பட்டிருத்தல் இன்பமாய்க் காணப்படுதல் போன்று, குணங்களோடுங் கூடிய பகவானுக்கு விரும்பிச் செய்யும் இவ்வடிமைத் தொழிலும் இன்பமுடையதாகவே தோன்றும் என்றும் ; இங்ஙனம் அடிமையாயிருத்தலே ஆன்மாவிற்குச் சொரூபம் என்றும் ; இஃதில்லையேல் ஆன்மாவிற்குச் சொரூபம் இல்லை என்றும் ; அப்போது சுதந்தரன் என்னும் நினைவு நடையாடுமென்றும் ; அஃது ஆன்மாவைக் களவாடியதாகக் கருதப்படும் என்றும் கூறப்பட்டன.

அகாரப் பொருள் முற்றுப் பெற்றது.

அவதாரிகை : இனிப் பிரணவத்தின் நடு எழுத்தாகிய உகாரத்திற்குப் பொருள் அருளிச் செய்கிறார் :

மூலம் : 58. “ஸ்தானப்ரமாணத்தாலே உகாரமவதாரணார்த்தம்.”

பொருள் : ஸ்தானப் பிரமாணம் என்பது, ஒரு சொல் இருக்க வேண்டிய இடத்தில் வேறொரு சொல் இருப்பின், அச்சொல்லின் பொருளே இதற்கும் பொருள் எனக் கொள்வது. இம்முறையில், இங்கு ஏவகாரம் இருக்க வேண்டிய இடத்தில் உகாரம் இருத்தலால், இவ்வுகாரத்திற்கு ஏவகாரப் பொருளைக் கொள்ள வேண்டியதாயிற்று.

**விளக்கம் :** " ததேவ பூதந்தது பவ்யமா " என்னும் வாக்கியம் தைத்திரீயோபநிஷத்தில் உள்ளது. இதற்குத் தத் எவ = அந்தப் பரப்பிரமமே, பூதம் = இறந்த காலத்தில் உள்ள பொருள், தது = அந்தப் பரப்பிரமமே, பவ்யம் = எதிர்காலத்தில் உள்ள பொருள் எனப் பொருள் கூறப்படுகிறது. இங்குத் தத் எவ என்ற இடத்தில் உள்ள எவகாரத்திற்கும், தது என்ற இடத்தில் உள்ள உகாரத்திற்கும் ஏவகாரப் பொருளே கூறப்படுவதைக் காண்க.

**அவதாரிகை :** இந்த அவதாரணத்திற்கு (பிரிநிலை ஏகாரத்திற்கு) அயோக வ்யவச்சேதம்[1] அந்யயோக வ்யவச்சேதம்[2] என இரு பொருள்கள் உண்டு. இவற்றுள் இவ்வவதாரணத்தாற் சொல்லப்படும் பொருள் இன்னது என்பதைத் தெரிவிக்கிறார் :

**மூலம் : 59. " இத்தால், பிறர்க்கு சேஷமன்றென்கிறது. "**

**பொருள் :** இங்குக் குறிப்பித்த அவதாரணத்திற்கு, முன்னர் இயம்பியவாறு இரு பொருள்கள் உண்டல்லவா ? அவ்விரு பொருள்களும் முறையே, சேதனனுக்கு ஈசுவரனோடு தொடர்பு உள்ளது என்பதையும், மற்றவரோடு தொடர்பு இல்லை என்பதையும் தெரிவிக்கின்றன என்பதை யாம் அறிவோம். ஆயினும், இவற்றுள், சேதனனுக்கு மற்றவரோடு தொடர்பு இல்லை என்னும் இரண்டாவது பொருளையே இங்கு லோகாசாரியர் குறிக்கிறார். இதனால், இவ்வுகாரம், " சேதனன், மற்றவர்களுக்குச் சேஷப்பட்டவன் அல்லன் ; ஈசுவரன் ஒருவனுக்கே சேஷப்பட்டவன், " என்னும் பொருளைத் தெரிவிக்கின்றதெனத் தெளிக.

---

குறிப்பு : 1. அயோக வ்யவச்சேதம் : அயோகம் = தொடர்பில்லாமையை, வ்யவச்சேதம் = நீக்குதல். தொடர்பில்லாமையை நீக்குதல் என்பது, தொடர்புள்ளதைத் தெரிவிக்கை எனப் பொருள்படும். ஆக, அயோகவ்யவச்சேதம் என்பதற்குத் தொடர்புண்டு என்னும் பொருளைக் கொள்க.

2. அந்யயோக வ்யவச்சேதம் : அந்யயோகம் = வேறொன்றினிடம் உண்டாகும் தொடர்பை, வ்யவச்சேதம் = நீக்குதல். வேறொன்றினிடம் உண்டாகும் தொடர்பை நீக்குதல் என்பது, பிறபொருளினிடம் தொடர்பில்லாமையைத் தெரிவிக்கை எனப் பொருள்படும். ஆக, அந்யயோக வ்யவச்சேதம் என்பதற்கு, மற்றவரோடு தொடர்பு இல்லை என்னும் பொருளைக் கொள்க.

**விளக்கம் :** "அகாரத்தில் புணர்ந்து கெட்டிருக்கும் சதுர்த்தி, சேதனன் ஈசுவரனுக்கு அடிமை (சேஷபூதன்) என்பதைத் தெரிவிக்கிறது என்பதை முன்னரே குறிப்பித்தோமல்லவா? அங்ஙனமிருக்க, சேதனன், மற்றவருக்கு அடிமை எனச் சொல்வதற்கு வழியிருந்தாலன்ரே, இங்கு உகாரம் அதை மறுத்துப் பேச வேண்டும்?" என்னும் ஒரு சங்கை ஏற்படலாம். ஒருவருக்கு உரித்தான பொருள் மற்றுமொருவருக்கும் உரித்தாயிருத்தலை உலகில் காண்கின்றோம். உலகில் தந்தைக்கு உரியவனுயிருக்கும் ஒரு புதல்வன், தாய்க்கும் உரியவனுயிருக்கின்றதையும், அவன் தந்தைக்குத் தொண்டு செய்தல் போன்றே தாய்க்கும் தொண்டு செய்வதையும் பார்க்கின்றோமல்லவா? அங்ஙனமே, ஈசுவரனுக்கு அடிமைப் பட்டுள்ள இந்தச் சேதனனும், பிறருக்கும் சேஷப்பட்டிருக்கலாம் என்னும் ஐயப்பாடு தோன்றக்கூடுமன்றே? அந்த ஐயப்பாட்டைப் போக்குதற்பொருட்டே, இவ்வுகாரம் எவகாரப் பொருளில் வைத்துக் கூறப்படுகிறது. இது, 'சேதனன் மற்றவருக்குச் சேஷபூதன் அல்லன்; எம்பெருமான் ஒருவனுக்கே சேஷபூதன்; அவனுக்கே தொண்டு புரியக் கடமைப்பட்டுள்ளான்' என்பதை வற்புறுத்துகின்றது.

**அவதாரிகை :** உகாரத்திற்கு முன்னர்ச் செப்பிய பொருளன்றி வேறு விதமாய்ப் பொருள் கூறுபவரும் உண்டு என்கிறார் :

**மூலம் : 60. "பெரிய பிராட்டியார்க்கு சேஷமென்கிறதென்றுஞ் சொல்லுவர்கள்."**

**பொருள் :** 'சேதனன், திருமகளாருக்குச் சேஷபூதன் என இவ்வுகாரம் சொல்லுகிறது என்று இயம்புபவர்களும் உண்டு.' இதில், 'என்றும்' என்பதற்கு, என்று சொல்பவர்களும் உண்டு எனக் கொள்ளும் போது, என்று சொல்லாதவர்களும் உண்டு என்பது பெறப்படுகின்றமையின், இஃது எதிர்மறைப் பொருளாகும்.

**விளக்கம் :** **வினு :** உகாரம் பெரிய பிராட்டியாரைச் சொல்லும் என்பதற்கு ஆதாரம் உண்டோ?

**விடை :** ஆம், உண்டு. எங்ஙனம் அகாரத்தால் ஈசுவரன் சொல்லப்படுகின்ருனே, அங்ஙனமே உகாரத்தால் திருமகளாரும், மகாரத்தால் இவர்கள் இருவருக்கும் சேஷப்பட்டிருக்கும் சேதனனும் சொல்லப்படுகின்றனர். "அகாரஃ சித்ஸ்வரூபஸ்ய விஷ்ணோர்

வாசக இஷ்யதே: உகார சித்ஸ்வரூபயா: ச்ரியோ வாசீ ததா விது:" என்று பாஞ்சராத்திரம் குறிக்கின்றமையின், இவ்வுகாரத் திற்கு முற்கூறிய பிரிநிலை ஏகாரப் பொருளைக் கொள்ளாமல், திருமகளார் என்னும் பொருளைக் கொண்டு, இவ்வுகாரம் பெரிய பிராட்டியாருக்குச் சேஷமென்கிறது என்று தீர்மானிப்பவரும் உண்டு என்பது கூறப்படுகிறது. இங்கு, "மதிநலம் அருளினன்" என்னும் ஆழ்வார் திருவாக்கிற்கு, நம்பிள்ளை, "ஈசுவரன், நல மான மதியைத் தந்தருளினன்," எனப் பொருள் கூறி, இச்சொற் ருெடருக்கு, "மதியையும் நலத்தையும் ஈந்தனன்" எனச் செப்பு வாருமுண்டு எனக் கூறியுள்ளதைச் சான்றாகக் கொள்ளில் இப் பட்சம் பொருத்தமன்று என்பது விளங்கும்.

அவதாரிகை : பாஞ்சராத்திரத்தில் உகாரம் திருமகளைக் குறிக் கிறது எனக் கூறியிருப்பினும், இதற்கு, முன் சொன்ன ஏவகாரப் பொருளைக் கொள்ளுதலே முக்கியமானது என்பதை இதில் அரு ளிச் செய்கிறார் :

மூலம் : 61. "அதிலும் அந்ய சேஷத்வம் கழிகையே ப்ரதானம்."

பொருள் : பெரிய பிராட்டியாருக்கு அடிமை பூண்டொழுகு தல், மற்றவருக்குத் தொண்டு பூண்டொழுகாதிருத்தல் ஆகிய இவ்விரண்டையும் ஒப்பிட்டு நோக்குங்கால், பெரிய பிராட்டி யாருக்கு அடிமைப்பட்டுள்ளான் என்பதைச் சொல்லுவதைக் காட்டிலும், பகவச்சேஷத்துவத்திற்கு விரோதமாய் உள்ள மற்ற வருக்கு அடிமைப்பட்டிருக்கும் நிலை நீங்குதலை வற்புறுத்தலே சிறந்ததாகும்.

விளக்கம் : வினு : இவ்விரண்டையும் சாஸ்திரங்கள் ஒப் புக்கொண்டிருக்க, லோகாசாரியர் ஒன்றைக் கழித்துவிட்டு மற் ருென்றை நிலை நிறுத்துதல் என் ?

விடை : 1. "பகவத ஏவ அஹம் அஸ்மி" என்னும் சுருதி வாக்கியத்தை நோக்குங்கால், பகவத்சப்தம் அகாரத்தின் பொருளையும், வேற்றுமை அகாரத்தில் புணர்ந்து கெட்ட நான்காம் வேற்றுமைப் பொருளையும், ஏவ என்னும் சொல் உகாரத்தின் பொருளையும் அஹம் என்னும் பதம் மகாரத்தின் பொருளையும் தெரிவிக்கின்றன.

பிரணவத்தின் பொருளை விளக்க வந்த இவ்வாக்கியத்தில், உகாரத்தின் பொருளைத் தெரிவித்தற்கு ஏவ என்னும் சொல்லே வந்திருத்தலின், இவ்வுகாரத்திற்குப் பிராட்டியாரைப் பொருளாகக் கொள்வது அத்துணைச் சிறந்ததன்று என்பது தோன்றுகிறது.

2. பகவானை நேராய்ச் சேவித்து அவனிடமிருந்து திருமந்திர உபதேசத்தைப் பெற்ற திருமங்கையாழ்வார், திருக்கண்ணபுரப் பெருமானைப் பாடும்போது "கண்ணபுர மொன்றுடையானுக்கு அடியேன், ஒருவர்க் குரியேனோ?" என்னும் வாக்கியத்தில் அந்நிய சேஷத்துவம் நீங்குதலை உகாரார்த்தமாய்க் காட்டுகிறார். இதன் விளக்கம் பின் கூறப்படுகிறது.

3. இவ்வுகாரத்திற்கு ஏவகாரப் பொருளைக் கொள்ளாத போது, பிறருக்கு அடிமைப்படும் நிலையை அவசியம் விலக்க வேண்டியிருத்தலின், ஏவகாரத்தை வருவித்துக்கொள்ள வேண்டி வரும். அன்றியும், பெருமாளும் பிராட்டியாரும் பதியும் பத்தினியுமாய் இருத்தலின், "பதிக்குச் சேஷப்பட்ட ஒருவன் பத்தினிக்கும் சேஷப்பட்டவனாவான்" என்னும் முற்கூறிய நியாயத்தால், இப்பிரணவத்தில் இலட்சுமி சேஷத்துவம் தன்னாலேயே கிடைப்பதாகும். இம்முறையில், ஏவகாரத்திற்கு ஏதாவது ஒரு விதத்தில் கிடைக்கக் கூடிய பொருளைச் சொல்லுவதைக்காட்டிலும் ஏதனாலும் கிடைக்கக் கூடாததும், ஆன்ம சொரூபத்திற்கு ஏற்றதுமான ஒரு பொருளைக் கூறுவது சிறந்ததன்றோ?

4. இன்னும் நாதமுனிகள் முதலிய நம் பூருவாசாரியர்கள் இந்த உகாரத்திற்கு, அன்னிய சேஷத்துவ நிவிருத்தியையே (கழிகையையே) பேசிப் போந்தார்கள்.

இக்காரணங்களினாலெல்லாம், பிள்ளை லோகாசாரியர் இவ்வுகாரத்திற்குப் பிராட்டியார் என்னும் பொருளைக் கொள்ளாமல், அன்னிய சேஷத்துவம் கழிகையையே பொருளெனக் கொண்டார் எனக் கொள்ளுதல் வேண்டும்.

**அவதாரிகை :** 'அந்நியருக்குச் சேஷப்பட்டிருத்தல் அத்துணைக் கொடியதோ?' என்ன, அதன் கொடுமையை உதாரணத்தால் விளக்குகிறார் :

**மூலம் : 62.** **"தேவர்களுக்கு சேஷமான புரோடாசத்தை நாய்க்கு இடுமாபோலே, ஈச்வரசேஷமான**

ஆத்ம வஸ்துவை ஸம்ஸாரிகளுக்கு சேஷமாக்குகை."

பொருள்: எங்ஙனம் இந்திரன் முதலிய தேவர்களுக்கென ஆக்கி வைத்த அவிஸ்ஸை (தேவருணவை), அற்பத்தன்மையுடையதும், பார்ப்பதற்கும் அருகதையல்லாததும், தாழ்ந்ததுமான நாய்க்கு இடுவது கொடியதோ, அங்ஙனமே எம்பெருமானுக்கே உரித்தான ஆன்மப் பொருளை எல்லாவகையிலும் தாழ்ந்த இவ்வுலக மக்களுக்கு உரித்தாக்குதல் கொடியதாகும்.

விளக்கம்: ஆண்டாள் பகவானையும் தன்னையும் ஊன்றி நோக்குகின்றாள். அவ்வமயம் அவளுக்கு, அவனுக்கும் தனக்குமுள்ள தொடர்பு தெள்ளிதின் புலப்படுகின்றது. இவ்வுலகில் தோன்றி இவ்வுலகமக்களுள் தானும் ஒருத்தியாய் வாழ்ந்து வரினும், இவ்வுலகப் போக்கில் அவள் மனம் சென்றிலது. ஈசுவரன் மாட்டுத் தனக்குள்ள ஸம்பந்தத்திற்கேற்பச் சில காரியங்களை நிகழ்த்துகின்றாள். அவற்றிற்குத் தக உயரிய எண்ணங்கள் அவளுக்குத் தோன்றுகின்றன. அவ்வெண்ணங்களை வாக்கினால் பல இடங்களில் அவள் வெளிப்படுத்துகின்றாள். அந்த இடங்களுள் இஃதும் ஒன்று. ஈசுவரனை எம்முறையிலும் விரைவில் அடைய வேண்டும் என்னும் ஆர்வத்தினால் மன்மதனை வணங்குகின்றாள்; அவனிடம் தன் உறுதியான கருத்தைச் சிலாசாஸனத்தில் பொறித்து வைப்பவளைப் போன்று, வரையறுத்துக் காட்டுகின்றாள். "காமதேவா, என் அங்கங்கள் பகவானுக்கெனவே மிக்க பொலிவு கொண்டு கிளர்ந்து வளர்ந்துள்ளன. அவற்றை அவனுக்கே உரிமையாக்க வேண்டுவது என் கடமை. அங்ஙனமன்றி, வேறு இடத்தில் அவற்றை உரிமையாக்குவது என்னும் வார்த்தை நடையாட நீ இடந்தரினும் இவ்வுலகில் உயிருடன் வாழ என்னால் இயலாது. என் உயிர் உடனே நீங்கும். அப்போது இப்பெண் கொலை உன்னைச் சாரும்," எனப் பின் பாவினால் உறுதிப்படுத்திக் கூறுகின்றாள்.

"வானிடை வாழுமவ் வானவர்க்கு
மறையவர் வேள்வியில் வகுத்தஅவி
கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து
கடப்பதும் மோப்பதும் செய்வதொப்ப

ஊனிடை யாழிசங் குத்தமர்க்கென்
றுன்னித் தெழுந்தவென் தடமுலைகள்
மானிட வர்க்கென்று பேச்சுப்படில்
வாழகில் லேன்கண்டாய் மன்மதனே !"[1]

அவதாரிகை : பிறருக்குச் சேஷமாயிருக்கும் இருப்பு நீங்குதலே, முக்கியம் எனக் கீழ்ச் சொன்ன அர்த்தத்தை விளக்குகிறார் :

**மூலம் : 63. " பகவச்சேஷத்துவத்திலும் அந்ய சேஷத்துவம் கழிகையே ப்ரதாநம். "**

பொருள் : இங்ஙனம் மற்றவர் விஷயத்தில் சேஷப்பட்டிருக்கும் தன்மை நீங்குதல், பெரிய பிராட்டியாருக்குச் சேஷமாயிருத்தலைக்காட்டிலும், முக்கியமானது மட்டுமேயன்றி, இஃது ஈசுவரனுக்குச் சேஷமாயிருத்தலைக்காட்டிலும் இன்றியமையாதது. இஃதே ஆன்மாவிற்குப் பிரதானமானதெனவும் சொல்லப்படுகிறது.

அவதாரிகை : இதற்குப் பிரமாணம் காட்டுகிறார் :

**மூலம் : 64. "'மறந்தும் புறந்தொழா மாந்தர்' என்கையாலே."**

பொருள் : பகவானுடைய திருநாமத்தை மறப்பினும், மற்றோர் இடத்தில் அடிமைத் தொழிலை மேற்கொள்ளாதவர்கள் எனக் கூறியிருத்தலைக் காண்க.

விளக்கம் : இங்குத் திருமழிசையாழ்வார் அருளிச்செய்த பாசுரத்தின் சீரிய பொருளை நோக்குதல் வேண்டும். நமனுடைய தூதுவர் பாசங்களைக் கையிற்றாங்கிக் கடமைகளைச் செலுத்த மிக்க வீரத்துடன் புறப்பட்டுக்கொண்டிருந்தனர். 'அவர்களுடைய வீரப் போக்குப் பாகவதரையும் வருத்துமோ', என நமன் அஞ்சி, அவர்களை அருகழைத்து, அவர்களுடைய செவியில் இரகசியமாய்ச் சில சொல்லத் தொடங்கினான் : " ஓ தூதுவர்களே, பகவானுடைய திருநாமத்தைச் சொல்வதற்கு மறந்தார்களாகிலும், வேறு தேவதைகளை இறைஞ்சி அவர்கள் காலில் விழாத பாகவதரைக் காணில் உங்கள் ஆணையை அவர்களிடம் சிறிதும் செலுத்தாதீர்கள்! நீங்கள் மறந்தேனும் அவர்களிடம் செல்லுதல் கூடாது! ஒருகால்

---

குறிப்பு : 1, நாய்ச்சியார் திருமொழி—1. 5.

அவர்கள் உங்கள் முன் நேர்படினும், அவர்களை வலஞ் செய்து வணங்கிப் பரம சாதுக்களாய் அவர்களை விலகிச் செல்லுங்கள். என்னுடைய இந்தக் கட்டளையை எக்காரணத்தினலும் நீங்கள் தவறவேண்டா," எனக் கட்டளையிட்டருளினன் என்பது ஆழ்வார் இயம்பிய கீழ்ப் பாசுரத்தினல் பெறப்படுகின்றது.

"திறம்பேன்மின் கண்டீர் திருவடிதன் நாமம்
மறந்தும் புறந்தொழா மாந்தர்—இறைஞ்சியும்
சாதுவராய்ப் போதுமின்க ளென்ருன் நமனுந்தன்
தூதுவரைக் கூவிச் செவிக்கு."[1]

வினு: நமன் இவ்வார்த்தைகளைத் தன் தூதுவருக்கு யாவரும் கேட்க வெளிப்படையாய்க் கூறின் குற்றம் யாது? இரகசியமாய்ச் சொல்லுதற்குக் காரணம் என்ன?

விடை: ஒருவன் மற்ருெருவனைப் பார்த்து, "நீ மன்னன் மனைவியினிடம் விருப்பங் கொள்ளாதே," எனப் புத்தி புகட்டுவதாயிருப்பின், இதைப் பிறர் கேட்கச் சொல்லலாமா? இச்சொல்லே, அவன் மன்னன் மனைவியிடம் விருப்பங்கொண்டுள்ளான் என்பதைக் குறிப்பித்துப் பேராபத்திற்கு இடமுண்டாக்குமன்ருே? அதைப் போன்றே, பரமனுக்கு உரியவர்களான பாகவதரிடம் நீங்கள் செல்லாதீர்கள் என்பதைப் பிறரறியச் சொல்லின், அத்தூதுவர் பாகவதருக்குக் கொடுமை செய்ய மனங் கொண்டுள்ளார் என்பது வெளிப்படையாய், அவர்களுக்குப் பெருந்தண்டனையை உண்டாக்கக்கூடும்! ஆதலினுற்ருன், நமன் தன் தூதுவருக்கு இதை இரகசியமாயுரைக்கின்ருன்.

அவதாரிகை: 'தனக்குத் தான் அடிமையாயிருத்தல்' 'பிறருக்கு அடிமையாயிருத்தல்' ஆகிய, இவ்விரண்டையும் இவ்வுகாரம் கழிக்கிறது என்று சொல்லி முடிக்கிருர்:

**மூலம்: 65. "இத்தால், தனக்கும் பிறர்க்கும் உரித்தன்றென்கிறது."**

பொருள்: உகாரம் அன்னியருக்குச் சேஷப்படுதல் கூடாது என்பதை வற்புறுத்திக் கூறுகிறது. தானும் பிறரும் பகவானில் வேறுபட்ட பொருளாயிருத்தலால், "இவ்வாத்மவஸ்து, தனக்கும்

குறிப்பு: 1. நான்முகன் திருவந்தாதி—68.

உரித்தன்று, தன்னையொழிந்த மற்றவருக்கும் உரித்தன்று ; ஈசுவரன் ஒருவனுக்கே உரித்தானது," என்பதை இவ்வுகாரம் தெள்ளிதின் தெரிவிக்கின்றது. இங்குப் பிராட்டியார், பாகவதர், ஆசாரியர் நீங்கலாக மற்றவருக்கு அடிமையன்று என்பதை வைத்துக் கொள்ள வேண்டும். இதை மேலே விவரிப்போம்.

தொகுப்புரை : ஐம்பத்தெட்டாம் சூத்திரத்திலிருந்து இது வரையும் (58-65), ஏகாரம் இருக்க வேண்டிய இடத்தில் உள்ள இவ்வுகாரத்திற்கு ஏகாரப் பொருளையே கொள்ள வேண்டுமென்றும்; இதனால், சீவான்மா பிறருக்கு அடிமைப்பட்டவன் அல்லன் என்பது பெறப்படுகிறதென்றும் ; இவ்வுகாரத்தைப் பெரிய பிராட்டியாருக்கு வாசகமாகக் கொண்டு, அவருக்கு அடிமையாயிருத்தல் என்பதுதான் இதற்குப் பொருள் எனச் சிலர் கருதுகின்றனர் என்றும் ; அங்ஙனம் அடிமைப்பட்டிருத்தலை அறிவிப்பதைக் காட்டிலும், அன்னியருக்கு அடிமைப்படுதலை மறுத்துக் கூறுதலே சிறந்ததென்றும்; ஆன்மப் பொருளைச் சமுசாரிகளுக்கு அடிமையாக்குதல், தேவர்களுக்கென ஆக்கிய அவிஸ்ஸை நாய்க்கிடுதல் போன்றதென்றும்; பகவானுக்கு அடிமைப்பட்டிருத்தலினும், மற்றவருக்கு அடிமைப்படாதிருத்தலே சிறந்ததென்றும் ; 'பகவானுடைய நாமத்தை மறப்பினும், மற்றொருவருக்கு அடிமைத் தொழில் செய்யாதிருக்க வேண்டும்' என இயம்பப்படுகின்றதென்றும் ; இஃது ஆன்மா தனக்கும் பிறருக்கும் உரித்தானதன்று என்பதைத் தெரிவிக்கிறதென்றும் இயம்பப்பட்டன.

உகாரப் பொருள் முற்றுப் பெற்றது.

அவதாரிகை : இனி மூன்றாம் எழுத்தாகிய மகாரத்தின் பொருளைச் சொல்லுகிறார் :

மூலம் : 66. "மகாரம், இருபத்தஞ்சாமக்ஷரமாய் ஜ்ஞாந வாசியுமாயிருக்கையாலே, ஆத்மாவைச் சொல்லுகிறது."

பொருள் : 'ம்' என்னும் அட்சரம் வடமொழியில் இருபத்தைந்தாம் அட்சரமாயிருத்தலினாலும், ஞானத்தைக் குறிக்கும் சொல்லாயிருப்பதனாலும் ஆன்மாவைச் சொல்லுகிறது.

விளக்கம் : வினு : மகாரம் இருபத்தைந்தாம் அட்சரம் என்பது எப்படி ?

விடை : வடமொழியில் க இனம் ஐந்து ; ச இனம் ஐந்து ; ட இனம் ஐந்து ; த இனம் ஐந்து ; ப இனம் ஐந்து ; இவ்வைந்து இனங்களிலும் இருபத்தைந்து எழுத்துகள் இருக்கின்றன. இவற்றுள் இருபத்தைந்தாம் அட்சரமே மகாரமாகும். ஆதலின், மகாரம் இருபத்தைந்தாம் அட்சரம் எனச் சொல்லப்படுகிறது.

வினு : மகாரம் இருபத்தைந்தாம் அட்சரம் என்பது சரி. ஆனல், இஃது ஆன்மாவைக் குறிப்பது எப்படி ?

விடை : அசித்து, சித்து, ஈசுவரன் ஆகிய மூன்றும் உண்மைப் பொருள்கள். அசித்து, பிரகிருதிதத்துவம். அப்பிரகிருதி தத்துவமும், அதன் காரியப் பொருள்களும் சேர்ந்து இருபத்து நான்கு தத்துவங்கள். இத்தத்துவங்களை முதல் இருபத்துநான்கு அட்சரங்கள் கூறுகின்றன. எவ்வாறெனில், 'க' இனத்தைச் சார்ந்த ஐந்து எழுத்துகளால் பூதங்கள் ஐந்தும், 'ச' இனத்தைச் சார்ந்த ஐந்து எழுத்துகளால் கன்மேந்திரியங்கள் ஐந்தும், 'ட' இனத்தைச் சார்ந்த ஐந்து எழுத்துகளால் ஞானேந்திரியங்கள் ஐந்தும், 'த' இனத்தைச் சார்ந்த ஐந்து எழுத்துகளால் ரூபம், சத்தம், மணம், சுவை, ஸ்பரிசம் ஆகிய ஐந்தும், 'ப' இனத்தைச் சார்ந்த முதல் நான்கு எழுத்துகளால் மனம், அகங்காரம், மகத் தத்துவம், மூலப் பிரகிருதி ஆகிய நான்கும், இவ்வினத்தைச் சார்ந்த இருபத்தைஞ்சாம் அட்சரமாகிய மகாரத்தால் ஆன்மாவும் சொல்லப்படுகிறது. "பஞ்சவிம்ச ஆத்மா பவதி" என்பதைக் காண்க.

வினு : அவ்வாறிருந்தாலும், இந்த மகாரம் ஞானத்தைக் குறிக்குஞ்சொல் என்பது எப்படி ?

விடை : இம்மகாரம் 'மநஜ்ஞானே' 'மனு அவ போதனே' என்னும் பெயரடிகளிலிருந்து பிறத்தலின், இது ஞானம் என்னும் பொருளைக் குறிக்கிறது-

வினு : அங்ஙனமே இருப்பினும், இம்மகாரம் ஆன்மாவைக் குறிப்பது எப்படி ?

விடை : முற்றும் உப்புச் சுவையே பொருந்திய உப்புக் கட்டியைப் போன்று, ஆன்மப் பொருள் முற்றும் ஞான சொரூபமாயுள்ளது. "விஜ்ஞாநாத்மா பூருஷஃ" என்பதை நோக்குக.

அவதாரிகை : கீழ்க் குறிப்பிட்ட சேஷத்துவம் எல்லா ஆன் மாக்களுக்கும் பொதுவாகையால், பத்தர், முத்தர், நித்தியர் ஆகிய மூன்று வகையான ஆன்மக் கூட்டத்தையும் இங்குப் பகரவேண்டி யிருத்தலின், அதை அருளிச் செய்கிருர் :

மூலம் : 67. "இதுதான் ஸமஷ்டி வாசகம்."

போருள் : அவதாரிகையில் கூறியவாறு இஃது ஆன்மாவின் கூட்டத்தைத் தெரிவிக்கிறது.

அவதாரிகை : 'ஒருமையைத் தெரிவிக்கும் சொல் பன்மை யைச் சொல்வதாகுமோ?' என்னும் ஐயத்திற்குச் சமாதானம் கூறுகிருர்.

மூலம் : 68. "ஜாத்யேக வசனம்."

போருள் : ஒவ்வொரு போரினும் கோடிக் கணக்கான நெல் இருப்பினும், அந்நெற்போர்களைப் பார்த்து, அவற்றின் ஒரே இனத்தை நோக்கி 'இஃதொரு நெல்' 'இஃதொரு நெல்' என ஒருமையாகச் சொல்வதைப் போன்றே, இங்கும் ஆன்மாவும் ஒருமையில் வழங்கப்பட்டுள்ளது.

அவதாரிகை : ஆன்மாவிற்குள்ள சேஷத்துவம், ஞானத் துவம், ஞாத்ருத்துவம் (அறிவுடையனுயிருக்கை) ஆகிய மூன்றனுள் எத்தன்மை இம்மகாரத்தால் சொல்லப்படுகிறது என்பதை வெளி யிடுகிருர் :

மூலம் : 69. "இத்தால், ஆத்மா ஜ்ஞாதாவென்று தேஹத்தில் வ்யாவ்ருத்தி சொல்லிற்ருயிற்று."

போருள் : இம்மகாரத்தால் ஆன்மா அறிவுடையவன் (ஞாதா) என்பதும், அத்தால் ஞானமற்ற (அசேதனமான) உடலைக்காட்டி லும், வேறுபட்டவன் என்பதும் சொல்வதாய்த் தேறுகிறது.

விளக்கம் : வின : 66-ஆம் சூத்திரத்தில் ஆன்மா உப்புக் கட்டியைப் போன்று, ஞானமாகவே இருப்பவன் எனக் கூறினீர். இச்சூத்திரத்திலோ, ஆன்மா ஞானமாகவே இருப்பதால், சரீரத் திற்கு வேறுபட்டவன் எனக் கூருமல், ஞானத்திற்கு இருப்பிட மாயிருத்தலால் சரீரத்திற்கு வேறுபட்டவன் எனக் கூறுகின்றீர். இதற்குக் காரணம் என்ன?

விடை: சீவான்மாவிற்கு இவ்வுலகிலும் சரீரம் உண்டு. பரமபதத்திலும் சரீரம் உண்டு. ஆனால், லீலாவிபூதியில் உள்ள இச்சரீரம் பஞ்ச பூதங்களால் ஆக்கப்பட்டுள்ளது. நித்திய விபூதியாகிய பரமபதத்தில் உள்ள அச்சரீரம் சுத்தஸத்துவத்தினால் ஆக்கப்பட்டுள்ளது. இதை மனத்தில் வைத்துக்கொண்டு நாம் மேலே பார்க்க வேண்டும். ஞானம் என்பது, தானே தோன்றும் பொருள். சுத்தஸத்துவமும் தானே தோன்றும் பொருள். இச்சுத்தஸத்துவம் தானே தோன்றும் பொருளாயிருத்தலின், ஞானமாகவே இருக்கிறது என அறிகின்றோம். ஆன்மா ஞானமாகவே இருக்கிறது எனச் செப்பின், அவ்வான்மாவை இவ்வுலகில் பஞ்ச பூதத்தாலாகிய சரீரத்திற்கு வேறுபட்டது எனக் கூறலாமேயன்றி, பரமபதத்தில் ஞானமாகவே இருக்கும் சுத்தஸத்துவத்தினாலாகிய சரீரத்திற்கு வேறுபட்டது என இயம்ப முடியாது. ஆதலின், அப்பரமபதத்திலுள்ள சுத்தஸத்துவத்தினாலாய சரீரத்தினும் ஆன்மா வேறுபட்டவன் என்பதைக் காட்டுதற்கே ஆன்மா ஞானமுடையவனாகவிருக்கின்றான் எனச் சொல்லப்பட்டது. சுத்தஸத்துவம் ஞானமாய் இருக்கிறதேயன்றி, ஞானமுடையதாய் இல்லை.

அவதாரிகை: 'நான் என்னும் சொல்லுக்குப் பொருள் ஆன்மா. நான் என்னும் சொல்லைத் தேகத்தில் பார்க்கும்போது, ஆன்மா தேகத்தில் வேறுபட்டவன் எனக் கூறுவது எப்படி?' என்ன, அருளிச்செய்கிறார்:

**மூலம்: 70. "தேஹத்தில் வ்யாவ்ருத்தி தத்வசேகரத்திலே சொன்னோம்."**

பொருள்: 'இவ்வுடல் ஆன்மா அன்று. ஆன்மாவின் வேறுபட்டது என்பதைப் பல காரணங்களைக் கொண்டு தத்துவசேகரமென்னும் கிரந்தத்தில் சொன்னோம்,' என்பது இதன் பொருள்.

விளக்கம்: வினா: உலகில், 'நான் தேவன்' 'நான் மனிதன்' 'நான் பருத்தவன்' 'நான் இளைத்தவன்' என, உடலை நான் எனக் கூறும் வழக்காறுகள் நிகழாநிற்க, நான் என்பதன் பொருள் ஆன்மா என்றும், அவ்வான்மா தேகத்திலிருந்து வேறுபட்டதென்றும் கூறுதல் யாங்ஙனம்?

1. விடை: அன்னிய தேசத்தானொருவன் பத்து வருடங்களுக்கு முன் நம் தேசத்திற்கு வந்தபோது அரங்க விமானத்தைக்

காண்கின்றான். அந்த மனிதனே இன்று இங்கு வந்து, முன்பு பார்த்த அந்த அரங்க விமானத்தைப் பார்த்து, "இது யான் முன் பார்த்த ஒன்றே; இது முந்தியிருந்தபடியே இன்றும் இருக்கிறது," என அறிகிறான். தேகமோ, இமைக்கு இமை மாறுபடும் பொருளாய் இருக்கிறதெனச் சாத்திரங்கள் கூறுகின்றன. அதை நாம் அநுபவத்திலும் அறிகிறோம். அம்முறையில் பத்து வருடங்களுக்கு முன் இருந்த சரீரமே இன்றும் உள்ளது எனச் சொல்ல முடியுமா? அங்ஙனமானால், 'இது நாம் பத்து வருடங்கட்கு முன் பார்த்த பொருள்' என அறிதற்கு அன்றும் இன்றும் மாறுபடாது ஒரே நிலையில் இருக்கும் பொருள் ஒன்று இருந்தே தீரவேண்டுமன்றோ? ஆதலின், இவ்வறிவு தேகத்தில் வேறுபட்ட அறிவுடைய ஆன்மாவிற்கே அமையுமென்பதும், அவ்வான்மா தேகத்தைக் காட்டிலும் வேறுபட்டது என்பதும் தெரிகின்றன அல்லவா?

2. இன்னும், நேற்றுக் கண் பார்த்த ஒன்றை இன்று கை தொடுகிறது. இவ்வாறு ஒரு கரணத்தால் பார்த்தல் மற்றொரு கரணத்தால் தொடுதல் என்பது அறிவுள்ளதும் என்றும் உள்ளதுமான ஒரே பொருளினால் நிகழுமேயன்றி, அறிவற்றதும் அப்போதைக்கப்போது மாறுந் தன்மையுடையதுமான சில பொருள்களினால் நிகழாதென்பது அநுபவ ஸித்தம். ஆதலின், அறிவற்ற ஜடப்பொருளாகிய சரீரத்தினால் இவை நடைபெறாவென்றும், இவற்றை நிகழ்த்துதற்குத் தேகத்தைக்காட்டிலும் வேறுபட்ட ஒரு பொருள் இருத்தல் வேண்டுமென்றும், அஃதே ஆன்மா என்றும் அறிகின்றோம்.

அவதாரிகை: சீவன் தர்மீ; சேஷத்துவம் தர்மம். இவற்றுள் முதலில் தருமியைச் சொல்லி, பின்பு தருமத்தைச் சொல்ல வேண்டுவது முறையாயிருக்க, இப்பிரணவத்தில் தருமமாகிய சேஷத்துவத்தை முதலில் குறிப்பித்து, பின்னை ஆன்மாவைச் சொல்லுவதேன்? என்பதற்கு சமாதானத்தை அருளிச் செய்கிறார்.

**மூலம்: 71. (1) "மணத்தையும் ஒளியையுங் கொண்டு பூவையும் ரத்நத்தையும் விரும்புமாப் போலே, சேஷமென்று ஆத்மாவை ஆதரிக்கிறது; (2) அல்லாதபோது 'உயிரினாற்குறைவிலம்' என்கிறபடியே**

த்யாஜ்யம் ; (3) அது தோன்ற, சேஷத்வத்தைச் சொல்லி, பின்னை ஆத்மாவைச் சொல்லுகிறது."

பொருள் : மக்கள், மணத்திற்கு இருப்பிடம் என மலரையும், ஒளிக்கு இருப்பிடம் என இரத்தினத்தையும் விரும்புதல் போன்று, அறிஞர், சேஷத்துவத்திற்கு இருப்பிடமாயிருத்தலினாற்றான் ஆன்மாவை ஆதரிக்கின்றனர். (2) அங்ஙனமன்றேல், "உயிரினாற்குறைவிலம்" என்னும் ஆழ்வார் வாக்கின்படியே பகவானுக்குச் சேஷப்படாத ஆன்மாவால் யாதொரு பயனுமின்று என அதைக் கைவிடுவர். (3) ஆகவே, பெரியோரால் பாராட்டப் படும் இச்சேஷத்துவத்தில் ஊற்றம் தோன்றுதற் பொருட்டே, முதலில் சேஷத்துவத்தைச் சொல்லிப் பின்பு ஆன்மாவைச் சொல்லுகிறது.

ஆன்மாவிற்கு, அறிவு இன்பம் முதலியன தருமங்களாய் இருக்க, இங்குச் சேஷத்துவத்தை மட்டும் ஆதரிப்பதற்குக் காரணம் இன்னது என்பதை 56-57-ஆம் சூத்திரங்களில் விரித் துள்ளோம்.

ஸ்ரீராமபிரானை விட்டுப் பிரிந்து, அரக்கர் இடையில் வதிந்த பிராட்டியார், "யான் எம்பெருமானுக்குப் பயன்படாத நிலையில் உள்ளேன். அங்ஙனம் இருக்கும் எனக்கு உயிரினாலும், மற்றப் பொருள்களாலும், அணிகளாலும் பயன் இல்லை," என்பதை

"நஹிமே ஜீவிதேநார்த்தஃ நைவார்த்தைஃ ந ச பூஷணைஃ |
வஸந்த்யா ராக்ஷஸீமத்யே விநா ராமம் மஹாரதம் ||"

என்னும் சுலோகத்தில் தெரிவிக்கிறார்.

அவதாரிகை : இனி, மூன்று பதங்களாலாகிய இப்பிரணவத்தால் வெளியிட்ட பொருளை இங்குத் தொகுத்துக் கூறுகிறார் :

மூலம் : 72. "ஆக, ப்ரணவத்தால் 'கண்ணபுரமொன்றுடையானுக்கடியேனொருவர்க்குரியேனோ' என்கிறபடியே ஜீவபர ஸம்பந்தம் சொல்லிற்று."

பொருள் : முன் அகார உகார மகாரங்களால் சொன்ன பொருள்கள் எல்லாவற்றாலும், கண்ணபுரமொன்றுடையானுக்கு என்று நான்காம் வேற்றுமையைத் தன்னுள் கொண்டுள்ள அகாரத்தின் பொருளையும், "அடியேன்" என்று சேஷத்துவத்திற்கு

இருப்பிடமாயுள்ள மகாரத்தின் பொருளையும், "ஒருவர்க்குரியேனோ" என்று, பிறருக்குச் சேஷப்படுவதை விலக்கும் உகாரத்தின் பொருளையும் குறிக்கின்றது. பிரணவத்தின் பொருளை அநுஸந்தானம் செய்த திருமங்கையாழ்வார் வாக்காகிய இச்சொற்றொடரின்படியே ஆன்மாவிற்கும் ஈசுவரனுக்கும் உள்ள சேஷசேஷி பாவமாகிற தொடர்பு சொல்லப்பட்டது.

அவதாரிகை : இன்னும் சேதனனுடைய சேஷ விருத்தியை ஏற்றுக்கொள்ளும் பொருள், இரட்டையாய் உள்ளது என்பது தோன்ற, இவ்வாத்துமாவிற்கும் பரமாத்துமாவிற்கும் உள்ள தொடர்பைப் பொய்கையாழ்வார் வாக்கால் விளக்குகிறார் :

**மூலம் : 73. "இத்தால் 'தாமரையாள் கேள்வனொருவனையே நோக்கு முணர்வு' என்றதாயிற்று."[1]**

பொருள் : 'தாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கு முணர்வு'—இதில், 'தாமரையாள் கேள்வன்' என்பதால், அகாரத்தின் பொருளாய், சீவன் செய்யும் தொண்டை ஏற்றுக்கொள்ளும் பிராட்டியாரோடுங் கூடிய எம்பெருமான் சொல்லப்படுகிறான். 'ஒருவனையே நோக்கும்' என்பதால், சதுர்த்தியினாலும், உகாரத்தினாலும் சொல்லப்படும் பிறர் தொடர்பை ஒழித்து ஸ்ரீயப்பதி ஒருவனிடமே மனம் பதித்திருக்கும் இருப்புப் பகரப் படுகிறது. 'உணர்வு' என்பதால், சேஷத்துவத்திற்கு இருப்பிடமாய் மகாரத்தால் சொல்லப்படும் அறிவாகவே இருக்கும் ஆன்மா தெரிவிக்கப்படுகிறது.

விளக்கம் :

"பெயருங் கருங்கடலே நோக்குமாறு ஒண்பூ
உயருங் கதிரவனே நோக்கும்—உயிரும்
தருமனையே நோக்குமொண் டாமரையாள் கேள்வன்
ஒருவனையே நோக்கு முணர்வு."[2]

ஓடுகின்ற ஆறு அலைகளோடுங் கூடிய கறுத்த கடலையும், அழகிய தாமரைகள் வானில் உதிக்கும் சூரியனையும், உயிர்கள் யமனையுமே நோக்கி நிற்றல் போன்று, ஞானமே வடிவாகிற சீவ தத்துவம் அழகிய பங்கயத்தில் வதியும் பெரிய பிராட்டியாரின்

---

குறிப்பு : 1. பெரிய திருமொழி—8. 9. 3.
2. முதல் திருவந்தாதி—67.

நாயகன் ஒருவனையே நோக்கி நிற்கும். இவ்வீசுவர ஞானமே உண்மை ஞானம் எனப்படும். இதைத் தவிர, வேறு எந்தப் பெரிய விஞ்சைகள் கைவரப் பெற்ற உயரிய ஞானமும் உண்மை ஞான மாகாது. மற்ற அறிவுகளெல்லாம் செருப்புக்குத்தக் கற்றதோடு ஒக்கும். பெரியவாச்சான்பிள்ளை, ஒரு பொய்யனைப் பொய் என்றே சொல்லுதல் போன்று, இப்பாசுரத்திலுள்ள உணர்வு என்பதற்கு ஞானம் என்றே பொருள் கொண்டார். அதே பாசுரத்தை இச் சூத்திரத்திற்குச் சான்று காட்டிய பிள்ளை லோகாசாரியர், "உணர்வு" என்பது அறிவாகவே இருக்கும் ஆன்மாவைத் தெரி விக்கிறது எனப் பகருகிறார்.

அவதாரிகை: முன் 71-ஆம் சூத்திரத்தால் அகாரத்தில் ஏறி மறைந்திருக்கும் விகுதியின் பொருளை முக்கியமாய்க் கொண்டு, பிரணவத்திற்குப் பொருள் இயம்பினர். இங்கு, அகாரத்தில் உள்ள வினையடியின் அர்த்தமாகிய காப்பவன் தன்மையை முக்கிய மாய்க் கொண்டு இன்னொரு விதமாகப் பொருள் பகருகிறார்:

**மூலம்: 74. "அகாரத்தாலும் மகாரத்தாலும், ரக்ஷகனை யும் ரக்ஷ்யத்தையும் சொல்லிற்று; சதுர்த்தியாலும் உகாரத்தாலும், ரக்ஷணஹேதுவான ப்ராப்தியையும் பலத்தையும் சொல்லிற்று."**

பொருள்: அகாரம் பாதுகாப்பவனான ஈசுவரனைச் சொல்லு கிறது. மகாரம், அவ்வீசுவரனால் பாதுகாக்கப்படும் ஆன்மாவைச் சொல்லுகிறது. சதுர்த்தி, அவ்வாறு காப்பதற்குக் காரணமா யுள்ள சேஷத்துவத் தொடர்பைச் சொல்லுகிறது. 'ஆன்மா, ஈசுவரனைத் தவிர வேறொருவருக்கும் சேஷபூதன் அல்லன்' என்ப தைத் தெரிவிக்கும் உகாரம், மற்றொருவருக்கும் இல்லாமல் ஈசுவரன் ஒருவனுக்கே விநியோகப்படுகையாகிற ரக்ஷண பலத் தைத் தேறிய பொருளாக அறிவிப்பதாகும். ஆக, இம் மந்திரத்தின் முதற்பதமான பிரணவத்தின் பொருளைக் கூறி முடித்தார்.

தொகுப்புரை: அறுபத்தாறும் சூத்திரத்திலிருந்து இச்சூத் திரம் வரையும் (66—74.) மகாரம் இருபத்தைந்தா மட்சரமாயும், ஞானத்திற்கிருப்பிடமாயுமிருத்தலின், ஆன்மாவைச் சொல்லுகிற தென்றும், ஒரு நெல் என்பது நெல்லின் கூட்டத்தைத் தெரிவிப்

பது போன்று 'ம்' என்னும் ஒருமைச் சொல் ஆன்மாவின் திரளைத் தெரிவிக்கிறதென்றும்; இம்மகாரம் ஆன்மா ஞான முடையதென்பதையும், ஞானமற்ற தேகத்தைக்காட்டிலும் வேறு பட்டதென்பதையும் தெரிவிக்கிறதென்றும்; இது தத்துவ சேகர மென்னும் பிரபந்தத்தில் சொல்லப்பட்டதென்றும்; மணத்தையும் ஒளியையும் கருதி மலரையும் இரத்தினத்தையும் விரும்புதல் போன்று, பகவானுக்குச் சேஷப்பட்டிருத்தலினாலேயே ஆன் மாவை விரும்பிக்கொள்ள வேண்டியிருக்கிறதென்றும்; இஃதின் றேல் பயனற்ற அவ்வான்மாவை விடவேண்டுவதே என்றும்; இக்கருத்துத் தோன்றுதற்பொருட்டே பிரணவம், சேஷத்துவத்தை முன்னர்ச் செப்பி, ஆன்மாவைப் பின்னர்ச் சொல்லுகிறதென்றும்; ஆகப் பிரணவத்தால், "கண்ணபுர மொன்றுடையானுக்கு அடி யேன், ஒருவர்க்குரியேனோ?" "தாமரையாள் கேள்வன் ஒருவ னையே நோக்கு முணர்வு" என்னும் இப்பாசுரங்களின்படி, சீவான் மாவிற்கும் பரமான்மாவிற்கும் உள்ள சேஷ சேஷி பாவத்தின் தொடர்பு சொல்லப்படுகிறதென்றும்; அகாரத்தால் இரட்சகனை பகவானையும், மகாரத்தால் இரட்சிக்கப்படும் சீவனையும், சதுர்த்தியா லும் உகாரத்தாலும் முறையே காப்பதற்குக் காரணமான தொடர் பையும், ரக்ஷண பலத்தையும் சொல்லிற்று என்றும் வெளியிடப் பட்டன.

அவதாரிகை: நமஃ நாராயணாய என்னும் பதங்களுக்குப் பொருள் சொல்லுவதாய்க் கருதிப் பிரணவத்திற்கு மேற்கூறிய சொற்கள் விளக்கமாயிருக்கும் விதத்தைத் தெரிவிக்கிறார்:

**மூலம்: 75. "இனிமேல் ப்ரணவத்தை விவரிக்கிறது."**

பொருள்: வினா: விவரணம் என்பது என்ன?

விடை: விவரணம் என்பது, "முன் செப்பிய பொருளை விரித்துக் கூறி அதை உறுதிப்படுத்த சிலவற்றைச் சொல்லுதலே" ஆகும்.

அவதாரிகை: பிரணவத்திற்கு மந்திர சேஷம் விவரணம் என்னும் அஃது, யாங்ஙனம் என்பதைப் பகருகிறார்:

**மூலம்: 76. (1) "உகாரத்தை விவரிக்கிறது—நமஸ் ஸு; (2) அகாரத்தை விவரிக்கிறது—நாராயண**

பதம்; (3) மகாரத்தை விவரிக்கிறது—சதுர்த்தி; நாரபதமென்றுஞ் சொல்லுவர்கள்."

பொருள்: உகாரம், 'ஆன்மா பிறருக்கு அடிமைப்பட்டது அன்று' என்பதைத் தெரிவிக்கிறது. நமஃ என்பது, ஈசுவரனல்லாத பிறரில் தானும் ஒருவனாதலால், தனக்குத் தான் அடிமையாயிருத்தலைக் கழிக்கிறது. ஆகையால், உகாரத்தை "நமஸ்ஸு" விரிப்பதாகும். காப்பவனான ஈசுவரனையும், காக்கப்படும் சேதன அசேதனங்களையும், காப்பதற்குப் பயன்படுவனவான குணங்களையும், காக்கும் விதத்தையும் தெளிவாகத் தெரிவித்தலின், அகாரத்தை "நாராயணபதம்" விரிப்பதாகும். அடிமைத் தொழில் செய்யாதபோது அடிமைத்தன்மை இல்லை ஆதலின், அதைக் குறிக்கும் "சதுர்த்தி"யோ, அல்லது நித்தியப் பொருள்களைக் குறிக்கும் "நார" பதமோ மகாரத்தை விளக்குவதாகும்.

அவதாரிகை: 'பிரணவத்தின் எழுத்துகளை முறையாய் விவரியாமல், முறை தவறி விவரிப்பதற்குக் காரணம் யாது?' என, அதற்கு விடை பகருகிறார்:

மூலம்: 77. "அடைவே விவரியாதொழிகிறது, விரோதி போய் அநுபவிக்க வேண்டுகையாலே."

பொருள்: அகாரத்தை முதலில் விவரியாமல் உகாரத்தை முதலில் விவரிப்பதற்குக் கருத்து, நாராயணாய என்பதில் உள்ள 'ஆய' என்னும் வேற்றுமையினால் கிடைக்கும் ஈசுவர அநுபவத்திற்குப் பகையாயுள்ள அகங்கார மமகாரங்கள் கழிந்தாலல்லாமல், அவ்வநுபவம் உண்டாகாது. இவை 'நமஸ்ஸாலே' கழிக்கப்படுகின்றன. ஆதலின், இங்ஙனம் எழுத்துகளை மாறுபடி விவரிக்க வேண்டியதாயிற்று.

தொகுப்புரை: எழுபத்தைந்தாம் சூத்திரத்திலிருந்து எழுபத்தேழாம் சூத்திரம் வரையும் (75—77) இயம்பியவற்றால், இனி, பிரணவத்தை விவரிக்கிறது எனத் தொடங்கி, உகாரத்தை நமஸ்ஸும், அகாரத்தை நாராயண பதமும், மகாரத்தைச் சதுர்த்தியும் நாரபதமும் விரிவு படுத்துகின்றனவென்றும்; அகாரத்தை முன்னும், உகாரத்தைப் பின்னும் விளக்க வேண்டியிருப்பினும், அங்ஙனம் விளக்காததற்கு அகங்கார மமகாரங்கள் நீங்கிய பின்பே பகவானை

அனுபவிக்க வேண்டியிருக்கின்றமையின் என்றும் அறிந்து கொண் டோம்.

அவதாரிகை: இனி நடுப் பதமான நமஸ்ஸுக்குப் பொருள் கூறுவதாகக் கொண்டு, அதிலுள்ள பதப்பிரிவுகளைச் செப்புகிறார்:

**மூலம்: 78. "நமஸ்ஸு—'ந' என்றும், 'மஃ' என்றும் இரண்டு பதம்."**

பொருள்: இச்சொல்லில் ந, மஃ என்னும் இரண்டு எழுத்து கள் உள்ளன. இவ்விரண்டு எழுத்துகளும் தனித்தனி பொருளைத் தருதலின், பதங்களாயின.

அவதாரிகை: 'இரண்டு பதங்களுக்கும் பொருள் யாவை?' எனக் கேட்க, அதை இயம்புகின்றார்:

**மூலம்: 79. "'மஃ' என்கிறவித்தால், தனக்குரியன் என்கிறது; 'ந' என்று அத்தைத் தவிர்க்கிறது."**

பொருள்: இவற்றுள், ஆறும் வேற்றுமையோடுங் கூடிய 'மஃ' என்னும் பதம், 'சேதனன் ஈசுவரனுக்கே உரியவன்,' என இயம்பும் நான்காம் வேற்றுமையின் பொருளுக்கு மாறாய்த் 'தனக்குத்தான் உரியன்' என்னும் பொருளைக் கொடுக்கின்றது. ஆனால், 'ந' என்னும் பதமோ, அதற்கு எதிர்மறைப் பொருளால் அதைத் தடுத்துத் 'தனக்குத் தான் உரியன் அல்லன்' என்பதைத் தெரிவிக்கின்றது.

அவதாரிகை: இரண்டு பதத்தாலும் கூறிய பொருளைச் சேர்த்துச் சொல்லுகிறார்:

**மூலம்: 80. "ஆக, 'நமஃ' என்கிறவித்தால், தனக் குரியன் அன்றென்கிறது."**

பொருள்: ஆகவே, 'நமஃ' என்னும் இத்தொடர்மொழி, 'சேதனன் தனக்குத் தான் உரியவனல்லன்,' என்பதை அறிவிக் கிறதெனக் கொள்க.

வினா: இங்கு எழுத்துகளுக்கு முறையே பொருள் கூறாமல், முன் எழுத்தைப் பின்னும், பின் எழுத்தை முன்னும் வைத்துப் பொருள் கூறுவதற்குக் கருத்து என்னை?

விடை: நம: என்னும் பதத்திற்கு, எழுத்துகள் அமைந்திருக்கும் முறையிலோ, அன்றி இங்குச் சொல்லுகிறபடி எழுத்துகளை மாற்றியோ இரு விதமாகவும் பொருள் கூறுவதுண்டு. இவ்வாசிரியரே, பரந்தபடியில் இப்பதத்திற்கு, எழுத்துகள் அமைந்திருக்கும் முறையிலும், இம்முமுட்சுப்படியில் அவ்வெழுத்துகளை மாற்றியும் பொருள் இயம்பியுள்ளார். ஆனால், நிஷேத்யம் நிஷேதம் என்பவற்றுள், நிஷேதம் இல்லை என்பதைக் குறிக்கும். நிஷேத்யம் எஃது இல்லை என்று கழிக்கப்படுகின்றதோ அதைக் குறிக்கும். 'விடுங்கோள் எல்லாவற்றையும்,' என நிஷேதமாகிய விடுகையை முன்னும், நிஷேத்தியமாகிய விடவேண்டியவற்றைப் பின்னுமாய்த் தெரிவிக்கும் 'வீடுமின் முற்றவும்' என்னும் ஆழ்வார் உபதேசம் போன்று 'ந' என்னும் பதத்திற்கு முந்தியும், ம: என்னும் பதத்திற்குப் பிந்தியுமாய்ப் பரந்தபடியில் இவரால் பொருள் சொல்லப்பட்டிருக்கிறது. இவரே, உப்பு இல்லை என்பதைத் தெரிவிக்க நேர்ந்த காலத்தில், உப்பு (நிஷேத்தியம்) என்பதை முதலில் தெரிவித்துப் பின்பு இல்லை (நிஷேதம்) என்பதைத் தெரிவித்தல் போன்று இந்நூலில் இயம்புகிறார்.

அவதாரிகை: நம: என்னும் பதம் பிரணவத்திலுள்ள உகாரத்தின் விரிவென்றன்றோ முன்பு கூறினோம். 'அவ்வாறாயின், இந் நமப்பதம், 'சேதனன், தனக்குத் தானும் உரியவனல்லன்; பிறருக்கும் உரியவனல்லன்,' என அவ்வுகாரம் தெரிவிக்கும் இவ்விரு பொருள்களையும் விளக்க வேண்டுவது இன்றியமையாததன்றோ? அங்ஙனமன்றித் தனக்குத் தான் உரியவனல்லன் என்னும் முந்திய பொருளை மட்டும் விரிப்பதேன்?' என்னும் ஐயத்தில் இதை அருளிச் செய்கிறார்:

**மூலம்: 81.** "பிறருக்குரியனானவன்று தன் வைலக்ஷண்யத்தைக்காட்டி மீட்கலாம்; தனக்கென்னுமன்று யோக்கியதையுங்கூட அழியும்."

பொருள்: 'தான் பிறருக்கு அடிமை,' 'தான் தனக்கு அடிமை' என்னும் இவ்விரண்டையும் ஒப்பிட்டு நோக்குங்கால், தான் பிறருக்கு உரியவன் என நினைத்தலைக்காட்டிலும், தான் தனக்கு உரியவன் எனக் கருதும் சுதந்தர நினைவு மிக்க தீமையை விளைவிப்பதாகும். ஏனெனில், பிறருக்குச் சேஷபூதனாய், அவருக்கு அடிமை

பூண்டு ஒழுகும் ஒருவன், எங்ஙனமேனும், சேஷத்துவத்திற்கு இசைந்திருத்தலின், அவனுக்கு மற்றவரைக்காட்டிலும் காரணத்துவம், இரட்சகத்துவம், சேஷித்துவம் இவைகள் வாய்க்கப் பெற்ற எம்பெருமானுடைய சீரிய தன்மைகளை எடுத்துக் காட்டி, அவனை அந்நிலையிலிருந்து அவ்வெம்பெருமான் தொண்டில் திருப்புதல் அருமை அன்று. அவனும் ஈசுவரத் தொண்டை அன்புடன் ஏற்றுக் கொள்வான்.

இங்ஙனமன்றி, "நான் சுதந்தரன்; நான் ஒருவருக்கும் அடிமைப்பட்டவன் அல்லன்," எனச் சேஷத்துவத்திற்குச் சிறிதும் இசையாமல் இருக்கும் ஒருவன், எக்காரணத்தைப்பற்றியும் ஈசுவரனடிமையில் புகுதல் அரிதினுமரிதே. அவன் சுதந்தரத் தன்மையிலிருந்து மீட்பதற்கும் தகுதியற்றவனாவான். ஆதலினாற்றான், இந்நமப்பதம், 'சேதனன் தனக்குத் தான் உரியவன் அல்லன்' என்னும் பொருளை மட்டும் முக்கியமாய் விரித்துச் சேதனன் சுதந்தரத்தை முற்றும் ஒழிக்கிறது.

இதற்குத் தம் இல்லக் கிழத்தியாராகிய பொன்னாச்சியாரிடம் அன்பு பாராட்டி, அவ்வம்மையாருக்கு அடிமைப்பட்டவராய் விஷயாந்தரங்களில் உழன்றுகொண்டிருந்த உறங்கா வில்லிதாஸர், உடையவர் அருளால், பெரிய பெருமாள் கண்ணழகிலும், கலியாண குணங்களிலும் தொடர்புண்டு, சிற்றின்ப வாழ்க்கையில் வெறுப்புற்று, எம்பெருமான் தொண்டில் ஈடுபட்ட சரிதத்தைச் சான்றாகக் கொள்ளலாம்.

வினா: இந்நமஃ என்னும் பதமோ, தனக்குத் தான் உரியவன் அல்லன் என்னும் ஒரு பொருளை மட்டும் செப்புகிறது. இதை நோக்குங்கால், உகாரம் விரிவு போன்றும், நமப்பதம் சுருக்கம் போன்றுமல்லவா புலப்படுகின்றன? இம்முறையில், நமப்பதம் உகாரத்திற்கு விரிவு என இயம்பும் உங்கள் கூற்று இங்கு எங்ஙனம் பொருந்தும்? அதன்றியும், நீங்கள் முன்னர்த் தெரிவித்த சுருக்க விளக்கங்களுக்குள்ள இலட்சணமும் இங்குப் பொருந்தவில்லையே?

விடை: உகாரத்தில் ஜீவன், ஈசுவரனுக்கும் ஈசுவர சம்பந்தமுடைய பிராட்டிமார், பாகவதர், ஆசாரியர் ஆகியவருக்கும் தவிர,

மற்றவருக்கு அடிமையல்லன் என்பதை மட்டும் தெரிவிக்கின்ற மையின், மற்றவருள் ஒருவனுன 'தனக்கும் தான் உரியவனல்லன்' என்பது ஒருவாறு பெறப்படுகிறதே அன்றி, அது விளக்கமாய்த் தோன்றிலது. நமஸ்ஸிலோ, 'தனக்குத் தான் உரியவன் அல்லன்' என்பதையே தனியாய் எடுத்துக் கழிக்கின்றமையின், இந் நமஸ்ஸு உகாரத்திற்கு விரிவு எனச் செப்புதற்குத் தடை யாது?

சாத்தன் வறிஞனதலின், பிறருக்கு உதவி புரிய அவனிடம் பொருளில்லை எனக் கூறின், தனக்கு வேண்டியவற்றைச் செய்துகொள்ளுதற்கு அவனிடம் பொருளுள்ளது என நினைத் தற்கு இடந்தராலாமன்றே?

அங்ஙனமன்றி, சாத்தனுக்குத் தனக்கு வேண்டியவற்றைப் பெறுதற்கே பொருளில்லை எனச் செப்பின், பிறருக்கு உதவுதற் கும் அவனிடம் பொருளில்லை என்பது தெளிவாய்த் தெரியுமன்றே? அதைப் போன்றே, உகாரம், சீவன், பகவத்ஸம்பந்தமில்லாத பிறருக்கு அடிமையல்லன் என்பதைச் சொல்லுங்கால், தனக்குத் தானும் அடிமை அல்லன் என்பது, உட்புகுந்து விசாரிக்கும்போது தான் தெரிவதாகும். அவ்வாறன்றித் 'தனக்குத் தானும் அடிமை அல்லன்,' என்னும் போது, பிறருக்கு அடிமை அல்லன் என்பது விளக்கமாய்ப் புலப்படுமன்றே?

பெருமாளுடைய திருமஞ்சனக் காலத்தில் அப்பரமபுருஷனைப் பட்டர் சேவித்த போது, அவருக்கு ஒரு தத்துவார்த்தம் மனத்தில் தோன்ற, அதை வினு விடை முறையில் அமைத்துப் பேசுகிறுர். அவ்விஷயம் இங்கு இயம்புவது மிக்க பொருத்தமாயிருக்குமாத லின், அதைக் குறிப்பிப்போம் :

" த்வம் மே²ஹம்மே குதஸ்தத் ததபிகுதஃ
இதம்வேதமூலப்ரமாணுத்
ஏதச்சாநாதிஸித்தவிபவாத் ஸோபி ஸாக்ரோசஏவ ।
க்வாக்ரோசஃ க்ஸ்ய கீதாதிஷு மம விதிதஃ
கோத்ரஸாக்ஷீ ஸுதீஃ ஸ்யாத்
ஹந்த த்வத்பக்ஷபாதீ ஸஇதி ந்ருகலஹே ம்ருக்யமத்யஸ்தவத்வம் ॥ "

பகவான், சேதனனைப் பார்த்து, 'நீ எனக்கு அடிமைப்பட்ட வன்' என்றான்.

சேதனன், பகவானே, நான் எனக்கு அடிமைப்பட்டவனே அல்லாமல், உமக்கு அடிமைப்பட்டவன் அல்லன் என்முன்.

பகவான் : இதை நீ எப்படி உண்மைப்படுத்துவாய் ?

சேதனன் : யான் உமக்கு அடிமை என்பதை நீர் எவ்வாறு உண்மைப்படுத்துவீர் ?

பகவான் : என் பட்சத்தை, வேதங்கள் யாவற்றிற்கும் மூல மாயிருக்கும் பிரணவத்தால் உண்மைப்படுத்துவேன்.

சேதனன் : என்னுடைய பட்சத்தை அநாதியாயுள்ள அனுப வத்தினுல் உண்மைப்படுத்துவேன்.

பகவான் : நீ சொல்லும் அனுபவத்திற்குத் தடை ஏற்பட் டுள்ளது.

சேதனன் : எங்கே யாருடைய தடை ஏற்பட்டுள்ளது ?

பகவான் : கீதை முதலிய கிரந்தங்களில் என்னுடைய தடை ஏற்பட்டுள்ளது யாவரும் அறிந்ததே.

சேதனன் : அதற்குச் சாட்சி யார் ?

பகவான் : அதற்கு ஞானி சாட்சியாவான்.

சேதனன் : ஐயோ ! ஞானியா ? அவன் உம்மிடம் பட்சபாத முள்ளவன் அல்லனே ?

இங்ஙனம் சேதனன் பகவானேடு வழக்குத் தொடுத்துக் கொண்டிருக்குங்கால், தான் கொண்ட வழக்கைச் சத்தியம் செய்து உண்மைப்படுத்துவது போன்றுள்ளது, திருமஞ்சன காலத்தில் பகவான் இருக்கும் இருப்பு என்பதைப் பட்டர் அனுப வித்துச் சொல்லுகிமுர்.

இதனுல், சேதனன் தனக்குத் தான் உரியன் அல்லன் என் பதைப் பகவானே நிலை நாட்டுகிமுன் என்பது ஆசாரியர் கருத்து என அறிகின்றோம்.

வினு : தனக்குத் தான் அடிமையல்லன் என்பது ஒருவாறு உகாரத்திலேயே கழிவுண்டிருக்க, திரும்பவும் நமப்பதத்தில் அதைக் கழித்துப் பேசுதற்கு அவசியம் இல்லையே !

விடை : அகாரத்தில் புணர்ந்து கெட்ட வேற்றுமையினுல் சீவன் பகவானுக்குச் சேஷப் பொருள் என்றும், அதற்குப் பின் புள்ள உகாரத்தால் சீவன் மற்றவருக்கு அடிமைப்பட்டவன்

அல்லன் என்றும் சொல்லியிருப்பினும், இறுதியிலுள்ள மகாரத்தால் சீவன் ஞானமுடையவன் என்று இயம்புகின்றமையின், "முற் கூறும் பொருள்களைக்காட்டிலும், இறுதியில் கூறும் பொருளே உறுதியுடையது," என்னும் முறையில், இந்த ஞானத்தினால் சுதந் தரத்தன்மை வாய்ந்தவன் சீவன் என்னும் பொருள் தேறி நிற் கிறது. ஆதலின், 'இவன் சுதந்தரனல்லன், இவன் சேஷப்பட்ட வனே' என்பதை நிலை நாட்டுதற்கு இந்நமப்பதம் அவசியம் வேண்டியிருக்கிறது.

இன்னும் இங்கு, 'பிரணவத்தில் சீவன் பாகவதர்க்கு அடிமை யென்று சொல்லப்பட்டுள்ளதன்றோ? அம்முறையில் தான் பாக வதனாயிருப்பின், பாகவதனாகிய தனக்கு, தான் அடிமைப்பட் டிருப்பின் குற்றம் என்னை?' என்னும் ஒரு வினா எழக்கூடும்! ஆனால், தான் பாகவதனாயிருப்பினும், தனக்குத் தான் அடிமைப் பட்டவன் அல்லன். ஏன்? அங்ஙனம் கருதின், அதில் சுதந் தரத்தன்மை கலந்துவிடுமாகையால், அவ்வெண்ணத்தை அறவே நீக்குதல் வேண்டும். இங்கு அதைக் கழித்தல் இன்றியமையாத தாகையால், நமஸ்ஸு வந்துள்ளது.

அவதாரிகை: 'இந்நமஸ்ஸால் உண்டாகும் பயன் யாது?' என வினவ, அதைப் பகருகிறார்:

மூலம்: 82. "இத்தால் விரோதியைக் கழிக்கிறது."

போருள்: இந்நமஸ்ஸால் விரோதியைக் கழிக்கிறது.

அவதாரிகை: 'அவ்விரோதி ஒன்று, பலவா?' என்ன, அவற்றை இயம்புகிறார்:

மூலம்: 83. "விரோதிதான் மூன்று."

போருள்: அவ்விரோதிகள் மூன்றாகும்.

அவதாரிகை: 'அம்மூன்றும் எவை'? என்ன, அவற்றைக் கூறுகிறார்.

மூலம்: 84. "அதாவது—ஸ்வரூபவிரோதியும், உபாய விரோதியும், ப்ராப்யவிரோதியும்."

போருள்: இதனால், பிரணவத்தில் சொன்ன பகவானுக்கே அடிமைப்பட்டிருக்கையாகிற சொரூபத்திற்கு விரோதியும், இந் நமப்பதத்தில் கிடைத்த பொருளாகிய உபாயத்திற்கு விரோதியும், நாராயண பதத்தில் சொல்லும் பலத்திற்கு விரோதியும் என

விரோதிகள் மூன்ருகும். இம்முறையில் இந்நமப்பதம் உபாய விரோதியைக் கழிக்கிறது மட்டுமேயன்றி, தனக்கு முன்னும் பின்னும் உள்ள பதங்களில் ஏற்படும் ஸ்வரூபம் பிராப்பியம் இவைகளின் விரோதிகளேயும் கழிக்கக் கூடியதாயிருக்கிறது.

அவதாரிகை : 'இம்மூன்று விரோதிகளும் கழிகை என்பது எப்படி ?' என்ன, அவற்றை முறையே மேல் மூன்று வாக்கியங் களினல் அருளிச்செய்கிருர் :

**மூலம் : 85. (1) "ஸ்வரூபவிரோதி கழிகையாவது— 'யானே நீ ; என்னுடைமையும் நீயே,' என்றி ருக்கை ; (2) உபாயவிரோதி கழிகையாவது—'களே வாய்துன்பங் களேயாதொழிவாய் களேகண் மற்றி லேன்,' என்றிருக்கை ; (3) ப்ராப்யவிரோதி கழி கையாவது—'மற்றை நங்காமங்கள் மாற்று' என் றிருக்கை."**

பொருள் : (1) சொரூபவிரோதி கழிகையாவது : சொரூபம் : ஈசுவரனுக்கே தொண்டு பூண்டிருத்தல். விரோதி : 'யான் எனக்கு உரியன்' என நினைக்கும் அகங்காரமும், 'இப்பொருள் என்னுடை யது' என எண்ணும் மமகாரமும் ஆகிய இரண்டும். கழிகை : நீங்குதல். "யானே நீ; என்னுடைமையும் நீயே," என்பது ஆழ்வார் வாக்கு. இதில் முதலில் உள்ள 'யானே நீ,' என்னும் பிரிவை, 'யான் நீயே' எனப் பதங்களேப் பிரித்துக் கூட்டிக்கொள்ள வேண் டும். அப்போது, 'யானும் பகவானுக்கே உரிமைப்பட்டவன்' என்றும், 'என்னுடைமையும் நீயே' என்னும் பிரிவிற்கு 'என் னுடைமையும் பகவானுக்கே உரிமைப்பட்டது' என்றும் பொருள் கிடைக்கும். இங்ஙனம் நினைத்தலே விரோதி கழிகையாகும்.

(2) உபாயவிரோதி கழிகையாவது : உபாயம் : ஈசுவரன். விரோதி : துன்பத்தைப் போக்கி இன்பத்தை அடைவிக்கும் விரகில் (ஸாதனத்தில்) தொடர்புற்றிருத்தல். கழிகை : முற்குறிப்பித்த "களேவாய் துன்பம் களேயாதொழிவாய், களேகண் மற்றிலேன்," என்னும் பாசுரத்தின்படி வேறு விரகில் (ஸாதனத்தில்) தொடர்பற் றிருத்தல்.

(3) பிராப்பிய விரோதி கழிகையாவது: பிராப்பியம்: சேதனன் ஈசுவரனுக்குத் தொண்டு புரியுங்கால், அவன் முக வுல்லாசத்தின்பொருட்டே அதைச் செய்தல். விரோதி: பகவான் தொண்டைத் தனக்கு இன்பமூட்டுதற்பொருட்டுப் புரிதல். கழிகை: "மற்றை நங்காமங்கள் மாற்று," என்னும் ஆண்டாள் பாசுரத்தின்படி, பரமபுருஷனுடைய உவப்பிற்கு மாறாய் உள்ள விருப்பங்களைப் போக்க வேண்டுமென்றிருத்தல்.

**விளக்கம் : வினா :** நீங்கள் கூறிய 'யானே நீ; என்னுடைமையும் நீயே,' என்னும் ஆழ்வார் பாசுரத்தில், ஈசுவரனும், சித்து அசித்தாகிற உலகமும் ஒன்று என்னும் கருத்துத் தோன்றுகிறதே! அங்ஙனமிருக்க, இவ்வாக்கியத்தைச் சொரூப விரோதிகழிகை என்பதற்குப் பிரமாணமாகக் கொள்வது யாங்ஙனம்?

**விடை :** "யானே என்னை யறிகி லாதே
யானே யென்றன தேயென் றிருந்தேன்
யானே நீஎன் னுடைமையும் நீயே
வானே யேத்தும்எம் வானவ ரேறே!"

என்பது ஆழ்வாருடைய பாசுரம். இதன் பொருள் முழுவதையும் கூறின் உங்கள் ஐயம் நீங்கிவிடும்.

பாசுரத்தின் பொருள்: ஆன்மாவின் சொரூப ஞானத்தைத் தெள்ளிதின் உணர்ந்த பரமபத வாசிகளான நித்தியரும் முத்தரும், உன்னுடைய செல்வத்தைப் போற்றவும், நீ அவர்கட்குச் சேஷியென்னும் பெருமை தோன்றவும் இருப்பவனே, யான் என் ஆன்மாவைப் பற்றிய உண்மை ஞானத்தைத் தெரிந்துகொள்ளாத போது, என்னைச் சுதந்தரனாகவும், என்னை ஒழிந்த மற்றப் பொருள்களை என்னுடைமைகளாகவும் எண்ணி, இவ்வித அகங்கார மமகாரங்களுடன் இருந்தேன். ஆனால், இப்போது உன்னால் மயர்வற மதிநலம் அருளப் பெற்ற யான், உண்மையை நோக்கின், 'யானும் நீயே; என்னுடைமையும் நீயே,' என்னுமாறு, உலகம் யாவும் உன்னைச் சார்ந்தனவே என்பதை நன்கு தெளிந்தேன்," எனபது இதில் ஆழ்வார் தம் சேஷத்துவ ஞானந்தோன்ற அருளிச் செய்கிறார்.

இப்பாசுரத்தின் நான்காம் அடியை நோக்குங்கால், மோட்ச தசையிலும் சீவான்மா பரமான்மா ஆகிய இரண்டும் வெவ்வேறாக

உள்ளன என்றும், சீவான்மா துதிப்பவனும், பரமான்மா துதிக்கப்படுபவனுமிருக்கின்றனர் என்றும் தெள்ளிதின் புலப்படுகின்றமையின், 'யானே நீ; என்னுடைமையும் நீயே,' என்பதற்கு யான் என்னும் ஆன்மாவும், என்னுடைமை என்னும் அசித்தும் ஆகிய இரண்டும், நீ என்னும் பரமான்மாவும் ஒரே பொருள் எனத் தோன்றுதல் யாங்ஙனம்? உடலும் உயிரும் வேவ்வேருய் இருப்பினும், இரண்டையும் ஒன்று எனக் கூறும் வழக்கின்படி, 'யானும் நீ; என்னுடைமையும் நீ,' என்னும் சொற்றொடரைக் கொள்ளுதல் வேண்டும். இஃதே ஆழ்வார் கருத்துமாகும்.

வினு: எனக்கு உபாயத்தைப்பற்றி ஓர் ஐயம் தோன்றியுள்ளது! ஒருவன் தன் முயற்சியினுல் ஒரு காரியத்தை முடிக்க எண்ணுகிருன்; அதன்பொருட்டு அவன் ஓர் உபாயத்தை மேற்கொள்ளுகிருன். அவ்வுபாயத்திற்குப் பல குறைகள் இருக்கக் கூடும்! அக்குறைகளினுல் அவன் மேற்கொண்ட காரியம் முடியாமல் தடைபடுதற்குச் சில விரோதிகள் ஏற்படலாம். இஃது உலக இயல்பு. அங்ஙனமன்றி, இவனே தான் மோட்ச பலத்தை அடைதற்பொருட்டுப் பகவானுகிற உபாயத்தைப் பற்றியுள்ளான். பகவானே, முதலும் அழிவுமற்றவனும், உயரிய ஞானமும் சத்தியும் வாய்ந்தவனுமிருக்கிருன். இம்முறையில் இதற்கு விரோதம் ஏற்படுதல் எவ்வாறு? இது தடைபடுதல் தான் எங்ஙனம் கூடும்?

விடை: ஸோமாசியாண்டான் என்பவர் கூறும், "பகவத் ப்ரவ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்திঃ ப்ரபத்திঃ" என்னும் வாக்கியத்தை இதற்கு விடையாகக் கொள்ளலாம்.

ஒரு சேதனனுக்குக் குற்றங்களைப் போக்கி, நன்மையை உண்டாக்குதற்காக, தஞ்சமாகிய தந்தையாயிருக்கும் பரமபுருஷன் தானே முயல்கின்ருன். இதற்குச் சீவன் இசைந்திருப்பின், பகவானுடைய அம்முயற்சி பயனளிக்கிறது. அங்ஙனமன்றி, 'நாம் ஒரு காரியத்தைச் செய்தால்தான் நன்மை பெற முடியும்' என்னும் பிரவிருத்தி வாசனையில் ஆழ்ந்து கிடக்கும் அவன், தன் துன்பம் போய் இன்பம் பெறுதற்கு விரகாய் ஒரு தருமத்தைச் செய்யப் புகும் போது பகவான், அவன் செல்லும் வழியில் சென்று நன்மை அடையட்டும் எனக் கருதி விலகுகிருன். இம்முறையில் பகவானுடைய முயற்சிக்குச் சேதனனுடைய முயற்சி தடையாயிருக்கிறதன்றே?

அவ்வாறு தடையாயிருக்கும் முயற்சியை, சீவன் மேற்கொள்ளாமல் இருக்கையே பிரபத்தி என்பதை மேற்கூறிய ஸோமாசியாண்டான் வாக்கியம் தெரிவிக்கின்றது. இதை நோக்குங்கால், ஈசுவரனே, இவன் நலத்திற்கு உபாயமாயுள்ளான் என்றும், தன் நலத்திற்குத் தான் முயலல் அதற்கு விரோதியாயுள்ளது என்றும் தெளியப்படும். இதைத்தான் ஆழ்வார், "களைவாய் துன்பம் களையா தொழிவாய் களைகண் மற்றிலேன்," என்னும் பாசுரத்தினுல் தெரிவிக்கிருர்.

வினு: சேதனருக்கு, அஞ்ஞானம், புண்ணிய பாவம், சரீரம் இவைகள் விரோதிகள் என்கின்றேம்; இவைகள் அறவே கழிந்த நிலையில் தானே, சேதனனுக்குப் பகவானைப் பெற்றுப் பூரணமாய் அனுபவித்தலும், அவனுடைய முகமலர்த்திக் குறுப்பாய் அடிமை செய்தலும் கிடைக்கும்? அவ்வுயர்நிலையிலும் இவனுக்கு விரோதிகள் ஏற்படக் கூடுமா? நீங்கள் சொன்னவைதாம் விரோதிகள் ஆகுமா?

ஆன்மாவுக்குள்ள பாரதந்திரியம், சொரூபபாரதந்திரியம், உபாயபாரதந்திரியம், பலபாரதந்திரியம் என மூன்ருகும்.

சொரூப பாரதந்திரியம்: பகவான் இட்ட வழக்காய் இருத்தல். ஒரு விநாடிமட்டும் நிலைத்திருப்பது ஸத்தை என்றும், ஒரு விநாடிக்குமேல் இரண்டு விநாடிகளோ, பல ஆண்டுகளோ, காலதத்துவம் உள்ள வரையுமோ நிலைத்திருப்பது ஸ்திதி என்றும் சொல்லப்படுகின்றன. மேற்கூறிய சீவனுடைய ஸத்தாஸ்திகளும், முயற்சி (பிரவிருத்தி), முயற்சியின்மை (நிவிருத்தி)களும் எந்தப் பரமபுருஷனுக்கு அதீனங்களாயிருக்கின்றனவோ, அவனுக்கு இவன் பரதந்திரப் பொருளாவான். அவ்வாறு பரதந்திரனுயிருத்தலே சீவனுக்கு மேற்குறித்த சொரூப பாரதந்திரியமாகும்.

உபாய பாரதந்திரியம்: இது கேவல பாரதந்திரியம் என்றும், அத்தியந்த பாரதந்திரியம் என்றும் இருவகைப்படும். கேவல பாரதந்திரியம் என்பது, பத்தனுடைய பாரதந்திரியம். பகவானுடைய கட்டளையைப் பின்பற்றியே, அவனுல் செய் எனக் கட்டளையிடப்பட்ட பத்தியை அவனுக்கு வசப்பட்டிருந்து, அதைக் கடைப்பிடித்து (ஆசிரியித்து)ச் செல்லுகிற பத்தனுடைய நிலையே யாகும்.

அத்தியந்த பாரதந்திரியமென்பது, பிரபன்னருடைய பாரதந் திரியம்: சரீரம் சீவன் என்னும் இரு பொருள்களுள், சரீரத்தின் குற்றங்களை (தோஷங்களை)ப் போக்கி அதற்கு நன்மைகளைத் தேடு கிறவன் சீவனே ஆகிறது போல, பரமான்மா, அவன் சரீரமாகிய சீவான்மா ஆகிய இரு பொருள்களுள், சீவான்மாவின் குற்றங் களைப் போக்கி நன்மைகளைத் தேடுகின்றவன் பரமான்மாவே ஆவான். ஆதலின், சீவன் எல்லாப் பரத்தையும் அவனிடமே வைத்து அவனுடைய அருளைப் பார்த்திருத்தலே இவனுடைய அத்தி யந்த பாரதந்திரியமாகும். இந்நிலை வானத்தையே நோக்கி நிற்கும் சாதகப் பறவையின் நிலையெனக் கொள்க.

பல பாரதந்திரியம்: இதுவும் கேவல பாரதந்திரியம், அத் யந்த பாரதந்திரியம் என இரு வகைப்படும். சீவான்மாவும் ஞான முடைய பொருள், பரமான்மாவும் ஞானமுடைய பொருள். இவை இரண்டும் கலக்கும் போது, இவ்விரு பொருள்களுக்கும் இன்பம் ஏற்படுவது இயல்பு. அவ்வமயம், சீவன், "இதில் நமக்கும் இன்பம் உண்டாயினும், நம்முடைய இன்பம் அப்பிரதானம்" என்றும், "இதில் பரமான்மாவிற்கு உண்டாகும் இன்பமே பிரதானம்" என்றும் நினைத்தல் கேவல பாரதந்திரியம். அங்ஙன மன்றி, சீவன், தனக்குண்டாகும் இன்பத்தை அப்பிரதானமாக வும் கருதாமல், அஃது அவனுக்குண்டாகும் இன்பத்திற்கு மேன் மேலும் சுவையையே ஊட்டுதற்கு உறுப்பு என நினைத்தலே அத்தி யந்த பாரதந்திரியமாகும்.

முடிவு: அஞ்ஞானம், புண்ணிய பாவங்கள், சரீரம் இவை கள் விலகிய தசையில், இக்குற்றங்கள் ஏற்படக் காரணம் இல்லை எனக் கூறலாம். ஆனல், தனக்கு ஏற்படும் இன்பத்தை அப்பிர தானமாகவும், பரம புருஷனுக்கு ஏற்படும் இன்பத்தைப் பிரதான மாகவும் கருதுதல், பல தசையில் அத்தியந்த பாரதந்திரிய நிலையி லிருக்கும் இவனுக்கும் குற்றமேயாகும். இக்கருத்தையே ஆண் டாள், "மற்றைநங் காமங்கள் மாற்று," என்பதில் தெரிவிக்கிருர்.

கண்ணன் திவ்விய சிம்மாஸனத்தில் வீற்றிருக்குங்கால் அவனிடம் சென்ற ஆயர் மகளிர், இப்பாசுரத்தைக் கூறியதாய் உள்ளது. இது, கோபியர் நிலையை அடைந்து (அநுசரித்து) பேசிய ஆண்டாளின் வாக்காகும். இச்சொற்றொடருக்கு, 'எல்லா

உறவு முறையும் கண்ணனே' என நினைத்திருந்த கோபியர் நிலைக்குச் சேரவும், பூமிப்பிராட்டியின் அமிசமாய், பத்தியில் ஆழ்வார்களைக்காட்டிலும், விஞ்சி நின்ற ஆண்டாள் நிலைக்குச் சேரவும் பொருளை ஆராய்ந்து கூறுவதே பொருத்தமாகும்.

ஏனெனில், இவ்வாக்கியத்தைக் கேட்கும் போது, பொருட் செல்வம் முதலியவற்றிலுள்ள விருப்பத்தைப் போக்கியருள வேண்டும் என இறைவனை இறைஞ்சுவதாய்த் தோன்றும். இவ்வாக்கியத்தை இயம்பிய கோபிகளோ, முன்னர்ச் செப்பியவாறு விட முடியாத இவ்வுலகப் பொருள்கள் யாவற்றையும் அறவே விட்டு, கண்ணன் சரண கமலங்களே எல்லாம் என நினைத்தவர்கள்.

ஆண்டாளை நோக்கின், இவள் பூமிப்பிராட்டியின் அவதாரம் என்பதைக் குருபரம்பரைகளும், இவள் பெரிய பிராட்டியாரைப் போன்றே வேறொரு கமலையாயிருக்கின்றாள் என்பதைக் "கமலா மிவாங்யாம்" என்னும் தேசிகருடைய திருவாக்கும் தெரிவிக்கின்றன. இத்தகைய இவள், தன்னை வந்தடைந்தவர்களுக்கெல்லாம் செல்வத்தைக் கொடுக்கும் தெய்வமாயிருத்தலின், இவள் கண்ணனிடத்தில் செல்வத்தை விரும்பினாள் என இயம்புதல் பொருந்தாதன்றோ? இன்னும் இவள், "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்," என ஊன்றிய வைராக்கியத்துடன் வாழ்ந்தவள். இம்முறையில் வாழ்க்கை நடத்தும் கோபிகைகளும் ஆண்டாளும், பரமான்மாவிற்கு ஏற்படும் இன்பம் பிரதானமென்றும், தமக்கு ஏற்படும் இன்பம் அப்பிரதானமென்றும் நினைக்கும் நினைப்புத் தம் நிலைக்கு விரோதியென்றும், அவ்விரோதியைக் கழித்துத் தரவேண்டுமென்றும் இறைவனை இறைஞ்சுகின்றார்கள்," என்றுதான் எண்ணுதல் வேண்டும்.

வினா: முன் சூத்திரத்தில், இந்நமப்பதம் தன்னிடத்தில் நின்று உபாய விரோதியைக் கழிக்கிறது மட்டுமேயன்றி, தனக்கு முன்னும் பின்னும் உள்ள, **ஓம் நாராயணாய** என்னும் பதங்களுடன் சேர்ந்து அவற்றிலுள்ள விரோதிகளையும் கழிக்கிறது என்றீரே! அஃதெங்ஙனம்?

விடை: காகத்திற்குக் கண் இந்திரியம் ஒன்றாயிருப்பினும், அவ்வோர் இந்திரியமே இரு விழிகளிலும் சென்று பார்வையை உண்டாக்குவது காகாக்ஷி நியாயம் எனப்படும். அங்ஙனமே, பிரண

வத்திற்கும் நாராயண பதத்திற்கும் நடுவில் நிற்கும் இந்த நமஸ்ஸு, தனக்கு முன்னும் பின்னும் உள்ள அந்தந்தப் பதங்களிலும் சம்பந்தப்பட்டு, அவற்றிலுள்ள சொரூப விரோதி பல விரோதிகளைக் கழித்துப் பேசுவதாகக் கொள்ள வேண்டும்.

அவதாரிகை: இங்ஙனம் சொரூபம், உபாயம், புருஷார்த்தம் இம்மூன்றிற்கும் அகங்கார மமகாரங்கள் விரோதிகளாயிருத்தலின், அவற்றின் கொடுமையையும், அவற்றை நீக்குவதால் உண்டாகும் நன்மையையும் செப்புகிறார்:

மூலம்: 86. "மஃ என்கை ஸ்வரூப நாசம். நமஃ என்கை ஸ்வரூபோஜ்ஜீவநம்."

இச்சூத்திரத்திற்கு வினா விடையாகவே பொருள் கூற வேண்டியிருக்கிறது.

வினா: 'சொரூப நாசம்' என்பது என்ன?

விடை: சீவான்மாவின் அழிவே சொரூப நாசம் எனப்படும்.

வினா: சீவான்மா முக்காலத்திலும் உள்ள அழிவற்ற பொருளாயிருக்க, அதற்கு அழிவு எங்ஙனம் உண்டாகும்?

விடை: எங்ஙனம் சரீரம், பிராணன் இருக்குங்கால் சத்தைப் பெற்றும், அஃதில்லாத போது சத்தை அற்றும் காணப்படுகின்றதோ, அங்ஙனமே சீவனும் பரமான்மாவின் தொடர்பினால் சத்தைப் பெற்றும், அஃதில்லாத போது சத்தை அற்றும் உள்ளது. அது சாத்திரத்தினால் அறியப்படுகிறது.

வினா: பரமான்மாவின் தொடர்பற்ற பொருளும் உண்டோ?

விடை: பொதுவாக, பகவானுக்கு எல்லாப் பொருள்களிலும் தொடர்பு உண்டு. அத்தொடர்பினாலேயே அப்பொருள்கள் அழியாமலிருக்கின்றன. இன்றேல் அவை இருக்கவே முடியாது. ஆனால், அத்தகைய தொடர்பைப்பற்றி இங்குக் கூறப்படவில்லை.

வினா: பகவானின் அத்தகைய தொடர்பன்று இஃது என்னில், நீங்கள் சொல்வது எத்தகைய தொடர்பு?

விடை: அத்வேஷம் முதல் கைங்கரியம் இறுதியாக உள்ள நன்மைகளின் தொடர்பு, சீவனிடத்தில் பொதுவாக இருக்கும் தொடர்பு போலன்றி, வேறுபட்டதாய் இருக்கிறது. இதுதான்

இங்குப் பரமான்மாவின் தொடர்பு என்று சொல்லப்படுகிறது. எங்ஙனம் ஒரு கோடீசுவரன் முன்னிலையில், பொருள் சிறிதுமற்ற வறிஞன் இருப்பினும், அவன் இல்லாதவனுகவே எண்ணப்படு கிருனே, அங்ஙனமே இத்தொடர்பு இல்லாத போது, ஆன்மா இருப்பினும், இல்லாததாகவே கருதப்படும். இஃது ஒரு விதமான அழிவு. இந்த அழிவுதான் இங்குச் சொரூப நாசம் எனக் குறிக்கப் படுகிறது.

வினு: நீர் சொல்லியவற்ருல், சொரூப நாசம் என்பது இஃது என அறிந்தோம். ஆனல், அச்சொரூப நாசமும் மஃ என்னும் சொல்லும் ஒன்ரு?

விடை: அன்று.

வினு: அங்ஙனமாயின், மஃ என்னும் சொல்லும் சொரூப நாசம் என்பதும் ஒன்றே என்னுமாறு வழங்குவது யாங்ஙனம் பொருந்தும்?

விடை: சீவனுக்கு இப்பரமான்மாவின் தொடர்பை அகற்று கிறதற்கு அடிகோலிகளாய் உள்ளவை அகங்கார மமகாரங்கள். இம்முறையில் சொரூப நாசத்திற்குக் காரணம் இவ்வகங்கார மமகாரங்களேயாகும். இவற்றைக் குறிக்கும் சொல் மஃ என்பது. ஆதலின், "மஃ என்கை சொரூப நாசம்" என்கிருர் லோகாசாரியர். சொரூப நாசம் என்னும் சொல், மேற்குறித்த சீவனுடைய அழி வையும், அதற்கேதுவாகிய அகங்கார மமகாரங்களையுங் காட்டி அவற்றைத் தெரிவிக்கும் சொல் மட்டும் செல்லுகிறது. ஆதலின், அச்சொல்லும் மகாரமும் ஒன்று என்பதைத் தெரிவிக்கிறது.

வினுவில் தேறிய (ஸாரமான) பொருள்: மஃ என்கை மஃ என்னும் சொல்லையே குறிக்கும். சொரூப நாசம் என்பதோ, மேற் கூறிய சீவான்மாவின் அழிவைக் குறிக்கும். இம்முறையில், இவ்வழிவு இம்மஃ என்னும் சொல்லும் எவ்வாறு ஒன்று ஆகும்? என்பது.

விடையில் தேறிய (ஸாரமான) பொருள்: 'ஊர் அடங்கிற்று' என்னும் சொற்ருெடரில் உள்ள ஊர் என்பது ஒரு சொல், அடங் கிற்று என்பது மற்ருெரு சொல். இதில் ஊர் என்னும் சொல் லிற்கு ஊரே என்னும் பொருளிருப்பின், அடங்கிற்று என்பதோடு

சேராது. ஆதலின், ஊர் என்னும் சொல்லை ஆகுபெயராய்க் கொண்டு, 'ஊரில் உள்ள மக்கள்' எனப் பொருள் கொள்ளும் போது, அஃது எவ்வாறு பொருந்துகிறதோ, அவ்வாறே இங்கும், "மஃ என்கை சொரூப நாசம்" என்னும் முற்கூற்றில் உள்ள சொரூப நாசம் என்பது சீவான்மாவின் அழிவையே குறிக்கும் போது, மஃ என்னும் சொல் சேராது. ஆதலின், சொரூப நாசம் என்னும் சத்தத்தை ஆகுபெயராகக் கொண்டு, சீவான்மாவின் அழிவிற்கு ஏதுவான அகங்கார மமகாரங்களைக் காட்டும் சொல் என்னும் வரையில் பொருள் கொள்ள வேண்டியிருக்கிறது. அச்சொல் மகாரமாகையினால், இவ்வாக்கியம் பொருந்திவிடுகிறது. இதுவே விடையின் தேறிய பொருளாகும்.

இது வரையும் அகங்கார மமகாரங்களின் குரூரத்தன்மை வெளியிடப்பட்டது. "நமஃ என்கை சொரூப உச்சீவனம்" என்னும் இச்சூத்திரத்தின் பிற்கூறு, அவ்வகங்கார மமகாரங்கள் விலகியபோது, ஆன்மாவிற்கு ஏற்படும் நலத்தைச் சொல்லுகிறது.

வினா: இச்சொற்றொடர் எப்பொருளைக் குறிக்கும்?

விடை: இந்தப் பிற்கூற்றில் உள்ள சொரூப சத்தம் சீவான்மாவையும், உச்சீவன சத்தம் உயிரோடுங் கூடி வாழ்ந்துகொண்டிருக்கும் சீவான்மாவின் நிலையையும் தெரிவிக்கும்.

வினா: சீவான்மா உயிரன்றோ? இதற்கு வேறோர் உயிர் என்பது ஏது?

விடை: ஆன்மாவிற்கு உயிரென்பது பரமான்மா. அப்பரமான்மாவோடு சேர்ந்து வாழ்தலே, சீவான்மாவிற்கு உயிரோடுங் கூடிய வாழ்க்கையாகும்.

வினா: அவ்வாழ்வு சீவான்மாவிற்கு எப்போது சித்திக்கிறது?

விடை: முன்னர்க் கூறியவாறு அத்வேஷம் தொடங்கி அடிமை புரியும் போது ஏற்படும் பகவானுடைய முக உல்லாசம் வரையிலுமுள்ள நன்மைகள் சீவான்மாவினிடத்தில் உண்டாகும் போது, அப்பரமான்மாவாகிய உயிரோடுங் கூடி வாழும் வாழ்வு சித்திக்கிறது.

வினா: சீவான்மாவிற்கு அத்வேஷம் முதலியன எப்போது உண்டாகும்?

விடை: இவைகள் அகங்கார மமகாரங்கள் அற்ற நிலையி லேயே ஏற்படும். அவ்வகங்கார மமகாரங்கள் அற்ற நிலையைச் சொல்லும் சொல்லே நமஃ என்பது. இதுவே பிற்கூற்றின் பொருள். இது நிற்க. "மஃ என்கை சொரூப நாசம்" என்னும் முற்கூற்றிற்குக் கூறியதைப் போன்றே, இங்கும் பரமான்மா வாகிற உயிருடன் கூடி வாழ்ந்துகொண்டிருக்கும் இருப்பைச் சொல்லும் சொரூப உச்சீவனம் என்னும் சொல்லை, ஆகுபெய ராய்க் கொண்டு, அச்சொல் அகங்கார மமகாரங்கள் அற்ற தன் மையைக் காட்டி, அவையற்ற நிலையைக் குறிக்கும் சொல் என்னும் பொருள் வரையும் அது செல்லுகிறது என இயம்புதல் வேண்டும். இதுவே "நமஃ" என்னும் சொல் ஆகும் என்பது நன்கு விளங்கும்.

அகங்கார மமகாரங்கள் அற்ற நிலையிலேயே மேற் கூறிய பரமான்மாவின் தொடர்பு சீவான்மாவிற்குச் சித்திப்பதால், நல்ல வாழ்வு கைகூடும் என்னும் கருத்தை நோக்கும் போது, அவ் வகங்கார மமகாரங்கள் அற்ற நிலையில் உண்டாகும் நன்மை இன்னது என்பது தெளிவாகும்.

விளக்கம்: வினு: அகங்கார மமகாரங்களுடைய குரூரத் தன்மைக்கும், அவை நீங்கிய போது சீவான்மாவிற்கு உண்டாகும் நன்மைக்கும் ஆதாரம் உண்டோ?

விடை: உண்டு. சேதனனுக்கு எப்பொழுது தன்னிடத்தி லும், தன் பொருளிடத்திலும் மமகாரம் நடையாடுகிறதோ, அப் பொழுது மம என்னும் இரண்டு எழுத்துகளும் அகங்கார மமகாரங் களுக்கு வாசகமாயிருக்கும். இவ்விஷயத்தை அஹிர்புத்ந்ய ஸம் ஹிதையில் உள்ள,

"சேதநஸ்ய யதாமம்யம் ஸ்வஸ்மிந் ஸ்வீயேசவஸ்துநி |
மம இத்யக்ஷர த்வந்த்வம் ததாமம்யஸ்ய வாசகம் ||"

என்னும் சுலோகம் தெரிவிக்கிறது.

இங்கு மம என்னும் இரண்டு அட்சரங்கள் ஆன்மாவை அழிப் பன. நமம என்னும் மூன்று அட்சரங்களோ, ஆன்மாவை நிலை யாய் வாழச் செய்வன. "பரப்பிருமமான எம்பெருமான் சேதன னுடைய உச்சீவனத்திற்கும் கிருஷி பண்ணுவதால், அக்கிருஷி

பலித்துச் சேதனன் 'நமம' என்ற ஞானத்தைப் பெறுவது எம்பெருமானுக்கு அடையத்தக்க பயனுயிருக்கும்," என்னும் கருத்தைக் கொண்ட பாரத வசனமும் நோக்கத்தக்கது :

"த்வ்யக்ஷரஸ்து பவேந்ம்ருத்யு: த்ர்யக்ஷரம் ப்ரஹ்மண: பதம் |
மமேதி த்வ்யக்ஷரோ ம்ருத்யு: நமமேதிச சாச்வதம் ||"

அவதாரிகை : இந்நமப்பதம், முற்கூறியவாறு சொரூபத்திற்கும், உபாயத்திற்கும், பலத்திற்கும் பகைகளாகிற அகங்கார மமகாரங்களைக் கழித்தல் மட்டுமேயன்றி, சொரூபம் முதலிய மூன்றையும் காட்டும் என்கிறார்.

**மூலம் : 87. "இதுதான்—ஸ்வரூபத்தையும், உபாயத்தையும், பலத்தையும் காட்டும்."**

பொருள் : இந்நமப்பதம், பாகவத சேஷத்துவம் வரையும் உள்ள பகவச்சேஷத்துவத்தையும், பகவானுகிற உபாயத்தையும், அவன் முக உல்லாசத்திற்கெனவே செய்யும் அடிமைத் தொழிலாகிற பலத்தையும் காட்டும்.

அவதாரிகை : இப்பொருளைப் பின் மூன்று வாக்கியங்களில் எடுத்துரைக்கிறார் :

**மூலம் : 88. "'தொலைவில்லி மங்கலந் தொழும்"[1] என்கையாலே ஸ்வரூபம் சொல்லிற்று; 'வேங்கடத்துறைவார்க்கு நம:"[2] என்கையாலே உபாயம் சொல்லிற்று; 'அந்திதொழும் சொல்"[3] என்கையாலே பலம் சொல்லிற்று."**

வினு : தொழும், நம: என்னும் இரு சொற்களும் ஒரே பொருளைக் குறிக்கும் சொற்கள்தாமே! அச்சொற்கள் சொரூபம், உபாயம், பலம் ஆகிய மூன்றையும் காட்டுதல் யாங்ஙனம்?

விடை : ஒரு சொல்லே இம்மூன்றையும் காட்டும் என்பதற்கு நம்மாழ்வாரின் பாசுரங்களே ஆதாரங்களாகும்.

குறிப்பு: 1. திருவாய்மொழி— 6 : 5 : 1.
2. ,, — 3 : 3 : 6.
3. ,, — 10 : 8 : 7.

வினா: பிரணவத்திலேயே, சீவன், பரம புருஷன் ஒருவனுக்கே அடிமை எனப் பொருள் கூறினீர். இந்நிலையில், இந்த சீவன், பகவானுடைய சம்பந்தம் பெற்ற பாகவதருக்கும் அடிமையாயிருக்கை என்பதும், அப்பிரணவத்திலேயே தேறிய பொருளாய்க் கிடைக்கும் எனத் தீர்மானிக்க வேண்டியிருக்கிறது. இம்முறையில், பிரணவத்தில் சொரூபம் சொல்லப்படுவதென்பது பொருந்தும். அச்சொரூபமே நமப் பதத்திலும் சொல்லப்படுவதென்பது எவ்வாறு பொருந்தும்? இவ்விஷயத்தில் ஆழ்வார் பாசுரங்கள்தாம் எவ்விதத்தில் ஆதாரங்களாகக் கூடும்?

விடை: பகவச்சேஷத்துவத்தைச் சொல்லும் பிரணவத்தில், பாகவத சேஷத்துவம் தோன்றும் என்பது ஒரு வகையில் உண்மையேயாயினும், அகங்கார மமகாரங்களாகிற பகைகள் கழிந்த இடத்தில்தானே அச்சேஷத்துவமாகிற சொரூபம் உள்ளபடி பிரகாசிப்பதாகும். அங்ஙனமாயின், அகங்காரமமகாரங்களாகிற விரோதிகள் கழிகின்ற இடமாகிற நமப்பதத்திலேயே அச்சொரூபம் நன்கு விளங்குமென்பது பொருத்தமுடையதன்றோ? ஆதலின், ‘துவளில் மாமணி மாடமோங்கு தொலைவில்லி மங்கலம் தொழும் இவளை’ என்னும் ஆழ்வார் பாசுரத்தை இதற்கு ஆதாரமாய்க் கொள்வதற்குத் தடையில்லை. அத்திருவாய்மொழி ஆழ்வாருடைய சொரூபத்தைத் தெரிவிக்கிறதென்பது பூர்வாசாரியர்களின் திருவுள்ளம். ‘தொலைவில்லி மங்கலம் தொழும் இவளை’ என்னும் இதற்கு, பரம புருஷன் அளவில்மட்டும் நில்லாமல், அவன் உகந்து கோவில் கொண்டிருக்கும் திவ்விய தேசம் வரையும் அடிமைப்பட்டிருக்கையே பொருளாகும் எனக் கொள்க, தொழும் என்னும் சொல் சொரூபமாகிற ஆழ்வார் நிலையைக் குறிக்கும் என்பதற்குக் குறைவில்லை.

வினா: நீங்கள் சொல்லியபடி அத்திருவாய்மொழி ஆழ்வார் படியைச் சொல்லுகின்றமையின், அங்குச் சொரூபம் சொல்லப்பட்டது என்பது பொருந்தும். அன்றியும், நமப்பதத்தில் உபாயம் சொல்லுகிறது என்பதை 26-ஆம் சூத்திரத்திலேயே அறிந்துள்ளோம். ஆனால், ‘வேங்கடத் துறைவார்க்கு நமః’ என ஆழ்வார் கூறிய இச்சொற்றொடர், பலப் பாரிப்பைத் தெரிவிக்கும் “ஒழிவில் காலமெல்லாம்” என்னும் திருவாய்மொழியிலன்றோ

உள்ளது? அங்ஙனமிருக்க, இஃது உபாயத்தைச் சொல்லுகிறது என்பதற்கு எப்படி ஆதாரமாகும்?

விடை: இப்பாசுரம் உபாயத்திற்கு ஆதாரமாகும் என்பதற்குத் தடையில்லை. இதற்கு இப்பாசுரமே தக்க சான்றாகும்:

"வேங்க டங்கள்மெய்ம் மேல்வினை முற்றவும்
தாங்கள் தங்கட்கு நல்லன வேசெய்வார்
வேங்க டத்துறை வார்க்கு நமவென்ன
லாம்க டமைவ துசுமந் தார்கட்கே."

ஒரு சேதனன் ஞானம் பிறந்து, பரம புருஷனை உபாயமாய்ப் பற்றுகிறான். அங்ஙனம் பற்றுகிறவனுடைய கன்மங்கள் இரு வகைப்படும். அவன் ஈசுவரனைப் பற்றுதற்கு முன்பே செய்த பாவங்கள் ஒரு வகை. ஈசுவரனைப் பற்றிய பின்பு செய்யும் பாவங்கள் ஒரு வகை. இவற்றுள் முன்னவை அழிந்துவிடுகின்றன. பின்னவை அவனை ஒட்டுகின்றனவில்லை. இதை, முந்திய பாவங்கள் தீயிலிட்ட தூசு போன்று மாய்ந்துவிடுகின்றன என்றும், பிந்திய பாவங்கள் தாமரையின் நீர் போன்று ஒட்டா என்றும் சுருதி சொல்லுகிறது. இக்கருத்தையே ஆண்டாள், "போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினிற் றூசாகும்," என வெளியிட்டுள்ளாள். ஆகவே, மேற்கூறப்பட்ட ஆழ்வார் பாசுரத்தின் முதலடிக்கு, எம்பெருமானார், "கடங்கள் வேம்" என்பது, கடன்போல அனுபவித்தே ஒழிக்க வேண்டிய புண்ணிய பாவங்கள் அழியும் என்பதையும், "மேல் வினை முற்றவும் சாரா" என்பது, ஈசுவரனைப்பற்றிய பின்பு உண்டாகும் வினைகள் முற்றும் ஒட்டா என்பதையும், 'மெய்' என்பது இவை உண்மை என்பதையும் தெரிவிக்கின்றன," என இயம்புகின்றார்.

வினா: இவ்வாறு முந்திய பாவம் ஒழிதற்கும், பிந்திய பாவம் ஒட்டாமலிருத்தற்கும் சீவான்மா ஏதேனும் செய்ய வேண்டுமா?

விடை: இதற்கு, ஆழ்வாரே மேற்கூறிய அதே பாசுரத்தின் பின் மூன்றடிகளில் சமாதானங் கூறுகிறார்: "மற்றவைகளில் விருப்பம் நீங்கி, அடிமைத் தொழிலிலேயே சுவை உடையவர்கள், தங்கள் நிலைக்குப் பொருத்தமான அடிமைத் தொழிலைப்

புரிவார்கள். தங்களைத் தாங்கள் எவ்வாறு நினைத்து இவ்வடிமைத் தொழிலைச் செய்கின்றார்கள் என்னில், 'அடியேன் திருவேங்கடத்தில் எப்போதும் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுக்கே உரியவன் அல்லாமல், எனக்கு நான் உரியவன் அல்லன்,' என்னும் தங்கள் பாரதந்திரிய நிலையை நினைத்தே அதைச் செய்கின்றார்கள். ஆயினும், இவர்கள் இந்நினைவின்றியே, எளிமை வாய்ந்ததும், தங்களுக்குப் பிராப்தமானதுமான 'நமஃ' என்னும் சொல்லைச் சொல்லளவில் சொல்லினும், அதை எம்பெருமான் தன் பெருமைக்குச் சேர, இவர்கள் பெருங்காரியம் செய்ததாய்க் கருதுகிறான். இம்முறையில் அச்சுமையைச் சுமந்தார்க்கு முன் வினையும், பின் வினையும் முன்னர்க் கூறியபடி முறையே அழிந்தும், ஒட்டாமலும் போய்விடும்.

நமஃ என்பதற்கு, துன்பம் நீங்கி இன்பம் பொருந்துதற்கு என்ன செய்ய வேண்டுமோ, அச்செயலில் தொடர்பற்றிருத்தல் என்பதே தேறிய பொருளாகும். இது பாரதந்திரிய நிலை. தன் பாரதந்திரிய நிலையை மனத்திருத்தி அதன்படி இருத்தலே இவன் அதிகாரி நிலைக்கு ஏற்பச் செய்ய வேண்டுவதாகும். அஃதன்றி, இவன் மேற்கொள்ள வேண்டிய உபாயம் வேறொன்றுமில்லை. அவ்வமயம் ஈசுவரனே இவனுக்கு உபாயப் பொருள் ஆகின்றான். இவ்விதத்தில் 'நமஃ' என்பது உபாயப் பொருளைத் தெரிவிக்கின்றது. இதுதான், "வேங்கடத் துறைவார்க்கு நமஃ" என்னும் இடத்தில் சொல்லப்படுகிறது. ஆக, "நமஃ" பதம், இவ்விடத்தில் உபாயத்தைக் காட்டும் என்பதற்கு ஆதாரமாய்க் கொள்வதற்குத் தடையொன்றில்லை.

வினா: 'நாராயணாய' என்னும் மூன்றாம் பதத்தில் அன்றோ பலம் சொல்லப்படுகிறது? அதை நமஃ பதம் எங்ஙனம் தெரிவிக்கும்? இதற்கு ஆழ்வார் பாசுரந்தான் எப்படி ஆதாரமாகும்?

விடை: எம்பெருமானுக்குத் தான் புரியும் கைங்கரியம், தன் நன்மைக்கென என்னும் எண்ணம் நீங்கினாலொழிய, அஃது ஈசுவரனுடைய முக மலர்த்திக்கே என்பது தேறாதாதலின், நமஃ என்னும் சொல் தன் நன்மைக்கென்பதைக் குலைத்து, அவ்வழியாலே ஈசுவரனுடைய முக மலர்த்திக்கே உறுப்பான கைங்கரியத்தைக் காட்டும் என்பது இங்குக் கருத்து. இதையே ஆழ்வார்

"அந்தி தொழும் சொல்" என்பதால் விளக்குகிறார். அந்தி என்பதைச் சொரூப ஞானம் முதிர்ந்த தசை எனக் கொள்ள வேண்டும். ஆழ்வாரும் இதைப் பத்தாம் பத்து எட்டாந் திருவாய்மொழி ஏழாவது பாசுரத்திலேயே பகர்ந்துள்ளார்.

அவதாரிகை: இந்நம: பதத்தில் பாகவத சேஷத்துவமும் தேறிய பொருளாய்க் கிடைக்கின்றமையின், அதை அருளிச் செய்கிறார்:

**மூலம்: 89. "'உற்றதும் உன்னடியார்க்கடிமை' என்கிறபடியே, இதிலே பாகவத சேஷத்துவமும் அநுஸந்தேயம்."**

பொருள்: 'உற்றதும் உன்னடியார்க் கடிமை' என்று திருமங்கை மன்னன் அருளிச் செய்கையாலே, இந்நமப்பதத்தில் பாகவத சேஷத்துவம் தேறிய பொருளென அறியத்தக்கது.

விளக்கம்: எட்டெழுத்தோடுங் கூடிய திருமந்திரம் கற்றதால் நான் பெற்ற பேறு, 'உன்னடியார்க்கு அடிமை' என்பதே ஆகும். இதை நோக்குங்கால், அகங்கார மமகாரங்கள் நீங்கி, பகவானுடைய சேஷத்துவம் உள்ளபடி பிரகாசிக்கும் இந்நமஸ்ஸில், அப்பகவானுடைய சேஷத்துவத்திற்கு எல்லை நிலமான பாகவத சேஷத்துவமும் அநுசந்திக்க வேண்டுமெனத் தேறுகிறது.

பகவச்சேஷத்துவத்திற்கு எல்லை நிலம் பாகவத சேஷத்துவம். பகவச்சேஷத்துவம் பிரணவத்தில் சொல்லப்பட்டிருப்பினும், அவற்றை மறைக்கும் அகங்கார மமகாரங்கள் கழிந்த இடத்திலேயே, அது நன்றாய் ஒளிருகிறது போன்று, அதன் எல்லை நிலமான பாகவத சேஷத்துவமும் இந்நமப்பதத்திலேயே தெள்ளிதின் ஒளிருகிறது என்பது லோகாசாரியர் கருத்து.

உலகில் தமக்குத் தொண்டு புரிவதைக்காட்டிலும், தம் குழந்தைகளுக்கு அன்புடன் தொழில் புரியும்போதல்லவா, பெற்றோர் மிக்க மகிழ்வடைகின்றனர்? அங்ஙனமே, ஈசுவரனும் தன் அடியார்க்குத் தொண்டு புரியும்போதே பூரணமான முகவுல்லாசத்தை அடைகிறான்.

ஆதலின், இதற்கு முன் கூறிய யாவும் நமஸ்ஸில் தோன்றும் மேற்பொருள்கள் என்றும், இப்பாகவத சேஷத்துவமே நமஸ்ஸில்

தோன்றும் உட்பொருள் என்றும், இஃதே இப்பதத்திற்கு உயிர் நிலை என்றும் கொள்ளுதல் வேண்டும். இவ்விஷயத்தில் ஆழ்வார் மிக்க ஆழமாகச் செல்கிறார்.

> "அடியார்ந்த வையமுண் டாலிலையன் னவசஞ்செய்யும்
> படியாது மில்குழ லிப்படிஎந்தை பிரான்தனக்கு
> அடியா ரடியார்தம் மடியா ரடியார்தமக்கு
> அடியா ரடியார்தம் அடியாரடி யோங்களே."

—திருவாய்மொழி, 3 : 7 : 10.

தன் திருவடிகளோடு சேர்ந்த பூமியைப் பிரயளத்தில் அமுது செய்து, ஓராலிலையில் கண்வளர்ந்தருளுபவனாய், ஒப்பில்லாத சின்னஞ்சிறு பாலகனாய் உள்ள எங்கள் ஸ்வாமிக்கு, 'அடியார்க்கு அடியார் அவ்வடியார்க்கு அடியார்' என்னும் முறையில், இறுதியடியார்க்கு நாங்கள் அடியோங்கள் என்பது ஆழ்வாருடைய இப் பாசுரத்தின் பொருளாகும்.

ஆகவே, திருமந்திரம் கற்றதனால் நுட்பமாய்த் தெரிந்து கொண்ட பொருள், இந்நமஸ்ஸில் சொல்லப்படும் பாகவத சேஷத்துவமே எனக் கொள்க. இதைத் திருமங்கையாழ்வார் "நின்திரு வெட்டெழுத்தும் கற்று உற்றதும் உன்னடியார்க் கடிமை" என்னும் பாசுரத்தால் வெளியிட்டுள்ளார்.

—பெரிய திருமொழி, 8 : 10 : 3.

இன்னும், "தேவு மற்றறியேன் குருகூர்நம்பி பாவினின்னிசை பாடித்திரிவனே" என்று பரம பாகவதரான ஆழ்வாரையே தெய்வமெனக் கருதி, அவருக்கே கைங்கரியம் புரிந்த மதுரகவியாழ்வாரின் 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்னும் பிரபந்தம் நமப் பதத்தின் பொருளைக் காட்டுகிறதாய்ப் போற்றப்படுகிறது.

அவதாரிகை : இவ்வாறு தேறிய பொருளாய்க் கிடைக்கும் பாகவத சேஷத்துவம் இப்பதத்திலன்றி மற்றப் பதங்களிலும் சொல்லுவாருமுண்டு என்கிறார் :

**மூலம் : 90. "இது அகாரத்திலே என்றுஞ் சொல்லுவர்கள் ; உகாரத்திலே என்றுஞ் சொல்லுவர்கள்."**

பொருள்: சிலர், இப்பாகவத சேஷத்துவம் அகாரத்தில் கிடைக்கிறதென்றும், சிலர், உகாரத்தில் கிடைக்கிறதென்றும் சொல்லுகின்றனர்.

விளக்கம்: வினு: பாகவத சேஷத்துவம் அகாரத்திலும் உகாரத்திலும் கிடைப்பது யாங்ஙனம்?

விடை: ஒரு பொருள் ஒருவனுக்குச் சொந்தமாய் உள்ளதென வைத்துக்கொள்ளுவோம். அந்தப் பொருள், அவனுக்கும், அவனுடைய சந்ததியாருக்கும் அநுபவித்தற்கும், விற்றற்கும், பிறருக்குத் தானஞ் செய்தற்கும், இன்னும் தன் விருப்பத்திற் கேற்பப் பயன் படுத்திக்கொள்ளுதற்கும் உரித்தாயிருக்கும் போதன்றே, அஃது அவனுடைய சொந்தச் சொத்து எனக் கூறுதற்கு இடந்தரும். அதைப் போன்றே, பகவானுக்கு உடைமைப் பொருளாயிருக்கும் சீவன், அப்பகவானும், அவன் சம்பந்தம் பெற்ற பாகவதரும் அநுபவிக்கவும், தங்கள் இச்சைக்கேற்ப விநியோகங் கொள்ளவும் தகுதியுடையனுயிருக்கிற நிலையில்தானே இவன் சேஷத்துவ பூர்த்தி பெற்றவனுகின்றான்.

இவ்வாறு பாகவத சேஷத்துவம், பகவச் சேஷத்துவத்தைச் சொல்லுகிற அகாரத்தில் புணர்ந்து கெட்ட வேற்றுமையால் கிடைக்கும்.

இனி உகாரத்தில் பாகவத சேஷத்துவம் கிடைக்கும் விதத்தைக் காண்போம்:

நறுமணம் என்னும் ஒரு சொற்றொடரை எடுத்துக்கொள்ளின், இதில், நறு, மணம் என்னும் இரு சொற்கள் உள்ளன அல்லவா? இவற்றுள் மணம் போன்றது சீவனுடைய சேஷத்துவம். அம் மணத்தின் தன்மையான நன்மையைப் போன்றது சேஷத்துவத்தின் அநந்யார்ஹத்துவம். அதைக் குறிப்பதே உ என்னும் பதம் என நாம் முதலில் தெரிந்துகொள்ள வேண்டும்.

இச்சேஷத்துவத்தைத் தெரிவிப்பது அகாரத்தில் புணர்ந்து கெட்ட வேற்றுமை. அதன் தன்மையான அநந்யார்ஹத்துவத்தைத் தெரிவிப்பது உகாரம். இதைக் குறித்து முன்னரே பகர்ந்துள்ளோம்.

அநந்யார்ஹ சேஷத்துவமென்பது பிறருக்கு உரியனுயிருத்தல் அன்றி, ஈசுவரனுக்கே உரியனுயிருத்தல். இங்கு, பகவத் சம்பந்தம்

15

பெற்ற பாகவதர்களைக் கழித்து, மற்றவர்களைப் பிறர் எனக் கொள்வது பொருத்தமுடையதாகும். ஆக, இவ்வாறு பாகவத சேஷத்துவம் வரையிலுமுள்ள பகவச் சேஷத்துவத்தின் அநந்யார்ஹத்துவத்தை உகாரம் தெரிவிப்பதாய்த் தேறுகின்றமையின், இப்பாகவத சேஷத்துவம் உகாரத்தில் கிடைக்கும் பொருளென்பது சிலர் கருத்து.

வினா: இங்ஙனம் அகாரத்திலும் உகாரத்திலும் பாகவத சேஷத்துவம் கிடைக்கின்றதெனச் சிலர் கருதுகின்றவாறே லோகாசாரியரும் ஏன் திருவுள்ளம் பற்றுதல் கூடாது?

விடை: ஆன்ம சொரூபத்தை மறைத்துக்கொண்டிருக்கும் அகங்கார மமகாரங்கள் இந்நமப் பதத்திலேயே கழிவுறுகின்றமையின், இப்பாகவத சேஷத்துவத்தை மற்ற இடங்களில் சொல்லுவதைக்காட்டிலும், இந்நமப்பதத்தில் கூறுவதே உசிதமாகும். இதை முன்னரே பகர்ந்துள்ளோம். இஃதன்றியும், இந்த அகங்கார மமகாரங்கள் கழிவுறாத ஒருவன், ஒருகால் ஈசுவரனுக்குத் தொண்டு புரியினும் புரியலாம். ஆனால், ஊண் உடை இவற்றுள் தனக்கு ஒத்தவராகத் தோன்றும் பாகவதருக்கு அடிமை பூண்டு ஒழுகுதற்கு ஒருகாலும் ஒருப்படான். ஆதலின், அடியார் தொண்டைக் குறிப்பதற்கு இந்நமப்பதமே பொருத்தமான இடமெனக் கொள்க.

அவதாரிகை: இந்நமப் பதத்துக்கு முன்பு, பிரணவத்தில் ஏற்பட்ட நோக்கத்திற்கும், இந்நமப் பதத்தில் ஏற்பட்ட கருத்திற்கும் உண்டான வாசியை (வேறுபாட்டை)ப் பகருகின்றார்.

மூலம்: 91. "(1) ஈச்வரன் தனக்கேயாயிருக்கும்; (2) அசித்துப் பிறர்க்கேயாயிருக்கும்; (3) ஆத்மா தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருக்கும் என்று முற்பட்ட நினைவு; (4) அங்ஙனன்றிக்கே, அசித்தைப்போலே தனக்கேயாக எனைக் கொள்ள வேணுமென்கிறது - நமஸ்ஸால்."

பொருள்: (1) சுதந்தரத் தன்மையே இயல்பாய்க் கொண்டுள்ள ஈசுவரன் தனக்கே உரியவனாயிருப்பன். (2) ஞானமின்மையினால், "எனக்கு யான் உரியன்" என நினைத்தற்கும் தகுதியற்ற

அசித்து மற்றவருக்கே உரித்தாயிருக்கும். (3) ஆன்மா தனக்கும் பிறருக்கும் பயன்படுவதாயிருக்கும் என்பது நமப்பதத்தின் பொருளை அறிவதற்கு முந்திப் பிரணவத்தில் உண்டான நினைவு. (4) அங்ஙனமன்றி "மற்றவருக்கே பயன்படும் அசித்தைப் போன்று, ஈசுவரனுக்கேயாக என்னை விநியோகங் கொள்ள வேண்டும்," என்பது நமப்பதத்தால் ஏற்படும் நினைவாகும்.

விளக்கம்: வினா: பிரணவத்தில், ஆன்மா, தனக்கும் பிறர்க்கும் பயன்படுவதாய் இருக்கும் என்னும் நினைவு உண்டாதல் யாங்ஙனம்?

விடை: பிரணவத்தில், 'பரமாத்துமாவிற்கே அடிமையாயிருப்பவன் அறிவுள்ள சீவன்' என்பது தெரிகிறது. இந்தச் சீவன், அறிவுடையவனாதலால், தன் பயனைக் கருதுபவனாகவும், அடிமையாயிருத்தலால், ஈசுவரனுடைய பயனைக் கருதுபவனாகவும் இருக்கிறான் என்பது புலனாகும். இன்னும் இதைச் சிறிது ஊன்றி நோக்கின், சீவனாகிய இவனுக்கு ஞானத்தினால், விருப்பம் முயற்சி செயல்கள் ஏற்படும் போது, தன் பயனைக் கருதி நிற்கும் தன்மையும், பிறருக்கு மன மகிழ்ச்சியை உண்டுபண்ணுகையே அடிமைத் தன்மையாகையால், சேஷத்துவத்தினால் பிறருடைய நலத்தை நாடி நிற்கும் தன்மையும் ஏற்படுகிறது என்பது புலனாகிறது.

வினா: சரி, அறிவுள்ள சீவன் அசித்தைப் போன்று ஈசுவரனுக்கே பயன்படுவதாக இருத்தல் எவ்வாறு?

விடை: இந்நமப்பதம், சீவான்மாவாகிய தான், பிறருக்கும் தனக்கும் பொதுவாக இருக்கும் நிலையை அறவே ஒழிக்கிறது மட்டுமேயன்றி, பிறர்பொருட்டே பயன்படுதலை இயல்பாகக் கொண்டுள்ள அசித்தைப் போன்று, "உனக்கே நாம் ஆட்செய்வோம்" என்றபடி, என்னைத் தேவரீருக்கே இன்பமூட்டுமாறு (பயன்படுமாறு) விநியோகித்துக்கொள்ள வேண்டும் என ஈசுவரனைப் பிரார்த்திக்குமாறும் செய்கிறது. ஆகவே இந்நமப்பதத்தால் சீவான்மா ஈசுவரன் விருப்பத்தின்படியே செயலாற்றும் பரதந்திரன் என அறிகின்றோம்.

அவதாரிகை: 'தனக்கேயாக' என்பதை விரிக்கிறார்:

மூலம் : 92. "அதாவது, போகதசையில் ஈச்வரனழிக்கும்போது நோக்க வேணும் என்று அழியா தொழிகை."

பொருள் : ஈசுவரன், சீவனுகிய தன்னேடு கலந்து பரிமாறும் போது, அவன், தன்மாட்டுக் கொண்டுள்ள பிரேமப் பித்தினுல் தாழ நின்று பரிமாறி, தன்னுடைய சேஷத்துவத்தை அழிக்குங்கால், "நம் சேஷத்துவத்தை நாம் நோக்கிக்கொள்ள வேண்டும்," என நினைத்து சீவனுகிய தான் பின் வாங்கி, அவன் போகத்தைக் கெடுக்காமலிருத்தல் வேண்டும் என்பதே இதன் பொருளாகும். இதுதான் பகவானுக்கே ஆனந்தம் ஏற்படுமாறு விநியோகப்படுகை எனச் சொல்லப்படுவது.

வி௵ : ஈசுவரன் இச்சேதனனைத் தனக்கென்றே வினியோகப்படுத்திக்கொள்ளல் யாங்ஙனம்?

விடை : ஈசுவரன் சேதனனை வினியோகம் கொள்ளல் இரண்டு வகைப்படும் : இவற்றுள், அவன் தலைவனுகவே இருந்து இவனை அடிமையாக வைத்துப் பரிமாறுதல் ஒரு வகை. சில போது, அவன் இவனேடு கலந்து போகந் துய்க்கக் கருதுவான். அவ்வமயம், ஈசுவரன் சேதனனை அடிமை கொள்பவன் போன்று, இவனிடம் நெருங்கி, இவன் மாட்டுத் தனக்குள்ள வேட்கை மிகுதியால், இந்தச் சீவான்மாவைத் தலைவனுக வைத்துத் தான் அடிமையாக இருந்து, இழிதொழில் செய்து அவ்விதத்தில் சேதனனை வினியோகங் கொள்ளுதல் மற்ருெரு வகை. இதற்குக் குசேலர் சரிதத்தைச் சான்ருகக் கொள்ளலாம்.

பரம பத்தராகிய குசேலர், தம் மனைவியின் தூண்டுதலால் கண்ணனிடம் செல்லுகிருர். இவர் வருகையைக் காவலரால் அறிந்த கண்ணன், தானே அரியணையிலிருந்து இறங்கிவந்து, "திலக மண்தோய கண்ணன் திருவடி தொழுதிட்டானே" என்றவாறு, குசேலர் திருவடிகளில் வணங்குகிருன். பின்பு தன்னுடன் அவரை அழைத்துச் சென்று, அவருடைய திருவடிகளைத் தன் மடிமீதில் வைத்து, "இத்திருவடிகள் வெகு தூரம் நடந்து நொந்தனவே!" எனப் பகர்ந்துகொண்டே அவற்றை மெல்லெனப் பிடிக்கிருன். குசேலர், கண்ணன் செய்யும் உபசாரங்களுக்குத் தம் பாரதந்திரியத்திற்கேற்ப இசைந்திருக்கிருர். இதை இப்பாவில் காண்க.

"'வழிநடந் திளைத்த வேஇம் மலரடி இரண்டும்?' என்று
கழிமகிழ் சிறப்ப மெல்ல வருடினன் கமலக் கண்ணன்;
பழியில்பல் உபசா ரங்கள் பண்ணவும், தெரியா னாகி
ஒழிவறு தவக்கு சேலன் ஒன்றும்பே சாதி ருந்தான்."

தம்மை அடிமை கொள்பவனைப் போன்று, தம்மிடம் கிட்டித் தாழ நின்று தம் ஆன்மாவை முற்றும் கவர்ந்துகொண்ட ஆச்சரியமான சேஷ்டிதங்களுடையவன் ஈசுவரன் என்பதை ஆழ்வாரும், "ஆட்கொள்வானொத்து என்னுயிருண்டமாயன்" எனத் தெரிவிக்கிறார். இதனால், ஈசுவரன் சேதனனைத் தனக் கெனவே வினியோகங் கொள்ளல் உண்டு என்பதை அறிந்தாம்.

அவதாரிகை: 'சேதனன் இவ்வாறு ஈசுவரனுடைய போகத் தைக் குலைப்பதற்குக் காரணம் யாது?' என்ன அதைப் பகரு கிறார்:

மூலம்: 93. "அழிக்கைக்கு ஹேது கீழே சொல் லிற்று; மேலுஞ் சொல்லும்."

இச்சூத்திரத்திற்கு வினா விடையாகவே பொருள் கூற வேண்டியிருக்கிறது.

பொருள்: வினா: இங்ஙனம் ஈசுவரன் தன்மேல் விழுந்து, தன்னை அவன் இன்பத்தின்பொருட்டு உபயோகித்துக்கொள்ளும் போது, சேதனன் தன் தாழ்மையைக் காட்டிப் பின்வாங்குதற்குக் காரணம் யாது?

விடை: முன் பிரணவத்தில் சேஷத்துவமே ஆன்மாவிற்குச் சொரூபம் என்றும், பின் நாராயண பதத்திலுள்ள சதுர்த்தியில், சேதனன் ஈசுவரனுக்குத் தொண்டு புரிகையே பலம் என்றும் கூறி யிருத்தலால், "நம் சேஷத்துவ சொரூபத்தை நாம் காத்துக் கொள்ள வேண்டும்," என்னும் நினைவு இவனுக்கு உண்டாகிறது. ஆதலின், "சேஷியாகிய பகவான் உவக்குமாறு அவன் ஏவிய அடிமைத் தொழிலை நாம் செய்வது முறையாயிருக்க, அவன் நமக் குத் தாழ்ந்து செய்யும் செயலை நாம் ஏற்றுக்கொள்வது தகாது," எனப் பின் வாங்கித் தன் தாழ்மையைக் காட்டிப் பகவானுடைய போகத்தை அழிக்க இடமேற்படுகிறது.

அவதாரிகை: இப்பாரதந்திரிய அறிவின் சிறப்பைப் பல வித மாக அருளிச்செய்துகொண்டு, இப்பதத்தின் பொருளை முடித்

துக்கொள்கிறார். இச்சூத்திரம் ஐந்து வாக்கியங்களைக் கொண்டதாதலின், ஒவ்வொன்றிற்கும் தனித்தனியே பொருளையும் விளக்கத்தையும் கூறுவோம் :

மூலம் : 94. (1) "இந்நினைவு பிறந்த போதே க்ருத க்ருத்யன். (2) இந்நினைவில்லாத போது எல்லாத் துஷ்க்ருதங்களும் க்ருதம். (3) இந்நினைவிலே எல்லா ஸுக்ருதங்களுமுண்டு. (4) இதின்றிக்கேயிருக்கப் பண்ணும் யஜ்ஞாதிகளும் ப்ராயச்சித்தாதிகளும் நிஷ்ப்ரயோஜநங்கள். (5) இதுதன்னாலே எல்லாப் பாபங்களும் போம்; எல்லாப் பலங்களுமுண்டாம்."

1. 'இந்நினைவு பிறந்த போதே க்ருத க்ருத்யன்'

பொருள் : சேதனனுக்கு எப்போது "என்னை, ஈசுவரனுக்கே இன்பமூட்டுமாறு வினியோகித்துக்கொள்ள வேண்டும்," என்னும் அத்தியந்த பாரதந்திரிய எண்ணம் உண்டாகிறதோ, அப்போதே, சேதனன் தன் நன்மைக்காகத் தான் செய்ய வேண்டிய எல்லா நற்காரியங்களையும் செய்து முடித்தவனாவான்.

விளக்கம் : வினா : இச்சேதனனுக்குப் பரம புருஷனுடைய முகமலர்த்திக்குறுப்பாகப் பாங்குடனிருக்கை என்னும் எண்ணமே போதியதாமோ? பலத்தைப் பெறுதற்கு இவன் வேறொன்றும் செய்ய வேண்டுவதில்லையோ?

விடை : இவன் வேறொன்றும் செய்ய வேண்டுவதில்லை. ஏனெனில், 'ஈசுவரன் நிருபாதிக இரட்சகன்,' (ஒரு காரணத்தைக் கொண்டு இரட்சிப்பவன் அல்லன்) எனப் பிரணவத்தில் சொல்லப்படுகிறது. எவன், "நம்முடைய நன்மைக்கு நாம் பொறுப்பாளி அல்லோம்; பிறரும் பொறுப்பாளர் ஆகார்; ஈசுவரனே பொறுப்பாளியாவன். ஆதலின், அவனையே எதிர்பார்த்திருத்தல் நம் கடமை," என்னும் எண்ணத்துடன் இருக்கின்றானோ, அவ்வதிகாரிக்குப் பகவானே, ஒரு காரணமுமின்றி இரட்சணத்தைச் செய்கிறான் என்பது பிரணவத்தின் சாரப் பொருளாகும். ஆதலின், இவன் தன் இதத்திற்காகச் செய்ய வேண்டுவது ஒன்றுமில்லை.

வினா: பாரதந்திரியம் மூன்று என்று கீழ்ச் சூத்திரத்தில் சொன்னீர்கள். அங்ஙனமாயின், இங்குச் சொல்லுவது எப்பாரதந்திரியம்?

விடை: நமப்பதத்தில் பாரதந்திரியம் சாரப் பொருளாகச் சொல்லப்படுகிறது. அப்பாரதந்திரியம் மூன்று விதமாகவும் இருக்கலாம். இம்முறையில் நமப்பதம் இம்மூன்று பாரதந்திரியங்களையும் சொல்லுகிறதென்பது தேறும்.

வினா: ஆனால், 92, 93 ஆம் சூத்திரங்களை நோக்கும்போது, பல பாரதந்திரியத்தைச் சொல்லுவதாகத் தெரிகிறதே?

விடை: முற்கூறியவாறு இம்மூன்று பாரதந்திரியங்களும் இதற்குப் பொருளாதலால், அங்குப் பலபாரதந்திரியத்தை கொள்ளுதலே பொருத்தமாகும்.

வினா: அங்ஙனமாயின், [1] இந்நினைவு "பிறந்த போதே கிருத கிருத்தியன்," என்னும் வாக்கியத்தில் 'நினைவு' என்பது பல பாரதந்திரிய எண்ணத்தைச் சொல்லுகிறதா, அன்றி வேறு பாரதந்திரிய எண்ணத்தைச் சொல்லுகிறதா?

விடை: முன்பு, பல தசையில் பார்க்கப்படும் அத்தியந்த பாரதந்திரியத்தைச் சொல்லியிருப்பதால், 'இந்நினைவு' என்பதில் அப்பாரதந்திரிய ஞானமே குறிக்கப்படுமாயினும், அதற்கேற்ற தான உபாயதசையில் உள்ள அத்தியந்த பாரதந்திரிய ஞானத்தைச் சொல்லுவதாகப் பொருள் கொள்ளுதலே பொருத்தம். இதைச் சிறிது விளக்குவோம்: "ஸ்வரூபத்துக்கும் ப்ராப்யத்துக்கும் சேர்ந்திருக்க வேண்டுமிறே 'ப்ராபகம்'" [1] என்பது பிள்ளைலோகாசாரியர் வாக்கியம்.

ஆசாரியனுக்கு அடிமையாயிருக்கை, சொரூபத்தினுடைய எல்லை நிலமாய் பிரணவத்திலும், தன் ஆசாரியன் திருவடிகளில் பண்ணும் கைங்கரியம் பலத்தின் எல்லை நிலமாய் நாராயணாய என்னும் பதத்திலும், அச்சொரூப பலங்களுக்கேற்ப ஆசாரியாபிமானமே மேலான இதமென நமப் பதத்திலும் கொள்ள வேண்டும் என்பது இவ்வாக்கியத்தின் கருத்தாகும். இவ்வாக்கியத்தின் பொருளை நன்கு ஆராயும் போது, சொரூப பலங்களுக்கு ஏற்ற

---

குறிப்பு: 1. ஸ்ரீவசனபூஷணம், 410-ஆம் வாக்கியம்.

தாகவே இதம் இருக்க வேண்டுமென்னும் முறை ஏற்படும். இம் முறையில், சொரூப பாரதந்திரியம், பல தசையில் பார்க்கப்படும் அத்தியந்த பாரதந்திரியம் ஆகிய இவை இரண்டிற்கும் ஏற்றதாகவே உபாய பாரதந்திரியம் இருக்கும் எனக் கொள்ளுதல் வேண்டும். இவ்வாறு உபாய பாரதந்திரியம் பல தசையிலுள்ள அத்தியந்த பாரதந்திரியத்தை ஒட்டியே இருப்பதால், இங்கு அப்பாரதந்திரியத்தின் ஞானத்தை 'இந்நினைவு' என்னும் பதம் குறிப்பதாக நாம் கொள்ள வேண்டும். இங்ஙனம் கொள்ளும் போது இச்சூத்திரத்தின் முதல் வாக்கியத்திலுள்ள கிருத கிருத்தியன் என்னும் பதமும், மணவாளமாமுனிகள் இவ்வாக்கியத்தின் உரையில் அருளிச் செய்த "தன்னுடைய இதத்திற்கு உடலாகச் செய்ய வேண்டுவன எல்லாம் செய்து தலைக்கட்டினவன்," என்னும் வாக்கியமும் நன்ருகப் பொருந்தும்.

அவதாரிகை: சொரூப பாரதந்திரிய ஞானமில்லாத போது உண்டாகும் தீமையைச் சொல்லுகிருர்.

2. 'இந்நினைவில்லாத போது எல்லா துஷ்க்ருதங்களும் க்ருதம'

பொருள்: இப்பாரதந்திரிய நினைவு இல்லாத போது, ஈசுவரனுக்கு உரிமையான ஆன்மப்பொருளைத் தன்னுடையதெனக் கருதும் களவு வடிவமான சுவாதந்திரிய ஞானம் நடையாடுகின்றமையின், எல்லாத் தீய செயல்களும் இவனுல் செய்யப்பட்டனவாய் முடியும்.

வினு: "இந்நினைவு இல்லாத போது" என்னும் இச்சொற்ருெடரில் எந்த அத்தியந்த பாரதந்திரியம் சொல்லப்படுகிறது?

விடை: இங்குச் சொரூப பாரதந்திரியமே சொல்லப்படுகிறது.

வினு: அஃதெங்ஙனம்?

விடை: பகல் இல்லாத போது இருள்சூழ்ந்து கொள்வது போல, பாரதந்திரிய ஞானம் இல்லாத போது சுவாதந்திரிய ஞானம் குடிபுகுந்தே தீரும் என்பது இங்குப் புலப்படுகிறது. இத்தகைய சுதந்திர எண்ணம் குடிபுகும் போது, "இவ்வான்மா அவனுடைய பொருள்; இவ்வான்மாவினுடைய

ஸத்தை, ஸ்திதி, முயற்சி, முயற்சியின்மை ஆகிய சீவனுக்குள்ள இவை யாவும் பகவானாலேயே ஏற்படுவனவாகும்," என்னும் பாரதந்திரிய எண்ணம் விலகிவிடுகின்றமையின், ஆன்மாபகாரமென்னும் குற்றம் ஏற்பட்டே தீரும். ஆன்மாபகாரமாவது, அவனுக்குரிய தன்னை அவனுக்கு இல்லை செய்து, தனக்கே என எண்ணுதல். இவ்வெண்ணம் நடையாடும்போது, இவன் எல்லாப் பாவங்களையும் செய்தவனாகவே எண்ணப்படுவான்.

"யோ²ந்யதா ஸந்தமாத்மாநம் அந்யதா ப்ரதிபத்யதே ।
கிந்தேந ந க்ருதம்பாபம் சோரேணாத்மாபஹாரிணா ॥"

இதன் கருத்து: 'எவன், பகவானுக்குச் சேஷமாயிருக்கிற ஆன்மப் பொருளைத் தனக்கு உரியதென நினைக்கின்றானோ, அக்கள்வனால் எல்லாப் பாவங்களும் செய்யப்பட்டனவாம்' என்பது.

இச்சுலோகத்தின் பொருள் இதுவாதலின், "இந்நினைவு இல்லாத போது" என்பதற்குச் சொரூப பாரதந்திரிய எண்ணம் இல்லாத போது என்னும் பொருளையே இங்குக் கொள்ள வேண்டும். இதுவே மிகப் பொருத்தமாகும்.

92, 93 ஆம் சூத்திரங்களில் பல தசையில் உள்ள அத்தியந்த பாரதந்திரியக் கருத்தையும், இச்சூத்திரத்தின் முதல் வாக்கியத்தில் "இந்நினைவு" என்னும் சொல் உபாய தசையிலுள்ள அத்தியந்த பாரதந்திரிய எண்ணத்தையும் சொல்லுவது போல, இச்சூத்திரத்தின் இரண்டாவதாகிய இவ்வாக்கியத்தில், "இந்நினைவு இல்லாத போது" என்பதற்குச் சொரூப பாரதந்திரிய நினைவு சொல்லப்படுகிறதென்பது தெளிவாகும்.

**அவதாரிகை:** அத்தியந்த பாரதந்திரிய ஞானமாகிய இஃதே இவனுக்கேற்ற பலனைத் தருவதாகும் என்கிறார்:

**3. 'இந்நினைவிலே எல்லா ஸுக்ர்தங்களுமுண்டு'**

**பொருள்:** ஜீவனாகிய இவன், எல்லா நற்காரியங்களையும் செய்யும் போது, பரம புருஷனுக்கு இவனிடம் எத்தகைய அன்பு ஏற்படுமோ, அத்தகைய அன்பு, இப்பாரதந்திரிய நினைவு இவனுக்கு உண்டாகும் போது பகவானுக்கு இவனிடம் ஏற்படுகின்றமையின், இப்பாரதந்திரிய நினைவால் எல்லா நலங்களும் உண்டு.

**வினா:** ஒருவனுக்கு, 'சீவன், சரீரத்தில் வேறுபட்டவன்; நித்தியன்' என்னும் அறிவு இருக்கிறது. ஆனால், அவனுக்குத்

'தான் பரமாத்துமாவிற்கு அடிமை' என்னும் அறிவு இல்லை. அத்தகையவனும் தானதருமங்களைச் செய்கிறான். மற்றொருவனுக்குத் தான் ஈசுவரனுக்கு' அத்தியந்த பரதந்திரன் என்னும் ஞானம் உள்ளது. அவனும் தானதருமங்களைச் செய்கிறான். இவ்விருவரும் பகவானுடைய கிருபையைப் பெறுகின்றனர். இங்ஙனமாயின், இவ்விருவர் செய்யும் தானதருமங்களும், இவர்களிடம் பதியும் ஈசுவரனுடைய அருளும் ஒரே தன்மையுடையவைதாமோ?

விடை: இவ்விரு திறத்தினரும் செய்யும் தானதருமங்களும் மேலெழுந்த வாரியில் ஒரே தன்மை வாய்ந்தனவாய்க் காணப்படினும், ஊன்றி நோக்குங்கால், அவை வேறுபட்டனவாகவே ஞானிகளுக்குப் புலனாகும். ஈசுவரனுடைய அருளும், முதல் அதிகாரியினிடத்தில் அளவுற்றதாயும், இரண்டாவது அதிகாரியினிடத்தில் அளவற்றதாயும் இருக்கும். இவ்விருவர் பெறும் பலன்களினும், பகவானுடைய அருளின் ஏற்றத்தாழ்வைக் காணலாம்.

வினா: அப்படியானால், 'இங்கினையிலே எல்லா ஸுக்ருதங்களும் உண்டு,' என்னும் இம்மூன்றாம் வாக்கியத்தில், மேற்கூறிய இரண்டாம் அதிகாரிதானே சொல்லப்படுகிறான்?

விடை: ஆம்.

வினா: அங்ஙனமாயின், இவ்வத்தியந்த பாரதந்திரிய ஞானம் பெற்றவன், தானத்தையும் தவத்தையும் செய்ய வேண்டுவது அவசியமோ?

விடை: இந்த ஞானம் பெற்றவன், தான் செய்யும் தானதருமங்களினால் ஈசுவரனுடைய எந்த முகவுல்லாசத்தைப் பெறுவனோ அந்த முகவுல்லாசத்தை இப்பாரதந்திரிய ஞானத்தினாலேயே பெறுவான். ஆயினும், அவ்வதிகாரி செய்யும் புண்ணிய கருமங்கள் யாவும் கைங்கரியத்தில் சேருமே அல்லாமல், உபாயத்தில் சேரா.

மனு என்னும் பெரியார், "அந்தராத்மாவாய் (ஆன்மாவிற்கு ஆன்மாவாய்) இருந்து நியமிக்கிறவனும், (கட்டளையிடுகிறவனும்) சூரிய குலத்தினுதித்தவனும், யாவருக்கும் இனியனுமான பரம புருஷன், உன் இருதயத்திலேயே இருக்கிறவன். அவனுடன் உனக்கு, (யான் எனக்கு உரியன், உனக்கு உரியன் அல்லன் என்னும்) வழக்கு இருப்பினும், புண்ணிய க்ஷேத்திரம் புண்ணிய பூமி

இவற்றிற்குச் செல்ல வேண்டுவதில்லை. அவ்வழக்கில்லாவிடினும், மேற்கூறிய செயல்களை மேற்கொள்ள வேண்டுவதில்லை," என்கிறார்.

"யமோ வைவஸ்வதோ ராஜா யஸ்தவைஷஹ்ருதி ஸ்த்திதஃ।
தேந சேத விவாதஸ்தே மாகங்காம் மாகுரூன்கமஃ ॥"

இந்த சுலோகத்தின் கருத்தை உற்று நோக்கும்போது, வழக்கிருப்பவன் இல்லாதவன் ஆகிய இரு திறத்தாருமே புண்ணிய தேச யாத்திரை முதலியவற்றை மேற்கொள்ள வேண்டுவதில்லை என்பது தெரிகிறது. யாங்ஙனம்? ஈசுவரனோடு வழக்கற்று வாழுங்கால், புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் செல்லுதல் முதலியவற்றால் கிடைக்கும் நலங்கள் எவையோ, அவைகள் இவனுக்குக் கிடைத்துவிடும். வழக்குடன் காலங் கழிக்குங்கால், அப்புண்ணியச் செயல்களை மேற்கொள்ளினும் பயனில்லை. ஆதலின், இவ்விருபாலாருக்குமே இவை வேண்டுவதில்லை என்பது சொல்லப்படுகிறது.

அதைப் போன்றே, இவ்வத்தியந்த பாரதந்திரிய ஞானம் இல்லாதவன் செய்யும் யாகம், தானம், தவம் முதலியவைகளும், பிராயச்சித்தங்களும் (சாந்திகளும்) பயனற்றவை. பாரதந்திரிய ஞானமுடையவன், மேற்குறித்தவற்றைச் செய்யாமலே, அவற்றின் பயனை இப்பாரதந்திரிய ஞானத்தினாலேயே பெறலாம். இக்கருத்தையே இச்சூத்திரத்தின் நான்காவது ஐந்தாவது வாக்கியங்களால் வெளியிடுகிறார்:

**4. 'இதின்றிக்கேயிருக்கப்பண்ணும் யஜ்ஞாதிகளும் ப்ராயசித்தாதிகளும் நிஷ்ப்ரயோஜநங்கள்'**

**பொருள்:** ஈசுவர பிரீதிக்கு உறுப்பான இப்பாரதந்திரிய நினைவு இல்லாதபோது, ஈசுவரப்பிரீதிக்கு உறுப்பாய்ப் பண்ணும் தானம், தருமம், தவம் முதலியவைகளும், தன் பாவங்கள் நீங்குதற் பொருட்டுச் செய்யும் சாந்திராயண விரதம் முதலிய பிராயச்சித்த கன்மங்களும் பயனற்றவை.

**5. 'இது தன்னாலே எல்லாப் பாபங்களும் போம், எல்லாப் பலங்களு முண்டாம்'**

**பொருள்:** இப்பாரதந்திரிய எண்ணம் உண்டானவுடன் ஈசுவரன் இவனுக்கு அருள் புரிகின்றமையின், ஈசுவரன் வெறுப்பதற்குக் காரணமாயுள்ள எல்லாப் பாவங்களும் இவனை விட்டு ஒழி

கின்றன. அன்றியும், ஈசுவரன், "உன்னடியார்க்கு என் செய்வ னென்றே இருத்திநீ," என்றவாறு, "இவனுக்கு நாம் என்ன செய்யவல்லேம்!" என ஆய்ந்து ஆய்ந்து மேன்மேலும் உதவி புரிகின்றமையின், இவனுக்குச் சமூசாரத் துன்பம் நீங்குதல் முதல், ஈசுவரனுக்குத் தொண்டு பூண்டொழுகுதல் ஆகிற கைங்கரியம் கிடைத்தல் வரையுமுள்ள எல்லாப் பயன்களும் உண்டாம்.

தொகுப்புரை : எழுபத்தெட்டாம் சூத்திரத்திலிருந்து தொண் ணூற்று நான்காம் (78-94) சூத்திரம் வரையும், நமஃ என்பதில் ந, மஃ என்னும் இரு பதங்கள் உள்ளன என்றும் ; இவற்றுள் மஃ என்னும் சொல் தனக்கு உரியன் என்பதைச்சொல்லி, 'ந' என்னும் சொல் அதைத் தவிர்க்கிறது என்றும்; ஆக இச்சொற்றொடர், தான் தனக்கு உரியன் அல்லன் என்னும் பொருளைத் தெரிவிக்கி றது என்றும் ; இந்நமப்பதம், தனக்கும் பிறருக்கும் உரித்தன்று என்பதைத் தெரிவிக்கும் உகாரத்தை விரிப்பதாயிருப்பினும், தனக் குத்தான் உரியன் அல்லன் என்பதையே முக்கியமாய் விரிக்கிற தென்றும், இப்பதம் சில விரோதிகளைப் போக்குகிறது என்றும் ; அவை, சொரூப விரோதி, உபாய விரோதி, ப்ராப்ய விரோதி என மூன்றுகுமென்றும் ; இம்மூன்று விரோதிகளும் கழிதற்குச் சேத னன் இன்னின்ன நினைவுகளோடு இருத்தல் வேண்டுமென்றும் ; மஃ என்பது சொரூப நாசம், நமஃ என்பது சொரூப உய்வு என்றும் ; இப்பதம் சொரூபத்தையும், உபாயத்தையும், பலத்தையும் காட்டும் என்றும் ; இதற்கு ஆழ்வாருடைய பாசுரங்கள் சான்று என்றும் ; இதில் பாகவத சேஷத்துவமும் அடங்கியுள்ளது என்றும் ; இப்பாகவத சேஷத்துவம், அகாரத்தில் சொல்லப்படுகிற தென்று சிலரும், உகாரத்தில் சொல்லப்படுகிறதென்று சிலரும், சொல்லுவார்கள் என்றும் ; சுதந்தரனை ஈசுவரன் தனக்கே உரியவனும், பரதந்திரமான அசித்துப் பிறருக்கே உரித்தான தாயும், ஆன்மா, தனக்கும் பிறருக்கும் பொதுவாயும் இருக்கும் என்பது இந்நமப் பதத்திற்கு முன்பிருந்த நினைவு என்றும்; அங்ஙன மன்றி, அசித்தைப்போன்று பகவானுக்கே எனைக் கொள்ள வேண்டும் என்பது இந்நமஸ்ஸில் பிறந்த எண்ணமென்றும், அஃதா வது ஈசுவரன் சேதனனோடு தாழ நின்று பரிமாறுங்கால், தன் சேஷத்துவ சொரூபத்தைத் தான் நோக்கிக்கொள்ள வேண்டுமென நினைத்து, அவனுடைய போகத்தை அழித்தல் கூடாதென்றும் ;

இங்ஙனம் அழிப்பதற்குக் காரணம், முன்னுள்ள பிரணவத்தில் சொல்லியது மட்டுமேயன்றி, பின்னுள்ள சதுர்த்தியிலும் சொல்லப் பட்டுள்ளதென்றும்; இப்பாரதந்திரிய நினைவு ஏற்பட்டபோதே தன் நன்மைக்கு அதிகாரமாயுள்ளவற்றையெல்லாம் செய்து முடித் தவனுவான் என்றும்; இந்நினைவில்லாதபோது தீச்செயல்கள் பல இவன் செய்ததாய் முடியுமென்றும்; இந்நினைவில் எல்லா நலங்க ளும் உண்டாகுமென்றும்; இந்நினைவின்றிச் செய்யும் புண்ணிய பாவங்கள் பயனற்றனவே என்றும்; இஃது எல்லாப் பாவங் களையும் போக்கி, எல்லாப் பலங்களையும் தரும் என்றும் பகரப் பட்டன.

**அவதாரிகை :** நாராயண பதத்தின் அர்த்தத்தை அருளிச் செய்கிறார் :

**மூலம் : 95. "நாராயணன் என்றது நாரங்களுக்கு அய நம் என்றபடி."**

**அவதாரிகை :** 'நாரங்கள் எவை ?' என்ன, அவற்றை அரு ளிச்செய்கிறார் :

**மூலம் : 96. "நாரங்களாவன, நித்ய வஸ்துக்களி னுடைய திரள்."**

**95, 96** இவ்விரண்டு சூத்திரங்களுக்கும் ஒன்றுகவே பொருள் சொல்ல வேண்டியிருக்கிறது.

**பொருள் :** இப்பதம் வடசொல். இதற்கு, நாராணும், அய நம், யஃ, ஸஃ—நாராயணஃ என்றும், நாராஃ அயனம் யஸ்ய, ஸஃ— நாராயணஃ என்றும் இரு வகையாய்ப் புணர்ச்சி இலக்கணம் கூறப் படுகிறது. இவற்றுள் முந்தியதற்கு, "நாரங்களுக்கு ஆதாரம் எவனே, அவன் நாராயணன்" என்றும், பிந்தியதற்கு, "எவன் நாரம் ஒவ்வொன்றிலும் பூரணமாய் இருப்பவனே, அவன் நாராய ணன்" என்றும் பொருள் கொள்ளப்படுகின்றன. இவ்விரண்ட னுள், "நாரங்களுக்கு ஆதாரமாய் இருப்பவன் நாராயணன்" என்னும் முதற் புணர்ச்சியைப் பற்றி இங்கு ஆராய்வோம் :

நாராஃ என்பதை நோக்குவோம் : 'ர' என்னும் சொல்லிற்கு அழிவுள்ளது என்பது பொருள். நகரம் அதை மறுக்கிறது. ஆக, இவ்விரண்டு சொற்களும் சேர்ந்து, அழிவற்றது (நித்தியம்) என் னும் பொருளைத் தரும். 'நர' என்னும் சொல் வடமொழி இலக்க

ணத்தின்படி 'நார' என்றாய், அழிவில்லாத பொருள்களின் திரளைத் தெரிவிக்கிறது. பன்மை வேற்றுமை சேர்க்கும் போது 'நாரா:' என்றாய் பொருள்களின் திரள்களை அறிவிக்கிறது. ஆக, 'நர' என்பது அழிவற்ற பொருளையும், 'நார' என்பது அழிவற்ற பொருள்களின் திரளையும் 'நாரா:' என்பது மேற்கூறிய திரள் பல என்பதையும் காட்டாநிற்கும்.

அவதாரிகை: 'நித்திய வஸ்துக்களின் திரள்கள் எவை?' என்ன, அவற்றைக் குறித்துக் கூறுகிறார்:

இந்தச் சூத்திரத்தில் பல திரளைச் சொல்லும் பல சிறு பகுதிகள் இருக்கின்றமையின், ஒவ்வொன்றிற்கும் தனித்தனியே பொருள் கூறுவது உசிதமாகும்.

மூலம்: 97. "அவையாவன: (1) ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகளும், (2) ஜ்ஞாநசக்த்யாதிகளும், (3) வாத்ஸல்ய ஸௌசீல்யாதிகளும், (4) திருமேனியும், (5) காந்திஸௌகுமார்யாதிகளும், (6) திவ்ய பூஷணங்களும், (7) திவ்யாயுதங்களும், (8) பெரிய பிராட்டியார் தொடக்கமான நாய்ச்சிமார்களும், (9) நித்யஸூரிகளும், (10) சத்ர சாமராதிகளும், (11) திருவாசற்காக்கும் முதலிகளும், (12) கணாதிபரும், (13) முக்தரும், (14) பரமாகாசமும், (15) ப்ரக்ருதியும், (16) பத்தாத்மாக்களும், (17) காலமும், (18) மஹதாதி விகாரங்களும், (19) அண்டங்களும், (20) அண்டத்துக்குட்பட்ட தேவாதி பதார்த்தங்களும்."

அவதாரிகை: ஒரு பொருளுக்குள்ள இயல்பு இருவகைப்படும். இவ்விரண்டும் சாத்திரங்களில் **சொரூப நிரூபக தருமம்** என்றும், **நிரூபித சொரூப விசேஷணம்** என்றும் சொல்லப்படுகின்றன.

சொரூப நிரூபக தருமம்: எந்தப் பொருளை; எந்த இயல்போடு சேர்த்தே அறிகின்றோமோ, எந்த இயல்பை விட்டு அதை அறிய முடியாதோ, அஃது அந்தப் பொருளுக்குச் சொரூப நிரூபக தருமம் எனப்படும். மேற்கூறிய இயல்பைக்கொண்டு அப் பொருளை அறிந்த பின்பு, அதற்குள்ள எந்த மற்ற இயல்புகளை

அறிந்துகொள்ள நேரிடுகின்றதோ, அது நிரூபித சொரூப விசேஷணம் என்று சொல்லப்படும்.

(உ - ம்) மலருக்கு மணம் சொரூப நிரூபக தருமம். அதிலுள்ள நிறம் முதலியன நிரூபித சொரூப விசேஷணம்.

இங்கு 'நாராயண' என்னும் பதத்தில் உள்ள 'நார' என்பது, பரமாத்துமா நீங்கலாக, மற்றப் பொருள்கள் யாவற்றையும் சொல்லுகிறதெனக் கொள்ள வேண்டும். இக்கோட்பாட்டின்படி, சித்தையும் அசித்தையும் மற்றப் பொருள்கள் என இயம்புதல் போன்றே, பரமாத்துமாவிற்குள்ள குணங்களையும் மற்றப் பொருள்கள் எனவே கூறுதல் வேண்டும். ஆதலின், அவற்றுள் முதன்முதல் பரமான்மாவிற்குள்ள சொரூப நிரூபக தருமங்களை இந்தச் சூத்திரத்தின், 'ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகளும்' என்னும் பகுதியில் காட்டுகிறார்.

1. ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகளும்.

போருள் : ஞானத்துவம், ஆனந்தத்துவம், அமலத்துவம், சத்தியத்துவம், அநந்தத்துவம் ஆகியவை பரமாத்துமாவிற்குச் சொருபக நிரூபக தருமங்கள் எனப்படும்.

விளக்கம் : ஞானத்துவம் : அறிவின் தன்மை. உள்ளும் புறமும் உப்பாகவே இருக்கும் உப்புக் கட்டியைப் போன்று, பரமான்மதத்துவம் முற்றும் ஞானமாகவே இருக்கிறது. அறிவின் தன்மை அதன் இயல்பாகும்.

ஆனந்தத்துவம் : விரும்பப்படும் பொருளின் தன்மை. தேன், பால், கன்னல் முதலியவைகளை உண்ணும் போது ஓர் இன்பம் தோன்றுகிறது. இவ்வின்பத்தின் பொருட்டே அவைகளை விரும்புகின்றோம். 'அந்த இன்பம் விரும்பும் பொருளாய் இருக்கின்றதே, அஃது எதன்பொருட்டு?' என்று ஒரு கேள்வி எற்படுமாயின், அதற்கு என்ன விடை சொல்ல முடியும்! அது போல பிரமம் ஸ்வதஃ விரும்பப்படும் பொருளாயிருக்கிறது. அதனுடைய தன்மையே ஆனந்தத்துவமாகும்.

அமலத்துவம் : தான் தோஷமற்ற பொருளாயிருத்தல் மட்டுமேயன்றி, மற்றப் பொருள்களின் தோஷங்களையும் போக்குவது எதுவோ, அஃதே அமலப் பொருளாகும். அதனுடைய தன்மையே அமலத்துவம் எனச் சொல்லப்படுகிறது.

ஸத்தியத்துவம் : அசித்திற்குள்ள பண்பின் வேறுபாடும், வடிவத்தின் வேறுபாடும், சித்துக்குள்ள பண்பினுடைய விகாரங்களும் அற்றிருக்கும் அதுவே சத்தியப் பொருளாகும். அதன் தன்மை ஸத்தியத்துவம்.

அநந்தத்துவம் : எல்லாத் தேசங்களிலும், எல்லாக் காலங்களிலும், எல்லாப் பொருள்களில் ஆன்மாவாகவும் இருக்கும் பொருள் எஃதோ, அஃதே அநந்தப் பொருளாகிய தத்துவம் எனப் படும். அவ்வநந்தப் பொருளின் தன்மை அனந்தத்துவம் எனப் படும். இவை ஒரு திரள்.

அவதாரிகை : இதுகாறும் மலருக்கு மணத்தைப் போன்ற பிரமத்தின் குணங்களைக் கூறினர். இனி, அதற்கு நிறம் முதலிய வைகளைப் போன்றுள்ள அதன் குணங்களைச் சொல்லுகிறார்.

2. ஜ்ஞாந சக்த்யாதிகளும்.

போருள் : ஞானம், சத்தி, பலம், ஐசுவரியம், வீரியம், தேஜஸ் என்னும் குணங்கள் நிரூபித சொரூப விசேஷணங்களாகும்.

விளக்கம் : ஞானம் : எல்லாத் தேசங்களிலும், எல்லாக் காலங்களிலும் உள்ள, எல்லாப் பொருள்களின் பண்பு பண்பிகளையும் ஒன்றொழியாமல் ஒரே காலத்தில் கண்கூடாய் நோக்குதலாகும்.

சத்தி இதற்குப் பல விதமாகப் பொருள் இயம்பப்படுகிறது. இவ்வுடல் ஒரு செயலைச் செய்வதற்கு ஆன்மா தூண்டு கோலாக இருக்கிறான். இத்தூண்டுகோலின் தன்மையே சத்தி எனப்படும். கண் ஒன்றைப் பார்க்கும் போதே செவி ஒன்றைக் கேட்கிறது. இவ்விரு செயல்களும் ஒரே காலத்தில் நடைபெறுவதாக நாம் நினைக்கின்றோம். ஆனால், கண் முதலிய இந்திரியங்கள் மனத்தோடு சம்பந்தப்பட்டாலொழிய, அந்தந்த இந்திரியம் அதனதன் காரியத்தைச் செய்ய இயலாது. மனம் அணுவாகையால், ஒரே சமயத்தில் இரு இந்திரியங்களோடு சம்பந்தப்படும் வன்மை அதற்கில்லை. ஆதலின், கண், நாசி, செவி முதலியவற்றின் செயல்கள் ஒரே காலத்தில் நிகழ்வதாக நமக்குத் தோன்றினும், இவற்றிற்குக் கால வேறுபாடு உள்ளது. ஈசுவரனோ, அங்ஙனமன்றி, உலக உயிர்கள் யாவற்றையும் ஒரே காலத்தில் நடத்தும் சத்தி பெற்றிருக்கின்றான். இது பகவானுக்குள்ள ஒரு விதச் சத்தியாகும்.

உலகிற்குண்டாகும் பிரளயாபத்தில் பகவான் சிறு பாலக ளுய், உயிருள்ளன உயிரற்றன ஆகிய எல்லாப் பொருள்களையும் தன் சிறு வயிற்றில் அடக்கிக்கொண்டு, அவற்றிற்கு ஒரு துன்பமும் நெருக்கமும் ஏற்படாவண்ணம் காப்பாற்றுகிருன். இத்தகைய ஈசுவரனே, சிறு பரமாணுவினிடத்திலும் தன்னை இருத்தி, விசால மான இடத்தில் வசித்தல் போன்று வசிக்கிருன். நரசிம்மனுய் வந்த போது, ஒரே சமயத்தில் அருள் சினம் ஆகிய இரு குணங்களும் அவனிடம் காணப்பட்டன. அருளுள்ள போது சினமும், சின முள்ள போது அருளும் மற்ருெருவரிடத்திலும் காண முடியா தல்லவா? இவை அகடிதகடனு சாமர்த்தியங்கள் எனப்படும். இவ்வாறு பல சத்திகளைக் காணலாம்.

ஒரு பொருளின் ஒரு நிலையை நோக்கும் போது காரணமாக வும், மற்ருெரு நிலையை நோக்கும் போது காரியமாகவும் இருத் தலைப் பிண்டம் குடம் என்னும் இடங்களில் காணலாம். குடத் திற்கு மண்பிண்டம் உபாதான காரணமாகும்.

மண்ணை, குடம் முதலிய பொருள்களாகச் செய்யும் அறிவும் சாமர்த்தியமும் குயவன் பெற்றிருத்தலால், அவன் நிமித்த காரண ளுகின்ருன்.

மண்ணிற்குக் குடம் முதலியவற்றைச் செய்யும் அறிவும் சத்தியுமில்லாமையால், அதை நிமித்த காரணம் எனச் சொல்லுதல் கூடாது. குயவனுக்குக் குடம் முதலியவைகளாக மாறும் வன்மை யின்மையின், அவனை உப்பாதான காரணம் என இயம்புதற்கு இயலாது.

உலகம், பகவான் என்னும், காரிய காரணப் பொருள்களை நோக்கும் போது, பகவான் உலகத்தை உண்டு பண்ணுதற்குத் தகுந்த அறிவு வன்மைகளைப் பெற்றிருத்தலால், அவன் நிமித்த காரணன் என்றும், ஸூக்ஷ்மசிதசித்துக்களோடுங் கூடிய அவனே, ஸ்தூலசிதசித்துக்களோடுங் கூடிய பிரமமாகக் காரிய காலத்தில் ஆகின்றமையின், உபாதானகாரணமென்றும் சொல்லப் படுகிருன். இதை வேதாந்தத்தில் ‘அபின்னநிமித்தோபதாநம் பிரமம்’ எனவழங்குவர்.

இங்குக் குடம் முதலியவைகளாக மாறும் வன்மை மண்ணுக் குள்ளது போன்று, உலகமாக மாறும் வன்மை பகவானுக்

குள்ளது. அதைத்தான் சத்தி எனக் கொள்ளுதல் வேண்டும். இஃதொரு விதச் சத்தி.

பலம்: தன் சங்கற்பத்தினுலேயே எல்லாப் பொருள்களேயும் தரிக்கும் வன்மை.

ஐசுவர்யம்: எல்லாப் பொருள்களேயும் நியமித்து நடத்தும் சாமர்த்தியம்.

வீரியம்: உலகப் பொருள் யாவற்றையும் உண்டாக்கித் தான் யாதொரு விகாரமுமின்றி இருத்தல். யாவற்றையும் தன் ஸங்கல்பத்தாலேயே தாங்கி, அவற்றை நியமித்து நடத்திக் கொண்டு போகும் போது புருவத்தினிடமும் வியர்வை தோன்ருதவாறு (ஆயாசம்) தளர்ச்சியின்றி இருத்தல்.

தேஜசு: ஆதித்தன்முன் மற்ற நட்சத்திரங்கள் ஒளிராதன போன்று, பகவான்முன் மற்றப் பொருள்கள் ஒளிரா. இந்நிலேயில் மற்றவற்றின் பிரகாசத்தை மறைக்கும் தன்மையே தேஜசு எனப் படும். இவை ஒரு திரள்.

அவதாரிகை: மேற்குறிப்பித்த ஆறு குணங்களும் முக்கிய மானவை. பின் வரும் குணங்கள் இவற்றைச் சார்ந்தவைகளும், பத்தன், பிரபன்னன் இவர்களேக் காக்க அனுகுணமானவைகளும் ஆகும். அத்தகைய குணங்களேச் சொல்லுகிருர்:

3. வாத்ஸல்ய ஸௌசீல்யாதிகளும்.

பொருள்: வாத்ஸல்யம், ஸௌசீல்யம், ஸ்வாமித்வம், ஸௌலப்யம் முதலிய எண்ணிறந்த கலியாண குணங்கள்.

விளக்கம்: வாத்ஸல்யம்: குற்றத்தையும் குணமாய்க் கொள்ளும் அளவற்ற அன்பு.

ஸௌசீல்யம்: உயர்ந்தவன் தாழ்ந்தவனேடு கலக்கும் போது, தன் உயர்வும், கலக்கப்படுபவனுடைய தாழ்வும் நெஞ்சிற் சிறிதேனும் தோன்ருமல் புரையறக் கலக்கும் பண்பு.

ஸ்வாமித்வம்: தன்னேயொழிந்த மற்றெல்லாப் பொருள் களுக்கும் தலேவனுயிருத்தல்.

ஸௌலப்யம்: யாவரும் தன்னேப் பற்றும்படி எளியனு யிருத்தல். இவை ஒரு திரள்.

அவதாரிகை: இதுகாறும் இயம்பி வந்த குணங்களுக்குப் பிரகாசமான, திவ்யமங்கள விக்கிரகம் சொல்லப்படுகிறது இப் பகுதியில்.

**4. திருமேனியும்.**

**விளக்கம்:** வினு: பகவானுக்கு விக்கிரகம் உண்டா?

**விடை:** உண்டு.

**வினு:** அங்ஙனமாயின், சிறந்த பிரமாணமான வேதத்தில், 'கண்ணில்லை பார்க்கிறான்; காதில்லை கேட்கிறான்; கையில்லை எடுக்கிறான்; காலில்லை வேகமாக நடக்கிறான்,' என்று சொல்லப்படும் வாக்கியம் பொருந்துமாறு யாங்ஙனம்?

**விடை:** பகவானுக்குக் குணங்கள் இல்லை என்று வேதத்தில் சில வாக்கியங்களில் சொல்லி இருப்பினும், அவனுக்குக் கலியாண குணங்கள் உண்டு என்பதை அவ்வேதத்தின் சில வாக்கியங்களே தெரிவிக்கின்றமையின், பகவானுக்குக் கீழ்மைக் குணங்கள் இல்லை; உயரிய குணங்கள் உண்டு எனவே கொள்ளுதல் வேண்டும். அதைப் போன்றே கண் முதலியன இல்லை எனச் சொல்லும் வேதத்திலேயே அப்பரமபுருஷனின் பெருமைக்குச் சேர, சிறந்த திவ்விய மங்கள விக்கிரகம் உண்டு எனத் தெரிவிக்கின்றமையின், அவனுக்கு நமக்குள்ள ஐந்து பூதங்களாகிய சரீரம் இல்லை; ஆனால், அவன் பெருமைக்குத் தகுந்த மேலான சரீரம் உண்டு என வரையறுக்க வேண்டியிருக்கிறது.

**வினு:** சரி; அச்சரீரம் ஒன்று, பலவா?

**விடை:** பலவாகும்.

**வினு:** அவை எவை?

**விடை:** பரமபதத்தில் பார்க்கப்படும் பரரூபமும் இவ்வுலகில் அவன் இச்சைக்கேற்பக் கொள்ளும் விபவ விக்கிரகங்களும், அர்ச்சையுமாகும்.

**வினு:** அங்ஙனமாயின், திருமேனியும் என ஒருமையாய்ச் சொல்லப்படுவது எங்ஙனம் பொருந்தும்?

**விடை:** இஃது ஒரு நெல் என்பதைப் போன்றதாகும். இஃதொரு திரள்.

அவதாரிகை : இனித் திருமேனியின் குணங்களைச் சொல்லு கிறார் :

5. காந்தி ஸௌகுமார்யாதிகளும்.

பொருள் : அழகு, மென்மை, மணம், யௌவனப் பருவம் முதலியன விக்கிரக குணங்கள்.

விளக்கம் : அழகு, அவயவத்திரளின் அழகு, தனித்தனி அவயவத்தின் அழகு என இரு வகைப்படும்.

ஈசுவரன் தவிர மற்றவருக்கு, அவயவத்திரள் அழகாயிருப் பின், தனித்தனி அவயவத்தை நோக்குங்கால் அழகாயிருத்தல் அருமை. தனித்தனி அவயக் கூறு அழகுடன் மிளிரின், அவயவத் தின் ஸமுதாயம் அழகுடன் காணப்படுதல் கடினம். இவ்விரண்டும் ஒருவருக்கு அமைந்திருப்பினும், அஃது ஒரு காலத்தில் இருத்தல் போன்று மற்றொரு காலத்தில் இருப்பதில்லை. அங்ஙனமன்றி, இரு வகையிலும் எப்போதும் அழகு பெற்றுத் துலங்குவது பகவானுடைய திவ்வியமங்கள விக்கரகமேயாகும். ஏனெனில், ஈசுவரனுடைய அழகு கன்மசம்பந்தத்தால் ஏற்பட்டதன்று ; இயற்கையிலேயே அமைந்தது.

பகவானுடைய திருமேனியின் வைலட்சணியம், பார்த்த போதே எத்தகையவரையும் பிணிக்கும் இயல்புடையது. இதைத் தான் பிள்ளைலோகாசாரியர், "ஒரு நாள் முகத்திலே விழித்தவர்களை வடிவழகு படுத்தும் பாடாயிற்றிது!" என்னும் வாக்கியத்தால் காட்டுகிறார். (ஸ்ரீ வசன பூஷணம் - 248) இதையே கம்பர்,

" தும்பியின் குழாத்திற் சுற்றும் சுற்றத்தன், றொடுத்த வில்லன்,
வெம்பிவெந் தழியா நின்ற நெஞ்சினன், விழித்த கண்ணன்,
தம்பிநின் றானை நோக்கித் தலைமகன் றன்மை நோக்கி
அம்பியின் தலைவன் கண்ணீ ரருவிசோர் குன்றின் நின்றான்."

என்னும் கவியினால் வெளியிடுகிறார். (இராமாயணம் - கங்கைப் படலம் - 54.)

சக்கரவர்த்தித் திருமகன் கங்கைக்கரையில் தங்கி இருக்கின் றான். இதைக் கேள்வியுற்ற குகன், சில கையுறைகளுடனும் தன் பரிவாரங்களுடனும் அங்குச் செல்லுகின்றான் ; ஸ்ரீ ராமபிரானை நோக்குகின்றான். அவ்விநாடியிலேயே அவனுடைய திருமேனியின்

அழகு, இவனையும் இவன் பரிவாரங்களின் மனத்தையும் கவர்ந்து விடுகின்றது. அவனை விட்டுப் பிரிய விருப்பமற்ற இவர்கள் அன்றிரவு அங்கேயே தங்கிவிட்டார்கள். ஸ்ரீ ராமபிரானும் பிராட்டியும் இலக்குமணர் இட்ட படுக்கையில் பள்ளிகொண்டுள்ளனர். இளையவர், 'இவர்களுக்குத் துஷ்டப் பிராணிகளால் என்ன தீங்கு நேருமோ!' எனக் கையில் வில்லைத் தாங்கியவராய்க் கண்ணும் கண்ணீருமாய் நின்று காவல் புரிகின்றனர். இதைக்கண்ட குகன் "எம்பெருமானை, ஒரு தம்பி காட்டிற்குத் துரத்தினான்; இத்தம்பி என்ன செய்ய வில்லுங்கையுமாய் நிற்கின்றனனோ!" என ஐயுற்று, "இவனால் இச்சீரியனுக்கு ஏதேனும் தீமை நேரின், உடனே இவனைப் போக்கி, பரமபுருஷனையும் பிராட்டியையும் காக்க வேண்டும்!" என்னும் உறுதியுடன் விற்கொண்டு நிற்கின்றான். இவனுடைய சேனைகளோ, இருவரிடமும் ஐயங்கொண்டு, இவ்விருவரையும் கண்ணிமையாமல் பார்த்துக்கொண்டு ஆயுத பாணிகளாய் நிற்கின்றன. இதற்குக் காரணமென்ன? அப்பகவானுடைய வடிவழகன்றோ?

இங்கு, தன் விபூதியை மஹாபலி கவர்ந்துகொள்ளத் "தேவர்கள் துன்பப்பட்ட அக்காலத்தில் இவ்வுலகத்தைத் தன் இரண்டடியால் அளந்துகொண்டவனே, உன் திருவடிகளுக்கு மங்களமுண்டாகக் கடவது!" என எம்பெருமான் திருவடிகளுக்கு மங்களாசாசனம் செய்த ஆண்டாள் வாக்கையும் நோக்குக.

"அன்றிவ் வுலக மளந்தாய் அடிபோற்றி!"

மென்மை: ஆன்ம மென்மை, விக்கிரக மென்மை ஆகிய இரண்டனுள், விக்கிரக மென்மையே இங்குச் சொல்லப்படுகிறது. பிராட்டிமார் பூத்தொடுதல் போன்று கூசிப்பிடிக்கும் திருவடிகளைக்கொண்டு, காடு மேடுகளை அளந்ததும், தங்களுக்காய்ப் படுக்கையிலிருந்து பத்தெட்டடி நடந்து வந்ததுமான அவன் அழகையும் சீலத்தையும் முன் செப்பியது போலவே, ஆண்டாள், மென்மையையும் "அன்றிவ் வுலக மளந்தாய் அடிபோற்றி!" என்னும் அதே அடியில் பாராட்டுகிறாள்.

மணம்: மலர் கதம்பமாய் எங்ஙனம் பல வித மணத்தையும் வீசுகின்றதோ, அங்ஙனமே ஈசுவரனிருக்குமிடத்தில் பல வகை மணம் வீசும். அஃது அவன் திருமேனியின் குணம் எனப்படும்.

பருவம்: பகவான் எப்போதும் யௌவனப் பருவமுடையவ னாகவே இருப்பவன். அவனுக்கு முதுமை முதலியன இல்லை. இதற்கு, இராமலட்சுமணர்களால் பங்கமடைந்த சூர்ப்பணகை தன்னைச் சேர்ந்த கரன்முதலிய அரக்கர்களிடம் தன் நிலையை அறிவிக்கின்றபோது, அதை மறந்தவளாய், அவ்விருவர் பருவத்தி லேயே ஈடுபட்டவளாய், "தருணௌ, ரூபசம்பன்னௌ" என் னும் சுலோகத்தில் பாராட்டிப் பேசுகின்றதே தக்க சான்றாகும்.

**அவதாரிகை:** மேற்கூறிய அழகு முதலானவைகளைப் போன்று, மலர் பூத்ததெனக் காணப்படும் திருமேனியில் அணிந் துள்ள திவ்விய ஆபரணங்களைச் சொல்லுகிறார்:

6. "திவ்யபூஷணங்களும்"

**பொருள்:** திருவடிகளில் அணியும் நூபுரம் முதல் திருமுடி யில் அணியும் திருவபிஷேகம் (மகுடம்) வரையும் உள்ள ஆபர ணங்களாகும்.

**விளக்கம்:** பகவானுடைய திவ்வியமங்கள விக்கிரகத்தில் பார்க்கப்படும் ஆபரணங்கள், உலகில் காணும் ஆபரணங்களைப் போன்றனவல்ல. ஏனெனில், மற்றைய ஆபரணங்களுக்குத் தோற் றம், அழிவு முதலிய சில குற்றங்கள் உண்டு. அன்றியும், சில அணிகள் சிலருடைய அவயவங்கட்குப் பொருத்தமற்றனவாயு மிருக்கலாம். ஈசுவரனுடைய திருவாபரணங்களோ, மேற்குறிப் பித்த குற்றங்கள் அற்றனவாயிருத்தல் மட்டுமேயல்லாமல், அவை கள் அவனுடைய அங்கங்களுக்கு மலர் பூத்தது போன்று பொருத்தமுடையவைகளாகவுமிருக்கின்றன.

உலகில் நாம் காணும் ஆபரணங்கள், பொன் இரத்தினங்கள் முதலியவற்றாலேயே ஆக்கப்பட்டுள்ளன. பகவானுடைய ஆபர ணங்களோ, அத்தகையன அல்ல. சேஷன், கருடன், விஷ்வக் சேனன் முதலியவர் எங்ஙனம் பகவானுடைய இச்சைக்கேற்ப, ஒவ்வோர் அப்ராகிருத சரீரத்தை மேற்கொண்டு, ஒவ்வொரு கைங் கரியத்தைச் செய்து அவனை உவப்பிக்கின்றனரோ, அங்ஙனமே ஒவ்வொரு நித்திய சூரியும் பகவானுடைய விருப்பத்திற்கேற்ப, அப்ராகிருதமான ஒவ்வோர் ஆபரண வடிவத்தை மேற்கொண்டு அவனுடைய திவ்விய அவயவங்களில் அமைந்து ஈசுவரனை உவப்பிக் கின்றனர். இந்த முறையைப்பற்றியே பகவானுடைய ஆபரணங்க

ளுக்கு, "திவ்யாபரண ஆழ்வார்கள்" என்னும் திருநாமம் ஒன்றும் வழங்கி வருகின்றது. உலகிலுள்ள மற்ற ஆபரணங்களுக் கில்லாத மென்மை, மணம், அழகு, ஒளி முதலியன இவ்வாபரணங் களுக்குண்டு.

இவை, திருவபிஷேகத்தின் கீழ்ச்சுற்று, மேல்கவிப்பு, திருச் செவி மலர், மகராகாரமானதோடு, திருவட்டமணி, திருவாரம், திருத்தோள்வளை, திருவளை, திருமறு, ஸ்ரீ கௌஸ்துபம், முத்தாரம், திருவுதரபந்தனம், திருப்பீதாம்பரம், அரைநூல் பட்டிகை, நூபுரம் முதலியன. இங்குச் செவிமலர், திருமறு, பீதாம்பரம் இம்மூன் றும் மற்ற ஆபரணங்களைப் போன்றே பகவானுடைய திருமேனி யில் அந்தந்த அவயவத்தில் அமைந்திருந்து அழகு தருதலின், இவையும் ஆபரணங்களின் திரளிலேயே சேர்க்கப்பட்டுள்ளன. எம்பெருமானர் கத்தியத்தில் ஆபரணங்களைப் பற்றிக் கூறும் முறை இஃதாகும். ஈசுவரனுடைய ஆபரணங்கள் எண்ணிறந்தன. இவை ஒரு திரள்.

அவதாரிகை : இனி ஆபரணங்களைப் போன்றே உள்ள ஆயு தங்கள் சொல்லப்படுகின்றன :

7. " திவ்யாயுதங்களும் "

பொருள் : சங்கம், சக்கரம், கதை, சார்ங்கம் முதலிய எண் ணிறந்த ஆயுதங்களாகும்.

விளக்கம் : வினு : ஆயுதங்கள் எப்படி ஆபரணங்கள் ஆகும் ?

விடை : இவைகள் யாவருக்கும் கேவலம் ஆயுதங்களாகவே புலப்படுதல் இல்லை. பகவானை வெறுத்து நிற்கும் பிரதிகூலருக்கு இவை ஆயுதங்களாய்த் தோன்றும். அவனை விரும்பி நிற்கும் அனு கூலருக்கோ, இவை அழகிய ஆபரணங்களாய்த் தோன்றும். இத னாற்றான் ஆழ்வார், 'கூராராழி வெண்சங்கேந்தி...........வாராயே' என இறைஞ்சுகின்றார். ஆபரணங்களுக்கெங்ஙனம் தோற்றம், அழிவு, முதலிய குற்றங்கள் இல்லையோ, அங்ஙனமே ஆயுதங்களுக் கும் இவை இல. நித்தியசூரிகளே, திவ்யாபரணாழ்வார்கள், திவ்யா யுதாழ்வார்கள் எனப் பெயர் பெற்றுள்ளார்கள். அவைகள் பகவானுடைய ஆயுதங்கள் என்னும் நிலைக்கேற்ப ஞானம் சக்தி முதலியவற்றைப் பெற்றிருக்கின்றன.

பகவானைக்காட்டிலும் ஆயுதங்களுக்குக் கிருபை அதிகம். காகாஸுரனைத் துரத்திச்சென்ற பெருமாளுடைய பாணம், அவனை அப்போதே அழித்திலது. இதற்கு, "இவன் ஈசுவரனை அடைந்து உய்யட்டும்," என்னும் அதனுடைய கிருபையே காரணம் எனச் சொல்லப்படுகிறது.

எம்பெருமான் இத்தகைய ஆயுதங்களை அடக்கி ஆள்பவன் என்பதைப் பெரியாழ்வார், "சார்ங்கமென்னும் வில்லாண்டான் றன்னை" என்னும் சொற்றொடரால் தெரிவிக்கின்றார்.

ஈசுவரனுடைய ஆயுதங்களுக்கோ அளவில்லை. பகவானுக்கு எண்ணிறந்த குணங்கள் இருப்பினும், எங்ஙனம் ஞானம் சக்தி முதலிய ஆறு குணங்கள் மட்டும் சிறப்பாய்ச் சொல்லப்படுகின்றனவோ, அங்ஙனமே ஆயுதங்கள் பலவாயினும், பஞ்சாயுதங்கள் மட்டும் சிறப்பாய்ப் புகலப்படுகின்றன.

**அவதாரிகை :** மேற்கூறிய திரள்களோடுங் கூடியே பகவத் தத்துவம் உள்ளது. 'பகவானுக்கமைந்த கலியாண குணங்கள், காட்டில் காயும் நிலவைப்போன்று பயனற்றனவோ?' என்னில், அன்று என்கிறார் இச்சொற்றொடரினால்.

**8. "பெரிய பிராட்டியார் தொடக்கமான நாய்ச்சிமார்களும்"**

**பொருள் :** இவர்கள், பெரிய பிராட்டியார், பூமிப் பிராட்டியார், நப்பின்னைப் பிராட்டியார் ஆகிய பிரதான மஹிஷிகளும், மற்ற மஹிஷிகளுமாவார்கள்.

**விளக்கம் :** வினா : பரம புருஷனுக்கு, ஸ்ரீ, பூமி, நீளைகள் ஆகிய மஹிஷிகள் தவிர, இன்னும் பல மஹிஷிகளும் உண்டோ?

**விடை :** ஆம், உண்டு. பட்டர், திருமகளைப் பார்த்து, "இலட்சுமியே, உனக்கு அங்கமாய் பூதேவியோடு நீளாதேவியும் இன்னும் ஆயிரம் தேவிமார்களும் இருக்கின்றனர்" என ஸ்ரீகுணரத்ன கோசத்தில் பகருவதை நோக்குக. இஃது ஒரு திரள்.

**அவதாரிகை :** பகவான், பிராட்டியார் ஆகிய இருவர் சேர்த்தியில், எப்போதும் கைங்கரியத்தைச் செய்து இன்பந்துய்க்கும் அதிகாரிகளைச் சொல்லுகிறார்.

**9. "நித்ய ஸூரிகள்."**

**பொருள் :** அனந்தன், கருடன், விஷ்வக்ஸேனன் முதலியவர்கள் நித்திய சூரிகளாவார்கள்.

**விளக்கம் :** மேற்குறிப்பித்தவர்கள் பரமபதத்தில், பரமபுருஷனைக் காலதத்துவம் உள்ளளவும் அனுபவித்துக்கொண்டு அவனுக்குக் கைங்கரியஞ்செய்பவர்களாதலால், இவர்கட்கு நித்தியர்கள் எனத் திருநாமம் அமைந்தது. இவர்கள் எண்ணில் அடங்கினவர்களல்லர். இஃதொரு திரள்.

**அவதாரிகை :** மேற்கூறிய நித்திய சூரிகள் பரமபுருஷன் முகமலர்த்திக்குறுப்பாய் அடிமை செய்யும்போது இன்றியமையாது வேண்டுவனவற்றைச் சொல்லுகிறுர்.

10. **" சத்ர சாமராதிகளும் "**

**பொருள் :** குடை சாமரம் முதலியன அடிமை புரியும்போது இன்றியமையாது வேண்டற்பாலனவாகும்.

**விளக்கம் :** முன்னர்ச் செப்பிய திவ்விய ஆபரணங்களையும், திவ்விய ஆயுதங்களையும் போன்றவையே இச்சத்திர சாமராதிகளும். இஃதொரு திரள்.

**அவதாரிகை :** மேற்குறிப்பிட்ட மஹிஷிமார், பரிஜனங்கள் ஆகிய இவர்களோடுங்கூடிய பகவானை, அன்போடு நோக்கிக் காக்கும் திருவாயில் காக்குமவர்களைச் சொல்லுகிறுர் :

11. **" திருவாசற் காக்கும் முதலிகளும் "**

**பொருள் :** திருவாசல் காக்கும் முதலிகள், 'இச்சேர்த்திக்கு என் வருமோ !' என வயிறு எரிந்து எம்பெருமானை நோக்கிக் கொண்டிருப்பவர்கள். இஃதொரு திரள்.

**அவதாரிகை :** இங்ஙனமே பகவானை மங்களாசாசனஞ் செய்து வாழும் மற்றும் சிலரைச் சொலுகிறுர் :

12. **" கணதிபரும் "**

**பொருள் :** இவ்வாறு எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடுபவராய், அப்பரமபதத்திற்குத் தக்க காவலராயிருப்பவர் கணதிபராவர்.

**விளக்கம் :** திருவாசல் காக்கும் முதலிகளாவார், பகவான் கோவில்கொண்டெழுந்தருளியிருக்கும் வாசலிலேயே நின்று

அவனுக்கு மங்களாசாசனம் செய்துகொண்டிருப்பவர். கணுதி பரோ, பகவான் எழுந்தருளியிருக்கும் க்ஷேத்திரத்தையே நோக்கி மங்களாசாசனம் செய்துகொண்டிருப்பவர். இஃதொரு திரள்.

அவதாரிகை : இந்த உலகில் நம்மைப் போன்று சமுசாரிகளாயிருந்து முத்தி பெற்றவர்களைச் சொல்லுகிறுர் :

13. "முக்தரும்"

பொருள் : சுகர் வாமதேவர் முதலானவர் முக்தராவர். இவர்கள் நித்திய சூரிகளோடு கலந்து பகவானை அனுபவித்து அடிமை செய்து வாழ்ந்துகொண்டிருப்பார்கள். இஃதொரு திரள்.

அவதாரிகை : அவ்வடிமையை வளர்க்கும் தேசத்தைச் சொல்லுகிறுர் :

14. "பரமாகாசமும்"

பொருள் : பரமபதமே பரமாகாசமாகும்.

விளக்கம் : இவ்வுலகம் ஒன்ருகவே தோன்றினும், எவ்வாறு இது பஞ்சபூதங்களினுல் ஆக்கப்பட்ட கூட்டுப் பொருளாகவே உள்ளதோ, அவ்வாறே பரமபதமும் ஒன்ருகவே தோன்றினும், பஞ்சோபநிஷத்துக்கள் என்னும் ஐந்து பொருள்களால் ஆக்கப்பட்ட கூட்டுப் பொருளாகவே உள்ளது. இஃதும் ஒரு திரளே.

வினு : பரமபதம் பஞ்சோபநிஷத்துக்களால் ஆக்கப்பட்டதெனச் சொன்னீர்கள். அங்ஙனமாயின், அதை நித்தியம் என இயம்புவது எவ்வாறு பொருந்தும்? அதுவும் காலம் பிரகிருதி முதலியவற்றைப் போன்று அவத்தைகள் உடையனவாயன்ருே தெரிகிறது ?

விடை : இல்லை. லோகாசாரியர் தத்துவத்திரயத்தின் அசித்துப் பிரகரணத்தில், "இதில் சுத்த ஸத்துவமாவது, ரஜஸ் தமஸுக்கள் கலசாதே, கேவல ஸத்வமாய், நித்யமாய், ஜ்ஞாநாநந்த ஜநகமாய்க் கர்மத்தாலன்றிக்கே கேவல பகவதிச்சையாலே விமான கோபுர மண்டப ப்ராஸாதாதி ரூபேண பரிணமிக்கக் கடவதாய், நிரவதிக தேஜோரூபமாய், நித்திய முக்தராலும் ஈசுவரனுலும் பரிச்சேதிக்கவரிதாய், அத்யத்புதமாய் இருப்பதொன்று" என்று சுத்த சத்துவத்தைப் பற்றி அருளிச்செய்கிருர்.

இந்தச் சூத்திரத்தில் சுத்த சத்துவத்திற்கு 'நித்தியமாய்' என்னும் ஓர் அடைமொழியைக் கொடுத்திருத்தலே நோக்குதல் வேண்டும். சுருதி ஸ்மிருதி முதலிய பிரமாணங்களில் சுத்த சத்துவம் நித்தியம் எனச் சொல்லப்படுதல் போன்று, பிரகிருதியும் நித்தியம் எனச் சொல்லப்பட்டிருக்கிறது. அங்ஙனம் சொல்லி இருப்பினும், அப்பிரகிருதி நித்தியத்துவத்திற்கும், சுத்த சத்துவத்தின் நித்தியத்துவத்திற்கும் வேறுபாடுண்டு. அந்தந்தச் சீவதத்துவத்தின் கன்மானுகுணமாய்ப் பயன்படும் பிரகிருதி, மகா பிரளய காலத்தில் சூக்கும தசையை அடைகிறது. ஆயினும், அப்பொருள் அழியாமல் இருத்தல் பற்றி அதுவும் நித்தியமெனவே பகரப்படுகிறது. சுத்த சத்துவமோ, கன்மானுகுணமாக மாறுதல் அடையும் பொருளன்று; பகவானுடைய போகத்தின் பொருட்டே அவனுடைய இச்சைக்கேற்ப மண்டபம் முதலியவைகளாய் மாறுதல் அடையக் கூடிய பொருளாயுள்ளது. இவ்வுலகில் பிரளய சிருஷ்டிகளைச் சாத்திர மூலமாய்க் காண்பது போல, அங்குக் காண்பதற்கியலாது. இக்கருத்தைக்கொண்டே இதை நித்தியமென லோகாசாரியர் இயம்பி உள்ளார்.

அவதாரிகை : இதுகாறும் நித்திய விபூதியிலுள்ள நாரங்களைப் பற்றி வெளியிட்டார். இனி இவ்வுலகிலுள்ள நாரங்களைப் பற்றி வெளியிடுகிறார் :

15. "ப்ரக்ருதியும்"

போருள் : சத்துவம், ரஜசு, தமசு என்னும் முக்குணங்களோடுங் கூடிய அசித்துத் தத்துவம் பிரகிருதி எனப்படும்.

விளக்கம் : இம்முறையில் குணங்கள் பலவாயிருத்தல் பற்றி இதை ஒரு திரள் என ஆசாரியர் கூறுகின்றனர்.

அவதாரிகை : இப்பிரகிருதியோடு சம்பந்தப்பட்ட சீவதத்துவத்தைச் சொல்லுகிறார் :

16. "பத்தாத்மாக்களும்"

போருள் : உரைமெழுகில் பொன்போல, இப்பிரகிருதிக்குள் ஆன்மாக்கள் உரு மாய்ந்து கிடப்பார்கள். இஃது ஒரு திரள்.

அவதாரிகை : இப்பத்தாத்துமாக்களும் கால தத்துவத்தை யொட்டியே நடைபெற வேண்டியிருத்தலின், இங்குக் காலத்தை இயம்புகிறார் !

17. " காலமும் "

பொருள் : சத்துவம், ரஜசு, தமசு ஆகிய இம்முக்குணங்களும் இல்லாத அசித்து, காலம் எனப்படும்.

விளக்கம் : இமை கொட்டுதல் முதல், ஆண்டு ஈருக மாறுத லடையக் கூடியது கால தத்துவம். இஃதொரு திரள்.

அவதாரிகை : காலத்தை அனுசரித்து நடைபெறும் பிரகிருதி யின் காரியப் பொருள்களைச் சொல்லுகிருர் :

18. " மஹதாதி விகாரங்களும் "

பொருள் : மஹான், அகங்காரம், பஞ்ச பூதங்கள், ஞானேந் திரியங்கள் முதலியன.

விளக்கம் : காலம் என்னும் வரை சொரூபதோநித்தியங்கள். மஹதாதி விகாரங்களும், அதற்குப்பின் சொல்லப்பட்டவைகளும் பிரவாஹதோநித்தியங்கள். இவை இரண்டையும், ' சமுசாரிகள் தங்களையும் ' என்னும் சூத்திரத்தில் விளக்கியுள்ளோம்.

அவதாரிகை : மகான் முதலிய தத்துவங்களால் ஆக்கப் பட்டவைகளைச் சொல்லுகிருர் :

19. " அண்டங்களும் "

பொருள் : கீழேழு மேலேழு ஆகிய பதினுன்கு லோகங் களைக் கொண்டது ஓர் அண்டம். இந்த அண்டத்திற்கு எண் ணில்லை. இஃதும் ஒரு திரள்.

அவதாரிகை : அண்டத்தில் உள்ளவர்களைச் சொல்லுகிருர் :

20. " அண்டத்துக்குட்பட்ட தேவாதி பதார்த்தங்களும் "

பொருள் : தேவர், மனிதர், பறவைகள் முதலியன.

அவதாரிகை : இதுகாறும் நார பதத்தைச் செப்பி, மேல் அயன பதத்தின் பொருளை இயம்புகிருர் :

மூலம் : 98. "அயநமென்றது—இவற்றுக்காச்ரய மென்றபடி."

பொருள் : அயநம் என்னும் பதம், முன்பு குறித்த எல்லாப் பொருள்களுக்கும் ஈசுவரன் ஆதாரமாயிருக்கிருன் என்பதைத் தெரிவிக்கின்றது.

அவதாரிகை : முன் நாராயண பதத்திற்கு, தத்புருஷ ஸமா ஸம், பகுவிரீஹி ஸமாஸம் என்னும் புணர்ச்சிகளைப் பற்றிக் கூறி யுள்ளோம். அவற்றுள், "அயநம் என்றது" என்னும் முன் சூத்திரம் தத்புருஷ ஸமாஸத்தின் பொருளைச் சொல்லுகிறது. இச் சூத்திரமோ, பகுவிரீஹி ஸமாஸத்தின் பொருளைச் சொல்லுகிறது :

**மூலம் : 99. "அங்ஙனன்றிக்கே, இவைதன்னை ஆச் ரயமாகவுடையனென்னவுமாம்."**

பொருள் : முன் சூத்திரத்தில் சொன்னதன்றிக்கே, அப்பொ ருள்களைத் தனக்கு ஆதாரமாய் உடையவன் (பொருள்களுக்குள் வியாபித்திருக்கிறவன்) என்பதையும் குறிக்கின்றது.

விளக்கம் : தத்புருஷ ஸமாஸத்தில், நாரசப்தம் பகவா னுடைய கலியாண குணங்களையும் குறிக்கும். பகுவிரீஹி ஸமாஸத்திலோ, நாரசப்தத்திற்குக் குணங்கள் தவிர, சேதனுசேத னங்கள் பொருளெனக் குறிக்கும். இந்த ஸமாஸத்தில், குணங் களையும் பொருளெனக் கொள்ளின், ஆன்மாச்ரயம் முதலிய தோஷங்கள் ஏற்படும். இதைப் பற்றி, 'அசிஷ்டப் பரிக்கிஹரமும் அபூர்த்தியும்' என்னும் 66-ஆம் சூத்திரத்தில் தெரிவித்துள்ளோம்.

அவதாரிகை : இவ்விரண்டு ஸமாஸத்தாலும் தேறின பொருளை இந்தச் சூத்திரத்தால் அருளிச் செய்கிறுர் :

**மூலம் : 100. "இவை இரண்டாலும் பலித்தது பரத்வ ஸௌலப்யங்கள்."**

பொருள் : ஈசுவரன், தன்னை ஒழிந்த மற்றெல்லாப் பொருள் களுக்கும் ஆதாரன். இங்ஙனமிருக்கையே பரத்துவம். இது தத்புருஷ ஸமாஸத்தில் தேறிய பொருள். இங்ஙனம் உயர்ந்த தன்மை வாய்ந்த தான், சேதனுசேதனங்களில் தன்னை அமைத்துக் கொண்டு இருத்தலே சௌலப்பியம். இது பகுவிரீஹி ஸமாஸத் தில் தேறிய பொருள். இவை மட்டுமேயல்லாமல், ஒவ்வொரு ஸமாஸத்திலும், பரத்துவ சௌலப்பியங்கள் ஆகிற இரண்டையும் தேறிய பொருளாய்க் காணலாம்.

வினு : தத்புருஷ ஸமாஸத்தில் சௌலப்பியத்தைத் தேறிய பொருளெனக் கூறுவது யாங்ஙனம்?

**விடை :** தன்னை ஒழிந்த எல்லாப் பொருள்களுக்கும், தன் சங்கற்பத்தாலும், தன் சொரூபத்தினுலும் பகவான் ஆதாரன் என்பது வேதாந்த சாத்திரங்களில் சொல்லப்படும் பொருள். ஒவ்வொன்றையும் சங்கற்பத்தால் தரிக்கும் போது பரத்துவம் வெளிப்படுகிறது. பொருள்களின் உயர்வு தாழ்வுகளை நோக்காது, எல்லாவற்றையும் தானே தரிக்கும் போது சௌலப்பியம் வெளிப்படுகிறது.

**வினு :** சரி; பகுவிரீஹி ஸமாஸத்தில், பரத்துவத்தைத் தேறிய பொருளெனக் கொள்வது எவ்வாறு?

**விடை :** ஒவ்வொரு பொருளிலும் தன்னை ஆன்மாவாய் அமைத்துக்கொண்டிருக்கையே இந்த ஸமாஸத்தின் பொருளாதலினுலும், ஒவ்வொரு பொருளின் உட்புக்கிருந்து அதை நியமித்துக் கொண்டு போதலே ஆன்மாவாய் இருத்தலுக்குப் பொருளாதலினுனும் இங்குப் பரத்துவம் வெளிப்படுகிறது.

**அவதாரிகை :** இன்னும் ஒரு வகையினுல், இவ்விரண்டு ஸமாஸத்தாலும் கிடைக்குமவற்றைப் பகருகிறுர் :

**மூலம் : 101. "அந்தர்யாமித்வமும், உபாயத்வமும், உபேயத்வமுமாகவுமாம்."**

**பொருள் :** பகுவிரீஹி ஸமாஸத்தில், மேற்கூறியபடி ஒவ்வொன்றிலும் உட்புக்கிருந்து நியமித்துக்கொண்டு போகின்றவன் பகவான் என்பதை அறிந்தோம். அங்ஙனமிருக்கையே அந்தர்யாமித்துவம் எனப்படும்.

நாராயணபதத்தில் உள்ள அயநபதத்திற்கு, உபாயம் உபேயம் என்னும் இரண்டு பொருள் கிடைக்கும் விதத்தை 98 ஆம் சூத்திரத்தில் குறிப்பித்துள்ளோம். தத்புருஷ ஸமாஸத்தில் சீவாத்மாக்களுக்குப் பகவான் உபாயோபேயமாய் இருக்கின்றுன் என்னும் பொருள் கிடைக்கின்றது.

**விளக்கம் :** பகுவிரீஹி ஸமாஸத்தில் பகவான் தன்னுடைய குணங்கள் தவிர, மற்றச் சேதனுசேதனங்கள் ஒவ்வொன்றிலும் ஆன்மாவாய் இருப்பவன் என்பது தெளிவாகிறது. தத்புருஷ ஸமாஸத்திலோ அறிவற்ற அசேதனங்கள் தவிர, ஞானம் உள்ள சீவான்மாக்களுக்கும் உபாயோபேயமாய் இருப்பவன் பகவான் என்பது தெள்ளிதின் புலப்படும். இன்னும் இதை நுணுகி நோக்

கின், பகுவிரீஹி ஸமாஸத்தில் குணங்களையொழிந்த பொருள்களை யும், தத்புருஷ ஸமாஸத்தில் அசித்தையொழிந்த சேதனப் பொருள் களையும் நார சத்தம் குறிக்கும் என்பது தேறும்.

**அவதாரிகை :** முன் சூத்திரத்தில் சீவான்ம சமூகத்திற்குப் பகவான் உபேயமெனச் சொல்லப்பட்டது. அவ்வுபேயம் என் னும் சொல்லில், 'எல்லாவித உறவு முறையும்' என்பது அடங்கி யுள்ளது. ஆதலின் அதை அருளிச்செய்கிறார் :

**மூலம் : 102. "எம்பிரானெந்தை" என்கையாலே ஈச்வரனே எல்லாவுறவு முறையுமென்று சொல்லும்.**

**பொருள் :** நாராயணன் என்னும் திருநாமத்தின் பொருளை அனுசந்தானம் செய்யும் திருமங்கையாழ்வார், "நாராயணன், எனக்கு உபகாரனும், தந்தை முதலிய எல்லா உறவு முறையாயும், என்னை ஆள்பவனும், என்னுடைய வாணாளாயும் இருக்கின் றான்," எனக் கூறுகிறார்.

**விளக்கம் :** "எம்பிரா னெந்தையென்னுடைச் சுற்றம்........ வாணாள்" (சேல் போன்ற அழகிய கண்களை உடைய மங்கை யரும், மிக்க செல்வமும், நற்பண்புகள் வாய்ந்த புதல்வரும், பல நலங்களையும் செய்து போகும் பெற்றோரும் அப்பெருமானே) என, ஆழ்வார் இயம்புகின்றமையின், ஈசுவரனே இவ்வான்மாக்களுக்கு எல்லாவித உறவுமாக இருக்கின்றான் என்பது தெரிகிறது.

**அவதாரிகை :** பகவான் இங்ஙனம் உறவாயிருந்து இவ னுக்குச் செய்வது யாது? என்ன அதை அருளிச்செய்கிறார் :

**மூலம் : 103. "நாம் பிறர்க்கானவன்றும், அவன் நமக் காயிருக்கும்."**

**பொருள் :** நாம் ஈசுவரனோடு கலவாமல், பிறர்பால் சார்ந்து அவர்க்கு நல்லவராய் இருக்குங் காலத்தும், அவன் நம்மை விடாது பற்றி, நமக்கு நல்லவனாய் இருந்து காரியங்களைச் செய்து கொண்டு போவன்.

**அவதாரிகை :** 'நாம் பிறர்க்கானவன்றும், அவன் நம் பக்க லிலேயே இருந்து, அவன் செய்வதுதான் எது?' என்ன, அதைச் செப்புகிறார் :

மூலம் : 104. "இராமட மூட்டுவாரைப்போலே, உள்ளே பதிகிடந்து ஸத்தையே பிடித்து நோக்கிக்கொண்டு போரும்."

பொருள் : தன் தாயிடம் நேராய்ப்போந்து தனக்கு வேண்டுவன பெற்று இன்புறாது, தன் அகந்தையினால் துன்புற்றுழலும் மகனையும் கைவிடுதற்கு மனங்கொள்ளாமையின், பிறர் அறியா வண்ணம், இரவில் அன்னம் இடும் சத்திரங்களுக்குச் சென்று, தாயாகிய தான் தன் முகத்தைக் காட்டாமல் மறைந்திருந்து, அவனுக்கு அன்னம் இட்டு, அவன் பசிப்பிணியை ஆற்றி, அவனை உயிர் வாழச்செய்யும் அன்பு கெழுமிய அன்னையைப் போன்று, சேதனருக்கு எல்லா உறவின் முறையாயும் இருக்கும் ஈசுவரன், நாம் அஹங்காரத்தின்பாற்பட்டு, 'அவனை வணங்கேன்' எனச் சொல்லிக்கொண்டு, அவன் சார்பில் சாராமலும், அவனுக்குத் தொண்டு புரியாமலும் காலங்கழிக்கும் போதும், நம் கண்முன் தோன்றாமல் நம்முள் அந்தரியாமியாயிருந்து, பல நலங்களையும் புரிந்து, நம் சத்தையே நோக்கிக் கொண்டு நம்மை உய்விக்கின்றான்.

ஆகவே, இந்நாராயண பதத்தினால், கைங்கரியத்தை ஏற்றுக் கொள்பவனான ஈசுவரன் நிலைகளை அறிந்தோம்.

அவதாரிகை : இனி, வேற்றுமையினால் கைங்கரியத்தைப் பிரார்த்திக்கிற படியைச் செப்புகின்றார் :

மூலம் : 105. "ஆய என்கிற இத்தால்—"சென்றால் குடையாம்" என்கிறபடியே எல்லா அடிமைகளும் செய்யவேணும் என்று அபேக்ஷிக்கிறது."

பொருள் : "நாராயணாய" என்பதில் உள்ள "ஆய" என்னும் வேற்றுமை, எங்ஙனம் திருவனந்தாழ்வான், "சென்றால் குடையாம்" என்றவாறு ஈசுவரனுக்கு எல்லாக் கைங்கரியங்களையும் புரிதற்கு விரும்புகின்றனனோ, அங்ஙனமே சேதனன் ஈசுவரனுக்கு எல்லாத் தொண்டுகளையும் புரிய விரும்ப வேண்டும் என்பதைத் தெரிவிக்கின்றது.

விளக்கம் :

"சென்றால் குடையாம் இருந்தால்சிங் காசனமாம்
நின்றால் மரவடியாம் நீள்கடலுள்—என்றும்

புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்
அணையாம் திருமாற் கரவு."

முதல் திருவந்தாதி - 53.

இதனால் திருவனந்தாழ்வான், பிராட்டியோடுங் கூடியிருக்கும் பெருமானுக்கு, உலாவுங்கால் குடையாகவும், எழுந்தருளியிருக்குங்கால் அரியணையாகவும், நின்றுகொண்டிருக்குங்கால் பாதுகையாகவும், பரந்த கடலில் திருப்பள்ளி மெத்தையாகவும், மங்கள தீபமாகவும், அழகிய திருப்பரிவட்டமாகவும், தழுவிக் கொள்வதற்கு உரிய அணையாகவும் இருப்பான் என்பதை அறிகின்றோம்.

அவதாரிகை: சிலருக்கு ஏற்படும் ஐயத்தை இச்சூத்திரத்தால் அநுவதித்துப் பேசுகிறார். (அநுவதித்தல் - ஒருவர் சொல்வதைத் திருப்பிச் சொல்லுதல்.)

**மூலம்: 106. " 'நமஸ்ஸாலே,' தன்னோடுறவில்லை என்று வைத்து கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கக் கூடுமோ? என்னில்,"**

பொருள்: நமஸ்ஸாலே நாம் அறிந்துகொண்டது யாது? சேதனன் தனக்கென்று ஒன்றையும் விரும்பிச் செய்தற்குச் சுதந்தரமற்ற அத்தியந்த பரதந்திரன் என்பதையன்றோ? அங்ஙனமிருக்க, இந்த 'ஆய' பதம், சேதனன் ஈசுவரனுக்கு எல்லாக் கைங்கரியங்களையும் செய்தற்கு வேட்கை கொள்ள வேண்டும் என்பதைத் தெரிவித்தல் யாங்ஙனம் பொருந்தும்? இது சுதந்தரத்தின் பாற்படாதோ?

அவதாரிகை: இக்கேள்விக்கு விடை பகருகிறார்:

**மூலம்: 107. " 'படியாய்க்கிடந்துன் பவளவாய் காண்பேனே,' என்கிறபடியே கைங்கர்ய ப்ரார்த்தனை வந்தேறியன்று; ஸ்வரூப ப்ரயுக்தம்."**

பொருள்: "[1] படியாய்க்கிடந்து உன் பவளவாய் காண்பேனே," என்னும் குலசேகராழ்வார் திருவாக்கின்படி, அத்தியந்த பாரதந்திரியமுள்ள சீவனுக்குக் கைங்கரியத்தை விரும்புவது

குறிப்பு: 1. பெருமாள் திருமொழி. 4: 6.

அகங்காரமடியாய் இடையில் வந்ததன்று. சேஷிப்பொருளான பகவானுக்குச் சிறப்பை விளைத்தல்லது தான் தரிக்க இயலாத தன் நிலையைப் பற்றி வந்ததாகும்.

**விளக்கம் :** கைங்கரியம் மூன்று வகைப்படும்.

1. 'தனக்கே இன்பமுண்டாக வேண்டும்' என்னும் அஹங்காரக் கலப்போடு ஈசுவரனுக்குச் செய்யும் கைங்கரியம்.

2. 'ஈசுவரனுக்கும் தனக்கும் இன்பம் அளித்தல் வேண்டும்' என்னும் பொது நோக்குடன் செய்யும் கைங்கரியம்.

3. 'தான் புரியும் தொண்டு ஈசுவரனுக்கே இன்பமளிப்பதாயிருத்தல் வேண்டும்' என்னும் அத்தியந்த பாரதந்திரிய எண்ணத்தோடு செய்யும் கைங்கரியம்.

இவை மூன்றனுள் அகங்காரக் கலப்புடையதாய்த் தன் இன்பத்தின்பொருட்டே செய்யும் கைங்கரியத்தையும், இருவருக்கும் இன்பத்தை ஊட்ட வேண்டுமென்னும் எண்ணங்கொண்டு பொது நோக்குடன் செய்யும் கைங்கரியத்தையும் விரும்பி மேற்கொள்வதற்குச் சேதனன் உரியவனல்லன் என்பதை நமப்பதம் தெரிவித்ததேயன்றி, ஈசுவரன் முகவுல்லாசம் ஒன்றையே கருதி பாரதந்திரிய நினைவோடு அவனுக்கெனவே புரியும் கைங்கரியத்தைச் சேதனன் விரும்பிப்பெறுதல் கூடாதென்பதை அது தெரிவித்திலது. ஆன்மாவின் உண்மைச் சொரூபம் என்ன ? சேஷியான ஈசுவரனுக்கு இன்பத்தை ஊட்டும் காரியங்களையே செய்து, அக்காரியங்கட்கு அழிவு நேர்ந்த போது தரிக்க முடியாத நிலையை அடைதலே அன்றோ?

அத்தகைய உண்மைச் சொரூபந்தான், ஈசுவரனுக்கு அதிசயத்தை விளைவிக்கக்கூடிய கைங்கரியத்தை விரும்பிப் பெறுமாறு செய்கிறது.

அவதாரிகை : இவ்வாறு கைங்கரியத்தை விரும்புவது தன் நிலைக்கு ஏற்றதாகவே இருத்தலின், இவ்வேற்றுமை இதைத் தெரிவிக்கிறது என்கிறார் :

**மூலம் : 108. "ஆகையால், [1]'வழுவிலாவடிமை செய்ய வேண்டும் நாம்' என்கிற ப்ரார்த்தனையைக் காட்டுகிறது."**

---

துறிப்பு : 1. திருவாய்மொழி. 3; 3; 1.

**பொருள் :** அடிமைத் தொழிலில் விருப்பம் கொள்ளல் இடையில் வந்ததன்றிக்கே, தன் நிலைமையைப் பற்றி வந்ததாகை யால், 'வழுவிலா வடிமை செய்ய வேண்டும்,' என்னும் ஆழ்வார் திருவாக்கின்படி, அடிமையில் ஒன்றும் நழுவாதவாறு எல்லா வற்றையும் செய்ய வேண்டும் நாம் என்கிற விருப்பத்தை இவ் வேற்றுமை தெரிவிக்கிறது.

**அவதாரிகை :** இனி ஈசுவரக் கைங்கரியத்தை விரும்பிப் பெறும் பிரார்த்தனையை இடை விடாமல் செய்தற்குத் தகுந்த வேட்கை உடையவர் இயல்பைக் கூறுகிறார் :

**மூலம் : 109.** "'கண்ணாரக்கண்டு கழிவதோர் காத லுற்றார்க்குமுண்டோ கண்கள் துஞ்சுதல்?' என்கிற படியே காண்பதற்கு முன்பு உறக்கமில்லை; கண் டால் 'ஸதாபச்யந்தி' ஆகையாலே உறக்கமில்லை."

**பொருள் :** [1]'கண்ணாரக் கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கு முண்டோ கண்கள் துஞ்சுதல்?' என்னும் வாக்கியத்தின்படி பரம புருஷனைக் காண்பதற்கு முன்பு அறிவின் சுருக்கமாகிற உறக்க மில்லை. கண்ட காலத்தில் 'ஸதாபச்யந்தி' என்னும் வேத வாக்கின்படி எப்போதும் அனுபவம் நிகழ்கையாலே மேற்கூறிய வர்களுக்கு உறக்கம் இல்லை.

**விளக்கம் :** ஆதியந்தமில்லாத திருமாலைக் கண்கள் திருத்தி யடையுமாறு சேவித்து, அவன் பக்கல் மிகுந்த வேட்கையைக் கொண்டவர்க்குக் கண்கள் உறக்கங்கொள்ளுதல் ஏற்படுமோ? ஆடல் பாடல்களில் விருப்பமுள்ளவருக்கு முன் உறக்கமில்லாத தைப் போன்று, மகான்களுக்கோ, காண்பதற்கு முந்தி உறக்க மில்லை. "விஷ்ணுவினுடைய திவ்யமங்கள விக்கிரகத்தை நித்திய சூரிகள் எப்போதும் காண்கின்றார்கள்," என்று சொல்லுமாறு அவர்களுக்கு, கண்டபோதும் உறக்கமில்லை.

**அவதாரிகை :** இன்னமும் ஓர் ஏதுவினால் இவனுக்கு உறக்க மில்லாமையை அருளிச் செய்கிறார் :

---

குறிப்பு : 1. திருவிருத்தம். 97.

**மூலம்: 110. "[1]'பழுதே பல பகலும் போயின' என்று இழந்த நாளுக்குக் கூப்பிடுகிறவனுக்கு உறங்க விரகில்லை."**

போருள்: பகவானைக் கண்டு அதனால் ஏற்பட்ட இன்பத்தைத் துய்க்குங்கால், "இவ்வாறு இவனை அனுபவித்தற்கு ஏற்பட்ட அளவிறந்த காலம் வீணே கழிந்துவிட்டதே!" எனத் தான் முன் இழந்த நாட்களை நினைத்து வருந்தி, கூக்குரலிடுபவனுக்கு மேலுள்ள நாட்களில் உறங்க வழியில்லை.

விளக்கம்: "பரத்வத்தாலும், வாத்ஸல்யத்தாலும் சிவந்த கண்களை உடையவனாய், தன்னைப் பற்றிய தொண்டர்களின் விரோதிகளை அழிக்கும் வன்மையுடையனாய், கடலைப்போன்ற காம்பீரியமும் நிறமும் பெற்றுள்ளவனாய், கடல் அலையானது தன் திருவடிகளின் மேல் வீசத், திருவனந்தாழ்வானாகிற படுக்கையில் கண் வளர்பவனாய் உள்ள எம்பெருமான் திருவடிகளை இன்று கண்டு சேவித்தேன். அந்தோ! இங்ஙனம் சேவித்தற்கு வாய்ந்த என் வாழ்நாட்களில் பலவும் முன்பு வீணே கழிந்தனவே!" எனச் சென்ற நாட்களை நினைத்து அஞ்சிக் கதறுகின்றவருக்குச் சேவிக்கக்கிடைத்த பின்பு எங்ஙனம் துயில் உண்டாகும்? அஃதுண்டாதற்கு வழியில்லை என்னும் கருத்தைக் குறிப்பதாகும் கீழ்ப்பாசுரம்:

"பழுதே பலபகலும் போயினவென் றஞ்சி
அழுதேன் அரவணைமேற் கண்டு—தொழுதேன்
கடலோதங் காலலைப்பக் கண்வளரும் செங்கண்
அடலோத வண்ண ரடி,"

அவதாரிகை: இன்னமும் இவ்விஷயத்தில் அறிவு பிறந்தார்க்கு மறத்தல் முடியாது என்பதைப் பிரமாணத்தைக் காட்டி ஒப்புக்கொள்ளுமாறு செய்கிறார்:

**மூலம்: 111. "'அன்று நான் பிறந்திலேன், பிறந்த பின் மறந்திலேன்' என்று நின்றார்களிறே?"**

போருள்: "அவனை அறிவதற்கு முன்பு யான் ஞானப்பிறவியைப் பெற்றேனில்லை. எனக்கு இந்த ஞானப் பிறவி உண்

குறிப்பு: 1. முதல் திருவந்தாதி. 16.

டான பின்பு அவனை ஒரு போதும் மறந்தேனில்லை," எனப் பெரியோர் இயம்பிப் போந்தனர்.

**விளக்கம் :** எனக்குத் தலைவனானவன் திருவூரகத்தில் நின்றருளினதும், திருப்பாடகத்தில் எழுந்தருளியிருந்ததும், திருவெஃகாவில் கண் வளர்ந்தருளினதும் அறிந்து, அவனிடம் நெஞ்சைச் செலுத்தாத, அக்காலத்தில் யான் ஞானப் பிறவியைப் பெற்றேனில்லை. அந்த ஞானப் பிறவியை அடைந்த பின்பு, அவனை மறக்கப் பெற்றிலேன். ஆதலின், என் ஸ்வாமியானவன், மேற்கூறிய மூன்று திருப்பதிகளிலும் செய்த செயல்களையெல்லாம் என் நெஞ்சுள் செய்து வீற்றிருக்கின்றான். இக்கருத்தைக் கீழ்க்காண்க.

[1]" நின்ற தெந்தை யூரகத் திருந்த தெந்தை பாடகத்து
அன்று வெஃக ணைக்கி டந்த தென்னி லாத முன்னெலாம்
அன்று நான்பி றந்தி லேன்பி றந்த பின்ம றந்திலேன்
நின்ற துமிருந்த துங்கி டந்த துமென் னெஞ்சுளே."

**அவதாரிகை :** இக்கைங்கர்யத்திற்குத் தேசம் முதலியவற்றின் வரையறை இல்லாமையை அருளிச்செய்கிறார்:

**மூலம் : 112.** "'இவ்வடிமைதான் ஒழிவில்காலமெல்லாமுடனாய் மன்னி' என்கிறபடியே, ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் அநுவர்த்திக்கும்."

**பொருள் :** இவ்வான்மாவினுடைய சேஷத்துவம், பாரதந்திரியம் என்னும் நிலைகளுக்கேற்ப உண்டாகும் பயனான இவ்வடிமைதான், 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி' என்னும் ஆழ்வார் திருவாக்கின்படி, எல்லாக் காலத்திலும் எல்லாத் தேயங்களிலும், எல்லா நிலைகளிலும் அவனைப் பிரியாது நின்று நடந்து செல்லும் என்பதை அறிக.

நாராயணாய என்பதன்பொருள் முற்றுப்பெற்றது.

**அவதாரிகை :** திருமந்திரத்தை ஒரு மங்கள சூத்திரமாக நிரூபித்துக் காட்டுகிறார்:

**மூலம் : 113.** "எட்டிழையாய் மூன்று சரடாய் இருப்பதொரு மங்கள ஸூத்ரம் போலே திருமந்த்ரம்."

---

குறிப்பு : 1. திருச்சந்த விருத்தம். 64.

பொருள் : உலகத்தார் பயன்படுத்தும் மங்கள சூத்திரம் பதினாறு இழையாய் இரண்டு சரடாய் இருக்கும். இஃது எட்டிழையாய் மூன்று சரடாய் உள்ளது.

அவதாரிகை : 'இங்ஙனம் உருவகப்படுத்திக் கூறிய இதனால், எப்பொருள் சொல்லுகிறது?' என்ன, அதை அருளிச்செய்கிறார்:

**மூலம் : 114. "இத்தால் - ஈச்வரன் ஆத்மாக்களுக்குப் பதியாய் நின்று ரக்ஷிக்கும் என்கிறது."**

பொருள் : இத்திருமந்திரத்தை மங்கள சூத்திரமாகச் சொல்லுகிற இதனால், ஆசாரிய உபதேசத்தால், இத்திருமந்திரத்தோடு சம்மந்தமுடைய ஆன்மகோடிகளை ஈசுவரன் தலைவனாய் (பதியாய்) நின்று காப்பான் என்பது சொல்லப்படுகிறது.

அவதாரிகை : இம்மந்திரத்தால் சொல்லப்பட்ட பொருளைச் சுருக்கமாய்ச் சொல்லி இதை முடிக்கிறார்:

**மூலம் : 115. "ஆக, திருமந்த்ரத்தால், எம்பெருமானுக்கே உரியேனான நான், எனக்குரியனன்றிக்கே ஒழிய வேணும். ஸர்வ சேஷியான நாராயணனுக்கே எல்லா வடிமைகளும் செய்யப்பெறுவேனாக வேணுமென்றதாய்த்து."**

**பிள்ளை லோகாசார்யர் திருவடிகளே சரணம்.**

பொருள் : 'எம்பெருமானுக்கே அடிமையாயிருப்பவன் யான். அத்தகைய யான், எனக்குரியனாய் இருத்தல் கூடாது. எல்லாப் பொருள்களுக்கும் சேஷியான நாராயணன் முகமலர்த்திக்கு உறுப்பாய் எல்லா அடிமைகளும் செய்யப் பெறுவேனாக வேண்டும்,' என்பது இம்மந்திரத்தின் சாரப்பொருள்.

விளக்கம் : இச்சொற்றொடர்களைச் சிறிது விளக்குவாம் : எம்பெருமானுக்கு என்பது, புணர்ந்து கெட்ட வேற்றுமையோடுங் கூடிய அகாரத்தின் பொருளையும், ஏகாரம் என்பது உகாரத்தின் பொருளையும், நான் என்பது மகாரத்தின் பொருளையும், எனக்கு உரியன் என்பது நமப் பதத்தில் உள்ள மஃ என்பதன் பொருளையும்,

அன்றிக்கே ஒழிய என்பது நகாரத்தின் பொருளையும், வேணும் என்பது, சேதனன் இந்நிலையை வேண்டிப் பெற வேண்டும் என்னும் நமப் பதத்தின் கருத்தையும், ஸர்வ சேஷியான நாராயணனுக்கே என்பது, சேதனனின் கைங்கரியத்தைப் பெற்றுக்கொள்ளும் நாராயணபதத்தின் பொருளையும், எல்லா அடிமைகளும் செய்யப் பெறுவேனாக என்பது, ஆய என்னும் வேற்றுமையின் பொருளையும் தொகுத்துச் சொல்லி, இந்தச் சூத்திரத்தில், திருமந்திரத்தின் பொருளைச் சுருக்கமாய்த் தெரிவிப்பதை ஓர்ந்துணர்க.

இங்கு இவ்விருசொற்றொடர்களால், இத்திருமந்திரத்தைச் சுருக்கி அருளிச்செய்ததற்குக் காரணம் பரந்த அறிவுடையோரும், அஃதற்றவரும் இதன் பொருளை நன்கு உணர்ந்து நாடோறும் அனுசந்திக்க வேண்டுமென்னும் கருத்தைக் கொண்டதே ஆகும். ஆதலால், யாவரும் எப்போதும் இம்மந்திரத்தின் அர்த்தத்தை இன்றியமையாது அனுசந்திக்கக் கடமைப்பட்டுள்ளனர் என்பதை அறிகின்றோம்.

**தொகுப்புரை :** தொண்ணூற்றைந்தாம் சூத்திரத்திலிருந்து, நூற்றுப்பதினைந்தாம் சூத்திரம் (95-115) வரையும், நாராயணாய என்பதில், முதலில் உள்ள நாரபதம், அழிவற்ற நித்தியமான பொருள்களின் திரள்களைத் தெரிவிக்கின்றதென்றும்; அவை இன்னவை என்றும்; அயநம் என்னும் பதம், தத்புருஷ ஸமாஸத்தால் 'பகவான், நித்திய வஸ்துவின் திரள்களுக்கு ஆதாரப் பொருளாய் இருப்பவன்' என்பதையும், பகுவிரீஹி ஸமாஸத்தால் 'அவன் அவற்றை ஆசிரயமாய்க் கொண்டுள்ளவன்' என்பதையும் தெரிவிக்கிறது என்றும்; இவ்விரு ஸமாஸத்தாலும், ஒரு முறையில் பரத்துவ ஸௌலப்பியங்களும், மற்றொரு முறையில் அந்தரியாமித்துவ உபாயத்துவ உபேயத்துவங்களும் பெறப்படுகின்றன என்றும்; நாராயணன் சேதனனுக்கு எல்லா உறவினனாய் உள்ளான் என்றும்; நாம் அவனோடு தொடர்பின்றிப் பிறருடன் சேர்ந்து இருக்குங்காலத்தும், அவன் முகந்தோற்றாது நின்று நம்மை இரட்சிக்கின்றான் என்றும்; 'ஆய' என்னும் வேற்றுமை சேதனன், ஈசுவரனுக்குச் செய்யும் எல்லாத் தொண்டுகளையும் விரும்பிப் பெற வேண்டும் என்பதைத் தெரிவிக்கின்றது என்றும்; இங்ஙனம் விரும்பலாமோ? என்னும் வினவிற்கு அத்தியந்த பாரதந்

திரியத்தினல் இது கூடும் என்றும்; இத்தகைய கைங்கரியமே ஆன்மாவின் சொரூபத்திற்கு ஏற்றதென்றும்; சேதனனுக்கு இக் கைங்கரிய பிரார்த்தனை இன்றியமையாததென்றும்; இதில் வேட்கையுடையார் ஈசுவரனைக் காண்பதற்கு முந்தியும், கண்ட பின்பும் உறக்கம் கொள்வதில்லை என்றும்; ஈசுவரனைப்பற்றிய உண்மை ஞானத்தைப் பெற்றவர் அவனை ஓரிமைப்போதும் மறத்தற்கு இயலாது என்றும்; இக்கைங்கரியத்தை இழந்த நாட்களுக்காய்த் துன்புறுபவர் தூங்க இயலாது என்றும்; கைங்கரியத்திற்குக் காலதேசம் முதலியவற்றின் வரையறை இல்லை என்றும்; இத்திருமந்திரம் மங்கள ஸூத்திரத்திற்கு ஒப்பானது என்றும்; இதனல், ஈசுவரன் தலைவனாய் நின்று சேதனரைக் காப்பான் என்றும்; இதனல், சுருக்கமாய்த் தெரிந்து கொள்ளும் பொருள் இன்னது என்றும் சொல்லப்பட்டன.

திருமந்திரத்தின் பொருள் முற்றுப்பெற்றது.



ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## த்வயம் (துவயம்)

தோற்றுவாய் : 'துவயம்' என்பதற்கு இரண்டு என்பது பொருள். இம்மந்திரம் இரு வாக்கியங்களாய் அமைந்து, தலை சிறந்த இரு பொருள்களை அறிவிக்கின்றமையின், இதற்கு இப் பெயர் வாய்ந்தது. ஸ்ரீ பிள்ளை லோகாசாரியர், மக்களின் ஆன்மாவை உய்யச்செய்யும் திருமந்திரம், துவயம், சரமசுலோகம் ஆகிய மூன்று இரகசியங்களின் பொருள்களையும் உலகம் தெள்ளிதின் உணர்தற்பொருட்டுச் சில நூல்கள் வாயிலாக வெளியிட்டுள்ளார். அந்நூல்களுள், இம்மூன்று இரகசியங்களும் இரு முறைகளில் அமைக்கப்பட்டிருத்தலைக் காணலாம். எங்ஙனமென்னின், முமுட்சுப்படி என்னும் இந்நூலில், முதலில் திருமந்திரத்தையும், இரண்டாவது துவயத்தையும், இறுதியில் சரமசுலோகத்தையும் அமைத்துள்ளார்; இதற்கு முன் வெளியிட்ட மற்ற நூல்களிலோ, திருமந்திரம், சரமசுலோகம், துவயம் என முறைப்படுத்தி உள்ளார்.

இவற்றை இங்ஙனம் இரு முறைகளில் தொகுத்ததற்குக் காரணங்கள் யாவை என்பதை நோக்குவோம் :

சரமசுலோகம், "நீ என்னைப்பற்று; உனக்கு மோட்சத்தைத் தருகிறேன்," எனக் கண்ணன் விதிக்கும் கட்டளையையும், துவயம், "ஸ்ரீமந்நாராயணனுடைய இரண்டு திருவடிகளையும் பற்றுகிறேன்," எனச் சொல்லும் சேதனனது செயலையும் தெரிவிக்கின்றன. இம்முறையில் சரமசுலோகம் விதி வாக்கியமாயும், துவயம் அனுட்டான வாக்கியமாயும் அமைந்துள்ளன. ஆதலின், விதி முன்னும், அனுட்டானம் பின்னும் இருத்தல் முறை என்னும் கருத்துடன், சரமசுலோகம் முன்னும் துவயம் பின்னுமாக அமைக்கப்பட்டன. இது மட்டுமேயன்றி, திருமந்திரம் உபேயத்தில் நோக்குள்ளது. சரமசுலோகம் உபாயத்தில் கருத்துடையது. துவயமோ, உபாய உபேயங்களின் அனுட்டானங்களைத் தெரிவிக்கின்றது. ஆதலின், மற்ற நூல்களில், திருமந்திரம்,

சரமசுலோகம், துவயம் என்னும் முறையில் வைக்கப்பட்டுள்ளன எனக் கொள்ளுதல் வேண்டும்.

திருமந்திரத்தில் "ஓம் நமஃ நாராயணாய" என்னும் மூன்று பதங்கள் உள்ளன. இவற்றுள் மந்திரசேஷம் பிரணவத்தை விரிப்பதாகும். "நமஃ நாராயணாய" என்னும் பகுதியை மந்திரசேஷம் எனக் கூறுவர். இதில் நமப்பதம் உபாயத்தையும், நாராயணாய என்னும் பதம் உபேயத்தையும் குறிக்கும். ஆகவே, நமப்பதத்தின் பொருளைத் துவயமும், நாராயணாய என்னும் பதத்தின் பொருளைச் சரமசுலோகமும் விரிக்கின்றதென்பது ஒரு முறையாகும். இம்முறையை அனுசரித்தே முமுட்சுப்படியாகிற இக்கிரந்தத்தில் திருமந்திரப் பிரகரணத்திற்குப் பின் துவயத்தையும், அதற்குப் பின் சரமசுலோகத்தையும் அமைத்து லோகாசாரியர் பொருள் கூறியிருக்கிறார். இவற்றை எம்முறையில் வெளிப்படுத்தினும், பொருள் பொருத்தத்திற்குக் குறைபாடிலது. இது நிற்க.

அவதாரிகை: திருமந்திரத்தின் பொருளை அறிந்து அதன்படி நின்றொழுகும் வைஷ்ணவ அதிகாரி ஒருவனுக்கு, அவ்வைஷ்ணவத்துவம் கைவரப் பெறுதற்கு இன்றியமையாது அமைந்திருக்க வேண்டிய சில பண்புகள் உண்டு. அவற்றையே ஸ்ரீ பிள்ளை லோகாசாரியர் இப்பகுதியின் முதலில் எடுத்தியம்புகின்றார். இம்முதல் சூத்திரம் பத்துப் பிரிவுகளைக் கொண்டுள்ளது.

மூலம்: 116. "புறம்புண்டான பற்றுக்களை அடைய வாஸனையோடே விடுகையும், எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகையும், பேறு தப்பாதென்று துணிந்திருக்கையும், பேற்றுக்கு த்வரிக்கையும், இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய்க் குணானுபவ கைங்கர்யங்களே போது போக்காகையும், இப்படி இருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களேற்றமறிந்து உகந்திருக்கையும், திருமந்த்ரத்திலும் த்வயத்திலும் நியதனாகையும், ஆசார்ய ப்ரேமம் கனத்திருக்கையும், ஆசார்யன் பக்கலிலும் எம்பெருமான் பக்கலிலும் க்ருதஜ்ஞனாய்ப் போருகையும்,

ஜ்ஞாநமும் விரக்தியும் சாந்தியுமுடையனுயிருக்கும் பரம ஸாத்விகனேடே ஸஹவாஸம் பண்ணுகை யும், வைஷ்ணவாதிகாரிக்கவச்யாபேக்ஷிதம். ”

பிரிவு : 1. ‘புறம்புண்டான பற்றுக்களை அடைய வாஸனையோடே விடுகையும்’

பொருள் : எம்பெருமானைத் தவிர, வேறு பொருள்களில் உள்ள பற்றுக்கள் யாவற்றையும், (மறுபடியும் தொடராதவாறு) அறவே விடுதல்.

விளக்கம் : “பெற்றோர், பிள்ளைகள், உறவினர், நட்பினர் இவர்கள் மாட்டுள்ள பற்றையும், பொருட்செல்வம், ஆன்மானு பவமாகிற கைவல்யம் ஆகியவற்றிலுள்ள ஆர்வத்தையும் வாசனை யுடன் விட்டு, உலகமளந்த தேவரீருடைய திருவடிகளை உபாய மாகப் பற்றுகிறேன்,” எனச் சாத்திரம் கூறுவதை நோக்குக.

அவதாரிகை : “இவ்வைஷ்ணவன் முற்கூறியவற்றை விடு தல் மட்டும் போதியதன்று. ஈசுவரனையே பற்றுக்கோடாய்ப் பற்றுதலும் வேண்டும்,” என்பதை ஆசிரியர் தெரிவிக்கிறார் :

பிரிவு : 2. ‘எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகை யும்’

பொருள் : எல்லா உயிர்களையும், எக்காலத்திலும் பாதுகாக் கும் எம்பெருமான் தவிர, வேறொருவரும் தமக்குத் தஞ்சம் அல்லர் எனக் கருதி, சேதனர் அவனையே உபாயமாகப் பற்றுதல் வேண்டும்.

விளக்கம் : இவ்விரு பகுதிகளாலும், சரமசுலோகத்தின் “ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ” என்னும் முற் பகுதியின் பொருளைத் தெரிவிக்கிறார்.

‘புறம்புண்டான பற்றுக்களை அடைய’ என்பது, ‘ஸர்வதர் மாந்’ என்பதன் பொருளையும், ‘வாஸனையோடே விடுகையும்’ என்பது, ‘பரித்யஜ்ய’ என்பதன் பொருளையும், ‘எம்பெருமானை’ என்பது, ‘மாம்’ என்பதன் பொருளையும், ‘ஏ’ என்பது ‘ஏகம்’ என்பதன் பொருளையும், ‘தஞ்சம்’ என்பது, ‘சரணம்’ என்பதன்

பொருளையும், 'பற்றுகையும்' என்பது, 'வ்ரஜ' என்பதன் பொருளை யும் முறையே விளக்கப்படுத்துவதைக் காண்க.

அவதாரிகை : இங்ஙனம் பகவானைத் தஞ்சமென்று பற்று தல் மட்டும் போதியதாமோ ?

பிரிவு : 3. 'பேறு தப்பாதென்று துணிந்திருக்கையும்'

பொருள் : எந்தப் பகவான், சரமசுலோகத்தில் 'என்னையே உபாயமாய்ப்பற்று' எனக் கட்டளை இடுகின்றனனோ, அப்பகவா னையே உறுதியாகப் பற்றிய தமக்கு, 'வீட்டுப் பேறு தப்பாது' எனத் துணிந்திருத்தலும் வேண்டும்.

விளக்கம் : வினா : பகவானோ, அயன் முதலியவர்களாலும் அறிதற்கு அரியவன். இவ்வைணவனோ, இப்போது சேஷத்துவ ஞானத்தைப் பெற்றவனாயிருப்பினும், எண்ணிறந்த குற்றங்களுக் குக் கடலாய் இருப்பவன். இத்தகையவன், பகவானை ஒரு முறை தனக்குத் தஞ்சமென்று நினைத்துவிடின், வீடாகிய பெரும்பேற்றை அடைந்துவிட முடியுமோ ?

விடை : நன்கு வினவினாய் ! இவன் எம்பெருமானைத் தஞ் சம் என நினைக்கும் நினைவே, பேற்றிற்குக் காரணமாயிருப்பின், நீ கொள்ளும் ஐயங்களுக்கு இடமுண்டு. இங்கு, இவன் நினைக்கும் இந்நினைவு காரணமன்று. இந்நினைவிற்கு விஷயமான பகவானே இவனுடைய பேற்றிற்குக் காரணமாவான். ஆதலின், இவன் பேறு தப்பாதென்று துணிந்திருக்கலாம் என்பதை ஆசிரியர் வற்புறுத்து கிறார். இது நிற்க. அயன் முதலியோர் தத்தம் முயற்சியினாலேயே ஈசுவரனை அடைய வேண்டும் என்று நினைக்கின்றனர். ஆதலின், அவர்கட்கு எம்பெருமான் அரியனாய் இருக்கிறான். இந்த வைண வனோ, குற்றக்கடலாயிருப்பினும், தன்னிடம் ஒன்றுமில்லை, தன் பேற்றிற்குப் பகவானே காரணன் என்றிருக்கிறான். இதனால், பிரபன்னனுக்கு மகா விசுவாசத்துடன் பகவானைப் பற்ற வேண்டு வது இன்றியமையாதது என்பது தேறுகிறது. இஃது உபாயாதி காரம் என்று சொல்லப்படும்.

அவதாரிகை : 'இத்தகைய நம்பிக்கையைக் கொண்ட பிரபன் னன், பின்பு செய்ய வேண்டுவது யாது ?' என்பதை விளக்கு கிறார் :

பிரிவு : 4. 'பேற்றுக்கு த்வரிக்கையும்'

பொருள் : இங்ஙனம் துணிந்திருப்பினும், வீட்டுப் பேற்றை அடைதற்கு விரைந்து நிற்றலும் வேண்டும்.

விளக்கம் : உலக முழுமையும் யாதோர் அருமைப்பாடு மின்றி அளந்துகொண்ட மிக்க போக்கியமான திருவடித்தாமரை களில் வந்து பொருந்துமாறு, அடியேனை அழைத்துக்கொள்ளுங் காலம், 'இல்வாழ்க்கை இன்னலுடையது' என உணர்ந்த இந்நிலை யிலும் அடியேனுக்கு அணித்தாகாதோ! 'என் நெஞ்சமானது, ஸ்ரீ வைகுண்டத்தைக் காண்கைக்கு, இரவு பகல் என்னும் வேறு பாடின்றி ஒரே விதமாய் எண்ணுநின்றது,' என்னும் இக்கருத்துக் களை,

"தாவி வையங் கொண்ட தடந்தா மரைகட்கே
கூவிக் கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ?"[1]

"மாக வைகுந்தங் காண்பதற்கு என்மனம்
ஏக மெண்ணும் இராப்பக லின்றியே."[2]

என்னும் இப்பாசுரங்களினால், பிரபன்னசன கூடஸ்தரான ஆழ் வார் தெரிவிக்கிறார். இதைப் 'பிராப்பியத்வரை' (அடையப்படும் பொருளை அடைய விரைதல்) என்பர். பகவானைக் கிட்டி அனுப வித்து அடிமை செய்பவனுக்கு இங்ஙனம் விரைதல் இன்றியமை யாது வேண்டும். இஃதே உபேயாதிகாரம் எனப்படும்.

அவதாரிகை : இப்பிரபன்னன் பொழுது போக்கும் விதத் தைச் சொல்லுகிறார் :

பிரிவு : 5. 'இருக்கும் நாள் உகந்தருளின நிலங்க ளிலே ப்ரவணனாய் குணாநுபவ கைங்கர்யங்களே போது போக்காகையும்'

பொருள் : இவ்வாறு வீட்டுப் பேற்றை அடைதற்கு மனம் விரைந்து நிற்பினும், இவன் இவ்வுலகில் வாழும் நாட்களில், ஈசு வரன் உகந்து கோவில் கொண்டிருக்கும் திவ்விய தேசங்களில் மிக்க ஆர்வமுடையனாய், ஆங்காங்கு எழுந்தருளியிருக்கும் எம் பெருமான்களின் கலியாண குணங்களை அனுபவித்துக்கொண்டு,

1. திருவாய்மொழி 6 : 9 : 9.
2. " 9 : 8 : 7.

மனோவாக்குக் காயங்களினால் கைங்கரியஞ் செய்தலையே தனக்குப் பொழுது போக்காகக் கொள்ளுதல் வேண்டும்.

விளக்கம் : "என் நெஞ்சமே, எம்பெருமான் திருவுள்ள முவந்து எழுந்தருளியிருக்கும் திருப்பதிகளுக்கெல்லாம் போந்து, அவனுடைய திருவடிகளைப் பாடி, வளப்பம் பொருந்திய திருக் கோவலூரைச் சேவிப்போம் வருவாயாக," என்னும் பொருளை,

"தானுகந்த வூரெல்லாம் தன்தாள் பாடிப்
பூங்கோவ லூர்தொழுதும் போது நெஞ்சே!"[1]

என்கின்ற பாசுரத்தாலும், உலகத்தவர்களால் கொண்டாடப்படும் திருக்கண்டியூர், திருவரங்கம், திருமெய்யம், திருக்கச்சி, திருப்பேர், திருக்கடன்மல்லை ஆகிய இத்திருப்பதிகளைப்பற்றிப் போற்றிக் கொண்டு, அவற்றைஅடைந்தவர் எவரோ, அவர் உய்வை அடைவரே அல்லாமல், அங்ஙனம் செய்யாத மற்றையோர் உய்ய வழி யுண்டோ? இல்லை என்பதை,

.... .... .... .... "உலகமேத்தும்
கண்டியூ ரரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லை யென்று
மண்டினார் உய்ய லல்லால் மற்றையார்க் குய்ய லாமே?"[2]

என்னும் பாசுரத்தாலும் திருமங்கையாழ்வார் தெரிவிக்கிறார்.

அவதாரிகை : இப்பிரபன்னனுக்குப் பாகவத சேஷத்துவமும் இன்றியமையாததாதலின், அதை இயம்புகின்றார் :

**பிரிவு : 6. 'இப்படியிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஏற்றமறிந்து உகந்திருக்கையும்'**

பொருள் : மேற்கூறிய ஆசாரங்களிலெல்லாம் துறை போய ஸ்ரீ வைஷ்ணவர்களைக் காணின், "தீயில் தாமரை மலர்ந்தன்ன" இவ்வுலகிலும் இத்துணைச் சிறப்பு வாய்ந்த சிலர் உளரோ?" என அவர்கள் பெருமையைப் பாராட்டி, அவர்களிடம் அழுக்காறொழிந்து, அவர்கள் தாழ்குலத்தினராயிருப்பினும், அவர்களிடம் கலந்து உவகையுடன் அன்பு பாராட்டுதல்.

1. திருநெடுந்தாண்டகம்—6
2. திருக்குறுந்தாண்டகம்—19

**விளக்கம் :** முன் இயம்பிய யாவும் ஒருவருக்கு ஏற்படினும், இப்பெருந்தகைமை உண்டாதல் அருமையினுமருமையே ! இஃது ஒரு வைணவருக்கு இருத்தல் இன்றியமையாதது என்றும், அவ் வைணவரின் பெருமை இன்னதென்றும் பிள்ளை லோகாசாரியர் ஸ்ரீ வசனபூஷணத்தில் நன்கு விளக்கியுள்ளார் :

" வேதகப் பொன் போலே யிவர்களோட்டை ஸம்பந்தம்."[1]

" இவர்கள் பக்கல் ஸாம்ய புத்தியும் ஆதிக்ய புத்தியும் நடக்க வேணும்."

" அதாவது, ஆசார்ய துல்யரென்றும் சமுசாரிகளிலும் தன்னிலும் ஈசுவரனிலும் அதிகரென்றும் நினைக்கை."

ஈதன்றியும் ஆழ்வார், இதைக்குறித்துப் பயிலுஞ் சுடரொளியிலும், நெடுமாற்கடிமையிலும் பரக்கப் பேசியிருக்கிறார். திருமங்கையாழ்வாரும், " கண்சோர வெங்குருதி "[2] என்னும் திருமொழியில், சேறை எம்பெருமானிடத்தில் அன்புடையவர் என் சிரசின்மேலிருப்பவர் ; கைங்கரியத்தில் நித்திய சூரிகளிலும் சிறந்தவர் ; அவர்தமை ஓரிமையும் பிரிந்து ஆற்றகில்லேன் ; அவர்களுக்கு என் இருதயம் தேனூறி எப்பொழுதும் இனிதாயுள்ளது ; அவர்களை நெஞ்சில் நினைக்கில் கூற்றுவனுக்கும் பாபத்திற்கும் அஞ்ச வேண்டுவதில்லை," என்னும் பொருள்பட அருளிச் செய்துள்ளதை நோக்குக.

**அவதாரிகை :** 'இவன், நற்றாயும், செவிலித்தாயுமாயிருக்கிற திருமந்திரத்திலும், துவயத்திலும் ஊன்றி இருத்தல் வேண்டும்,' என்பதைக் காட்டுகிறார் :

**பிரிவு : 7. 'திருமந்த்ரத்திலும் த்வயத்திலும் நியதனாகையும்,'**

**பொருள் :** தள்ளத்தக்கன இவை, கொள்ளத்தக்கன இவை எனத் தெள்ளிதின் விளக்கும் திருமந்திரத்திலும், அதை விரித்துச் சொல்லும் துவயத்திலும் ஊன்றி நிற்றல் வேண்டும்.

**அவதாரிகை :** சேஷத்துவ ஞானத்தை ஊட்டிய தந்தையாகிய ஆசாரியனிடத்தில் மிக்க பிரேமம் இருத்தல் வேண்டும் என்கிறார் :

---

1. ஸ்ரீ வசனபூஷணம் வாக்கியம்—221—223.
2. பெரிய திருமொழி—7 : 4.

## பிரிவு: 8. 'ஆசார்ய ப்ரேமம் கனத்திருக்கையும்'

**பொருள் :** உபதேசத்தால் கீழே செப்பிய தன்மைகள் யாவும் தனக்கு உண்டாகுமாறு செய்த ஆசாரியனிடத்தில் மிக்க அன்பு பாராட்டுதல் வேண்டும்.

**விளக்கம் :** எவனொருவனுக்குத் தெய்வத்தினிடத்தில் மேலான பத்தி இருக்கிறதோ, அவனுக்கு அத்தெய்வத்திற்கு ஒப்பான ஆசாரியனிடத்திலும் அவ்வாறே பத்தி இருத்தல் வேண்டும் என "யஸ்ய தேவே பராபக்திர் யதா தேவேததா குரௌ" என்னும் சுவேதாசுவதரோபநிஷத்துத் தெரிவிக்கிறது.

தன் அகங்காரத்தால் பகவானுடைய அபிமானத்தை அழித்துக் கொண்ட சேதனனுக்கு, இவன் தாழ்ந்த நிலையையே பற்றுசாகக்[1] கொண்டு இவனை அங்கீகரித்து, இவனுடைய உய்வின்பொருட்டுப் பல நலங்களையும் செய்து போகும் பரம தயாளுவான ஆசாரியன், 'இவன் நம்முடையவன்,' என்று அபிமானித்திருக்கும் அபிமான மொழிய இவன் உய்விற்கு மற்றொன்றுமில்லை என்றும், அவ்வபிமானமே இவனைச் சமுசாரத்திலிருந்து உய்விக்குமென்றும் ஆசாரியர் பகருகின்றனர்.

"ஆசாரியாபிமானமொழியக் கதியில்லை"[2]

"ஆசாரியாபிமானமே யுத்தாரகம்"

என ஸ்ரீவசனபூஷணம் சொல்லுகிறது.

**அவதாரிகை :** ஆசாரிய பிரேமம் மட்டும் போதுமா?

## பிரிவு: 9. 'ஆசார்யன் பக்கலிலும் எம்பெருமான் பக்கலிலும் க்ருதஜ்ஞனாய்ப் போருகையும்'

**பொருள் :** சமுசாரக்கடலில் ஆழ்ந்து நித்திய சமுசாரியாய்ப் போந்த தனக்குக் கீழ்க்கூறிய மந்திரங்களை உபதேசித்துத் திருத்தி, இரும்பைப் பொன்னாக்குவாரைப்போன்று, நித்தியசூரிகள் துய்க்கும் இன்பப் பேற்றிற்குத் தக்கவனாகுமாறு நன்னை உய்வித்த ஆசாரியனிடத்திலும், இவ்வாசாரியனிடம் தன்னைக் கொண்டு போய்ச் சேர்த்த ஈசுவரனிடத்திலும் நன்றியுடையவனாய் இருத்தல்.

---

1. பற்றுசு—இரண்டு உலோகங்களையும் பொருத்த இடையிடும் துண்டு.
2. ஸ்ரீ வசனபூஷணம்—சூத்திரம்—443, 447.

**விளக்கம்:** இங்கு "மந்த்ரப்ரதனான ஆசார்யன் பக்கலிலும் ப்ரேமம் கனக்க உண்டானால் கார்யகரமாவது"[1] என்னும் சூத்திரத்தைக் காண்க.

ஆழ்வார், "ஆசாரியர்கள், எம் இறைவனான வானோர் பிரானின் குற்ற மற்ற மலர் போன்ற திருவடியில் ஆன்மாக்களைக் கொண்டுபோய்ச் சேர்ப்பிக்கும் வண்டுகள்," என அருளிச்செய்துள்ளார்.

ஆண்டாள், தன் அருமைத் தோழியிடம், "எம்பெருமான் பெருஞ் செல்வன்; எல்லாரிலும் மேம்பட்டவன்; நாமோ, ஒன்றுமற்ற அற்ப அறிவுடைய மக்கள். ஆதலின், நம்மால் அவனை வரவழைத்தற்குச் சிறிதும் இயலாது. ஆனால், ஸ்ரீவில்லிபுத்தூருக்குத் தலைவரும், பூரணரும், விஷ்ணுவை எப்போதும் சித்தத்தில் வைத்துக் கொண்டிருப்பவருமாகிய, நம் ஆசாரியராகும் பெரியாழ்வார், தம் தேவனாகிய கண்ணனை, பூச்சூட்டவும், திருமஞ்சனம் செய்யவும், திருவந்திக் காப்பிடவும் அழைப்பர். அவ்வமயம் நாம் அவனைச் சேவித்து ஆனந்திப்போமாக," எனச் சொல்லி உவக்கிறாள்.

ஈண்டு........................ "எம்மீசர் விண்ணோர் பிரானார்
மாசில் மலரடிக் கீழ் எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே."[2]

என்றும்,

"செல்வர் பெரியர் சிறுமா னிடவர் நாஞ்செய்வதென்
வில்லி புதுவை விட்டு சித்தர் தங்கள் தேவரை
வல்ல பரிசு வருவிப்ப ரேலது காண்டுமே"[3]

என்றும் இப்பெரியார்கள் கூறியிருக்கும் பாசுரங்களையும் நோக்குக.

சேதனன், ஆசாரியன் தனக்குச் செய்த வெளிச்சிறப்பையும், அதனடியாய்த் தனக்குக் கிடைத்த கைங்கரியம் முதலியவற்றையும் ஊன்றி நோக்கி, அவ்வாசாரியன் பக்கல் நன்றி உடையவனாயிருத்தல் வேண்டும். அவன் செய்த நன்றியை மறத்தல் நரகத்திற்கு ஏதுவாகும்.

---

1. திருமந்திரம் சூத்திரம்—4.
2. திருவிருத்தம்—54.
3. நாய்ச்சியார் திருமொழி—10 : 10.

'எத்தகைய பெரிய அறங்களைக் கெடுத்தவர்க்கும் ஒரு காலத்தில் அப்பாவங்களிலிருந்து நீங்கும் வழியுண்டு. ஆனால், ஒருவர் செய்த உபகாரத்தை மறந்து அதை அழித்தவருக்கு, அப்பாவத்திலிருந்து கரையேறுதற்கு வழியில்லை,' எனத் திருக்குறள் ஆசிரியர் நன்றியைப்பற்றி வெளியிடுகிறார்.

"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு."[1]

உடலின் நலங்கருதி உதவி புரிகின்றவரையே மறத்தல் கூடாதெனின், ஆன்ம நலங்கருதி உதவி புரியும் ஆசாரியரை மறத்தல் எத்துணைத் துன்பத்திற்கிடமாகும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

அவதாரிகை: இதுகாறும் இயம்பப்பட்ட நலங்கள் இவனுக்கு எவருடைய கூட்டுறவினால் ஏற்படுகின்றனவோ, அவரைப்பற்றிச் செப்புகிறார் இங்கு:

**பிரிவு - 10. 'ஜ்ஞாநமும், விரக்தியும், சாந்தியும் உடையனாயிருக்கும் பரமஸாத்விகனோடே ஸஹவாஸம் பண்ணுகையும், வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதம்.'**

பொருள்: இவ்வுலகக் கலப்பினால், ஒருபோது தனக்குக் கலக்கம் ஏற்படினும், அஃது உண்டாகாதவாறு தன்னைப் பண்படுத்தி முற்கூறியவைகள் மேன்மேலும் வளருமாறு உதவுதற்கேற்ற, சித்து, அசித்து, ஈசுவரன் ஆகிய இம்மூன்றையும் விஷயமாய்க் கொண்டுள்ள ஞானமும், உலகப் பொருள்களில் பற்றற்ற தன்மையும், இவை இரண்டும் நமக்குண்டாயிருக்கின்றன என இறுமாப்புக் கொள்ளாமையாகிய சாந்தியும் வாய்க்கப் பெற்ற பரம பாகவதரோடு கூடி வாழ்தலும் வைஷ்ணவ அதிகாரிக்கு இன்றியமையாததாகும்.

அவதாரிகை: 'இங்ஙனம் நல்வாழ்வு வாழும் ஒரு வைணவர் அநுசந்திக்க வேண்டுவது இன்னது,' என்பதை வகுத்துக் கூறுகிறார்:

---

1. திருக்குறள்—செய்ந்நன்றியறிதல்.

**மூலம் : 117. "இந்த அதிகாரிக்கு ரஹஸ்யத்ரயமும் அநுஸந்தேயம்."**

பொருள் : இத்துணைச் சிறந்த வைணவாதிகாரிக்குத் தன்னுடைய அறிவு ஒழுக்கங்களை வளர்க்கக்கூடிய இம்மூன்று இரகசியங்களும் சிந்தித்தற்குரியவை.

அவதாரிகை : துவயத்தின் பெருமையை விளக்க வந்த ஆசாரியர், சாத்திரம், திருமந்திரம், சரமசுலோகம் இவற்றின் சாரப் பொருள்களைச் சொல்லி, பின் அத்துவயப் பெருமையை இயம்புகிறார் :

**மூலம் : 118. "எல்லா ப்ரமாணங்களிலும் தேஹத்தாலே பேறென்கிறது; திருமந்த்ரத்தில் ஆத்மாவாலே பேறென்கிறது; சரமச்லோகத்தில் ஈச்வரனாலே பேறென்கிறது; த்வயத்தில் பெரிய பிராட்டியாராலே பேறென்கிறது."**

பொருள் : எல்லாச் சாத்திரங்களும் ஒருவனுக்குத் தேகத்தாலே பேறு கிடைக்கும் என்றும், திருமந்திரம் ஆன்மாவாலே பேறு கிடைக்கும் என்றும், சரமசுலோகம் ஈசுவரனாலே பேறு கிடைக்கும் என்றும் பகருகின்றன. ஆனால், துவயமோ, ஒருவனுக்குப் பேறு கிடைப்பது பெரிய பிராட்டியாராலே என இயம்புகின்றது.

விளக்கம் : சாத்திரம் : வேதம், இதிகாசம், புராணங்கள், ஸ்மிருதிகள் ஆகிய இவை சாத்திரம் எனப்படும்.

சரீரத்தோடுங் கூடிய ஆன்மாவை, விசிஷ்ட வேஷம் என அருளிச் செய்வார்கள் ஆசாரியர்கள். இதை விஷயமாய்க் கொண்டு இதம் இன்னது, பயன் இன்னது என்பவற்றைத் தெரிவிப்பதே மேற்கூறிய சாத்திரம். இச்சாத்திரம் சரீரத்தில் நோக்குடையதாய் அதனாலேயே பேறு எனச் சொல்லுகிறது.

திருமந்திரம் : இதில் நடுப்பதம் நம: என்பது. 'நான் எனக்கு இல்லை, எனக்கு எம்பெருமானே உண்டு,' என்பது இந்நமப்பதத்தின் பொருள். இதைத் திருமந்திரப் பிரகரணத்தில் விரிவாக விளக்கியுள்ளோம். தன் விடாய்க்குத் தான் சிறிதும் முயலாமல் மேகத்தையே நோக்கி நிற்கும் சாதகப் பறவை போன்று, சேதனன்,

தன் இதத்திற்காகத் தான் சிறிதும் முயலாமல், எம்பெருமானையே நோக்கி இருப்பின், பயன் சித்திக்கும் என்பது இங்குக் கருத்தாகும். இதனால், திருமந்திரம் முயற்சியற்ற சீவான்மாவினிடத்தில் நோக்குடையதாய் ஆன்மாவாலேயே பேறு என்கிறது.

சரமசுலோகம்: சேதனனைப் பார்த்து, "வேதம் முதலிய சாத்திரங்கள் 'செய்' எனக் கட்டளையிடும் மற்ற எல்லாத் தருமங்களையும் விட்டு, என்னையே பற்றக் கடவாய். உனக்கு நான் எல்லாத் தடைகளையும் போக்கி நன்மையை உண்டு பண்ணுவேன், நீ கலங்கவேண்டுவதில்லை", எனப் பகவான் அருளிச்செய்கிறான். இதனால், பகவான் சுயேச்சையாய் எதையும் செய்து தலைக்கட்டக் கூடியவன் என்பது விளங்குகிறது. அந்தச் சுதந்தரத் தன்மையைத் தெரிவித்து அதனாலேயே பேறு என்பதைக் குறிப்பது சரமசுலோகம்.

வினா: சாத்திரங்கள், 'தருமங்களை மேற்கொள்ளச் சரீரம் வேண்டும்' எனச் சொல்லுகின்றன என்னும் கருத்தைத் தெரிவித்தீர்கள். இத்தகைய சரீரத்தின் உதவி பிரபன்னனுக்கு வேண்டுவதில்லையோ?

விடை: வேண்டும். "சரீரம் நன்னிலையில் இருக்கும் போதே மனம் தெளிந்திருக்கும். அப்போதே என்னை உபாயமாக நிச்சயித்தல் வேண்டும்," என்று வராக சரமசுலோகத்தில் பகவான் அருளிச் செய்தமையால், சரீரத்தின் உதவியும் வேண்டுமெனத் தெரிகிறது. அதன்றியும், தன் முயற்சியற்று ஈசுவரனையே நோக்கி நிற்கும் ஆன்மாவும், இவனுக்குப் பல நன்மைகளையும் செய்து போகும் ஈசுவரனும் இன்றியமையாது வேண்டியவர்களே யாவார்கள். ஆயினும், இங்குப் பிராட்டியாரின் முக்கியத்வத்தைச் சொல்லுகிறதாக அறிதல் வேண்டும்.

அவதாரிகை: 'சேதனனுக்கு விருப்பங்களைத் தந்து வெறுப்புகளை ஒழித்தற்கு ஈசுவரனே உபாயனாயிருக்க, பிராட்டியாராலே பேறு எனக் கூறுவது என்?' என்னும் ஐயத்திற்கு விடை அருளிச்செய்கிறார்:

**மூலம்: 119. "பெரிய பிராட்டியாராலே பேறாகையாவது—இவள் புருஷகாரமானாலல்லது ஈச்வரன் கார்யஞ் செய்யானென்கை."**

பொருள்: பெரிய பிராட்டியாராலே சீவன் பேறு பெறுகை என்பது, சேதனனைக் குறித்து இவர் ஈசுவரனிடம் புருஷகாரம் செய்தாலொழிய, ஈசுவரன் சேதனனை இரட்சித்தலாகிய தன் காரியத்தைச் செய்யான் என்பதைக் குறிப்பதாகும்.

அவதாரிகை: முன்பு சாமானிய வைணவ அதிகாரிக்கு வேண்டுவன சொல்லப்பட்டன. இப்போது சிறப்பு வாய்ந்த துவய அதிகாரிக்கு வேண்டுவன சொல்லப்படுகின்றன:

**மூலம்: 120. "த்வயத்துக்கு அதிகாரி ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமுமுடையவன்."**

பொருள்: இந்தத் துவயத்திற்கு அதிகாரி ஆகிஞ்சன்னியமும் அநன்னியகதித்துவமும் உடையனாய் இருத்தல் வேண்டும்.

விளக்கம்: ஆகிஞ்சன்னியம்: கன்ம ஞான பத்திகளாகிற மற்ற உபாயங்களில் தொடர்பற்றிருக்கை.

அநன்னியகதித்துவம்: ஆன்மரட்சணத்திற்கு எம்பெருமானைத் தவிர வேறொரு இரட்சகப் பொருள் அற்றிருக்கை.

இங்கு, "திருமலையில் எழுந்தருளியிருக்கும் பூரணனே, உன்னையொழிய உபாயமும், இரட்சகமும் ஒன்றுமற்ற அடியேன், உன் திருவடிகளின் கீழ், என் தலைக்கும் உன் திருவடிகளுக்கும் இடைவெளியில்லாதவாறு நெருங்கி நுழைந்து, உன்னை உபாயமாகப் பற்றினேன்," என்பதை நம்மாழ்வார்,

"..............................திருவேங் கடத்தானே
புகலொன் றில்லா அடியேன்உன் னடிக்கீ
ழமர்ந்து புகுந்தேனே."[1] என்றும்,

'சமதமங்களாகிற ஆன்ம குணங்களையும் பெற்றிலேன், கன்மஞான பத்திகளாகிற அறச் செயல்களையும் செய்துமிலேன்' என்பதைத் திருமங்கையாழ்வார்,

"நலந்தா னொன்றுமிலேன் நல்ல தோர றஞ்
செய் துமிலேன்"[2] என்றும்

புகன்றிருத்தலை நோக்குக.

---

1. திருவாய்மொழி. 6 : 10 : 10.
2. பெரிய திருமொழி. 1 : 9 : 4.

அவதாரிகை : 'முன் சூத்திரத்தில் சொன்ன ஆகிஞ்சன்னியா நன்னியகதித்துவங்களின் இருப்புத்தான் என்னே?' என அருளிச் செய்கிறார் :

**மூலம் : 121. "இவை இரண்டும் ப்ரபந்ந பரித்ராணத் திலே சொன்னோம்."**

பொருள் : இவை இரண்டையும் பற்றி (ஆகிஞ்சன்னியம் அநன்னியகதித்துவம்) இந்நூலாசிரியர், பிரபந்ந பரித்ராணம் என்னும் நூலிலே சிறிது விளக்கமாய்க் கூறியுள்ளார். அதன்றியும், இவ்விரண்டின் இலக்கணத்தையும் முன் சூத்திரத்தில் சொல்லியதி லிருந்தும் தெள்ளிதின் தெரிந்துகொள்ளலாம்.

தொகுப்புரை : 116-ஆம் சூத்திரத்திலிருந்து 121-ஆம் சூத் திரம்வரை, திருமந்திரத்தின் பொருளை உணர்ந்து, அதன்படி நின் றொழுகும் ஒரு வைணவ அதிகாரிக்கு, அவ்வைணவத்துவம் கைவர, பத்துச் சிறந்த பண்புகள் இருத்தல் வேண்டும் என்றும்; இவன் திருமந்திரம், துவயம், சரமசுலோகம் ஆகிய இம்மூன்று இரகசியங்களையும் அனுசந்திக்க வேண்டுமென்றும் ; சாத்திரங்கள் தேகத்தாலும், திருமந்திரம் ஆன்மாவாலும், சரமசுலோகம் ஈசுவர னாலும், துவயம் பிராட்டியாராலும் பேறு எனச் சொல்லுகிற தென்றும்; பெரியபிராட்டியாராலே பேறுகையாவது இன்னதென் றும்; துவய அதிகாரிக்கு ஆகிஞ்சன்னிய அநன்னியகதித்துவங்கள் இருத்தல் வேண்டுமென்றும் ; இவை இரண்டும் பிரபந்ந பரித்தி ராணத்தில் விரிவாய்ச் சொல்லப்பட்டுள்ளன என்றும் அறிந்தாம்.

அவதாரிகை : திருமந்திரத்தின் விரிவான பதப்பொருள் கூறு தற்கு முன்பு, அதற்கு எங்ஙனம் சுருக்கமான பொருளைப் பகர்ந் தனரோ, அங்ஙனமே இம்மந்திரத்திற்கும் விரிவான பதப்பொருள் செப்புதற்கு முன்பு, சுருக்கமான பொருளைச் சொல்லுகிறார் :

**மூலம் : 122. "இதில் முற்கூற்றால், பெரிய பிராட்டி யாரை முன்னிட்டு ஈச்வரன் திருவடிகளை உபாய மாகப் பற்றுகிறது; பிற்கூற்றால், அச்சேர்த்தியிலே அடிமை இரக்கிறது."**

பொருள் : 'இத்துவயத்தின் முதல் வாக்கியத்தால், 'பெரிய பிராட்டியாரை முன்னிட்டு, ஈசுவரனுடைய இரண்டு திருவடிகளை

யும் உபாயமாகப் பற்றுகிறேன்,' என்னும் பொருளும், இரண்டாம் வாக்கியத்தால், 'பெரிய பிராட்டியாரும் ஈசுவரனுமான சேர்த்தியில் என்றும் கைங்கரியத்தைப் புரிவேனாக' என்னும் பொருளும் கிடைக்கின்றன.

**விளக்கம் :** **வினா :** பின் வாக்கியத்திற்கு ஸ்ரீமதே நாராயணாய—பெரிய பிராட்டியாரும் பெருமாளுமாகிய சேர்த்தியில் அடிமையை விரும்புகிறது. நமஃ—அவ்வடிமை என் இன்பத்திற்கேதுவாக அல்லாதொழிய வேண்டும் என்பது தானே பொருள்? இப்பொருளை நோக்குங்கால், நமப் பதத்திற்கு நீங்கள் சொல்லும் பொருளை, லோகாசாரியர் இங்குப் பகர்ந்ததாகத் தெரியவில்லையே?

**விடை :** அஃதுண்மையே. இப்பிரகரணத்தின் 182-வது சூத்திரம் சுவார்த்த கைங்கரியம், பரார்த்த கைங்கரியத்திற்குத் தடையெனச் சொல்லுகிறது. பரார்த்த கைங்கரியம் சித்திக்கும் போது அத்தடை ஒழிய வேண்டுமென்பதும் புலனாகும். ஆதலின், அஃது இதில் அடங்கியுள்ளதென்பது லோகாசாரியர் திருவுள்ளம். அவர் அதை இங்கு விளக்காததற்குக் காரணம் அஃதேயாகும்.

**அவதாரிகை :** இனி, பதப்பொருளை விளக்கமாகப் பகருதற்குத் திருவுளங்கொண்டு, முதன்முதலில் ஸ்ரீமத் என்னும் பதத்தின் பொருளைச் சொல்லத் தொடங்குகிறார் :

**மூலம் : 123. "(ஸ்ரீ) என்று—பெரியபிராட்டியார்க்குத் திருநாமம்."**

**பொருள் :** இம்மந்திரத்திலுள்ள ஸ்ரீ என்பது பெரிய பிராட்டியாரைக் குறிக்கும் திருநாமமாகும்.

**விளக்கம் :** ஸ்ரீ என்பதற்கு, செல்வம் அழகு என்னும் பல பொருள்கள் உண்டு. இவற்றுள் பெரியபிராட்டியார் என்னும் பொருளே இங்குக் கொள்ளத் தக்கதாகும். இப்பெரியபிராட்டியாருக்கு, இலக்குமி, பத்மா, கமலா, அரிப்பிரியா, ஸ்ரீ என்னும் திருநாமங்கள் பல அமைந்திருக்கின்றன. இவற்றுள் ஸ்ரீ என்னும் திருநாமம் மற்றவற்றைப் போன்றதன்று. மிக முக்கியமானதெனக் கொள்க. ஈசுவரனுக்கு எங்ஙனம் 'அ' என்னும் சப்தம் சிறந்த திருநாமமோ, அங்ஙனமே பெரிய பிராட்டியாருக்கும் ஸ்ரீ என்னும் இத்திருநாமம் சிறந்ததாகும். எவ்வாறு 'அ' என்னும்

பதம் ஈசுவரனுடைய இரட்சகத்திற்கு இன்றியமையாத இயல்புக ளைத் தெரிவிக்கின்றதேர், அவ்வாறே 'ஸ்ரீ' என்னும் இப்பதமும் பிராட்டியாரின் புருஷகாரத்திற்கு இன்றியமையாத இயல்புகளைத் தெரிவிக்கின்றது.

**அவதாரிகை:** இனி, இந்த ஸ்ரீ சத்தத்திற்குப் பொருள் பகரு வதற்கு இச்சொல்லின் வினையடியினுடைய விகுதிகளை இரண்டு விதங்களாகக் காட்டுகிறுர்:

**மூலம்: 124. "ஸ்ரீயதே ச்ரயதே."**

இந்தச் சூத்திரத்தின் பொருளை விளக்கமாகவே கூற வேண்டி யுள்ளது:

**விளக்கம்:** இந்த ஸ்ரீ என்னும் பதத்தின் வினையடி 'ச்ரிஞ்' என்பதாகும். இதன் பொருள் சேவித்தல் என்பது. வடமொழி யில் கர்மணி வியுற்பத்தி என்றும் கர்த்தரி வியுற்பத்தி என்றும், சொல்லுவர். இவற்றைத் திருமந்திரத்தில் விளக்கியுள்ளோம். கர்மணி வியுற்பத்தி சொல்லும் போது, விகுதியோடும் சேர்ந்த வினையடி 'ச்ரீயதே' என்ருகும். கர்த்தரி வியுற்பத்தி சொல்லும் போது விகுதியோடுஞ் சேர்ந்த வினையடி ச்ரயதே என்ருகும்.

**அவதாரிகை:** இவ்வியுற்பத்திகள் இரண்டிற்கும் பொருள் அருளிச்செய்கிறுர்:

**மூலம்: 125. "இதுக்கு அர்த்தம், எல்லார்க்கும் இவ ளைப்பற்றி ஸ்வரூபலாபமாய், இவள்தனக்கும் அவ னைப்பற்றி ஸ்வரூபலாபமாய் இருக்கும் என்று-"**

**பொருள்:** இவ்விரண்டினுள் 'ச்ரீயதே' என்பது, "பிராட்டி யார் எல்லாச் சேதனராலும் சேவிக்கப்படுகிறுர்," என்னும் பொரு ளைத் தருகின்றது. (இதற்குச் சேதனர் இவரைச் சேவிக்கின்றனர் என்பது பொருள்.) இம்முறையில் சேதனருக்கு, சேஷத்துவத் தையே வடிவமாய்க் கொண்டுள்ள தம் ஆன்ம சொரூபத் திற்குப் பயன் உண்டாகிறது. பின்னுள்ள 'ச்ரயதே' என்பது, "பிராட்டியார் ஈசுவரனைச் சேவிக்கிறுர்," என்னும் பொருளைத் தருகின்றது. இங்ஙனம் இவர் ஈசுவரனை வணங்குவதால், தாம் ஈசுவரனுக்குச் சேஷமாயிருக்கும் தம்முடைய சொரூபத்திற்குப் பயனுண்டாகிறது.

விளக்கம் : வி௵ : இவ்விரண்டினுலும் பிராட்டியாருக்கு வாய்ந்த நிலைகள் யாவை?

விடை : சேதனர் இவரைச் சேவிப்பதனல், சேதனரைக் குறித்துச் சேஷித்துவ நிலையும், இவர் ஈசுவரனைச் சேவிப்பதனல் அவனைக் குறித்துச் சேஷத்துவ நிலையும் இவருக்கு என்றும் நிலை பெற்று நிற்கும்.

அவதாரிகை : 'ஈசுவரனுக்கு எங்ஙனம் உபாயத்துவம், உபேயத்துவம் ஆகிய இரண்டு நிலைகள் அமைந்திருக்கின்றனவோ, அங்ஙனமே பிராட்டியாருக்கும் புருஷகாரத்துவம் பிராப்பியத்துவம் ஆகிய இரு நிலைகளும் அமைந்திருக்கின்றமையின், இவ்விரண்டுள் எந்நிலையைக் கருதி இவரை இச்சமயத்தில் சொல்லுகிறது?' என வினவ, அதை அருளிச்செய்கிருர் :

மூலம் : 126. "இப்போது இவளைச் சொல்லுகிறது புருஷகாரமாக."

பொருள் : நாம் அவதாரிகையில் செப்பிய இரு தன்மைகளுள், ஈசுவரனை உபாயமாகப் பற்றுகிற இச்சமயத்தில் இவரைச் சொல்லுகிறது புருஷகாரமாகவே ஆகும்.

விளக்கம் : "ஸ்ரீமந்நாராயண சரணௌ" என்னும் முன் வாக்கியத்தில், 'பெரியபிராட்டியாரோடுங் கூடிய எம்பெருமான் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறேன்,' என்னும் பொருள் கிடைக்கிறது. இதை உற்று நோக்கில், ஸ்ரீவிசிஷ்ட (பிராட்டியாரோடுங் கூடிய) நாராயணனுக்கு, பின் வாக்கியத்தில் சொல்லப்படும் பலத்தைக் குறித்து உபாயத்தன்மை உண்டு என்பது புலப்படுகிறது. இதனல், 'பகவான் எங்ஙனம் உபாயப் பொருளோ, அங்ஙனமே பிராட்டியாரும் உபாயப் பொருள்,' என்பது இங்குத் தேறி நின்ற ஒன்ருகும், எனச் சிலர் கருதுகின்றனர். ஸ்ரீ சப்தத்தின்பொருளை அருளிச் செய்த லோகாசாரியரோ, "இங்கு இவளைச் சொல்லுவது புருஷகாரமாக," என்று பகருகிருர். இவர் திருவுள்ளத்தைத் துருவி நோக்குங்கால், 'பெரியபிராட்டியாருக்குப் புருஷகாரத்தன்மையே உள்ளது; உபாயத்தன்மை இல்லை,' என்பது தெரிகிறது.

வினு: பிராட்டியாருக்கு உபாயத்தன்மையும் உண்டு எனச் சிலர் கருதுவதைப் பிள்ளைலோகாசாரியர் துடைத்துக் கூறுவதற்குக் காரணம் என்ன?

விடை: பகவான், தான் அருளிச்செய்த பாஞ்சராத்திரத்தில், "புருஷகாரத்தன்மை பெரிய பிராட்டியாருக்கே உரித்தானது. உபாயத்தன்மை தனக்கே உடமைப் பொருளாயுள்ளது" என வெளிப்படையாய் அருளிச்செய்துள்ளான். இக்கருத்தை,

"லக்ஷ்மீः புருஷகாரத்வே, நிர்திஷ்டா பரமர்ஷிபிः
"அஹம் மத்ப்ராப்த்யுபாயோவை ஸாக்ஷாத் லக்ஷ்மீபதிः
ஸ்வயம்"

என்னும் இந்தச் சுலோகங்கள் வெளிப்படுத்துகின்றன.

இங்கு, 'பிராட்டியாரோடுங்கூடிய நாராயணன் உபாயம்' என்று சொல்லுங்கால், பிராட்டியார் பகவானுக்குப் பண்பாயிருக்கும் நிலையை முன்னிட்டு, இவருக்கும் உபாயத்தன்மை உண்டு என்று கொள்ளின், 'உபாயத்தன்மை எனக்கே உடைமைப் பொருளானது' என்னும் பொருளுள்ள மேற்கூறிய பாஞ்சராத்திரத்தோடு முரண்படுமென்பது வெள்ளிடைமலை. மேலும், முன் வாக்கியத்தில் 'பிராட்டியாரோடுங் கூடிய நாராயணன் உபாயம்' என்னும் பொருள் கிடைப்பது போல, வாத்ஸல்யம் முதலிய குணங்கள், ஞானம் முதலிய குணங்கள், திவ்ய மங்கள விக்கிரகம் ஆகிய இவற்றோடுங்கூடிய எம்பெருமான் உபாயம் என்னும் பொருளும் இங்கே கிடைக்கிறது. முன் செப்பியது போன்று, பெரிய பிராட்டியார் பகவானுக்குப் பண்பாய் இருக்கும் நிலையை முன்னிட்டு இவருக்கு உபாயத்தன்மையைக் கொள்ளில், அந்நிலை வாத்ஸல்யம் முதலிய முத்தொகுதிகளுக்கும் ஒத்திருத்தலால், அவற்றிற்கும் உபாயத்தன்மை நேரிடும். ஆயினும், அதை ஒருவரும் ஒப்புக்கொள்வதில்லை. ஏனெனில், பிரமாணங்களை ஆராய்ந்து பார்க்குங்கால், அவ்வாறு சொல்லுதற்கு ஆதாரம் இல்லை. பண்பாயுள்ள வாத்ஸல்யம் முதலியன, சேதனன் பகவானை உபாயமாகப் பற்றும் போது உதவி புரிகின்றன என்றும், ஞானம் முதலியன, இவனுடைய காரியங்களைப் பகவான் செய்யும் போது உதவத்தக்கனவாயுள்ளன என்றும், திவ்ய மங்கள விக்கிரகம், பகவானைக் கண்ணெடுத்தும் பாராத ஒருவனை, உறங்கா வில்லி தாசரைப் போன்று பகவானிடத்

தில் மிகுந்த அன்பு கொள்ளுமாறு செய்வதற்குச் சாதனமா யுள்ளது என்றும் கொள்வது போலப், பண்பான பெரிய பிராட்டி யாரும் புருஷகாரமாகவே இருப்பவர் எனக்கொள்வதே பொருத்த முடையதாகும். இதுவே லோகாசாரியர் கருத்து.

அவதாரிகை: 'தான் எம்பெருமானுக்குச் சேஷபூதன் (அடிமை) ஆகவும், எம்பெருமான் தனக்குச் சேஷி (எஜமானன்) ஆகவும் இருக்கும் தொடர்பை நன்குணர்ந்த சேதனன், தானே ஈசு வரனைச் சென்றடைதற்கு உரிமை பெற்றிருக்க, பிராட்டியாரைப் புருஷகாரமாய்ப் பற்ற வேண்டுவது ஏன்?' என்ன அருளிச்செய் கிறார்:

மூலம்: 127. "நீரிலே நெருப்புக் கிளருமாப்போலே, குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தால் சீற்றம் பிறந்தால் பொறுப்பதிவளுக்காக."

பொருள்: பகவான் மிக்க அருள் நிறைந்த திருவுள்ளத்த னாய் இருப்பினும், சேதனன் செய்யும் அளவு கடந்த குற்றங்கள், குளிர்ந்த நீரில் நெருப்புப் பிறத்தல் போன்று, அவனுக்குச் சீற் றத்தை உண்டாக்குகின்றன. அச்சீற்றத்தை மாற்றிக்கொண்டு இவனுடைய குற்றங்களைப் பொறுப்பது பிராட்டியாருக்காகவே ஆகும்.

விளக்கம்: வினா: பகவான் ஏன் பிராட்டியாருக்காக இவனுடைய குற்றங்களைப் பொறுத்தல் வேண்டும்?

விடை: அதைக் கீழ்க்காணும் சம்பாஷணையால் நன்கு அறியலாம்:

ஒரு சேதனன், பகவானிடம் ருசி பிறந்து அவனை உபாய மாகப் பற்றும் போது, ஈசுவரன் சினங்கொண்டு, 'என் முன் நில்லாதே' எனச் சீறி விழுகிறான். இதை நோக்கிய பிராட்டியார், எல்லாமறிந்தவராயிருப்பினும், ஒன்றும் தெரியாதவர் போன்று 'ஈதென்ன?' என்கிறார்.

பகவான்: இவன் செய்த குற்றங்களுக்கோ அளவில்லை. பொறுக்க முடியாத பல பிழைகளைச் செய்திருக்கின்றான்! ஆதலின், இவன் குற்றங்களுக்கு ஏற்ப இவனைத் தண்டித்தே ஆக வேண்டும்.

பிராட்டியார்: பெருமானே, நீர் இவன் அபராதங்களைக் கணக்கிட்டு இவனை இங்ஙனம் தள்ளிக் கதவடைத்தால், இவனுக்கு வேறொரு புகலிடமுண்டோ? இவனுக்கும் உமக்கும் உள்ள தொடர்பை நோக்கின், "உறவேல் நமக்கிங் கொழிக்க ஒழியாது" என்கிறபடி எக்காரணத்தினாலும் நீங்காததொன்றன்றோ? இம் முறையில் நீர் இவனைக் கைவிட விதியுண்டோ?

பகவான்: அதைக் கருதி இவன் எத்தனை தீங்குகள் செய்யினும், யான் இவனை அங்கீகரிக்க வேண்டுமோ? அவ்வாறு செய்ய வேண்டும் என்னும் அவசியம் என்ன?

பிராட்டியார்: இவனைப் பெறுதல், உரியவரான உமக்குத் தாமே பேறாய் உள்ளது! நீர் இங்ஙனம் உறுதியுடனிருப்பின், இவ் வுலகில் ஒருவனேனும் உமக்குக் கிடைப்பனோ? உயிர்களைத் திருத்தி அவைகளைப் பெறுதற்பொருட்டே பல அவதாரங்களையும் எடுத்து உழலும் உமக்கு யான்அறிவுறுத்தல் வேண்டுமா? உம்மை இரட்சகப் பொருளாய் நாடிவந்த இவனைக் காக்கவில்லையேல், உம் முடைய ஸர்வ இரட்சகத் தன்மைக்குக் குறைவு ஏற்படாதா?

பகவான்: அநாதி காலமாய் நம்முடைய கட்டளையை அவமதித்து, தன் இச்சையின்படி ஒழுகிப் போந்த இவனைக் குற்றங் களுக்கேற்பத் தண்டியாமல், ஏற்றுக்கொள்ளின், நாம் ஏற்படுத்திய சாத்திரத்தின் மரியாதை குன்றாதோ?

பிராட்டியார்: அஃதுண்மையே. ஆயினும், உம்மை நாடிவந்த இவனைக் காக்காமல், இவன் குற்றங்களை நோக்கித் தண்டிக்கில் உம்முடைய அருட்குணம் நிலைப்பது எவ்வாறு! அதற்குப் பயன்தா னென்ன! இவனைப் பாவங்களிலிருந்து நீக்கி இரட்சித்தாலல்லவா, அதற்குப் பயன் ஏற்படும்?

பகவான்: இவனைத் தண்டிக்கவில்லையேல், சாத்திரம் நிலை யாது! இவனைக் காக்கவில்லையேல், அருட்குணம் நிலைத்திராது! இத்தரும சங்கடத்திற்கு என் செய்வது!

பிராட்டியார்: அவற்றிற்காகவா சிந்திக்கின்றீர்! உம்மைச் சிறிதும் நோக்கிப் பாராது தன்னிச்சையில் செல்பவனிடம் சாத்திர முறையைப் பயன்படுத்தும்; உம்மிடம் அன்புடன் வந்த இவனைப் பாவங்களிலிருந்து நீக்கி இரட்சியும். அப்போது சாத்திரமும் பழுது படாது; உமது அருட்குணமும் உயிர் பெற்றுத் துலங்கும்.

இங்ஙனம் சுவாமிக்கு ஏற்ற பற்பல இனிய சொற்களைப் பகர்ந்து, அவன் சினத்தை மாற்றி, அவனுக்குச் சேதனனிடம் அருள் பிறக்குமாறு செய்பவர் பிராட்டியாரேயாவர். இவ்வினிய சொற்களாலும் ஈசுவரனது நெஞ்சம் இளகவில்லையேல், பிராட்டியார் தம்அழகைக் காட்டி அவனைத் தம் வசப்படுத்திச் சேதனனை அங்கீகரிக்குமாறு செய்வர். ஆதலின், சேதனனுக்குப் பிராட்டியாரின் புருஷகாரம் இன்றியமையாததென்றும், பகவான் சேதனனுடைய குற்றங்களைப் பிராட்டியாருக்காகவே பொறுக்கின்றான் என்றும் அறிதல் வேண்டும். ஈண்டு, "இருவரையும் திருத்துவது உபதேசத்தாலே; உபதேசத்தாலே மீளாத போது...............ஈச்வரனை அழகாலே திருத்தும்"[1] என்பதை நோக்குக.

அவதாரிகை : 'இங்ஙனம் சேதனனது காரியத்தைத் தம் காரியமாக மேற்கொண்டும், பகவானைத் தம் வசப்படுத்தியும் இருவரையும் பொருத்துகைக்கு, இப்பிராட்டியார்தாம் அருள் நிறைந்த புருஷகாரமா? என்ன அருளிச்செய்கிறார் :'

**மூலம் : 128. "இவள் தாயாய், இவர்கள் க்லேசம் பொறுக்கமாட்டாதே அவனுக்குப் பத்நியாய், இனிய விஷயமாயிருக்கையாலே கண்ணழிவற்ற புருஷகாரம்."**

பொருள் : பிராட்டியார் உலக உயிர்களுக்குத் தாயாராயும், அதனால் இவர்களுடைய துக்கத்தைப் பொறாதவராயும், பகவானுக்குப் பத்தினியாராயும், அம்முறையில் அவனுக்கு இனிய பொருளாயும் இருத்தலின், இவரே உயிர்களுக்கு அருள் நிறைந்த புருஷகாரமாவார்.

விளக்கம் : உயிர்கள் அனைத்துக்கும் பிராட்டியார் தாயார் அல்லரா? தம் மக்கள் அறியாமையினால் துன்பத்திலுழலுங்கால், இவர் எங்ஙனம் பொறுப்பார்? "தந்தம் மக்கள் அழுது சென்றால் தாய்மாராவார் தரிக்ககில்லார்!" என்னும் திருவாக்கைக் காண்க. அன்றியும், உயிர்களின் குற்றங்களைப் பொறுத்துக் காப்பவனும் வேறொருவனல்லனே! அவன், "பித்தன் பனிமலர்மேற் பாவைக்கு" என்றவாறு பிராட்டியாருடைய வடிவழகில் ஈடுபட்டு, இவர்

குறிப்பு : 1. ஸ்ரீ வசனபூஷணம் : வாக் 11 : 13.

சொற்படி நடக்கும் அளவு கடந்த அன்புடைய பர்த்தாவாய் அல்லவா இருக்கிறான். ஆதலின், உயிர்களின் கவலையைக் கண்டு பொறுத அன்னையாராயும், ஈசுவரனைத் தன் வசப்படுத்தும் இனியராயும் உள்ள இப்பிராட்டியாரைக்காட்டிலும், புருஷகாரத் திற்குத் தகுந்தவர் வேறொருவர் உண்டு எனக் கூறல் இயலுமோ! ஆகவே, பெரிய பிராட்டியாரே புருஷகாரஞ் செய்து இருவரையும் (ஈசுவரனையும் சேதனனையும்) சேர்த்து வைத்தற்குத் தகுதியானவர் எனக் கொள்க.

அவதாரிகை: 'பிராட்டியார் பலவற்றைச் செய்யினும், ஒருவராலும் அடக்க முடியாத சுவாதந்தர்யம் வாய்ந்த பகவான், "சேதனருடைய குற்றங்களைக் கணக்கிட்டு அனுபவிக்கச் செய்தே தீர்ப்பேன்," என்னும் உறுதியில் நிற்கில், இவரால் பொறுப்பிக்க முடியுமோ?' எனின், அருளிச்செய்கிறார்:

மூலம்: 129. "திருவடியைப் பொறுப்பிக்குமவள் தன் சொல்வழி வருமவனைப் பொறுப்பிக்கச் சொல்ல வேண்டாவிறே."

பொருள்: மிடுக்கனும் முரடனுமான அனுமானையே தம் உபதேசத்தால் வசப்படுத்திப் பொறுக்குமாறு செய்தவர், தம் அழகில் சிக்குண்டு தம்மிடம் அளவு கடந்த அன்புடையவனும், தம் சொல்லின்படி நடப்பவனுமான பெருமானைப் பொறுக்குமாறு செய்வார் என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

விளக்கம்: நம் பிராட்டியார் பத்து மாதங்கள் இலங்கையில் இருந்த போது, இவருக்குக் காவலாய் அமைந்த அரக்கியர், "யான் முன், யான் முன்" என இவரைக் கடிவதில் முற்பட்டவராய், ஒளி வீசும் சூலத்தையும் வேலையும் உயர்த்திக்கொண்டு, "இவளைக் கொல்லுங்கள்! கொல்லுங்கள்! கண்ட துண்டமாக்கி வயிறு நிறையத்தின்னுங்கள்! தின்னுங்கள்!" என அச்சுறுத்தி அதட்டினர்.

இன்னும், அத்தியோர் பிராட்டியாரை நோக்கி, "பெண்களுள் கொடியவளே, நீ பட்சபாதத்தால் உண்மையை ஆராய்ந்தறியாதவளாய் எமது அரசனைப் புண்ணிற் கோல் குத்தினாற் போன்ற கடுஞ்சொற்களைச் சொல்லி, உலகிலுள்ள மக்கட்கூட்டமே அழியு

மாறும், உனது உடலும் ஒழியுமாறும் தீய செயலைச் செய்துவிட் டனை!" என வசை கூறினர்.

"முன்முன் நின்ருர் கண்கனல் சிந்த முடுகுற்ருர்
மின்மின் னென்னுஞ் சூலமும் வேலும் இவையோச்சி
கொன்மின் கொன்மின் கொன்று குறைத்துக் குடாரத்
தின்மின் தின்மின் என்று தெழித்தார் சிலரெல்லாம்.[1]

"மண்ணிற் றீய மானுயர்த் தத்தம் வழியோடும்
பெண்ணிற் றீயோய் நின்முதன் மாயும் பிணிசெய்தாய்!
புண்ணிற் கோலிட் டாலன சொல்லிப் பொதுநோக்கால்
எண்ணிக் காணுய் மெய்ம்மையு மென்ருர் சிலரெல்லாம்.[2]

அவ்வமயம் அங்குச் சென்ற அனுமான் அவற்றைக்கண்டு மிக வருந்தினன்; ஆனல், அவ்வமயம் அவர்களைப் பழிக்குப் பழி வாங்க மாருதி கருதினனில்லை. பின்பு அவன் பெருமானுடைய மங்களமான வீரவெற்றியைப் பிராட்டியாருக்குத் தெரிவிக்க வந்த போது, பிராட்டியார், "இச்சந்தோஷச் செய்தியைத் தெரிவித்த உனக்கு ஏதேனும் வரங்கொடுக்க விரும்புகிறேன். உனக்கு வேண்டியதைக் கேட்டுப் பெற்றுக்கொள்க," எனப் பகர்ந்தனர். தனக்கென ஒன்றையும் விரும்பாது, பெருமாள் பிராட்டியார் இவர்களின் நலனையே நாடி நிற்கும் சிறிய திருவடி, "முன்பு உம்மை இமிசித்த இந்த அரக்கிகளைச் சிறிது பொழு திற்கு என்னிடம் காட்டிக் கொடுப்பீரேல், யான் என் பகையைத் தீர்த்துக்கொள்வேன். இஃதே எனக்கு வேண்டும் வரம்" எனச் செப்பினன். அவ்வார்த்தைகள் அருளையே வடிவெனக் கொண்ட பிராட்டியாரின் நெஞ்சில் நெருஞ்சி முள்ளெனத் தைத்தன. இவர் சிறிய திருவடியை நோக்கி, "உத்தமனே, இவ் வரக்கியர், தம்மன்னன் ஆணைப்படி நடந்ததல்லால், வேறென் பிழை செய்தனர்? அரசனுணையை மேற்கொள்ள வேண்டுவது இவர்தம் கடமையன்ருே! உன் கருத்திற்கு இவர்கள் குற்ற வாளிகளாய்க் காணப்படலாம். ஆயினும், என் கருத்திற்கு அங்ஙனம் காணப்படுகின்ருர்களில்லை.

"என்ன தீமை யிவரிழைத் தாரவன்
சொன்ன சொல்லின தல்லது தூய்மையோய்!'"[3]

---

குறிப்பு: 1, 2. சுந்தர காண்டம்—நிந்தனைப் படலம் 76, 78.
3, உயுத்த காண்டம்—மீட்சிப் படலம், 34.

"இவ்வாறு நோக்கில், பெருமாள் மிக்க சமர்த்தராயிருப்பினும், இப்பத்து மாதங்கள் என்னைத் துடிக்கவிட்டது, இரட்சகரான அவர் நிலைக்குச் சேருமா? பெருமாள் உன்னை, வெற்றியின் மங்கலச் செய்தியை எனக்குத் தெரிவித்து வருமாறு அனுப்பினரே அல்லாமல், அரக்கியரை இமிசிக்குமாறு பணிக்கவில்லையே! அங்ஙனமிருக்க, தலைவருடைய கட்டளைக்கு மீறி நீ இக்காரியஞ் செய்யக் கருதுதல் உன் தாசநிலைக்குச் சேருமா? ஆயினும், இவ்வாறு பரம புருஷரான என் நாயகரிடத்திலும், அரிய உதவிகளைப் புரிந்த உன்னிடத்திலும் குறை கூறுவது எனக்குச் சேருமா? இம்முறையில் ஆராயின், குற்றமற்றவர்தாம் யார்? மக்கள் குற்றங்களை ஆராயப்புகின், மணற்சோற்றில் கல்லாராய்வதை ஒக்கும்! ஆதலின், அரக்கியர் தண்டனைக்கு உட்படவேண்டியவரல்லர். இது நிற்க. யான் இத்துன்பங்களை அனுபவித்தற்கு என் தீவினையே காரணமாகும். ஆதலின், தூயனே, இவ்வரக்கிகளுக்கு யாதொரு தீமையும் செய்தல் இல்லை என்னும் இவ்வரத்தை எனக்கு அருள்வாயாக!" என்று அநுமானைப் பிராட்டியார் கேட்டுக்கொண்டனர். இக்கருத்தைக் கீழ்ப் பாசுரங்களில் காணலாம்.

"யானி ழைத்த வினையினி னிவ்விடர்
தான டுத்தது தாயினு மன்பினோய்!"[1]

"எனக்கு நீயருள் இவ்வரம் தீவினை
தனக்கு வாழ்விட மாயச் சழக்கியர்
மனக்கு நோய்செயல் என்றனள் மாமதி
தனக்கு மாமறு தந்த முகத்தினள்."[2]

தம்மிடத்து அளவு கடந்த அன்புடையவனும், அருள் நெஞ்சுடையவனும், "நின்னன்பின் வழி நின்று சிலை பிடித்து எம்பிரானேக" என்கிறபடி, "மாயையுடைய மானின் பின்போ" எனச் செப்பியவுடன், அதனால் பின் என்ன நேருமோ என்பதைச் சிறிதும் சிந்தியாமல் தம் சொல்வழிச் செல்பவனுமான எம்பெருமானைத் தம் புருஷகாரத்தினால் திருத்திச் செயல் கொள்வது அருமையாமா?

அவதாரிகை: 'ஸ்ரீமத்' பதத்தில் உள்ள ஸ்ரீ என்னும் பகுதியின் பொருளை முன் அருளிச்செய்தார். இனி 'மதுப்பின' அர்த்தத்தை அருளிச் செய்கிறார்:

---

குறிப்பு: 1, 2. உயுத்தகாண்டம் மீட்சிப்படலம் 35, 36.

மூலம்: 130. "மதுப்பாலே இருவர் சேர்த்தியும் நித்ய மென்கிறது."

பொருள்: இம்மதுப்பிற்குப் பல பொருள்கள் இருப்பினும், இங்கு நித்திய யோகம் என்னும் பொருளேயே கொள்ளுதல் வேண்டும். நித்திய யோகமாவது, என்றும் உள்ள தொடர்பு. ஆக பிராட்டியாருக்கும் எம்பெருமானுக்கும் தொடர்பு என்றும் உள்ளது என்பதை இம்மதுப்புத் தெரிவிக்கும்.

அவதாரிகை: இருவருக்கும் என்றுமுள்ள சேர்க்கையைப் பகருகிறுர்:

மூலம்: 131. "இவளோடே கூடியே வஸ்துவினுடைய உண்மை."

பொருள்: பெரிய பிராட்டியாரோடு சேர்ந்தே பரம புருஷனுடைய உண்மை உள்ளது.

விளக்கம்: வினு: அஃதெங்ஙனம்?

விடை: திருமந்திரப் பகுதியில் நார பதத்திற்குப் பொருள் கூறும் போது, மலருக்கு மணம் போன்று பரமாத்துமாவிற்கு அமலத்தன்மை, அறிவு, இன்பம் முதலியன சொரூப நிரூபக தருமங்களாகும் என்பதைக் கூறியுள்ளோம். எம்பெருமானுரோ, கீதா பாஷ்யத்தில், பகவானை முதன்முதலில் அனுபவித்துச் சொல்லும் போது, அமலத்துவம் முதலியவற்றிற்கு முன்பே ஸ்ரீயப்பதித்துவத்தை முக்கிய சொரூப நிரூபக தருமமாய் அருளிச்செய்துள்ளார். ஆதலின், மணத்தோடு சேர்ந்தே உள்ளது மலர் என்பது போல, பெரிய பிராட்டியாரோடு சேர்ந்தே உள்ளது பரமபுருஷனுகிற தத்துவம் என்பது விளங்குகின்றது. இதைக் கருத்திற்கொண்டே லோகாசாரியர் இங்கு இவ்விதம் அருளிச்செய்தனர்.

அவதாரிகை: இனி, தாயாராகிய இப்பிராட்டியாரின் அருளடியாய் எற்படும் என்றுமுள்ள தோடர்பைத் தெரிவிக்கிறுர்:

மூலம்: 132. "ஈச்வர ஸ்வாதந்த்ர்யத்தையும், சேதநனுடைய அபராதத்தையுங் கண்டு அகலமாட்டாள்."

பொருள்: ஈசுவரனே, எதையும் தன் இச்சையினுல் செய்பவனுயிருக்கிறுன். சேதனனே, எண்ணிறந்த குற்றங்களை உடையவனுயிருக்கிறுன். பிராட்டியார், அவன் சுதந்தரத்தன்மையை

யும், இவன் குற்றங்களையும் கண்டு, 'என்னாகப் போகிறதோ!' என்றஞ்சி, எம்பெருமானை ஒரிமையும் விட்டுப்பிரியாமல் இருக்கிறார்.

விளக்கம் : வினா : அவதாரிகையில் பிராட்டியார், அருளடியாகவே பகவானுடன் சேர்ந்திருக்கின்றனர் என்றீர். பொருளிலோ, அச்சங் காரணமாய்ச் சேர்ந்திருக்கின்றனர் என்கின்றீர். அங்ஙனமாயின், அருளுக்கும் அச்சத்திற்கும் பொருள் ஒன்று தானா ?

விடை : இங்கு இவ்விரண்டும் ஒன்றுதான். பிறருடைய துக்கத்தைக் கண்டுபடும் துன்பம் எஃதோ, அஃதே அருளாகும். இம்முறையில் சேதனனுடைய நிலை என்னவாகப் போகிறதோ என்னும் இவனுடைய துன்பத்தைப்பற்றித் தாம் துன்புறுதலே அச்சமாதலால், அருளும் அச்சமும் ஒன்றே என இங்குக் கொள்ளுதற்குத் தடையில்லை.

உலகத்தாரைப் போன்றல்லாமல், ஈசுவரன் குற்றங்களுக்கேற்பச் சேதனனைத் தண்டிக்க ஊன்றி நிற்கிறான். சேதனனோ அளவற்ற குற்றங்களைச் செய்தவனாயும், செய்கின்றவனாயுமிருக்கிறான். இவற்றுள் ஒன்றே பிராட்டியாரின் அச்சத்திற்குப் போதுமானதாயிருக்குங்கால், இவ்விரண்டும் சேர்ந்தால் சொல்லவும் வேண்டுமோ !

கடின சித்தமுடைய நாயகனையும், குறும்பு நிறைந்த மக்களையும் பெற்ற ஓர் இல்லத் தலைவி, எங்ஙனம் அவர்களை விட்டுத் தான் தாய்வீடு செல்லமாட்டாளோ, அங்ஙனமே குற்றத்திற்கேற்ற தண்டனை அளிப்பதில் ஊன்றி நிற்கும் புருஷனையும், குற்றங்களையே செய்து கொண்டு போகும் துஷ்டராகிய மக்களையும் பெற்ற பிராட்டியாரும் எம்பெருமானை விட்டுப் பிரியமாட்டாள்.

அவதாரிகை : இதனால், சேதனனுக்கு ஏற்படும் பயனை இயம்புகின்றார் :

மூலம் : 133. "சேதநனுக்கு இவை இரண்டையும் நினைத்து அஞ்சவேண்டா."

பொருள் : பிராட்டியார் ஈசுவரனோடு சேர்ந்திருந்து நோக்குகையாலே, சேதனன் ஈசுவரனுடைய சுதந்தத் தன்மையையும்,

தன் குற்றங்களையும் கண்டு, "நம் முடிவு என்ன ஆகுமோ!" என்னும் அச்சம் கொள்ள வேண்டுவதில்லை.

விளக்கம்: அர்ச்சையில் பெரிய பிராட்டியார் அபயஹஸ்தத்துடன் இருத்தலைக் காண்கின்றோம். இது தன்னிடம் வந்த சேதனரை நோக்கி, "ஈசுவரனுடைய சுதந்தரத்தன்மைக்கு அஞ்ச வேண்டா. யான் உங்களை அவனோடு சேர்த்து வாழச் செய்கிறேன்," என்பதைக் குறிப்பதாகும். ஈண்டு, ஆண்டாள் நப்பின்னைப் பிராட்டியை எழுப்புங்கால், "சேதனரை நோக்கி, 'நீங்கள் உங்கள் குற்றத்திற்காக அஞ்ச வேண்டா' எனக் குறிப்பிப்பதான உன்னுடைய கைகளில் அணிந்துள்ள அழகிய வளைகள் ஒலிப்ப வந்து கதவைத் திறவாய்," என இயம்புவதை நோக்குக:

"செந்தாமரைக் கையால் சீரார் வளையொலிப்ப, வந்து திறவாய்."

அவதாரிகை: இம்மதுப்பை ஊன்றி நோக்குங்கால், ஏற்படும் உட்பொருளை வெளியிடுகிறார்:

## மூலம்: 134. "இத்தால் ஆச்ரயிக்கைக்கு ருசியே வேண்டுவது, காலம் பார்க்கவேண்டா என்கிறது.'

பொருள்: எம்பெருமானுக்கும் பிராட்டியாருக்கும் என்றுமுள்ள தொடர்பைக் குறிக்கும் இம்மதுப்பால், "எம்பெருமானைப் பற்றுதற்கு வேட்கையே வேண்டுவது. இருவரும் சேர்ந்திருக்கும் காலத்தை நோக்கி இருக்க வேண்டுவதில்லை," என்பதை அறிகின்றோம்.

விளக்கம்: இங்குக் "கண்ணனுடைய அனுபவத்தில் ஆழ விருப்பமுடையவர் யாவரும் வாருங்கள்" என அழைக்கும் நம் கோதையார், "நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்!" எனச் செப்புவதைக் காணுதல் வேண்டும். மேலும் பிராட்டியார், மலரில் பிறந்து பகவான் மார்பில் தங்கி "அகலகில்லேன் இறையும்" என்று அம்மார்பிலேயே அமர்ந்து இருக்கின்றார். இங்ஙனம் இருத்தற்கு அத்திருவகலத்தின் போக்கியதையே காரணமன்று. அது தனனலத்தைச் சார்ந்ததாகும். ஆனால் இதற்குக் கருத்து என்னை! நாம் பிரியும் காலமும், சேதனன் ருசியோடு வந்து ஈசுவரனைப் பற்றும் காலமும் ஒன்றாயிருப்பின் என் செய்வது! அந்தச் சேதனனின் கதி என்னாகும்!" எனக் கருதியே அனை

யார் அவனிருந்து நீங்காமல் நித்தியவாசஞ் செய்கிறார். இதனால் ருசியே போதியதெனத் தெரிகின்றதன்றோ!

அவதாரிகை: பிராட்டியாரின் புருஷகாரம் இன்றியமையாது வேண்டற்பாலது என்பதைத் தெரிவிக்க, இவர் எம்பெருமானோடு சேர்ந்திருக்கும் காலத்திற்கும், அவனைப் பிரிந்திருக்கும் காலத்திற்கும் உள்ள வேறுபாட்டைக் குறிப்பிக்கின்றார்:

மூலம்: 135. "இவள் ஸந்நிதியாலே காகம் தலை பெற்றது; அது இல்லாமையாலே ராவணன் முடிந்தான்."

பொருள்: கிருபையே ஒரு வடிவு கொண்டதைப் போன்று இலங்குபவரும், ஈசுவரனுடைய சுதந்தரத்தன்மை கீழடங்கி, அவனுடைய அருடன்மை மேற்கிளம்பச் செய்பவருமான பிராட்டியார் உடனிருந்ததனால், காகாசுரன் பிழைத்தான். இவர் பிரிந்திருந்ததனால் இராவணன் ஸ்ரீராமபிரான் அம்பிற்கு இலக்காய் உயிரிழந்தான். ஆகவே, இந்த ஸ்ரீமத் பதத்தினால் ஈசுவரனைப் பற்றுபவர் ஒவ்வொருவருக்கும் இவர் கிருபை நிறைந்த சந்நிதி இன்றியமையாததென அறிந்தாம்.

விளக்கம்: வினா: மதுப்பினுடைய பொருள் சொல்லுங்கால், 'எம்பெருமானுக்கும் பிராட்டியாருக்கும் என்றும் தொடர்புள்ளது' எனச் செப்பினீர். மதுப்பிற்கு உட்பொருளைக் கூற வந்த இங்கு, பிராட்டியார் பெருமாளோடு சேர்ந்திருந்தமையின், காகாசுரன் வாழ்ந்துபோனான் என்றும், அங்ஙனமாகிய சேர்க்கை இல்லாமையின் இராவணன் அழிந்துபட்டான் என்றும் சொல்லுகின்றீர். இப்பொருளை நோக்கும் போது, பிராட்டியார் சேர்ந்தும் பிரிந்தும் இருப்பர் எனத் தெரிகின்றமையின், பிராட்டியாருக்குள்ள தொடர்பு 'என்றும் உள்ளது' என முன்னர்க் கூறியது யாங்ஙனம் பொருந்தும்?

விடை: முன்னர்க் கூறியவாறு மலருக்கு மணம் போன்று பெரிய பிராட்டியார் இருக்கின்றமையின், இவருக்குப் பெருமாளோடு ஒரு நாளும் பிரிவு இல்லை. ஆனால், பெருமான் நம்மை அனுக்கிரகிப்பதன்பொருட்டு இவ்வுலகில் எவ்வுருவத்துடன் தோன்றுகின்றனனோ, அவ்வுருவத்திற்கு ஏற்ற உருவத்துடன் பிராட்டியாரும் தோன்றுகின்றார். இம்முறையில், பெருமாள்

இராமனாய் அவதரித்த போது இவர் சீதாபிராட்டியாராகவும், கண்ணனாய் அவதரித்த போது உருக்குமிணியாகவும் அவதரித்தனர். அந்தந்த விக்கிரகத்தோடுங் கூடியிருக்கும் நிலையை நோக்கும் போது இவர்களுக்குச் சேர்க்கையும் பிரிவும் உண்டு எனச் சொல்லுதற்குத் தடையில்லை.

ஸ்ரீ வசனபூஷணத்தில், 'ப்ரபத்திக்குக் கால நியமமில்லை' எனக் கூறுமிடத்து, பிரசித்தராய் எழுந்தருளியிருந்த எம்பார் ஜீயர் சுவாமிகள், "அபசாரங்களுள் மிகக்கொடியதான பாகவதாபசாரமியற்றியவன், ஸ்ரீராமனைப் பற்றுங்கால் அவ்வவதாரத்திற்கெனவே முடி சூடி இருக்கும் சீதாபிராட்டியாரையும், கண்ணனைப் பற்றுங்கால், அம்முறையிலிருக்கும் நப்பின்னைப் பிராட்டியாரையும் பற்ற வேண்டுவது இன்றியமையாததாகும். ஆயினும், மேற்குறிப்பித்தபடி அவதாரத்திற்கேற்பப் புருஷகாரத்திற்கென முடி சூடி இருக்கும் பிராட்டியார் பிரிந்திருக்கும் சமயத்திலும், சுக்கிரீவனும் விபீஷணனும் பெருமாளைச் சரணடைந்து பயனடைந்ததைச் சரிதங்களால் அறிகின்றோம். இங்கு அவர்களுக்குக் கொடிய குற்றமாகிய பாகவதாபசாரம் இல்லையென்பதை நோக்குதல் வேண்டும். பிராட்டியாரைக் களவாடியது இராவணனுக்குக் குற்றமாயிருப்பினும், அதனைக்காட்டிலும், பரம பாகவதரான ஜடாயுவை வதை செய்ததே இவனுக்குப் பெருங்குற்றமாகும். இதனால், மற்ற அபசாரங்கள் யாவற்றினும் பாகவதாபசாரம் கொடியது என்பதும், இது நீங்குதற்குப் பிராட்டியாரின் புருஷகாரம் இன்றியமையாது வேண்டுமென்பதும், இன்றேல், அவ்வபசாரங் கழிதல் இயலாதென்பதும் அறியக் கிடக்கின்றன.

அறியாமையில் ஆழ்ந்துள்ள நாம் பாகவதாபசாரம் செய்யாமல் காலங்கடத்த முடியும் என உறுதி கூறுதற்கில்லை. ஆதலின், யாம் இருவர் சேர்த்தியிலேயே இரக்க வேண்டியவர்களாய் உள்ளோம். இதற்கு, எம்பெருமானார், நம்மனோர் கொடிய குற்றங்களைப் பொறுக்குமாறு ஸ்ரீரங்கநாய்ச்சியாரும், அழகிய மணவாளப் பெருமாளும் ஒரே சேர்த்தியில் எழுந்தருளியிருக்கும் காலத்தை நோக்கிக் கொண்டிருந்து, பங்குனி உத்திரத்தில் பிரார்த்தித்திருப்பதுவே தக்க சான்றாகும்.

**தொகுப்புரை :** 122-ஆம் சூத்திரத்திலிருந்து 135-ஆம் சூத்திரம் வரையும் சொல்லியவற்றால், துவயத்தின் பூர்வ வாக்கியம்,

ஈசுவரனுடைய இரண்டு திருவடிகளையும் உபாயமாய்ப் பற்று கிறேன் என்பதையும், உத்தர வாக்கியம், இருவர் சேர்த்தி யிலும் கைங்கரியத்தைச் செய்யப் பெறுவேனாக என்பதையும் சொல்லுகின்றனவென்றும்; 'ஸ்ரீ' என்பது பெரிய பிராட்டி யாருக்குத் திருநாமம் என்றும்; ஸ்ரீ என்னும் பதத்திற்கு வியுற்பத் திகள் இரண்டு என்றும்; அவை கர்மணி வியுற்பத்தியும் கர்த்தரி வியுற்பத்தியும் என்றும்; இவ்விரண்டு வியுற்பத்திகளுக்கும் இன் னின்னவை பொருளென்றும்; இங்குப் பிராட்டியார் புருஷகார மாய்ச் சொல்லப்படுகிறாரென்றும்; சேதனன் செய்யும் அளவு கடந்த குற்றங்களால் சீற்றங் கொண்ட பகவான், சேதனனைப் பொறுப்பது பிராட்டியாருக்காகவே என்றும்; இவர் உலக மக்க ளுக்குத் தாயாராயிருத்தலின், இவர்கள் துக்கத்தைப் பொறாதவ ராயும், பகவானுக்குப் பத்தினியாயிருத்தலின, அவனுக்கு இனிய விஷயமாயும் உள்ளாராதலின், இவரே குற்றமற்ற புருஷகார மாவார் என்றும்; முரடனான திருவடியையே பொறுக்குமாறு செய்த இவர், தம் சொற்படி செயல் புரியும் எம்பெருமானைப் பொறுக்குமாறு செய்வதற்குத் தடையிலது என்றும்; இம்மதுப்பு, பிராட்டியாருக்கும் எம்பெருமானுக்கும் தொடர்பு என்றும் உள்ளது என்பதைக் காட்டுகிறதென்றும்; பரமபுருஷனாகிற தத்துவம் பெரியபிராட்டியாரோடு சேர்ந்தே உள்ளது என்றும்; பகவானுடைய சுதந்தரத்தன்மையையும், சேதனருடைய அள வற்ற குற்றங்களையும் கண்டு பிராட்டியார் ஒரிமையும் பகவானை விட்டுப் பிரிதல் இல்லை என்றும்; இச்சேர்த்தி ஈசுவரனுடைய சுதந்தரத்தன்மையையும் தன் குற்றங்களையும் நோக்கி, சேதனன் அஞ்சா வண்ணம் செய்கிறதென்றும்; எம்பெருமானைப் பற்று தற்கு வேட்கையே வேண்டுவதன்று, இருவரும் சேரும் காலத் தைப் பார்த்திருக்க வேண்டுவதில்லை என்றும்; இருவர் சேர்க் கையினால் காகாசுரன் வாழ்வையும், பிரிவினால் இராவணன் அழி வையும் பெற்றனர் என்றும் தெரிவிக்கப்பட்டன.

அவதாரிகை: இனி, நாராயணபதத்திற்குப் பொருள் பகரு கிறார்:

**மூலம்: 136.** "புருஷகார பலத்தாலே ஸ்வாதந்த்ர்யம் தலைசாய்ந்தால், தலையெடுக்கும் குணங்களைச் சொல்லுகிறது நாராயண பதம்."

பொருள் : பிராட்டியாருடைய புருஷகாரத்தின் ஊன்றுதலி ஞல் (வன்மையினுல்) ஈசுவரனுடைய சுதந்தரத்தன்மை மாய்ந்து, அக்காலத்தில் (முன்) தலையெடுக்கப் பெருமல் மறைந்திருந்தனவும், இக்காலத்தில் (பின்) ஓங்கி நிற்பனவுமான குணங்களைச் சொல்லு கிறது இந்நாராயண பதம்.

அவதாரிகை: "அங்ஙனம் தலை எடுக்கும் குணங்கள் எவை?" என்ன அருளிச்செய்கிருர் :

**மூலம் : 137. "அவையாவன—வாத்ஸல்யமும், ஸ்வா மித்வமும், ஸௌசீல்யமும், ஸௌலப்யமும், ஜ்ஞாநமும், சக்தியும்."**

இந்தச் சூத்திரத்தின் பொருளை விளக்கமாகவே கூற வேண்டி யிருக்கிறது.

விளக்கம் : வாத்ஸல்யம் : கன்றினிடத்தில் பசு இருக்கும் இருப்பு. இதை விளக்குவோம் : சிறிது மலங் கலந்த புல் முதலிய வற்றையும் தீண்டாத தாய்ப் பசு, தான் ஈன்ற கன்றின் உடலி லுள்ள வழும்பை விருப்புடன் தன் நாவினுல் நக்கி, அக்கன்றைத் தூய்மைப்படுத்துகிறது. அஃது அத்துடன் நிற்கிறதா? தன் இனிய பாலையும் அதற்கீந்து, அதை வளர்ப்பதுடன், அதன் எதிரில் வருபவரைக் கொம்பினுல் முட்டித் தள்ளியும், அதற்கு முன் தான் ஈன்ற கன்று வரினும், அதை உதைத்துத் துரத்தியும் அவ்விளங் கன்றைக் காக்கின்றது. இங்ஙனமே பகவானும், தன்னை வந் தடைந்த சேதனன் குற்றங்களைப் பாராமல், அவற்றைப் போக் கியமாய்க் கொண்டு இன்னருளாகிய பாலைச் சுரந்து காக்கின்ருன். அதன்றியும், தன்னைப் பற்றின சேதனனுக்கு ஒரு குறைவு நேரின், என்றும் தன்னை விட்டுப் பிரியாமல் கூடியிருக்கும் பிராட்டியாரை யும் வேண்டாவென வெறுத்து, அவனுக்குப் பல நன்மைகளைச் செய்யும் இயல்புடையவனுயுமிருக்கிருன். இங்ஙனம் செய்வதற் குப் பசுவிற்குக் கன்றினிடமும், பகவானுக்குச் சேதனனிடமும் இருக்கும் அன்பே காரணமாகும். இதுவே வாத்ஸல்யம் எனப் படும்.

ஸ்வாமித்வம் : உடையனுயிருக்குமிருப்பு. சேதனன் ஈசுவர னைக் கருதாமலும் நோக்காமலும் பராமுகமாயிருக்கும் நிலையி லும், ஈசுவரன் இவனை விடாமல் நின்று, இவனுடைய சொரூபத்

தையே நோக்கிக்கொண்டு போவதற்குக் காரணமாயுள்ள ஒரு தொடர்பே ஸ்வாமித்துவமாகும். சேதனன் உலகப் பற்றிலேயே இச்சை வைத்து உழன்று திரிகின்ருன். இங்ஙனம் சேதனன் பயனற்ற வழியில் தன் காலத்தைக் கடத்தினும், தன் உடைமை யான இவனை அங்ஙனமே நலமற்ற வழியில் விட்டுவிடுவதற்கு ஈசுவரனுடைய ஸ்வாமித்துவமாகிற தொடர்பு இடந்தருதல் இல்லை. ஆதலின், அவன் தன் உடைமையான சேதனனை விடாது மறைந்திருந்து, அச்சேதனனுக்கு துவேஷம் அற்றிருக்கும் நிலை தொடங்கி, கைங்கரியம் புரியும் நிலை ஈருக உள்ள பல நன்மைகளை யும் உண்டாக்குகின்ருன். இதற்குக் காரணம் பகவானுக்கும் சேதனனுக்கும் உள்ள தொடர்பே யாகும்.

ஸௌசீல்யம்: உயர்ந்தவன் தாழ்ந்தவனேடு புரையறக் கலக்கை. இந்த ஸௌசீல்யம் இரு வகைப்படும்: நித்திய விபூதி லீலா விபூதி இவற்றிற்குச் சுவாமியாய்ப் பெரியபிராட்டியாரைப் பிரதான மகிஷியாய்க் கொண்டவனுய்த் தடை சிறிதுமற்ற ஸ்வாதந் தரியமாகிற தேஜஸை உடையவனுய் இருக்கும் பரம புருஷன், தன் பெருமையையும் தன்னேடு கலக்கும் சீவான்மாவின் சிறுமை யையும் நோக்காது, தன் பேருக அவனுடன் புரையறக் கலத்தல் ஒரு வகை. சேதனன் விருப்பமின்றி இருப்பினும், பகவானே சென்று அவனேடு புரையறக்கலத்தல் மற்ருெரு வகை.

முந்தியதற்குப் பாத்திரமானவர்கள் ஞானிகள். பிந்தியதற் குப் பாத்திரமானவர்கள் சமுசாரிகள்.

ஸௌலப்யம்: எளியனுயிருக்கும் இருப்பு. இது, கண் ணிற்கு விஷயமாகாதிருக்கும் ஈசுவரன், தன் திவ்விய மங்கள விக் கிரஹத்தை, சேதனன் தன் கண்களாலே கண்டு பற்றுதற்கேற்ப எளியனுயிருத்தல். இறைவன் தான் இருக்கும் பரமபதத்தை விட்டுச் சமுசாரிகள் இடையில் வந்தவதரித்துத் தன்னை எளியனுக்கு கிருன். இஃது, "ஈசுவரன் நம் ஊனக் கண்களுக்குப் புலனுகாத வன், நாம் அவனைப் பற்றுதல் யாங்ஙனம்?" எனச் சேதனன் பின்னிடாதவாறு எம்பெருமானை நேருக்கு நேரே கண்டு பற்று மாறு செய்கிறது. இங்ஙனம் செய்வன இராம கிருஷ்ணுவதாரங் களும், அர்ச்சைகளுமாகும்.

ஞானம்: அறிவு. சேதனனுக்குப் போக்க வேண்டிய துன் பங்களையும், ஈயவேண்டிய இன்பங்களையும் அறிகைக்குத் தகுதி

யாய் எல்லாப் பொருள்களையும் ஒரே காலத்தில் நேராய்க் காண வல்ல அறிவு. சேதனனுக்குப் போக்கவேண்டுவன சமுசாரம் கன்மம் முதலியன ; ஈயவேண்டுவன பரமபதம் கைங்கரியம் முதலியன.

சக்தி : சாமர்த்தியம். ஈசுவரன் மாறுபட்ட இரு பொருள்களையும் ஒன்று சேர்க்கக் கூடிய தனக்குண்டான இச்சத்தியினால், இரும்பைப் பொன்னாக்குவாரைப் போன்று, தாழ்ந்த நிலையிலுள்ள சமுசாரிகளை, உயர்நிலையிலுள்ள நித்தியசூரிகளோடு சேர்த்து ஒரு கோவையாக்குகிறான். இது சாமர்த்திய காரியமாகும்.

இவை ஆறனுள், முதலில் குறிப்பிட்ட வாத்ஸல்யம், ஸ்வாமித்துவம், ஸௌசீல்யம், ஸௌலப்பியம் ஆகிய நான்கும், சேதனன் பகவானைப் பற்றுதற்கு உதவி செய்யக் கூடியவை. இவற்றை ஆழ்வார்,

"அகல கில்லேனி றையுமென்று
அலர்மேல் மங்கை உறைமார்பா !
நிகரில் புகழா யுலகமூன்
றுடையா யென்னை யாள்வானே !
நிகரில் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங் கடத்தானே
புகலொன் றில்லா வடியேனுன்
னடிக்கீ ழமர்ந்து புகுந்தேனே."[1]

என்னும் பாசுரத்தில், 'நிகரில் புகழாய்' என்பதனால் வாத்ஸல்யத்தையும், 'உலக மூன்றுடையாய்' என்பதனால் ஸ்வாமித்துவத்தையும், "என்னை ஆள்வானே" என்பதனால் ஸௌசீல்யத்தையும் 'திருவேங்கடத்தானே' என்பதனால் ஸௌலப்பியத்தையும் தெரிவிக்கிறார்.

ஞான சத்திகள் இரண்டும் பகவான் தன்னை வந்தடைந்த சேதனன் காரியத்தைச் செய்தற்குப் பயன்படுபவை.

ஞான சத்திகளைப் போன்றே, பிராப்தியும் பூர்த்தியும் சேதனனுடைய காரியம் செய்தற்கு வேண்டற்பாலனவாகும். பிராப்தி என்பது, சேஷித்துவத்தொடர்பு. பூர்த்தி என்பது, வேண்டுவன யாவும் நிறைந்திருக்கை.

1. திருவாய்மொழி—6 : 10 : 10.

அவதாரிகை : "ஈசுவரனுக்குள்ள இக்குணங்கள் உதவும் வகை எப்படி ?" என்னப் பகருகிருர் :

மூலம் : 138. "குற்றங்கண்டு வெருவாமைக்கு வாத் ஸல்யம் ; கார்யஞ் செய்யும் என்று துணிகைக்கு ஸ்வாமித்வம் ; ஸ்வாமித்வங் கண்டகலாமைக்கு ஸௌசீல்யம் ; கண்டு பற்றுகைக்கு ஸௌலப்யம் ; விரோதியைப் போக்கித் தன்னைக் கொடுக்கைக்கு ஜ்ஞான சக்திகள்."

பொருள் : சேதனனுடைய குற்றங்களையும் போக்கியமாய் (இன்பமாய்)க் கொள்ளும் வாத்ஸல்யம், எம்பெருமானைப் பற்ற வேண்டுமென்னும் நினைப்புடன் நிற்கும் சேதனன் தன் குற்றங் களைக் கண்டு அஞ்சாமைக்குக் காரணமாய் உள்ளது.

உயிர்களுக்கு ஏற்படும் நஷ்டமும் இலாபமும் தன்னைச் சார்ந் தனவாய்க் கொள்ளுதற்கு இடந்தந்து நிற்கும் ஸ்வாமித்துவம், சேதனன், "இறைவன் நம் காரியத்தைச் செய்வானே, செய் யானே!" என்னும் ஐயத்தைக் கொள்ளாது, "அவன் நமக்கு வேண்டியவைகளைக் கட்டாயம் செய்தே முடிப்பன்!" என்னும் நம்பிக்கை பெறுதற்குப் பயன்படுகிறது.

தாழ்ந்தவர்களோடும் யாதொரு வேறுபாடுமின்றிக் கலந்து உறவாடும் ஸௌசீல்யம், நித்திய விபூதி, லீலா விபூதி ஆகிய இரண் டிற்கும் உரியனுயிருக்கும் ஈசுவரனுடைய பெருமையை (காக்கும் தலைமை நிலையை) நோக்கிச் சேதனன் தனது தாழ்ச்சியை எண்ணி அகலாதிருத்தற்கு உதவி புரிகிறது.

யாவருடைய கண்களுக்கும் தன் வடிவைப் புலப்படுமாறு செய்யும் ஸௌலப்பியம், சேதனன், "ஈசுவரன் நம் ஊனக்கண் களுக்குத் தோற்றுகின்றவன் அல்லன்," எனப் பின்னடை யாமல், அவனைக் கண்ணாலே கண்டு பற்றுதற்கு நலமளிக்கிறது.

எல்லாப் பொருள்களின் எல்லா நிலைகளையும் அறியும் ஈசுவர னுடைய ஞானம், சேதனனுக்குப் போக்க வேண்டிய பாவங்களை யும், ஈயவேண்டிய நலங்களையும் அறிகைக்கு வேண்டற்பாலதா யுள்ளது.

போக்க வேண்டுவனவற்றைப் போக்கி, ஈய வேண்டுவன வற்றை ஈதற்கு இன்றியமையாதது சத்தி.

சீவான்மா அன்போடு புரியும் அடிமைத் தொழிலை ஏற்றுக் கொள்ளும் போது, அங்ஙனம் ஏற்றுக்கொள்ளுதற்குக் காரணமா யுள்ளது சேஷத்துவத்தொடர்பு என்னும் பிராப்தி.

எல்லா நலங்களையும் ஈதற்கு உறுப்பாயுள்ளது நிறைவு. அதுவே பூர்த்தியாகும்.

மேற்கூறிய குணங்கள் எட்டனுள், முன்னுள்ள நான்கும், சேதனன் ஈசுவரனைப் பற்றுதற்கு நலமளிப்பன. பின்னுள்ள நான்கும் சேதனன் இரட்சணத்திற்கு உதவி புரிவன.

அவதாரிகை : சேதனன் ஈசுவரனைப் பற்றுதற்கு உதவி புரியும் நான்கு குணங்களுள், ஸௌலப்பியமே தலை சிறந்ததாம். எனெனில், சேதனன் ஈசுவரனைக் கட்புலனால் காண்பதற்கு வசதி இருந்தாலன்றி, பற்றுதலுமுண்டாகாது. மற்ற மூன்று குணங்களுக்கும் இடமேற்படாது. இந்த ஸௌலப்பியத்திற்கு எல்லை நிலம் இன்னது என்பதை இந்தச் சூத்திரத்தில் அருளிச்செய்கிறார் :

**மூலம் : 189. "இங்குச் சொன்ன ஸௌலப்யத்துக் கெல்லை நிலம் அர்ச்சாவதாரம்."**

பொருள் : சேதனன் எம்பெருமானைப் பற்றும் போது உதவி புரிவதும், நாராயண பதத்தில் சொன்னதுமான ஸௌலப்பியத் திற்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரம்.

விளக்கம் : "யே யதா மாம் ப்ரபத்யந்தே
தாந்ததைவ பஜாம்யஹம்."

என்று பகவானும்,

"தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே" என்று பொய்கையாரும் அருளிச்செய்திருக்கின்றவைகளை நோக்குக.

இவற்றுள், முதற்குறிப்பித்த கீதா வாக்கியத்தில், கண்ணன், பரமபுருஷனாகிய தன்னை, புஷ்பம் முதலிய பொருள்களைக் கொண்டு வழிபட்டு வாழ வேண்டுமென்றிருக்கிற சேதனன், தன் கையில் கிடைத்ததொன்றைத் திருமேனியாய் ஏறியருளப்பண்ணி, "எம் பெருமானே, இங்கு நீர் எழுந்தருளியிருக்க வேண்டும்," என்று

பிரார்த்திக்கும்போது, அதற்கு இணங்கித் தான் பரரூபத்தில் செய்யும் விருப்பத்தை அவ்விக்கிரஹத்தில் செய்து, இவனுக்கு அருள் புரிவதாய் இயம்பியுள்ளான்.

பொய்கையாழ்வார் பாசுரமும் இக்கருத்தைத்தான் கொண்டுள்ளது.

அவதாரிகை: முன் சூத்திரத்தில் செப்பியவற்றை இங்குத் தெளிவாய் விளக்குகிறுர்:

**மூலம்: 140. "இதுதான் பரவ்யூஹ விபவங்கள் போலன்றிக்கே கண்ணாலே காணலாம்படி இருக்கும்."**

பொருள்: இந்த அர்ச்சாவதாரம், தொலைவினல் மனத்திற்கும் எட்டாத பரமபதம் திருப்பாற்கடல்கள் போன்றும், தற்போது சேர்ந்து இன்பந்துய்த்தற்கியலாத இராம கிருஷ்ண அவதாரங்கள் போன்றும் அல்லாமல், எப்போதும் நம்மருகில் நிலை பெற்றுக் கண்ணால் கண்டு களிப்பதற்கு இடந்தருகிறது.

விளக்கம்: பகவான் நம் இருதயத்திலேயே இருப்பினும், அவனைப் பற்ற வேண்டுமென்னும் விருப்பமுண்டாகில், அவ்விருப்புக் கட்புலனுக்குத் தோன்ருமையின் பயன் பட்டிலது; நீர் வேட்கையுற்றவன், மிக்க தொலைவு சென்று பருகவேண்டாதவாறு தான் நிற்கும் நிலத்தின் அடியிலேயே நீர் இருப்பினும், அந்நீர் அவ்வமயம் பருகுதற்குப் பயன் படாதது போன்றுள்ளது. லீலா விபூதியைக் கடந்து இருக்கும் பரமபதம், இவ்வண்டத்துக்குப் புறம்பே இருக்கும் ஆவரண நீர் போன்றுள்ளது. இவ்வண்டத்திலேயே இருக்கும் வ்யூஹம், ஒருவராலும் காணமுடியாத பாற்கடல் போன்றுள்ளது. அவ்வக்காலங்களில் தோன்றி மறையும் அவதாரங்கள், அச்சமயத்தில் உள்ளவர்க்கல்லாமல் பிற்காலத்தவர்க்குப் பயன்படாத பெருக்காறு போன்றுள்ளது. அரச்சாவதாரமோ, இவைகளைப் போன்றல்லாமல், கால தேசங்களின் வேறுபாடில்லாமல், சந்நிதிகளிலும் இல்லங்களிலும் என்றும் ஒரு படித்தாய் யாவருடைய கண்களுக்கும் புலனுமாறு காட்சியளித்துக் கொண்டு நீர் விடாய்க் கொண்டவன், அவ்விடாய் தணியுமாறு பருகுதற்கேற்பப் பெருக்காற்றில் தேங்கிய மடுக்கள் போன்

றுள்ளது. ஆதலின், இவற்றுள் அர்ச்சையே சேதனருக்கு நல மளிப்பதெனக் கொள்க.

அவதாரிகை : "முற்குறிப்பித்த குணங்கள் யாவற்றையும் அர்ச்சையில் காண இயலுமா?,' என்ன, இயம்புகின்ருர் :

**மூலம் : 141. "இவையெல்லாம் நமக்கு நம்பெருமாள் பக்கலிலே காணலாம்."**

பொருள் : மேற்கூறிய முறையில் உள்ள வாத்ஸல்யம் முதலிய குணங்கள், ஞானம் முதலிய குணங்கள் ஆகிய இவை யாவற்றையும் காண வேண்டுமென்னும் விருப்பங் கொண்ட நாம் நம்பெருமாள் பக்கலிலே காணலாம்.

விளக்கம் : வினு : இங்கு நம்பெருமாள் என்பது எந்தப் பெருமாளைக் குறிக்கும்?

விடை : மணவாள மாமுனிகள், நம்பெருமாள் என்னும் சொல், திருவரங்கம் பெரிய கோவிலில் எழுந்தருளியுள்ள நம்பெருமாளைக் காட்டும் எனப் பொருட்படுத்தாமல், நம்முடைய பெருமாள் எனக் காரணக் குறியாய்ப் பொருள் செய்துள்ளார். இவர் இங்ஙனம் பொருள் படுத்தியதற்குக் காரணம், வெவ்வேறு தேயங்களிலும் இல்லங்களிலும் எழுந்தருளியிருக்கும் அர்ச்சையில் ஈடுபட்டிருப்பவரும், முற்கூறிய குணங்களை அவரவர் விரும்பிய அந்தந்த அர்ச்சையில் காணலாமென்பதைத் தெரிவித்தற்காகவே ஆகும்.

அவதாரிகை : பெருமாளிடம் இக்குணங்களைப் பிரகாசிக்கச் செய்கின்றவற்றைச் சொல்லி, அவற்றுடன் நிற்கும் நிலையே நமக்குத் தஞ்சம் என்கிருர் :

**மூலம் : 142. "திருக்கையிலே பிடித்த திவ்யாயுதங்களும், வைத்தஞ்சல் என்ற கையும், கவித்த முடியும், முகமும் முறுவலும், ஆஸநபத்மத்திலே யழுத்தின திருவடிகளுமாய் நிற்கிற நிலையே நமக்குத் தஞ்சம்."**

இதன் பொருளை விளக்கமாகவே கூற வேண்டியுள்ளது.

விளக்கம் : அர்ச்சையில் சங்கொடு சக்கரமேந்தும் தடக்கையனுயிருத்தலை நாம் காண்கின்ருேம். இங்ஙனம் ஆயுதங்களை

எப்போதும் தாங்கிக்கொண்டிருத்தல் வன்மை வாய்ந்த வீர னுடைய காரியமாகும். தன்னை வந்தடைந்த பத்தர்களின் விரோதி களைப் போக்குதற்கு இப்படைகள் பயன்படுகின்றன. இவ் வாயுதங்களைத் தாங்கும் வன்மை மட்டும் போதியதன்று. விரோதி களையும், அவற்றைப் போக்கும் முறைகளையும் அறிபவனாய் இருத்தல் வேண்டும். இங்ஙனம் இவ்விஷயத்தை உற்று நோக்குங்கால், தன்னைப்பற்றிய சேதனனுடைய காரியத்தைச் செய்யும் போது பயன்படுபவையான ஞான சத்திகளுக்குப் பிரகாசங்கள் திவ்ய ஆயுதங்கள் என்பது தெரிகிறது.

சேதனர், தாம் செய்த குற்றங்களை நினைத்து, "அந்தோ! இத்தனை பிழைகளை இழைத்த நாம் எங்ஙனம் அத்துணை உயரிய சுவாமியைச் சென்றடைவது?" என அஞ்சி அகலாதிருத்தற் பொருட்டே, அவருடைய திருக்கரம் அபய முத்திரையுடன் சேவை அளிக்கின்றது. இஃது "உங்கள் குற்றங்களை நினைத்து நீங்கள் அஞ்ச வேண்டா; என்னை வந்தடையுங்கள். யான் உங்களை அங்கீ கரித்துக்கொள்ளுவேன்," என்னும் அன்பைக் காட்டும் வாத்ஸல் யத்தின் அறிகுறியாகும். எம்பெருமான் சிரசில் கவித்திருக்கும் இரத்தினமுடி, அவன் எல்லா உலகங்களுக்கும் சுவாமியாயிருத்தலை அறிவிப்பதாகும். அன்பர்களைக் காணுங்கால், எம்பெருமானுக்கு உண்டாகும் முகமலர்ச்சியும் புன்சிரிப்பும் அவர்களோடு புரையறக் கலக்கும் சீலத்தைத் தெரிவிக்கும். ஆசனபதுமத்தில் அழுந்தி நிற்கும் எம்பெருமானுடைய இரண்டு திருவடிகளும், அனைவரும் பற்றுதற்கு இடந்தந்து நிற்கின்றன. இத்தன்மையானது ஸௌலப் பியத்தை வெளிப்படுத்துகின்றது.

இங்ஙனம் நிற்கிற நிலையே, எம்பெருமானைத் தவிர வேறு புகலிடமற்றிருக்கும் நமக்கு இரட்சகம் எனக் கொள்க.

அவதாரிகை: உபாயாதிகாரி[1] உபேயாதிகாரி[2] என இரு திறத்தினருக்கும் வேண்டுவனவாகிய தன்மைகள் இரண்டும், இச்சூத்திரத்தில் கூறுகிறபடியே நிற்கிற எம்பெருமானுடைய திரு மேனியிலே தோன்றும் எனப் பகருகிறார்.

(1) உபாயாதிகாரி—ஈசுவரனை உபாயமாய்ப்பற்றியிருப்பவன்.

(2) உபேயாதிகாரி—ஈசுவரனைப் பயனாகக்கருதியிருப்பவன்.

மூலம் : 143. "ரக்ஷகத்வ போக்யத்வங்களிரண்டும் திருமேனியிலே தோற்றும்."

பொருள் : பிரபன்னன் விரும்பும் இரட்சகத்தன்மையும், கைங்கரியபரன் விரும்பும் போக்கியத்தன்மையும் அர்ச்சையாகும் திவ்விய மங்கள விக்கிரகத்தில் காணப்படும்.

விளக்கம் : பகவான் அர்ச்சையில் ஆன்மாக்களைக் காத்தற்கு வேண்டிய திருவாழி திருச்சக்கரங்களோடும், கவித்த திருமுடியோடும் இருத்தலின், இவனுடைய இரட்சகத்தன்மை ஒளிருகிறது. மேற்கூறியவைகளும், அஞ்சல் என்ற திருக்கரமும், முகமும் முறுவலும், தாமரை இருக்கையில் அழுத்தின திருவடிகளும் ஆகிய ஒவ்வொன்றும் அழகு நிறைந்தனவாயிருத்தலின், இவனுடைய போக்கியத்தன்மை மிளிர்கின்றது. இவை இரு பகுதிகளும் அர்ச்சையில் இலங்குகின்றன.

எல்லா ஆபரணங்களும் தாமேயாய் ஒளிரும்படியான திருவாழி திருச்சக்கரங்களைப் பாகவதருக்கு இன்பமுண்டாகுமாறு எம்பெருமான் ஏந்திக்கொண்டிருக்கிறான் என்பதையும், பகவானை நோக்கி, 'உன்னுடைய திருமுகத்தின் ஒளியானது திருவபிஷேகத்தின் ஒளியாய் மேலே கிளம்பிற்றே! திருவடிகளின் ஒளி நீ நின்ற ஆசன பதுமமாய்க் கீழே பரவிற்றே!' என்பதையும் ஆழ்வார்,

> "அணியா ராழியும் சங்கமும் ஏந்தும்"
>
> "முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ?
> அடிச்சோதி நீநின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ?"[1]

என்னும் அடிகளால் தெரிவிப்பதை நோக்குக.

தொகுப்புரை : 136-ஆம் சூத்திரத்திலிருந்து 143-ஆம் சூத்திரம் வரையும் கூறிப் போந்தவற்றால், பிராட்டியாரின் புருஷகாரத்தால் ஒளிருகின்ற குணங்களைச் சொல்லுகிறது நாராயண பதம் என்றும்; இக்குணங்கள் வாத்ஸல்யம் முதலியன என்றும்; இவைகள் சேதனருக்கு உதவி புரியும் முறை இன்னதென்றும்; இக்குணங்களுள் சேதனன் கண்ணால் கண்டு பற்றுதற்கு இடனாயுள்ள ஸௌலப்பியமே சிறந்ததென்றும்; அந்த ஸௌலப்பியத்திற்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரமே என்றும்; இந்த அர்ச்சாவ

1. திருவாய்மொழி—3 ; 1 ; 1.

தாரம், பரத்துவம் வியூஹம் முதலியன போலல்லாமல், நேராய்க் கண்டு பற்றுதற்கு இடனுய் இருக்கிறதென்றும்; இக்குணங்கள் யாவற்றையும் திருவரங்கம் முதலிய திருப்பதிகளில் அர்ச்சையாய் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களிடம் காணலாமென்றும்; அவ்வர்ச்சைகளில் இக்குணங்களை ஒளிரச் செய்யும் இடங்கள் இன்னவை என்றும்; அங்ஙனம் எழுந்தருளி இருக்கும் நிலையே நமக்குத் தஞ்சம் என்றும்; இரட்சகத்துவம் போக்கியத்துவம் ஆகிய இரண்டும் பகவானுடைய திருமேனியிலே தோன்றும் என்றும் அறிகின்றோம்.

அவதாரிகை: இனி, 'சரணௌ' என்னும் பதத்திற்குப் பொருள் பகருகிறார்:

**மூலம்: 144. "சரணௌ திருவடிகளை."**

போருள்: சரணௌ—இரண்டு திருவடிகள்.

**விளக்கம்:** வடமொழியில் ஒருமை, இருமை, பன்மை எனப் பகுப்புகள் மூன்றுள்ளன. அவற்றுள் இருமையைக் காட்டும் இச்சரணௌ என்னும் பதம், ஈசுவரனுடைய இரு திருவடிகளையே குறிப்பதாகும்.

சரணௌ—பரமான்மா எங்கும் நிறைந்த பொருள். அப் பொருளை மனத்தால் பற்ற இயலாது. விக்கிரகத்தோடுங் கூடிய நிலையில்தான் பற்ற முடியும். அந்நிலையில் குற்றம் நிறைந்த இவன் திவ்விய மங்கள விக்கிரகத்தில் ஒரு பகுதியாகிய திருவடிகளைப் பற்றும் போதுதான் பகவானுடைய கிருபை மேற்கிளம்பி இவனுக்கு வாழ்வை உண்டாக்கும்.

அவதாரிகை: இவ்விருமையைக் குறிக்கும் பதத்தினால் சொல்லப்படும் பொருளை இயம்புகின்றார்:

**மூலம்: 145. "இத்தால் சேர்த்தியழகையும், உபாய பூர்த்தியையும் சொல்லுகிறது."**

பொருள்: இரண்டு திருவடிகளையும் சொல்லும் இதனால், இரண்டும் சேர்ந்திருப்பதன் அழகையும், வேறொருவர் உதவியையும் பொருத உபாயத்தின் பூர்த்தியையும் செப்புகின்றது.

**விளக்கம்:** "இணைத் தாமரையடி" என்னும் ஆழ்வார் திரு வாக்கின்படியே, இரண்டு தாமரை மலர்களை ஒன்றுபடச் சேர

வைத்தது போன்று இருக்கிற சேர்த்தி அழகையும், 'சரணௌ' என்னும் சொல்லின் இருமையை நோக்குங்கால், அவ்விரு திருவடிகளுக்கு மேல் மற்றொன்று நுழையப் பொருமையின் மற்றொருவர் உதவியையும் பொருத உபாய பூர்த்தியையும் சொல்லுகிறது.

அவதாரிகை: உபாயத்தன்மைக்கு இன்றியமையாது வேண்டற்பாலதாகிய இத்திருவடிகளின் குணப்பெருமையைப் பகருகிருர்:

**மூலம்: 146. "பிராட்டியும் அவனும் விடினும் திருவடிகள் விடாது, திண்கழலாயிருக்கும்."**

பொருள்: தன்னைப் பற்றினரை, புருஷகாரப் பொருளான பிராட்டியாரும், உபாயப் பொருளான எம்பெருமானும் கைவிடினும், பகவானுடைய திருவடிகள் என்றும் விடா. அவை மிக்க உறுதியுடையனவாகும்.

விளக்கம்: சேதனன், உபாயமாய்ப் பற்றுதற்கு இன்றிமையாதனவான எம்பெருமானுடைய திருவடிகள், அவனிலும் பிராட்டியாரிலும் சிறந்தனவாகும்.

வினு: அது யாங்ஙனம்?

விடை: பிராட்டியார், சேதனனுடைய துன்ப நிலையைக் கண்டு மனமிரங்கி, அவனை அங்கீகரிக்குமாறு ஈசுவரனுக்குப் புருஷகாரம் செய்கிருர். அத்தகைய அவர் இவனுடைய குற்றங்களைப் பகவானிடம் எடுத்துரைக்கவே மாட்டார் என்பது உண்மை. ஆயினும், ஈசுவரன் மனத்தில் இவனை ஏற்றுக்கொள்ளும் எண்ணத்தை ஊன்றுவிப்பதற்காக, ஒருகால் சில குற்றங்களை உரைக்கக்கூடும்; இங்ஙனம் குற்றம் உரைக்கும் முறையில் பிராட்டியார் கைவிடுவர். அந்தச் சேதனனிடம் ஊன்றிய அன்பு கொண்ட பகவான், தனக்குள்ள வாத்ஸல்யம் முதலிய குணங்களால், "என்னடியார் அது செய்யார், செய்தாரேல் நன்று செய்தார்" என அவனை அங்கீகரிக்க முன்வந்து நிற்பன். அத்தகைய எம்பெருமானும், ஒருகால் கைவிடுவதுண்டு. இம்முறையில் சேதனனுக்கு நன்மை புரிபவராகிய இவ்விருவரும் கைவிடினும், தம் அழகினல் சேதனனை அப்புறம் செல்லாதவாறு அகப்படுத்திக் கொள்ளும் அவன் திருவடிகளோ, சேதனனை விடாது பற்றிக்கொள்ளும் திண்மை வாய்ந்தனவாயிருக்கும். இதை மனத்திற் கொண்டே,

ஆழ்வார், "வண்புகழ் நாரணன் திண்கழல் சேரே" எனத் திருவாய் மலர்ந்தருளினர்.

அவதாரிகை : வினு : தன்னை வந்தடைந்தாரை நழுவவிடாத அத்திருவடிகளின் பெருமையை நோக்கித்தான், சேதனன் எம்பெருமானுடைய திருவடிகளைப் பற்றுகிறனே?

விடை : அது மட்டுமன்று. சேஷபூதனுடைய சொரூபத்தை நோக்கினும், இவன் இறங்குந்துறை பகவானுடைய திருவடிகளே யாகும். இதை லோகாசாரியர் ஓர் உதாரணத்தைக் கொண்டு விளக்குகிறர்:

மூலம்: 147. "சேஷி பக்கல் சேஷபூதனிழியுந்துறை, ப்ரஜை முலையிலே வாய் வைக்குமாப் போலே."

பொருள் : பாலுண்ணும் பச்சைப் பசுங்குழவி எங்ஙனம் தாயினுடைய மற்ற அவயவங்கள் யாவையும் விட்டு, தான் உயிர் வாழ்தற்கிடனுய் உள்ள அவள் கொங்கையிலேயே வாய் வைக்கின்றதோ, அங்ஙனமே சேஷியாகிய ஈசுவரனைப் பற்றப்புகும் சேஷபூதனும், எம்பெருமானுடைய பல உறுப்புகளையும் விட்டு, தான் உய்வதற்கு இடனுய் உள்ள அவன் திருவடிகளையே பற்றுகிருன். முந்திய செயல் எவ்வாறு குழந்தைக்கு இயற்கையோ, அவ்வாறே பிந்திய இச்செயலும் சேதனன் சொரூபத்திற்கு இயல்பாய் அமைந்ததாகும்.

அவதாரிகை : திருவடிகளைச் செப்பிய இது, திருமேனியையும் குறிப்பதாகும் என்கிறர் :

மூலம்: 148. "இத்தால், (1) பிராட்டிக்கிருப்பிடமாய் குணப்ரகாசகமுமாய்ச் சிசுபாலனையுமகப்படத் திருத்திச் சேர்த்துக்கொள்ளுந் திருமேனியை நினைக்கிறது."

பொருள் : திருமேனியின் ஒரு பகுதியான திருவடிகளைச் சொல்லும் சரணௌ என்னும் இப்பதத்தால், பெரிய பிராட்டியார் வாழுமிடமாய், வாத்ஸல்யம் முதலிய குணங்களுக்கும் பிரகாசகமாய், அறப்பகைவனன சிசுபாலனையுந் தன் அழகால், அவனுக்குள்ள பகைமையைப் போக்கித் தன்னை விரும்புமாறு செய்யுமதாய் உள்ள திவ்விய மங்கள விக்கிரகத்தை நினைத்தல் வேண்டும்.

விளக்கம் : 'பிராட்டிக்கு இருப்பிடம்' என்னும் இடத்தில் 'ஸ்ரீமத்' என்னும் பதத்தின் பொருளையும், 'குணப்ரகாசகமுமாய்' என்னும் இடத்தில் 'நாராயண' பதத்தின் பொருளையும், 'சிசுபாலனையும் அகப்படத் திருத்திச் சேர்த்துக்கொள்ளும் திருமேனி' என்னும் இடத்தில், 'சரணௌ' என்னும் பதம் திருவடியைக் காட்டித் திருமேனி வரையும் போகிறது என்னும் குறிப்புப் பொருளையும் தெரிவிக்கிறார்.

(1) பிராட்டிக்கு இருப்பிடமாய் : நம்மிடம், ஆன்மா உடல் என இரு பிரிவுகள் உள்ளன போன்று, பகவத் விஷயத்திலும் பரமான்மா, பரமான்ம விக்கிரகம் என இரு பிரிவுகள் உண்டு. மலருக்கு மணம் போன்று, பரமாத்துமாவோடு பிராட்டியாரின் ஆன்ம தத்துவமும், பரமாத்துமாவினுடைய விக்கிரகத்தோடு பிராட்டியாரின் விக்கிரகமும் சேர்ந்தே இருப்பனவாகும். பிராட்டியாருடைய சொரூபம், பரமாத்துமாவின் சொரூபத்திற்கு நிரூபகம் என்றும், பிராட்டியாருடைய விக்கிரகம், பரமாத்துமாவினுடைய விக்கிரகத்திற்கு நிரூபகம் என்றும் சாத்திரங்கள் சொல்லுகின்றன. பின்னதையே 'திருவிருந்த மார்பன்' என்பதனால் ஆழ்வார் தெரிவிக்கிறார்.

(2) "குணப்ரகாசகமுமாய்"

வினா : வாத்ஸல்யம் முதலியன, ஆன்ம குணங்களாய் இருக்க, இவை திருமேனியிலே பிரகாசிக்கும் எனச் செப்புதல் யாங்ஙனம் பொருந்தும்?

விடை : மட்பாத்திரத்தில் வைக்கப்பட்ட பொருள்கள் மறைந்திருத்தல் போன்றல்லாமல், கண்ணாடிப் பாத்திரத்தில் வைக்கப்பட்ட பொருள்கள் யாவருக்கும் புலப்படுமென்பது வெள்ளிடைமலை. அதைப் போன்றே, சுத்த சத்துவமான ஈசுவரனுடைய திவ்விய மங்கள விக்கிரகத்தில் குணங்களும் நன்கு புலப்படுகின்றன. அங்ஙனம் பிரகாசித்தல், இவை திவ்விய மங்கள விக்கிரகத்தின் குணங்களே என மயங்குமாறும் செய்கிறது. "இது கண்ணாடிப் பாண்டத்தில் வைக்கப்பட்ட பொருள்களின் நிறம் கண்ணாடியின் நிறமோ எனப் பிரமித்தல் போன்றது," என நம்பிள்ளை கூறுகிறார்.

(3) "சிசுபாலனையும் அகப்படத்திருத்திச் சேர்த்துக்கொள்ளுந் திருமேனி"

சேதனரைப் பகவான்; உபதேசம் அனுஷ்டானம் ஆகிய இரண்டாலும் திருத்துதல் உண்டு. இரண்டாலும் திருந்தாத சிசுபாலன் போன்றாரைத் தன் திவ்விய மங்கள விக்கிரகத்தால் திருத்துகிறான்.

பிறரறியுமாறு சொல்லத்தகாத கணக்கற்ற இழிச்சொற்களைச் சொல்லிய சிசுபாலன் என்பதை, "பலபல நாழஞ் சொல்லி பழித்த சிசுபாலன் தன்னை" என்கிறார் பெரியாழ்வார்.

இங்கு, பழைய பகைவனான சிசுபாலன், சுவாமியான கிருஷ்ணனுடைய திருவடிகளிடத்தில் கலந்திருக்கும் பேறு பெற்றான் என்பதை ஆழ்வார், "..................பழம் பகைவன் சிசுபாலன் திருவடி தாட்பாலடைந்த" என்னும் இப்பாசுரத்தால் தெரிவிக்கிறார்.

தொகுப்புரை : 144 - ஆம் சூத்திரத்திலிருந்து 148 - ஆம் சூத்திரம் வரையும் கூறியவற்றால், 'சரணௌ' என்பது இரண்டு திருவடிகளைக் குறிக்கும் என்றும்; இதனால், சேர்த்தியழகும், உபாயபூர்த்தியும் வெளிப்படுகிறதென்றும்; பிராட்டியாரும் பகவானும் கைவிடினும் அவன் திருவடிகள் விடா என்றும்; ஒரு மகவிற்குத் தாயின் கொங்கையில் வாய் வைத்தல் எவ்வாறு இயற்கையோ, அவ்வாறே சேஷபூதனான சேதனனுக்கும் பகவானுடைய திருவடிகளைப் பற்றுதல் இயற்கை என்றும்; திருவடிகளைச் சொல்லும் 'சரணௌ' என்னும் பதம், பிராட்டியாருக்கு இருப்பிடமாய், குணங்களுக்குப் பிரகாசகமாய், கொடிய சிசுபாலனையும் சேர்த்துக் கொள்ளும் திருமேனிவரையும் சென்று, அத்திருமேனியை நினைக்குமாறு செய்கிறது என்றும் உணர்ந்தாம்.

அவதாரிகை : 'சரணௌ' என்னும் சத்தத்தின் பொருளைச் செப்பிய பின்பு சரணம் என்னும் பதத்தின் பொருளைப் பகருகிறார் :

**மூலம் : 149. "சரணம் இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்ட நிவாரணத்துக்கும் தப்பாத உபாயமாக."**

பொருள் : சரணம், இஷ்டங்களை அடைதற்கும், அநிஷ்டங்களை நீக்குதற்கும் தவறாத உபாயமாக.

விளக்கம் : சரண சத்தத்திற்கு, இரட்சகம், இல்லம், உபாயம் என்னும் சில பொருள்கள் இருப்பினும், இவற்றுள் இங்கு உபாயம் என்னும் பொருளே கொள்ளப்படுகிறது.

'சரணம்' என்னும் இச்சொல்லின் பொருள், பின்னுள்ள 'ப்ரபத்யே' (பற்றுகிறேன்) என்னும் சொல்லின் பொருளோடு சேர்ந்து முடிகின்றது. இதற்குத் தெளிவான பொருள் அறிய வேண்டுமாயின், 'சரணௌ' என்னும் முன் பதத்தையும், 'ப்ரபத்யே' என்னும் பின் பதத்தையும் கூட்டியே பார்த்தல் வேண்டும். இஃது, "இறைவனுடைய இரண்டு திருவடிகளையும், இஷ்டங்களை அளித்து அநிஷ்டங்களைப் போக்குதற்குத் தப்பாத உபாயமாகப் பற்றுகிறேன்" என்னும் பொருளைத் தாராநிற்கிறது.

வினா: இந்தச் சூத்திரத்தில் கூறிய இஷ்டங்கள் எவை? அநிஷ்டங்கள் எவை?

விடை: இஷ்டங்கள்: ஆன்மா அர்ச்சராதி மார்க்கத்தில் செல்லுதலும், பரமபதத்தைப் பெறுதலும், எம்பெருமானைத் தரிசித்தலும், அவன் கலியாண குணங்களை அநுபவித்துக் கொண்டு கைங்கரியம் புரிதலுமாகும்.

அநிஷ்டங்கள்: தேகமே ஆன்மா எனக் கருதும் அறியாமையும், அவ்வறியாமையின் காரியங்களாகிற விருப்பு வெறுப்புகளும், புண்ணிய பாவங்களாய் உருக்கொண்டுள்ள கருமங்களும், இன்ப துன்பங்களை அநுபவித்தற்பொருட்டுக் கொள்ளும் தேவர், மனிதர், விலங்கு, தாவரம் முதலிய சரீரங்களும், தெய்வம் முதலியவற்றால் ஏற்படும் தாபங்களும் ஆகும். இவற்றைப் பரந்தபடியில் விரிவாயும், ஸ்ரீயப்பதிபடியில் இங்ஙனம் சுருக்கமாயும் லோகாசாரியர் அருளிச் செய்துள்ளார்.

அவதாரிகை: இப்போது பொருள் சொல்லப்பட்டு வரும் சரண சத்தத்திற்கு முன்பு, ஸ்ரீமந் நாராயண சரணௌ என்னும் பதங்களால், பெரியபிராட்டியார், வாத்ஸல்யம் முதலிய குணங்கள், திவ்விய மங்கள விக்கிரகம் ஆகிய இவற்றோடுங் கூடிய பகவானுகிற உண்மைப் பொருள் கூறப்பட்டுள்ளது. அப்பொருளே உபாயம் என்பதை இந்தச் சரண சத்தம் குறிக்கின்றது. இங்ஙனம் குறிப்பதன் கருத்து இன்னது என்பதை இச்சூத்திரத்தில் பகருகிறார்:

மூலம்: 150. "இத்தால்—ப்ராப்யந்தானே ப்ராபகம் என்கிறது."

பொருள் : முன் சொல்லிய எம்பெருமானை உபாயமாய்ச் சொல்லுகிற இத்தால், உபேய வஸ்துதானே உபாயம் என்னும் இடஞ் சொல்லுகிறது.

அவதாரிகை : 'முன், உபேயத்தைப் பற்றிய பேச்சு உண்டோ ?' என்ன, இயம்புகிறார் :

மூலம் : 151. "கீழ்ச்சொன்ன மூன்றும் ப்ராப்யமிறே?"

பொருள் : ஒரே தொடரான பூர்வ பதத்தில் கூறிய, பிராட்டியாரோடு சேர்ந்திருத்தல், கலியாண குணங்களைப் பெற்றிருத்தல், திவ்விய மங்கள விக்கிரகத்தை உடைத்தாயிருத்தல் ஆகிய இம் மூன்றும், சேதனன் அனுபவித்தற்கு விஷயப் பொருளாய்ப் பார்க்கப்படுகின்றமையின், இவை பிராப்பியம் (பலம்) அல்லவா ?

வினா : சரணம் என்னும் சொல்லுக்கு, பிராட்டியார், குணங்கள், திவ்விய மங்கள விக்கிரகம் ஆகிய இவைகளோடுங் கூடிய பகவானுகிற உண்மைப் பொருள் முன்பு சொல்லப்பட்டிருப்பது உண்மைதான். ஆனல், அவ்வுண்மைப் பொருளே பிராப்பியம் (அடையப்படும் பொருள்) என்பதற்கு ஆதாரம் யாது ?

விடை : பெரிய பிராட்டியாரோடு சேர்ந்திருக்கும் பகவான் பிராப்பியம் என்பதற்கு, "ச்ரியா ஸார்த்தம் - ஆஸ்தே" என்னும் சுலோகமும், குணங்களோடுங் கூடிய பெருமாள் கிட்டி அனுபவிக்கப்படும் பொருள் என்பதற்கு "ஸர்வாங் காமாங் - அச்நுதே" என்னும் சுருதியும், திவ்விய மங்கள விக்கிரகத்தோடுங் கூடிய பெருமாள் எப்போதும் அனுபவிக்கப்படும் பொருள் என்பதற்கு "ஸதா பச்யந்தி" என்னும் சுருதியும் பிரமாணங்களாகும்.

ஆக, இம்மூன்றுங் கூடிய பகவானே எப்போதும் கிட்டி அனுபவிப்பதற்கு உபேயப் பொருளாய் உள்ளான் என்பதற்குத் தட்டில்லை.

அவதாரிகை : 'உபாயம் என்றும், பலம் என்றும் இரு விஷயங்களைக் காண்கிறேம். சான்றாக, பலா மா முதலிய மரங்களை வைத்து வளர்த்தல் உபாயம். அவற்றின் கனிகளைப் பெறுதல் பலம். இங்ஙனம், உலகில் சாதனம் வேருகவும், பலம் வேருகவும், சாதனத்தைக் கைப்பற்றி இருக்குங்கால் பலம் கைகூடாமலும், பிற்காலத்திலேயே கைகூடுவதாயும் காண்கின்றேம்.

அங்ஙனமல்லாமல், இங்குப் பலத்தையே உபாயம் என்று நீங்கள் கூறுகின்றீர்கள். இங்ஙனம் கொள்ளின், உபாயம் கைபுகப் பெற்றிருக்கும் நிலையிலேயே பலமும் கைபுகுந்திருக்குமாதலால், பிற்காலத்தில் இவன் பெறும் பயன்தான் யாது?' என்ன, செப்புகின்றார்:

**மூலம்: 152. "இவன் செயலறுதியாலே உபாயமாக்குகிறானித்தனை."**

**பொருள்:** வேறு நன்மைகளும், வேறு இரட்சகப் பொருள்களும் அற்றவனாய் இருக்கும் சேதனன், உபேயப் பொருளான பகவானையே உபாயமாகக் கொள்ளுகிறான்.

**விளக்கம்:** ஒருவன் ஒரு நலத்தைப் பெற உன்னும் போது, தன் முயற்சியினாலோ, பிறர் முயற்சியினாலோ அந்நலத்தைத் தான் பெறுதல் உண்டு. இஃது அநுபவத்தில் கண்டதொன்றாகும். ஆனால், பகவானே தனக்கு உபாயம் உபேயம் என்னும் உண்மை ஞானத்தைப் பெற்ற இவன், தானாக முயன்று ஒன்றையும் செய்வதற்கில்லை. அன்றியும், மற்றவர் (தேவதைகள் சமுசாரிகள்) உதவியினால் நலம் பெறலாம் எனக் கருதுதற்கும் இல்லை. இவற்றுள் நுழையின், வேறு நன்மையற்றிருக்கை ஆகிய ஆகிஞ்சன்னியமும், வேறு இரட்சகப் பொருள் அற்றிருக்கையாகிய அநந்யகதித்துவமும் இவனை விட்டு நழுவும். பித்தப்பிணியினால் பசுப்பால் கசக்கின்றது. அவ்வமயம் தன் நோய் நீங்க, மருத்துவனிடம் செல்கிறான். அம்மருத்துவன், அதற்கு வேறு மருந்தை ஈயாமல், 'பாலையே சிறிது சிறிதாக உண்பையேல், உன் பித்தநோய் நீங்கும்,' என இவனுக்குப் போக்கியமாகிய பாலையே மருந்தாக்குகிறான். இம்முறையில், எங்ஙனம் பித்த நோயாளி தனக்குப் போக்கியமான பாலையே மருந்தாகக் கொள்ளுகின்றானோ, அங்ஙனமே மேற்கூறிய ஆகிஞ்சன்னியமும் அநந்யகதித்துவமுமுடைய சேதனன், உபேயப் பொருளான பகவானையே உபாயமாகப் பற்றுகின்றான்.

**அவதாரிகை:** இங்ஙனம் உபேயத்தையே உபாயமாகச் சொல்லுகிற இதனால், இவ்வுபாயத்திற்கு ஒரு சிறப்புச் சொல்லுகிறது என்கிறார்:

**மூலம்: 153. "'சரணௌ சரணம்' என்கையாலே—உபாயாந்தர வ்யாவ்ருத்தமான உபாயமென்கிறது."**

பொருள் : முற்கூறிய மூன்ருேடுங் கூடிய ஈசுவரனையே (பிராப்பியப் பொருளையே) உபாயமாகச் சொல்லுகையால், மற்ற உபாயங்களைக்காட்டிலும் இவ்வுபாயம் வேறுபட்டது என்பது இங்குப் புலனாகிறது.

விளக்கம் : வினு : மற்ற உபாயங்களில் இவ்வுபாயம் வேறுபட்டது யாங்ஙனம் ?

விடை : மற்ற உபாயங்கள், கன்மயோகம், ஞானயோகம், பத்தியோகம் என மூன்று வகைப்படும். இவற்றை நோக்குவோம் :

கன்மயோகம் : ஒருவன் தன் நிலைக்கு ஏற்றதாயுள்ள சில கன்மங்களைச் செய்யுங்கால், தன்னைச் செய்பவனாக எண்ணாமலும், 'இக்கருமம் என்னுடையது' என்னும் மமதை கொள்ளாமலும், இம்மை மறுமைப் பயன்களை விரும்பாமலும் பரமபுருஷன் முக மலர்த்திக்கு உறுப்பாகவே இவற்றைச் செய்தல்.

ஞானயோகம் : பகவானுக்குச் சரீரப்பொருளான ஆன்மாவைச் சிந்தித்தல்.

பத்தியோகம் : விக்கிரக குணங்கள், ஆன்ம குணங்கள் இவற்ருேடும் கூடிய பரமபுருஷனை வேறு விஷயம் கலவாமல் தைலதாரையைப் போன்று இடைவிடாமல் அன்போடு சிந்தித்தல்.

இவைகளை மேற்கொண்டவர்கள், பகவானுடைய அனுபவ கைங்கரியங்களை அடைகின்ருர்கள். இவற்றை உற்று நோக்கும் போது, உபாயம் வேறு பலம் வேறு என்பது அறியக்கிடக்கிறது.

தொகுப்புரை : 149-ஆம் சூத்திரம் முதல் 153-ஆம் சூத்திரம் வரை, சரணம் என்பதற்கு உபாயம் என்பது பொருள் என்றும் ; எம்பெருமானை உபாயமாகச் சொல்லுகிற இதனுல், உபேயமே உபாயம் எனச் சொல்லுகிறது என்றும், பிராட்டியாரோடு சேர்ந்திருத்தல், கலியாண குணங்களுக்குக் கடலாயிருத்தல், திவ்விய மங்கள விக்கிரகத்தைப் பெற்றிருத்தல் இம்மூன்றும் பலம் என்றும்; வேறு நன்மைகளும் வேறு இரட்சகமும் அற்ற சேதனன், உபேயனை பகவானையே உபாயமாகப் பற்றுகிருன் என்றும் ; மற்ற உபாயங்களைக்காட்டிலும், ஈசுவரனுகிற உபாயம் வேறுபட்டது என்றும் அறிந்தாம்.

அவதாரிகை : இவ்வாக்கியத்திலுள்ள வினைச் சொல்லிற்குப் பொருள் பகருகிறார் :

மூலம் : 154. "ப்ரபத்யே—பற்றுகிறேன்."

பொருள் : 'ப்ரபத்யே' என்னும் வினைச்சொல் 'பத' என்னும் வினையடியிலிருந்து உண்டானது. இது தன்மை வினைமுற்று. ஆகையால், இச்சொல்லிற்குப் 'பற்றுகிறேன்' எனப் பொருள் சொல்லுகிறார்.

அவதாரிகை : ''பரபத்தியே' என்னும் இச்சொல், மனம் மொழி மெய் ஆகிய முக்கரணங்களாலும் பற்றும் பற்றுதலையும் சொல்லுகின்றமையின், இவற்றுள் எந்தக் கரணத்தால் ஏற்படும் பற்றுதலை இங்குச் சொல்லுகிறது என்ன?' அதை இயம்புகின்றார் :

மூலம் : 155. "வாசிகமாகவும் காயிகமாகவும் பற்றினலும் பேற்றுக்கு அழிவில்லை; ஜ்ஞாநாந் மோக்ஷமாகையாலே மாநஸமாகக்கடவது."

பொருள் : வாக்கினல், 'என்னைக் காத்தல் வேண்டும்,' எனப் பிரார்த்தித்தல், கையினல் பகவானை அஞ்சலி செய்து, இரட்சகனுகிய அவன் இருக்கும் இடத்திற்குச் செல்லுதல் ஆகிய இவ்விருவகையில் பற்றினும், பலம் கைகூடுதற்குக் குறையில்லை. ஆயினும், ஞானத்தாலே மோட்சம் எனக் கூறப்படுகின்றமையின், மனத்தினல் பற்றுதலே இங்கு வேண்டற்பாலதாகும்.

அவதாரிகை : 'இங்ஙனம் மனத்தினல் மட்டும் பற்றுவது போதியதாமோ? மூன்று கரணங்களினலும் பற்ற 'வேண்டாவோ?' என்ன, அருளிச்செய்கிறார் :

மூலம் : 156. "உபாயம் அவனுகையாலும், இவை நேரே உபாயமல்லாமையாலும், இம்மூன்றும் வேணுமென்கிற நிர்பந்தமில்லை."

பொருள் : சேதனன் பலம் பெறுதற்கு, உண்மை உபாயம் ஈசுவரனேயாகையாலும், இவன் முக்கரணங்களினலும் ஈசுவரனைப் பற்றும் பற்றுதல்கள் மேற்போக்கில் உபாயம் போலத் தோன்றினும், அவை உண்மை உபாயங்களாகாமையாலும், பலத்தைப்

26

பெறுதற்கு மனப்பற்றுதல் ஒன்றே போதுமானதாகையாலும் இம்மூன்றும் வேண்டுமென்னும் நிர்பந்தமில்லை.

**விளக்கம் :** வினா : "இம்மூன்றும் வேண்டுமென்னும் நிர்ப்பந்தமில்லை எனக் கூறினீர்கள்," ஆனால்,

"சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் தேவபிரானையே
தந்தை தாயென்றடைந்த வண்குருகூரவர் சடகோபன்"[1]

என்னும் திருவாக்கால், முக்கரணங்களினாலும் பற்றுதல் இன்றியமையாததெனத் தோன்றுகிறதே! இதைப்பற்றி உம் கருத்து என்னே?

விடை : சேதனன் பற்றும் பற்று பேற்றுக்கு உபாயமன்று. ஆனால், ஆழ்வார் உத்தமாதிகாரியாதலின், அவர் இயல்பிற்கேற்ப முக்கரணங்களினாலும் பற்றும் பற்று அவரிடம் காணப்படுகிறது. இவ்விஷயம் பின் தெளிவாகும்.

மணவாள மாமுனிகள் இச்சூத்திரத்திற்கே வேறொரு விதமாய்ப் பொருள் கூறியுள்ளார். அப்பொருளும் இதற்கு ஒக்கும். அஃது, "இங்ஙனம் முக்கரணங்களினாலும் பற்ற வேண்டிய அவசியமில்லை எனக் கூறுதலால், இவ்வாறு மூன்றினாலும் பற்றினும் குற்றமில்லை என்பது தோன்றுகின்றது. பலன் பெறுதற்கு உபாயம் ஈசுவரனேயாதலால், இவன் அவனை ஒரு கரணத்தினால் பற்றினும், முக்கரணங்களினால் பற்றினும் முற்குறிப்பித்தபடி பலம் கைகூடுதற்குக் குறையில்லை. ஆயினும், எங்ஙனம் ஈசுவரன் உயிர்களுக்கு உபாயமாகுங்கால், அவனுடைய உபாய பூர்த்திக்கேற்ப பெரிய பிராட்டியாரோடு சேர்ந்திருத்தலும், வாத்ஸல்யம் முதலிய கலியாண குணங்களை வாய்ந்திருத்தலும், திவ்விய மங்கள விக்கிரகத்தைப் பெற்றிருத்தலும் இன்றியமையா தனவோ, அங்ஙனமே சேதனனுடைய அதிகாரப் பூர்த்திக்கேற்ப இவன் இறைவனை வாயால் துதித்தலும், காயத்தால் வணங்கலும், மனத்தால் சிந்தித்தலும் இன்றியமையாதனவாகும்," என்பதே. இவ் விஷயத்தைப் பிள்ளை லோகாசாரியர் பரந்தபடியில் அருளி யுள்ளார்.

மனத்தினால் பற்றும் பற்று : மனத்தினால், பகவானே இரட்சகன் என நிச்சயித்தல். இது, "நான் எம்பெருமானுக்கே சேஷபூதன்," என்னும் சேதனனுடைய ஞானத்தினால் ஏற்படும் காரிய

1. திருவாய்மொழி—6, 5. 11,

மாயும், கன்ம ஞான பத்திகளாகிற உபாயாந்தரங்களில் வேறுபட்ட தாயும், பகவானுடைய இரட்சகத்தன்மைக்கு உடன்பட்டிருத் தலைத் தன்னிடம் கொண்டதாயும், ஒரு முறை மட்டும் மேற் கொள்ளக் கடவதாயும், பயனைத் தருதலில் தவறுதல், காலந் தாழ்த்தல் ஆகியவை இல்லாததாயும், எல்லாரும் கைகொள்ளக் கூடியதாயும், இத்தேசத்தில், இக்காலத்தில், இன்ன முறையி லிருந்தே செய்ய வேண்டுமென்னும் வரையறை இல்லாததாயும், அந்திமஸ்ம்ருதி (மரண காலத்தில் பகவானைச் சிந்திக்கை)யைத் துணை கொள்ளாததாயும், எளிதில் அனுஷ்டிக்கக் கூடியதாயும், இரத்தலைத் தன்னிடத்தில் அடக்கிக்கொண்டிருப்பதாயும், பேறு தப்பாதென்னும் துணிவை வடிவெனப் பெற்றதாயும் இருக்கும் அறிவே, மனத்தினால் பற்றும் பற்றெனச் சொல்லப்படுகிறது. ஞானத்தாலே மோட்சம் என்னும் கோட்பாட்டிற்கு இஃது ஏற்ற தாயிருத்தலின், இஃதே இன்றியமையாததாகும். இவ்விஷயத்தை லோகாசாரியார் பரந்தபடியில் விரிவாயும், ப்ரியப்பதிபடியில் இவ் வாறு சுருக்கமாயும் அருளிச்செய்துள்ளார்.

வினா: பகவானே உபாயம் என்றும், சேதனன் செய்யும் செயல் ஒன்றும் உபாயமன்று என்றும் சொன்னீர்கள்; மறுபடி யும் மனத்தினால் பற்றுதலே அமையும், மற்ற இரு கரணங்களி னாலும் பற்ற வேண்டும் என்னும் நிர்பந்தமில்லை என்றும் இயம்பு கின்றீர்கள். இவ்விரண்டிற்கும் முரண்பாடுள்ளதன்றோ? இவற் றின் கருத்து என்னை?

விடை: சேதனன் முயன்று செய்யும் தருமம், சாத்திய தருமம் எனப்படும். அங்ஙனமின்றி, என்றுமுள்ள தருமம் சித்த தருமம் எனப்படும். முன் கூறியது பத்தி. பின் கூறியது பகவான். முந்தியதில், "யாவருக்கும் முத்தி உண்டாகட்டுமே," எனக் கேட் பதற்கு வழி இல்லை. ஏனெனில், பத்தி செய்தவனுக்கு நலமேற் படுகிறது. செய்யாதவனுக்கு அஃதில்லையாதலால், கேள்விக்கு இடமுண்டாகாது. பிந்தியதில், பகவான் என்றும் உள்ள தரும மாகையால், அவனால் "எல்லாருக்கும்முத்தி உண்டாகட்டுமே," என்னும் கேள்வி உண்டாகும். இக்கேள்விக்கு, எம்பெருமான் என்றும் உள்ள தருமமாயிருப்பினும், அவன் அதிகாரிக்கே பயனைச் சாதித்துக் கொடுக்கும் உபாயப் பொருளென்றும், அதிகாரி அல்லாதவனுக்கு அங்ஙனம் உபாயப் பொருளல்லன் என்றும்

சொல்லும் இதையே சமாதானமாய்க் கொள்ள வேண்டும். அதிகாரி யாவதற்கு மனத்தால் பற்றுதலே போதியதாகும்.

அவதாரிகை: பிரபத்தியை ஒரு முறை செய்ய வேண்டுமெனச் சாத்திரங்கள் கூறியிருக்க, இங்கு, எப்போதும் அநுசந்திப்பதைக் குறிப்பிக்கும் நிகழ்கால வினைமுற்றாய்ச் சொல்லியிருப்பது ஏன்? என்ன இயம்புகிறார்:

**மூலம்: 157. "வர்த்தமாந நிர்த்தேசம்—ஸத்வம் தலையெடுத்து அஞ்சின போது அநுஸந்திக்கைக்காக."**

பொருள்: ஆழ்வார்கள் பிரபத்தி செய்யும் போது இறந்த காலமாய்ச் செப்பியிருப்பினும், இங்கு ப்ரபத்யே (பற்றுகிறேன்) என நிகழ்காலத்தில் சொல்லுவது ஒரு முக்கிய காரணத்திற்காகவே ஆகும். இவன் உடலோடுங் கூடி இவ்வுலகில் வாழுங்கால், ரஜசு தமசுக்கள் தலையெடுத்து, கன்ம ஞான பத்திகளாகிற வேறு உபாயங்களிலும், தீயச் செயல்களாகிற அபாயங்களிலும் இவன் நுழையக்கூடும். இங்ஙனம் நுழைதல் இவன் நிலைக்குச் சேராததாகும். இவனுக்குச் சத்துவம் தலை எடுக்குங்கால், முன் இயற்றிய காரியங்களுக்காய் அநுதாபம் பிறந்து அச்சம் ஏற்படும். அவ்வமயம், இவன் முன்பு செய்த பிரபத்தியை நினைத்தலைத் தவிர, வேறு பரிகாரந் தேடுதற்குத் தகுதியற்றவனாதலால், அப்பிரபத்தியையே அநுசந்திக்கிறான். இதன்பொருட்டே இச்சொல் நிகழ்காலத்தில் சொல்லப்பட்டுள்ளது.

விளக்கம்: வின: ஆழ்வார் பிரபத்தி பண்ணும் போது இயம்பிய பாசுரம் யாது?

விடை: "கன்ம ஞான பத்திகளாகிற மற்ற உபாயங்களும், வேறு இரட்சகங்களும் சிறிதேனும் இல்லாமல் உம்மையே சரணாகப் பற்றிய பரதந்திரனான அடியேன், பற்றினாரை விடாத உம்முடைய திருவடியின் கீழ், யாதொரு பயனையும் கருதாது அவற்றையே பயனாகக்கொண்டு புகுந்துள்ளேன்," என்னும் கருத்தை ஆழ்வார் "புகலொன்றில்லா அடியேன் உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேனே" என்னும் பாசுர அடியால் இறந்த காலத்தில் தெரிவித்துள்ளதை நோக்குக.

அவதாரிகை : இன்னும், இதை நிகழ்காலத்தில் சொல்லுதற்குச் சில பயன்களைப் பகருகிறார் :

**மூலம் : 158. "உபாயாந்தரங்களில் நெஞ்சு செல்லாமைக்கும், காலக்ஷேபத்துக்கும் இனிமையாலே விடவொண்ணாமையாலும் நடக்கும்."**

பொருள் : *பிரபன்னனான சேதனன், பல பிறவிகளிலும், இப்பிறவியில் பிரபத்தி செய்வதற்கு முன்பும் வேறு உபாயங்களைக் கடைப்பிடித்தொழுகிய பழக்கத்தினால், தன்னை அறியாமலே வேறு உபாயங்களில் தன் மனம் செல்லாதிருத்தற்கும், இவனுக்கு, இப் பிரபத்தி அநுசந்தானந்தவிர வேறொன்றால் பொழுது போக்கல் அரிதாகையாலும், இதனுடைய இனிமையின் மிகுதியினாலும் (போக்கியதையாலும்) இப்பிரபத்தி அநுசந்தானம் இவனுக்கு இடைவிடாமல் நடைபெறுவதாகும்.*

அவதாரிகை : இங்ஙனன்றிக்கே, 'பலத்தைப் பெறுதற் பொருட்டுப் பன்முறையும் அநுசந்தித்தல் வேண்டும்' எனக் கூறின், என்னை ? என்ன, இயம்புகிறார் :

**மூலம் : 159. "பேற்றுக்குப் பலகாலும் வேணுமென்று நினைக்கில் உபாயம் நழுவும்."**

பொருள் : *முற்கூறிய பயன்களுக்காய் அல்லாமல், "நாம் பேற்றை அடைவதற்குப் பலகாலும் இதை அநுசந்தித்தல் வேண்டும்," என இவன் கருதின், வேறொரு துணையையும் பொறாத சித்தோபாயம் (பகவான்), சணற் கயிற்றைக் கண்ட பிரமாத்திரம் போன்று, தானாகவே நழுவி விடும் எனக் கொள்க.*

விளக்கம் : *சிறிய திருவடி பிரமாத்திரத்தால் கட்டுண்ட போது, அதன் பெருமையையும் திண்மையையும் கருதாமல், அதில் நம்பிக்கை அற்ற அரக்கர், அதற்கு மேல் ஒரு சணற்கயிற்றைப் பெய்து பிணைத்தனர். அவ்வினாடியே அப்பிரமாத்திரத்தின் பிணிப்புத் தானே அற்றொழிந்தது. அங்ஙனமே, இச் சித்தோபாயமும் நழுவிப் போகும்.*

தொகுப்புரை : *154-ஆம் சூத்திரம் முதல் 159-ஆம் சூத்திரம் வரை, ப்ரபத்யே என்னும் வினைமுற்றிற்குப் பற்றுகிறேன் என்பது பொருள் என்றும்; அப்பற்றுதல் மொழிமெய்களால் ஏற்படி*

னும் பேற்றிற்குக் குறையில்லை என்றும்; ஆயினும், அறிவினாலே வீடுபேறுண்டு என்பது சித்தாந்தமாதலால், அதற்கேற்ப மனத்தினால் பற்றும் பற்றுதலே வேண்டற்பாலதென்றும்; எம்பெருமானே உபாயமல்லாமல் கரணங்களால் ஏற்படும் பற்றுதல்கள் உபாயப் பொருள்கள் அல்லாமையின், அதிகாரியாதற்கு மனத்தினால் பற்றுதலே போதியதாகும், மற்ற இருகரணங்களினாலும் பற்ற வேண்டும் என்னும் நிர்ப்பந்தமில்லை, அங்ஙனம் பற்றினாலும் அதிகார பூர்த்தி உண்டு என்றும்; வினை முற்றில் குறிக்கப்படும் நிகழ் காலத்திற்குப் பயன்கள் இன்னவை என்றும், பேற்றிற்காகப் பலகாலும் அநுசந்திக்கில் சித்தோபாயம் நழுவிவிடும் என்றும் தெளிந்தாம்.

அவதாரிகை: இதுகாறும், பூர்வ வாக்கியத்திற்குப் பொருள் கூறினார். இனி உத்தரவாக்கியத்திற்குப் பொருள் கூறத் தொடங்குகிறார்:

**மூலம்: 160. "உத்தர வாக்யத்தாலே ப்ராப்யம் சொல்லுகிறது."**

பொருள்: இவ்வுத்தரவாக்கியத்தால், பெரிய பிராட்டியாரோடுங் கூடியவனும், யாவருக்கும் சுவாமியாயும் இருக்கும் சர்வேசுவரன் திருவடிகளில் செய்ய வேண்டிய கைங்கரியத்தைப் பற்றிச் சொல்லுகிறது.

அவதாரிகை: இம்மந்திரத்தின் முன் வாக்கியத்தில் 'எம்பெருமானை உபாயமாய்ப் பற்றுகிறேன்,' என்பது குறிக்கப்படுகிறது. அதன் பின் சொன்ன இவ்வாக்கியத்தில் உபேயம் குறிக்கப்படுகிறதற்குக் கருத்தைச் செப்புகிறார்:

**மூலம்: 161. "ப்ராப்யாந்தரத்துக்கன்றென்கை."**

பொருள்: மக்கள், புதிய செல்வம், இழந்த பழைய செல்வம், ஆன்மானுபவம், கைங்கரியம் ஆகிய இந்நான்கனுள் எதையேனும் ஒன்றை விரும்பி, பிராட்டியாரோடுங் கூடிய இறைவனுடைய திருவடிகளை உபாயமாகப் பற்றலாம். ஆனால், இம்மந்திரத்தின் பின் வாக்கியம், மேற்கூறிய பயன்களுள் முதல் மூன்றையும் தள்ளி, நான்காவதாகிய கைங்கரியப் பயனைப் பெறுதற் பொருட்டே, இங்ஙனம் எம்பெருமானைப் பற்றுகிறது என்னும் கருத்தை விளக்குவதாகும்.

அவதாரிகை: மற்றப் பயன்களை விட்டுப் பகவத் கைங்கரிய மாகிற பலத்தை மட்டும் விரும்புவது ஏன்? என்னும் ஐயத்தில் அருளிச்செய்கிறார்:

**மூலம்: 162. "உபாயாந்தரங்களை விட்டு சரமோபா யத்தைப் பற்றினாப் போலே, உபேயாந்தரமான ஐச்வர்ய கைவல்யங்களை விட்டு எல்லையான ப்ராப் யத்தை அர்த்திக்கிறது."**

பொருள்: பெருமானைத் தவிர வேறு உபாயம் அற்றிருக்கிற சேதனன், தன் சொரூபத்திற்கு ஏற்ப கன்ம ஞான பத்திகளை விட்டு, ஈசுவரனையே உபாயமாய்ப் பற்றினது போல, அவனைத் தவிர வேறு போக்கியப் பொருள் அற்றிருக்கும் இவன், தன் சொரூபத்திற்கு ஏற்ப ஐசுவரிய கைவல்யங்களை விட்டு, ஈசுவரன் திருவடிகளில் புரியும் கைங்கரியத்தையே விரும்புகிறது பொருத்த மாகும்.

அவதாரிகை: சேதனன் கைங்கரியத்தை விரும்ப வேண் டுமோ? ஈசுவரன் இவன் நினைவறியானோ என்னும் வினாவை இதில் வெளியிடுகிறார்:

**மூலம்: 163. "இவன் அர்த்திக்கவேணுமோ? ஸர் வஜ்ஞன் இவன நினைவறியானோ? என்னில்,"**

பொருள்: சேதனன் கைங்கரியத்தைப் பிரார்த்தித்துப் பெற வேண்டுமோ? கைங்கரியம் புரிய விரும்பும் இவனுடைய எண் ணத்தைப் பேரறிவாளனான ஈசுவரன் அறியானோ?

அவதாரிகை: முன் சூத்திரத்தில் கேட்ட வினாவிற்கு விடை பகருகிறார்:

**மூலம்: 164. "இவன் பாசுரம் கேட்டவாறே திரு வுள்ளமுகக்கும்."**

பொருள்: பிணியினால் உணவில் விருப்பற்றுக் கிடந்த குழந்தை பிணி நீங்கி, அதுவே வந்து, "அம்மா எனக்கு அம்மம்" எனக் கேட்குங்கால், அளவற்ற ஆனந்தத்தைக் கொள்ளும் தாயைப் போன்று, அநாதிகாலமாய் ஐசுவரியம் முதலியவற்றில் உண்டான விருப்பமாகிற நோயினால் எம்பெருமானை மறந்து, ஈசுவர கைங்கரியத்தில் (உபேயத்தில்) விருப்பற்றுக் கிடந்த

சேதனன், அதில் ருசி பிறந்து, தானே ஈசுவரனுகிற தன்பக்கல் போந்து,

"எற்றைக்கு மேழேழ் பிறவிக்கும் உன்றன்னே
டுற்றேமே யாவோம் உனக்கேநாம் ஆட்செய்வோம்."

என்னுமாறு 'உமக்கே கைங்கரியம் புரிய அருள் புரிதல் வேண்டும்', எனப் பிரார்த்திக்கும் வார்த்தையைச் செவி ஏற்றவுடனே, சேஷியான ஈசுவரன் மகிழ்கிறுன். இம்மகிழ்வின்பொருட்டே, சேதனன் ஈசுவரனை அர்த்திக்க வேண்டியிருக்கிறது. சேதனனுடைய கைங்கரியத்தைப்போன்றே, இப்பிரார்த்தனையும் அவன் முகமலர்த்திக்குக் காரணமாயிருத்தலின், இஃதும் இவ்வதிகாரிக்கு இன்றியமையாததாகும்.

தொகுப்புரை: 160-ஆம் சூத்திரத்திலிருந்து 164-ஆம் சூத்திரம் வரையும் இயம்பிக்கொண்டு வந்தவற்ருல், துவயத்தின் பிற்கூறு பயனைச் சொல்லுகிறது என்றும்; எம்பெருமான் திருவடிகளை உபாயமாய்ப் பற்றுதல், மற்றப் பயன்களை அடைதல் பொருட்டு அன்று என்றும்; சேதனன் தன் ஒரு நிலைக்கேற்ப மற்ற உபாயங்களை விடுதல் போன்று, தன் மற்ருெரு நிலைக்கேற்ப மற்றப் பலன்களையும் விடுதல் இன்றியமையாததென்றும்; இக்கைங்கரியத்தை இவன் பிரார்த்தித்தே பெற வேண்டும் என்றும்; இப்பிரார்த்தனையைக் கேட்டவாறே பகவான் திருவுள்ளமுகக்கும் என்றும் தெரிந்துகொண்டோம்.

அவதாரிகை: இனி, இவ்வாக்கியத்திற்குப் பதப்பொருள் அருளிச்செய்ய திருவுள்ளங்கொண்டு, முதல் பதத்தை எடுத்துப் பொருள் கூறுகிருர்:

**மூலம்: 165. "ஸ்ரீமதே—பெரிய பிராட்டியாரோடே கூடியிருந்துள்ளவனுக்கு."**

பொருள்: ஸ்ரீமதே என்பது, பெரிய பிராட்டியாரோடே கூடி யிருந்தவனுக்கு எனப் பொருள் தாராநிற்கின்றது. இம்மந்திரத்தின் முன் வாக்கியத்திலுள்ள ஸ்ரீ, மதுப்பு ஆகிய இவற்றிற்குக் கொண்ட பொருளையே இங்கும் கொள்ளுதல் வேண்டும்.

கைங்கரியத்தைப் போன்றே இப்பிரார்த்தனையும் பகவான் முகமலர்த்திக்குக் காரணமாயிருத்தலின், இஃதும் இவ்வதிகாரிக்கு இன்றியமையாததாகும்.

அவதாரிகை : இம்மந்திரத்தின் முன் பின் வாக்கியங்களிலுள்ள ஸ்ரீமச்சப்தம் கூறுமாறு, பிராட்டியாருக்குப் பகவானுடன் என்றுமுள்ள தொடர்பு ஒத்திருப்பினும், புருஷகார நிலை, உபேய நிலைகளுக்கேற்ப இவரிருக்கும் இருப்பைச் சொல்லுகிறார் :

மூலம் : 166. "அவன் உபாயமாமிடத்தில் தான் புருஷகாரமாயிருக்கும்; அவன் ப்ராப்யனுமிடத்தில் தான் ப்ராப்யையுமாய், கைங்கர்ய வர்த்தகையுமாயிருக்கும்."

பொருள் : ஈசுவரன், சேதனருக்குள்ள துன்பங்களைத் துடைத்து இன்பங்களை ஈதற்கு உபாயமாய் நிற்குமிடத்தில், பிராட்டியார் புருஷகாரமாய் நிற்பர். இது முன் வாக்கியத்தில் உள்ள ஸ்ரீமச்சப்தத்திற்குக் கருத்தாகும். அவன் சேதனன் செய்யும் அடிமையை ஏற்றுக்கொண்டு உகந்து ப்ராப்பியப் பொருளாய் இருக்கும் பொழுது, பிராட்டியாரும் அவ்வெம்பெருமானைப் போன்றே உவக்கும் பிராப்பியப் பொருளாயும், சேதனன் செய்யும் அடிமைத் தொழிலை ஒன்று பத்தாய்ப் பெருமாள் திருவுள்ளத்தில் படுமாறு செய்து அவ்வடிமையை வளர்ப்பவராயும் இருப்பர். இது பின் வாக்கியத்தில் உள்ள ஸ்ரீமச்சப்தத்தின் கருத்தாகும்.

விளக்கம் : இவற்றை விளக்க வேண்டுவது இன்றியமையாததாகும். முன் வாக்கியத்தில் உள்ள ஸ்ரீமச்சப்தம், சேதனருடைய குற்றங்களையும், ஈசுவரனுடைய சுதந்தரத்தன்மையையும் பார்த்து, 'சேதனன் பகவான் சீற்றத்திற்காளாய் நசித்துப் போகாமல், அவனை அடைந்து உய்ய வேண்டும்,' என எண்ணி, சேதனரை ஈசுவரனோடு சேர்த்தற்பொருட்டு எப்போதும் அவனை விடாதிருக்கும் இருப்பைச் சொல்லுகிறது.

பின் வாக்கியத்தில் உள்ள 'ஸ்ரீமச்சப்தம்' வேறு சில கருத்துகளைத் தெரிவிக்கின்றன. அவற்றைக் கீழே குறிப்பிடலாம் :

1. சேதனன் அடிமைத் தொழிலைப் புரியும் போது, அதை ஈசுவரன் திருவுள்ளம் பற்றி உவத்தல் போன்று, பெரிய பிராட்டியாராகிய இவரும் அவ்வடிமைத் தொழிலை ஏற்று உவத்தல்.

2. அவ்வடிமைத் தொழிலை ஒன்று பத்தாய்ப் பெருக்கிப் பகவான் திருவுள்ளத்தில் பதியவைத்தல்.

இவற்றைக் கருதியே இவர் என்றும் பரம புருஷனோடு சேர்ந்தே இருக்கிறார். இவை மட்டுமல்லாமல், இவர் சேர்ந்திருப்பதற்கு வேறொரு சிறந்த பயனும் உண்டு என்பதைக் காணலாம். இவ்விஷயத்தை நாம் தெளிவுறக் காண்பதற்கு உதாரண முகத்தான் சொல்வதே பொருத்தமானதாகும்.

1. அன்புள்ள பெற்றோர்க்கு, வெளி நாடு சென்றிருக்கும் ஒரு பிள்ளையைப் பிரிந்திருக்குங்கால், பல மக்கள் தம்மைச் சூழவிருந்து அவர்களோடு இன்பங்களைத் துய்த்துக்கொண்டிருக்கும் காலத்திலும், அவர்கட்கு அஃது உண்டது உருக்காட்டுகிறதில்லை.[1]

2. இங்ஙனம் உலக அநுபவத்தில் மட்டும் அல்லாமல், சாத்திரத்திலும் இதைப் போன்ற உதாரணங்கள் உண்டு: சக்கரவர்த்தித் திருமகன், கானத்தில் இளையபெருமாளுடன் சேர்ந்திருக்கும் போதே, அவரை நோக்கி, "புருஷர்களில் சிறந்த இலக்குமணனே, யான் மகாத்துமாவாகிய பரதனோடும், வீரனாகிய சத்துருக்கனோடும் என்று கூடி வாழ்வேன்; உன்னோடு என்று சேர்ந்திருப்பேன்," என்றார்.

இதை நோக்குங்கால், ஸ்ரீராமபிரான், இலக்குமணனோடு சேர்ந்திருப்பினும், பரத சத்துருக்கர்களோடு சேராமையினால், இச்சேர்த்தி சேர்த்தியாய் அவர் திருவுள்ளத்தில் பட்டிலது. அன்றியும், இச்சேர்த்தியில் அவருக்கு இன்பமும் தோன்றிலது. அதைப் போன்றே, பிராட்டியார் பரம புருஷனோடு எப்போதும் சேர்ந்திருப்பினும், சேதனன் செய்யும் அடிமைத் தொழிலை ஒன்றுபத்தாய்த் திருவுள்ளம் பற்றி உவக்கும் ஈசுவரனுடைய அநுபவம் தமக்குக் கிடைக்கும் போதுதான், இவர் சத்தைப் பெற்றிருக்கின்றார். அப்போதுதான் பிராட்டியார் உளர் எனப் பகவானும் நினைக்கிறான். இதுவே பிராட்டியார் பகவானோடு சேர்ந்திருத்தலுக்குச் சிறந்த பயனாகும்.

வினா: இப்போது நீங்கள் இயம்பும் முறையில் உபேயத் தன்மை இருவருக்கும் உண்டு என வெளிப்படுகிறது. அதைப் போன்றே, 'உபாயத்தன்மையும் இருவருக்கும் உண்டு' எனக் கூறின் குற்றம் என்ன?

---

1. அநுபவிக்கும் இன்பம், அப்பெற்றோருக்கு இன்பமாய்த் தோற்றுமலிருத்தல் மட்டுமேயன்றி, வெளிக்கும் புலப்படுதல் இல்லை.

விடை: அங்ஙனம் கூறின், அநந்யோபாயத்துவம் [1] சேதன னிடமிருந்து நழுவிவிடும்.

வினு: அஃதெங்ஙனம்?

விடை: "சேதனனுக்கு ஈசுவரனே உபாயம். இந்தச் சேதனன், அவன் ஒருவனையே உபாயமாய்ப் பற்ற வேண்டும்," என்றன்றே சாத்திரம் சொல்லுகிறது. அவ்வாறன்றி, 'பிராட்டியாரும் உபாயம், இவன் இவ்விருவரையும் உபாயமாய்ப் பற்ற வேண்டும்,' எனக் கொள்ளில், அநந்யோபாயத்துவம் பழுதாகிவிடும்.

வினு: இங்ஙனமாயின், பிராட்டிக்கு உபேயத்துவம் சொல்லும் போது மட்டும், அநந்யோபேயத்துவம் நழுவி விடாதா?

விடை: நழுவி விடாது. ஏன்? இவ்வுபேயத்துவம் இரு வகைப்படும். ப்ராப்த்யுத்தேச்யத்வம் ஒன்று, கைங்கரிய பிரதிசம்பந் தித்வம் மற்றென்று. எவனிடத்தினின்றும் தேவர் மனிதர், விலங்கு, தாவரம் ஆகியவைகள் உண்டாகின்றனவோ, பிரளய காலத்தில் அவை எவனிடத்தில் அடங்குகின்றனவோ, ஆன்மாக் கள் எவனால் காக்கப்படுகின்றனவோ, மோட்சம் பெறும் போது, அவை எவனை நோக்கிச் செல்லுகின்றனவோ, அது பிரமம் என்று வேதம் கூறுகின்றது. இறுதியில் இயம்பியதை நோக்குங்கால், அவனையே நோக்கி உயிர்கள் செல்லுகின்றமையின், அவனுக்கே ப்ராப்த்யுத்தேச்யத்வம் உண்டு எனத் தெரிகிறது. இத்தன்மை பெரிய பிராட்டியாருக்கு இல்லை. இதைக் கொண்டு சீவனுக்கு அநந்யோபேயத்துவம் உண்டு எனச் சொல்லின் குற்றமில்லை.

இரண்டாவதாகிய கைங்கரிய பிரதிசம்பந்தித்துவம் என்னும் உபேயத்துவம், பிராட்டியார் எம்பெருமான் ஆகிய இருவருக்கும் பொதுவானது. ஆதலால், 'உபேயத்துவம் பிராட்டியாருக்கும் உண்டு,' என இங்குச் சொல்லுகிறோம். இந்தச் சூத்திரத்திற்கு உரையிட்ட இடத்து, மணவாளமாமுனிகள் அருளிச்செய்த, "அவன் சேதனருக்குக் கைங்கரிய பிரதி சம்மந்திதயா ப்ராப்பிய னுமிடத்தில் அவனேபாதி கைங்கரிய பிரதிசம்பந்தியாய்க் கொண்டு தான் பிராப்பியையுமாய்" என்னும் வாக்கியத்தில், அவன் சேதன னுக்குப் பிராப்பியனுமிடத்தில் என்று மட்டும் கூருமல், கைங்கரிய

1. அநந்யோபாயத்துவம் ஈசுவரன் தவிர வேறொரு உபாயமும் இல்லாதிருத்தல்.

பிரதி சம்மந்திதயா பிராப்பியனுமிடத்தில் எனப் பகர்ந்திருத்தல் நோக்கத்தக்கது. இதை ஒரு சான்றால் விளக்குவாம்: "அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், "வடமொழி மறை என்பது, தென் மொழி மறையை நினைத்திறே" என்று அருளிச்செய்திருக்கிறார். தென் மொழி மறை ஒன்றிருத்தலினாற்றானே வடமொழி மறை எனப் பிரித்துச் சொல்லப்பட்டது. அதைப் போன்றே பிராப்த்யுத் தேச்யதயா பிராப்பியனாய், பகவான் இருக்கின்றமையின், அதை விலக்கவே இங்குக் 'கைங்கரிய பிரதிசம்மந்திதயா பிராப்பிய னுமிடத்தில்' என்று அருளிச்செய்கிறார்.

காகம் கரு நிறமாகவே இருத்தலின், காகம் கரு நிறமுடையது என்னும் அடைமொழி இட்டு ஒருவரும் சொல்லுவதில்லை; அங்ஙனமன்றி, ஆடை பல நிறங்களுடன் இருத்தலினால், வெள்ளை ஆடை, சிவப்பு ஆடை என அதற்கு அடை கொடுத்துப் பிரித்துக் கூறுகின்றனர். இங்கு மணவாளமாமுனிகள் சொல்வது, ஆடைக்கு அடைமொழி கொடுத்துச் செப்புவது போன்றதாகும்.

அவதாரிகை: திருமந்திரத்திலுள்ள 'நாராயணாய' என்பதற்கு இத்துவயத்தின் பின் வாக்கியம் விரிவாய் இருப்பதை இயம்புகிறார்:

**மூலம்: 167. "இதிலே திருமந்த்ரத்தில் சொன்ன ப்ராப்யத்தை விசதமாக அநுஸந்திக்கிறது."**

பொருள்: சேதனனுடைய கைங்கரியத்தை ஏற்றுக்கொள்ளுகிறவர்கள் ஒரு தம்பதி என்பதை, சொல்லினால் தெளிவாய் வெளிப்படுத்துகிற இவ்வாக்கியம், திருமந்திரத்தில் 'நாராயணாய' என்னும் பதத்தில் தெளிவில்லாமல் கூறிய உபேயத்தை விளக்கமாய்ச் சொல்லுகிறது.

விளக்கம்: திருமந்திரத்தில் கூறிய 'நாராயணாய' என்னும் பதத்தில், 'நாராயணனுக்கே அடிமை செய்யப் பெறுவேனாக,' என்னும் பொருள் கிடைக்கிறதே அன்றி, அவ்வடிமையைப் பெற்றுக் கொள்ளுகிறவர்கள், பிராட்டியாரும் நாராயணனுமாய்ச் சேர்ந்துள்ளார்கள் என்றும், அடிமை செய்பவன் மமகாரத்தை ஒழித்தவனாய் இருத்தல் வேண்டும் என்றும் சொல்லப்பட்டில. இப்பொருள் அப்பதத்தில் அடங்கியிருப்பினும், அதில் இதைக் குறிப்புப் பொருளாய்க் கொள்ள வேண்டியிருக்கிறது. இத்துவயத்தில்

உள்ள இரண்டாவது வாக்கியமோ, அப்பொருளைச் சொற்களி னாலேயே தெரிவிக்கின்றது. ஆதலின், திருமந்திரத்திலுள்ள நாரா யணாய பதத்திற்கு, இத்துவயத்தின் உத்தரவாக்கியம் விவரணமா யுள்ளது எனக் கொள்க.

அவதாரிகை: 'இத்தம்பதிகள் சேர்ந்திருக்கும் சேர்க்கையி லேயே அடிமை செய்ய வேண்டும் என்னும் நிர்பந்தம் என்ன,' என, பகருகிறார்:

மூலம்: 168. "இளைய பெருமாளைப் போலே இரு வருமான சேர்த்தியிலே அடிமை செய்கை முறை;"

பொருள்: பெருமாளும் பிராட்டியாரும் சேர்ந்திருந்த சேர்த் தியில் அடிமைத் தொழில் புரிந்த இளைய பெருமாளைப் போன்று இருவர் சேர்த்தியில் தொண்டு செய்தலே சேதனனுடைய ஆன்ம சொரூபத்திற்கு ஏற்றதாகும்.

விளக்கம்: "சக்ரவர்த்தித் திருமகனும் பிராட்டியாரும் கானஞ் சென்ற போது, அவர்களைப் பின் தொடர்ந்த இலக்கு மணருக்கு, இத்தம்பதிகள் சேர்ந்திருந்த காலத்தில் செய்த கைங் கரியம் சுவைத்தது போன்று, பெருமாள் மட்டும் தனித்திருந்த போது செய்த கைங்கரியம் இனிமையைத் தந்ிலது," எனச் சொல்லப்பட்டிருத்தலை நோக்குதல் வேண்டும். இவ்விருவருக்கும் சேஷப்பட்டிருத்தலே சேதனனுக்குச் சொரூபமானால், இவ்விருவர் சேர்த்தியில் தொண்டு புரிதல்தானே இவன் சொரூபத்திற்குப் பொருத்தமானதாகும்.

அவதாரிகை: இன்னம் இச்சேர்த்தியில் அடிமை செய்வதில் உள்ள சிறப்பைச் செப்புகிறார்:

மூலம்: 169. "அடிமைதான் ஸித்திப்பதும் ரஸிப்ப தும் அச்சேர்த்தியிலே."

பொருள்: சேதனன் செய்யும் தொண்டு கைகூடுவதும், இனிமையைத் தருவதும், பிராட்டியாரும் பெருமாளும் சேர்ந்திருக் கும் இச்சேர்த்தியிலேயே ஆகும்.

விளக்கம்: சேதனனுடைய கைங்கரியத்தை, ஈசுவரன் தன் சுதந்தரத்தன்மையினால் அசட்டை செய்யாது ஏற்றுக் கொள்ளு மாறு செய்பவர் பிராட்டியாரே. ஆதலால், இவர் முன்னிலையில்,

தன் சொரூபத்திற்கேற்ற அடிமையை விரும்பிப் பெற்ற இளைய பெருமாளைப் போன்று, சேதனனும், தான் பிரார்த்திக்கிற தொண்டுதான் சித்திக்கும். அன்றியும், எங்ஙனம் தம் சேர்க்கையில் செய்யும் அடிமை பெற்றோருக்குச் சுவைக்கின்றதோ, அங்ஙனமே இவர்தம் கலப்பில் செய்யும் தொண்டே இவர்கட்கும் இனிமையைத் தருவதாகும்.

தொகுப்புரை: 165-ஆம் சூத்திரத்திலிருந்து 169-ஆம் சூத்திரம் வரையும், ஸ்ரீமத் என்னும் சொல்லுக்கு இன்னது பொருளென்றும்; ஈசுவரனைப் போன்று இவர் பிராப்பியப் பொருளாகவே சொல்லப்படுகிறார் என்றும்; திருமந்திரத்தில் சொன்ன பிராப்பியத்தை இங்குத் தெளியச் சொல்லுகிறதென்றும்; இளைய பெருமாளைப் போன்று இவ்விருவர் சேர்ந்திருக்கும் சேர்த்தியிலேயே அடிமை செய்தல் சேதனனுக்கு முறை என்றும்; இவ்வடிமை, சித்திப்பதும், இனிமையைத் தருவதும் இவ்விருவர் சேர்த்தியிலேயே என்றும் அறிந்தாம்.

அவதாரிகை: இனி இரண்டாம் பதத்தை எடுத்துப் பொருள் செப்புகிறார்:

**மூலம்: 170. "நாராயணாய—ஸர்வசேஷியாயுள்ளவனுக்கு."**

பொருள்: 'நாராயணாய' எல்லாப் பொருள்களுக்கும் சேஷியாய் இருப்பவனுக்கு. சேஷபூதனுடைய தொண்டைப் பெற்றுக் கொள்பவன் சேஷியல்லனோ?

அவதாரிகை: கைங்கரியம் என்பது, திருமேனி, குணம் முதலியவற்றை அநுபவிப்பதனால் உண்டாகும் அன்பினால் செய்யப்படுவதொன்றாகும். இவ்வன்பு, அநுபவத்திற்குரிய பொருளைப் பற்றியதாகும். ஆதலின், அப்பொருளைச் சொல்ல வேண்டியிருக்கின்றமையின், அதை இப்பதத்தில் செப்புகிறார்.

**மூலம்: 171. "இதிலே திருமேனியையுங் குணங்களையுஞ் சொல்லும்."**

பொருள்: கைங்கரியத்தைப் பெற்றுக்கொள்ளும் ஈசுவரனைச் சொல்லும் இப்பதத்தில், இக்கைங்கரியத்திற்கு முன் ஏற்படும் அநுபவத்திற்கு இலக்காயுள்ள எம்பெருமான் திவ்விய மங்கள விக்கிரகத்தையும், கலியாண குணங்களையும் குறியாநின்றது.

விளக்கம்: வி௵: சேதனன், பலதசையில் ஆனந்தப் பொருளான பிரமத்தை அநுபவித்தல் போல, அவனுடைய திவ்விய மங்கள விக்கிரகத்தையும் குணங்களையும் எப்போதும் அநுபவித்துக் கொண்டிருப்பான் என்பதற்கு ஆதாரம் என்ன ?

விடை: 'நித்தியசூரிகள் காலதத்துவமுள்ள தனையும் எம்பெருமானுடைய திவ்விய மங்கள விக்கிரகத்தைப் பார்த்துக்கொண்டிருப்பார்கள்' என்றும், 'பரமபதத்தில் சேதனன், பேரறிவாளனை பரமாத்துமாவோடு அவன் கலியாண குணங்களையும் அநுபவிக்கிறுன்' என்றும் உபநிஷத்துச் சொல்லுகிறது. ஆனந்தமயமாகிய பரப்பிரமத்தைக் கிட்டி அநுபவிக்கும் போது, அவ்வநுபவம் அன்பை உண்டாக்கி அடிமையிலே மூட்டுவது போன்று, இனிமை நிறைந்த திவ்விய மங்கள விக்கிரகம் கலியாண குணங்கள் ஆகிய இவற்றைப்பற்றிய அநுபவங்களும், அங்ஙனமே அன்பை உண்டாக்கி அடிமையைத் தோற்றுவிக்கும். இஃதும் உபநிஷத்தின் கருத்தே யாகும்.

வி௵: இங்குக் குணங்கள் என்பன எவற்றைக் குறிக்கும்?

விடை: இங்குக் குணங்கள் எனப் பொதுவாகச் சொல்லுகின்றமையின், ஞானம் முதலிய குணங்களும், வாத்ஸல்லியம் முதலிய குணங்களும், சௌரியம் முதலிய மற்றக் குணங்களுமாகிய யாவும், முத்திகால அநுபவத்தில் விஷயப் பொருளாயிருக்கின்றமையின், இங்குக் கொள்ளத்தக்கன ஆகும். பரமான்மா ஒருவனுய் இருப்பினும், உபாயத்தன்மை உபேயத்தன்மை அவனுக்குள்ளன போன்று, அவனைச் சார்ந்த மேற்கூறிய மூன்று வகைப்பட்ட குணங்கட்கும் தனித்தனியே இரண்டிரண்டு நிலைகள் உள்ளன.

ஞானம் முதலிய குணங்கள்: இவை சேதனனுக்குப் பயனை உண்டுபண்ணுங்கால் உதவி புரிவன. அங்ஙனம் உதவி புரியும் தன்மை ஒரு நிலை. அக்காலத்தில் அநுபவத்திற்கு உரியனவாய் இருத்தல் மற்றொரு நிலை.

வாத்ஸல்லியம் முதலிய குணங்கள்: இவை சேதனன் பகவானைப் பற்றும் போது உபகாரங்களாயிருப்பன. அங்ஙனம் இருத்தல் ஒரு நிலை. ஞானம் முதலியவற்றிற்குச் சொன்ன பின் நிலையே இக்குணங்கட்கும் மற்றொரு நிலையாகும்,

சௌரியம் முதலிய குணங்கள் : இவை ஈசுவரனைப் பற்றி இருக்கிற சேதனரின் விரோதிகளைப் போக்கும் போது பயன் படுபவை. அங்ஙனம் பயன்பட்டிருத்தல் ஒரு நிலை. பின் நிலை மற்ற இரண்டையும் போன்றதே. இவ்விஷயங்களை இவர் பரந்த படியில் விளக்கியிருக்கிறார்.

அவதாரிகை : இனி இப்பதத்திற்கு நோக்கு இன்னதிலே என்கிறார் :

**மூலம் : 172. "சேஷித்வத்திலே நோக்கு."**

பொருள் : இதுகாறும், 'முத்திகாலாநுபவத்திற்கு இலக்காகும் பரமான்மா, திவ்விய மங்கள விக்கிரகம், குணங்கள் ஆகிய இவை நாராயணப் பதப்பொருள்' எனச் செப்பினார். அங்ஙனம் அனுபவத்திற்கு உரிய பொருளாயிருக்கும் தன்மை, பரமான்மா, திவ்விய மங்கள விக்கிரகம், குணங்கள் ஆகிய இவை எல்லாவற்றிற்கும் ஒக்கும். ஆயினும், 'ஆய' என்னும் விகுதியில் அடிமைத் தொழில் குறிக்கப்படுகின்றமையின், அதை ஏற்றுக்கொள்ளும் சேஷிப் பொருளான பரம புருஷனையே முக்கியமாய்ச் சொல்லுதல் இந்நாராயண பதத்திற்கு நோக்கென அறிதல் வேண்டும்.

அவதாரிகை : சேஷித்துவத்திலே நோக்கு எனச் செப்புதற்குப் பயன் பகருகிறார் :

**மூலம் : 173. "ப்ராப்த விஷயத்தில் கைங்கரியமிறே ரஸிப்பது?"**

பொருள் : வகுத்த பகவத் விஷயத்தில் செய்யும் தொண்டு சேதனனுக்கு இன்பந் தருவதாகும்.

விளக்கம் : வினா : பிறருக்கு வசப்பட்டிருத்தல் என்பது எல்லாவகையினும் துன்பந்தருவதென்றும், சுயேச்சையாய் இருப்பது எல்லாவகையினும் இன்பந்தருவதென்றும், பிறரை அடுத்து வாழ்தல் நாயின் தொழிலுக்கு ஒப்பானதென்றும் அனுபவத்தில் அறிகின்றோம். இதை மனு முதலானவரும் கூறியிருக்கின்றனர். அங்ஙனமிருக்க, கைங்கரியம் இன்பந்தரும் என்பது எப்படி?

விடை : ஓர் உத்தம மகனுக்கு, பெற்றோருக்குப் பணிசெய்தல் இன்பமாய் இருத்தல் போன்று, இவனுக்கும் பகவத் கைங்கரியம் இன்பமாகவே இருக்கும். 'ஒரு பிராணியை அதன் நிழல் எங்ஙனம் தொடர்ந்தே செல்லுகிறதோ, அங்ஙனமே சேதனன்

ஈசுவரனைத் தொடர்ந்தே இருக்கக் கடவன்' என்றும், 'அதிகக் குளிர்ச்சியையோ, அதிக வெப்பத்தையோ உண்டுபண்ணுவதும், ரௌரவாதி நரகங்களாகிற நெருப்பை அணைக்கக் கூடியதுமான வாசுதேவனுகிற கற்பகத் தருவின் நிழலைக் கிட்டிப் பற்ற வேண்டும்' என்றும் சாத்திரங்கள் சொல்லுகின்றன. இவ்விஷயம் திருமந்திரம் 52-ஆம் சூத்திரத்தில் விரிவாய்க் கூறப்பட்டுள்ளது.

அவதாரிகை: இனி, இப்பதத்தில் உள்ள வேற்றுமைக்குப் பொருள் சொல்லுகிறுர்:

**மூலம்: 174. "இந்த சதுர்த்தி, கைங்கர்யத்தை ப்ரகாசிப்பிக்கிறது."**

பொருள்: நாராயணுய என்பதில் உள்ள ஆய என்னும் நான்காம் வேற்றுமை, பகவானுடைய முக மலர்த்தியை உண்டு பண்ணுவதாகிய செயலை ஒளிரச் செய்கிறது.

விளக்கம்: வினு: நான்காம் வேற்றுமைக்குச் சேஷத்துவம் பொருளென்று வடமொழி இலக்கணம் கூறுநிற்க, இங்கு அடிமைத் தொழிலை ஒளிரச் செய்கிறது எனப் பொருள் சொல்வது எப்படி?

விடை: திருமந்திரம், துவயம் ஆகிய இம்மந்திரங்களின் அடைவை நாம் உற்று நோக்கும் போது, இவ்வேற்றுமை அடிமைத் தொழிலை ஒளிரச் செய்கிறது என்பதே பொருத்தமாகும். திருமந்திரத்தால் சேஷத்துவஞானம் மட்டும் ஏற்படுகிறது. இந்த ஞானத்தை ஊன்றி நோக்குங்கால், இது பலேச்சையாய்த்[1] தேறி நிற்கும். எங்ஙனமென்னில், பரமபுருஷனுக்குச் சிறப்பை உண்டாக்கும் பொருளாய் இருக்கையே சேஷத்துவமாகும். இச்சிறப்பு, சேதனன் அவனுக்கு அடிமைத் தொழிலைச் செய்யும் போது தான் ஏற்படும். அங்ஙனம் செய்யாத போது ஏற்படுதல் இல்லை. இம்முறையில், இதை நுணுகி நோக்கின், சேஷத்துவஞானம் அடிமைத் தொழிலைப் பற்றிய அறிவாய்த் தேறி நிற்கும். நமது மதத்தில், இச்சையை ஞான விசேஷமாகவே கொள்ளுகின்றமையின், அவ்வறிவு மேற்கூறிய பலேச்சையாகவே முடியும். ஒருவன் ஒரு பலத்தை விரும்பின், அவன் அதற்கேற்ற வழியில் நுழைதல் உலகானுபவம். அங்ஙனமே திருமந்திரத்தால் மேற்கூறியவாறு

1. பலேச்சை—பலத்தில் விருப்பம்.

பலேச்சை ஏற்படுகின்றமையின், அப்பயனை அடைய, பகவானுடைய சரண கமலங்களையே இவன் சாதனமாகப் பற்றவேண்டியவனுயிருக்கிருன். அவ்வாறு பற்றுகையையே துவயத்தின் முன் வாக்கியம் கூறுகின்றது.

இங்குக் கைங்கரியத்தை ஒளிரச் செய்கிறதென்பதற்குக் கைங்கரியப் பிரார்த்தனையை ஒளிரச் செய்கிறது என்பதுதான் பொருள். இவ்விஷயம் பட்டர் முதலிய பெரியோர்கள் ஸ்ரீசூக்தியினுல் புலனுகும்.

இங்ஙனம் சேதனன் பகவானுக்குச் செய்யும் அடிமைத் தொழில், வாசிகம் காயிகம் என இரு வகைப்படும். அவற்றுள் வாசிகமாவது, பரமபுருஷனை அனுபவிக்கும் போது வாயினுல் சாமகானத்தைச் செய்தல், நமஃ என்னும் சொல்லைச் சொல்லுதல் முதலியனவாகும். காயிகமாவது, இலக்குமணனைப் போன்று உடனிருந்து உடலினுல் அடிமைத் தொழிலைப் புரிதலாகும்.

இவைகள் மட்டுமே அல்லாமல், பரமபுருஷனுக்கு எல்லாச் செல்வங்களும் மேன்மேலும் உண்டாக வேண்டுமென்று மனத்தால் பாரிக்கிற பாரிப்பை, மாநசமான கைங்கரியம் எனப் பெரியோர் கூறுவர்.

அவதாரிகை: 'இக்கைங்கரியம் இங்ஙனம் வேண்டிப் பெறுவதாயின், ஒரு காலத்தில் உள்ளதெனத் தோன்றுகிறதன்றே?' என்ன, இயம்புகிருர்:

மூலம்: 175. "கைங்கர்யந்தான் நித்யம்."

பொருள்: சேஷத்துவமே ஆன்மாவிற்குச் சொரூபமாதலினுலும், தொண்டு செய்யாத போது அந்தச் சேஷத்துவம் கைகூடாதாதலினுலும், தொண்டு ஆன்மாவிற்கு ஒரு காலத்திலன்றி என்றும் உள்ளதெனக் கொள்க.

விளக்கம்: அகவிதழின்றேல் எங்ஙனம் மலரின்றே, அங்ஙனமே சேஷத்துவம் இல்லாத போது ஆன்மா இல்லை. அந்தச் சேஷத்துவம் தொண்டில்லாத போது சித்தியாது. ஆதலினுற்றான், ஆசாரியர்கள், "உனக்கு என்றும் தொண்டனுய் இருந்து உன்னை மகிழ்விக்கிறேன்," என்றும், "உனக்கு என்றும் கைங்கரியம் புரிபவனுகக் கடவேன்," என்றும் அருளிச்செய்துள்ளார்கள். இவற்றை நோக்குதல் வேண்டும்.

அவதாரிகை : 'கைங்கரியம் என்றுமுள்ள ஒன்ருனல், இதை வேண்டிப் பெற வேண்டுமோ ?' என்ன, இயம்புகிருர் :

மூலம். 176. "நித்யமாக ப்ரார்த்தித்தே பெற வேணும்."

பொருள் : அடிமைத்தொழிலை ஏற்றுக்கொள்ளுகிற ஈசுவரன் யாவரினும் மேலானவனுதலினுலும், செய்பவனுன சேதனன் அத்தியந்த பரதந்திரனுதலினுலும், வேண்டிப் பெருத போது கைங்கரியம் கைகூடுதல் அருமை ஆதலினுலும் சேதனன் இதை இடையீடின்றி வேண்டியே பெற வேண்டும் எனக் கொள்க.

விளக்கம் : வேண்டுதல் என்பது, "அடிமையாகிய என்னைத் தலைவராகிய தேவரீர், உம்முடைய உவப்பிற்கு உறுப்பாகப் பயன் படுத்திக்கொண்டு அடியேன் உளனுமாறு அருள் புரிய வேண்டும்," என்பதாகும்.

அவதாரிகை : இக்கைங்கரியம் நாடோறும் வேண்டிப் பெறுவதற்குக் காரணத்தைப் பகருகிருர் :

மூலம் : 177. "சேஷிக்கு அதிசயத்தை விளைக்கை சேஷபூதனுக்கு ஸ்வரூபலாபமும், ப்ராப்யமும்."

பொருள் : எம்பெருமானுக்குச் சிறப்பை உண்டாக்குகை, சேதனனுக்குச் சொரூபலாபமாயும், ஈசுவரனுடைய முகோல்லாசானுபவமாகிற பலனும் அமையும்.

விளக்கம் : ஈசுவரனுக்கு, தன் அடிமைத் தொழிலினடியாய்ப் பிரீதியாகிற சிறப்பை உண்டாக்குகையால், இவன் சேஷத்துவம் பெற்றவன் ஆகின்றமையின், அங்ஙனம் பிரீதியை உண்டாக்குகையே சொரூப லாபமாகக் கூறுகிருர். மேற்கூறியவாறு பிரீதியாகிற சிறப்பை உண்டாக்குகை, ஈசுவரனுடைய முகோல்லாசானுபவத்திற்கு ஏதுவாய் இருக்கின்றமையின், அதைப் பிராப்பியமாகவும் செப்பத்தட்டில்லை.

இங்ஙனம் சொரூப லாபமாயும், பிராப்பியமாயும் இருத்தலின், இதை என்றும் விரும்பிப் பெற வேண்டுவது இன்றியமையாததாயிற்று.

தொகுப்புரை : 170-ஆம் சூத்திரத்திலிருந்து 177-ஆம் சூத்திரம் வரையும் இயம்பியவற்ருல், நாராயணுய என்பதற்கு இன்னது பொருள் என்பதும்; இப்பதம் எம்பெருமானுடைய

திவ்விய மங்கள விக்கிரகத்தையும், குணங்களையும் சொல்லுகிற தென்பதும்; இப்பதத்திற்குச் சேஷித்துவத்திலேயே நோக்கு என் பதும்; இங்ஙனம் சேஷித்துவத்தைச் சொல்லுதற்குப் பயன் இன்னது என்பதும்; இதில் உள்ள சதுர்த்தி கைங்கரியத்தைப் பிரகாசிப்பிக்கிறதென்பதும்; இத்தொண்டு ஆன்மாவிற்கு என்றும் உள்ளதென்பதும்; இக்கைங்கரியத்தைச் சேதனன் பிரார்த்தித்தே பெற வேண்டுமென்பதும்; பகவானுக்குச் சிறப்பை உண்டாக்கு வதே சேஷபூதனுக்குச் சொரூபலாபமும் பலனும் என்பதும் சொல்லப்பட்டன.

அவதாரிகை: பின்பு இறுதிப் பதத்தை எடுத்துப் பொருள் சொல்லுகிறார்:

**மூலம். 178. "நமஃ—கைங்கர்யத்தில் களையறுக்கிறது."**

பொருள்: இந்த 'நமஃ' அடிமைத் தொழிலுக்கு ஏற்படும் விரோதியைப் போக்குகிறது.

விளக்கம்: வினா: திருமந்திரத்தில் உள்ள 'நமஃ' பதம், சொரூபம், உபாயம், பயன் ஆகியவற்றின் விரோதிகளைக் கழிக் கிறது எனக் கூறினீர். அங்ஙனமிருக்க, இங்கு அவற்றுள் பல விரோதியை மட்டும் போக்குகிறது என்பதற்குக் கருத்தென்னை?

விடை: 'நமஃ' என்னும் இப்பதம், பொதுவாய் அகங்கார மமகாரங்களைப் போக்குகையாலே, திருமந்திரத்தின் நடுவிலுள்ள நமச்சத்தம் போன்று, இதுவும் சொரூப உபாய புருஷார்த்தங் களின் விரோதிகள் மூன்றையும் கழிப்பதாய் இருப்பினும், இங்குக் கைங்கரியப் பிரார்த்தனைக்குப் பின்பு சொல்லப்படுவதால், இந்த 'நமஃ' பதம் கைங்கரியத்தில் உண்டாகும் குற்றத்தை (களையை) ஒழித்தலைக் காட்டுகிறதெனச் சொல்வதுதானே பொருத்தமுடைய தாகும்?

அவதாரிகை: 'கைங்கரியத்திற்குக் களை எது?' என்ன, பகரு கிறார்:

**மூலம்: 179. "களையாவது—தனக்கென்னப் பண்ணுமது."**

பொருள்: களையாவது, சேதனன் தன் இன்பத்திற்கெனப் பண்ணும் கைங்கரியமாகும்.

விளக்கம் : சேதனர், "அடியோம் செய்யும் இக்கைங்கரியம் எம்பெருமானுக்கே முகோல்லாசத்தை உண்டாக்குகிறது. ஆதலின், அவன் இன்பத்திற்குக் காரணமாகிய இதைச் செய்ய வேண்டுவது நம் கடமை," எனக் கருதாது, "நாம் அநுபவிப்பவர், இஃது நம்முடைய அநுபவம்," என நினைத்துச் செய்யின், அந்நினைப்பே குற்றமாகும். ஆதலின், அந்நினைப்பைத் துடைப்பதே இந்நமப் பதத்தின் இவ்விடத்திய செயலாகும்.

அவதாரிகை : இன்னமும், கைங்கரியத்தைச் செய்வதற்குப் பகைகளாய் உள்ளவைகளும் இதிலே நீங்கும் என்கிறார் :

**மூலம் : 180. "இதிலே அவித்யாதிகளுங் கழியுண்ணும்."**

பொருள் : அகங்கார மமகாரங்கள் ஒழிய வேண்டுமெனப் பிரார்த்திக்கும் இந்நமசிலே, 'தேகத்தையே ஆன்மா' என நினைக்கும் அஞ்ஞானமும், அதனடியாய் உண்டாகும் கன்மங்களும், அவற்றால் ஏற்படும் தேகத்தொடர்பும் ஒழியும்.

விளக்கம் : வினா : அஞ்ஞானம் முதலிய குற்றங்களை இந்நமப்பதம் நீக்கும் என்பதற்கு ஆதாரம் உண்டா?

விடை : உண்டு. எம்பெருமானார் பங்குனி உத்திரத் திருநாளில் அழகிய மணவாளனைச் சரணம் பற்றி, விரோதி நிவிருத்திகளைப் பிரார்த்திக்கும்போது, இந்நமப் பதத்திற்குப் பொருளாகவே மூன்று சூர்ணிகைகளில், (இந்தச் சூத்திரத்தின் பொருளில் செப்பிய) மூன்று குற்றங்களும் நீங்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறார். அஃதே இதற்குத் தக்க ஆதாரமாகும்.

அவதாரிகை : இந்நமப்பதம், ஈசுவரனை அடையவொட்டாமல் செய்யும் தடைகள் யாவற்றையும் போக்குவதாயிருப்பினும், இதற்கு முக்கியமான பொருள், தனக்கென்னப் பண்ணுமதை நீக்குவதேயாகும். ஆதலால், இதைப் பின் சூத்திரங்களில் விளக்கமாகச் சொல்லுகிறார். அவற்றுள் முதலில், இக்கைங்கரியம் பண்ணும் போது, இன்ன நினைப்போடு இருத்தல் வேண்டும் என்பதை இதில் அருளிச்செய்கிறார் :

**மூலம் : 181. "'உனக்கே நாமாட்செய்வோம்' என்னும்படியே ஆக வேணும்."**

பொருள்: ஆண்டாள், 'நாங்கள் செய்யும் தொண்டு எங்களுக்கும் உனக்கும் இன்பந் தருவதாய் இராமல், உனக்கே இன்பந் தருவதாயிருத்தல் வேண்டும்.' எனக் அருளியபடியே, சேதனன் எம்பெருமானுக்குத் தொண்டு செய்யுங்கால், 'இஃது அவனுக்கே உவப்பை அளிக்க வேண்டும்,' என்னும் எண்ணத்துடன் செய்வதே சிறந்ததாகும். இஃதே இவன் சொரூபத்திற்கு ஏற்றதாயுள்ளது.

விளக்கம்: இக்கருத்தைத்தான் ஆழ்வார், "பிறர்க்குமன்றியே, எனக்குமன்றியே, எனக்கும் தனக்குங்கூடவுமன்றியே, தனக்கே பரதந்தரனும்படி என்னை அங்கீகரிக்கும் இதுவே, யான் கண்ணனை விரும்பிப் பெறும் பயன்." எனத் தெரிவிக்கிறார். இக் கருத்தைப் பின் அடிகளில் காண்க:

"தனக்கே யாக எனைக்கொள்ளு மீதே
எனக்கே கண்ணனை யான்கொள் சிறப்பே."[1]

அவதாரிகை: இனி, இக்கைங்கரியத்திற்கு ஏற்படும் இடையூறுகளை அருளிச்செய்கிறார்:

**மூலம்: 182. "ஸௌந்தர்யம் அந்தராயம்; கீழ்ச் சொன்ன கைங்கர்யமும் அப்படியே."**

பொருள்: இறைவனுடைய திருமேனியின் அழகே இவன் மனத்தைக் கவர்ந்து, கைங்கரியத்தினின்றும் இவனைக் கை வாங்குமாறு செய்து அதற்குத் தடையை உண்டாக்குகிறது. அங்ஙனமே, முன் (ஆய என்னும் வேற்றுமையில்) கூறிய அடிமைத் தொழிலும், அவன் முகமலர்ச்சிக் குறுப்பாகப் புரியும் அடிமைத் தொழிற்குத் தடையாய் விடும்.

விளக்கம்: வினா: யாங்ஙனம்?

விடை: சேதனன், எம்பெருமானின் திவ்விய மங்கள விக்கிரகத்தின் அழகில் ஈடுபடுவனேல், அவன் மனம் பறியுண்டு, கைங்கரியத்தைச் செய்யவொட்டாமல் பரவசனாகுமாறு செய்து விடுகிறது.

இங்குச் சக்கரவர்த்தித் திருமகனுடன் தானும் கானகத்திற்குச் செல்லத் தீர்மானித்த இலக்குமணனைப் பார்த்து, அவனுடைய அன்னை சுமித்திரை செப்பிய அறிவுரைகளை நோக்குதல் வேண்டும்:

---

1. திருவாய்மொழி—2. 9. 4.

"என்னருமை மகனே, நீ இராமபிரானுடன் கானகத்திற்குச் செல்ல உறுதி கொண்டதை அறிந்து பெரிதும் மகிழ்கின்றேன். ஆனல், அங்ஙனம் நீ செல்வது தம்பி என்னும் முறையில் நிற்பதற் கன்று. அவனுக்கு அடிமையாயிருந்து, அவன் ஏவிய தொழிலைச் செய்வதற்கேயாகும். அக்காலத்தில் நீ அவனுடைய உடலழகி லும், நடையழகிலும், குணவழகிலும் ஈடுபடுவையேல், அவை உன் மனத்தைக் கவர்ந்து, நீ செய்யும் அடிமைத் தொழிலிற்குத் தடையை ஏற்படுத்திவிடும். அஃது உன் சொரூபத்திற்கு ஏற்ற தன்று. அதனல், உன் ஆன்மாவிற்கு ஆபத்தை விளைவித்துக் கொள்ளாதே. அன்றியும், இப்பதினன்கு ஆண்டுகளும் கடந்து அவன் நகர்க்குத் திரும்புவனேல் அவனேடு நீயும் வா. அங்ஙனமல் லாமற் போயின், அவனுக்கு முன்னமே நீ உயிரைத் துறந்துவிடு. இஃதே உன் கடமையாகும்," எனச் சுமித்திரை, தன் கண்களில் நீர் சோர மிக்க கனிவுடன் கூறினள்.

'பின்னும் பகர்வாள் மகனே! யிவன்பின்செல் தம்பி
என்னும் படியன் றடியாரி னேவல் செய்தி;
மன்னு நகர்க்கே வந்திடின் வா; அ தன்றேல்
முன்னம் முடிஎன் றனள்வார் விழிசோர நின்ருள்.'

என்னும் கம்பர் வாக்கை நோக்குக. இன்னும் இந்நமசுக்கு முன் வேற்றுமையில் சொன்ன அடிமைத் தொழிலும், தான் உகந்த இடத்தில் செய்யும் தொண்டு போன்று, தன் இன்பத்திற்குடலாய் இருத்தலின், அவன் முகோல்லாசத்தையே பயனுகக் கொண்டிருக் கும் தனக்கு அதுவும் தடையாகும்.

அவதாரிகை: முற்கூறியவைகள், பகவான் முகோல்லாசத் தின்பொருட்டுச் செய்யும் கைங்கரியத்திற்கு விரோதிகளாதலால், அவை நீங்குதற்குப் பிரார்த்தனை இடைவிடாமல் நடைபெற வேண்டுமெனப் பகருகிருர்:

**மூலம்: 183. "கைங்கர்ய ப்ரார்த்தனை போலே இப் பதத்தில் ப்ரார்த்தனையும் என்றுமுண்டு."**

போருள்: சதுர்த்தியில் கூறிய கைங்கரியப் பிரார்த்தனை எப் போதேனும் ஒருகால் அன்றி, இடைவிடாமல் நடை பெறுதல் போன்றே, இந்நமப்பதத்தில் இயம்பும் 'கைங்கரிய விரோதியைப் போக்க வேண்டும்,' என்னும் பிரார்த்தனையும் இவ்வுலகில் வாழும்

காலத்திலும், பரமபதம் சென்ற காலத்திலும் யாதொரு வேறுபாடு மின்றி எப்போதும் நடைபெறக் கடவதாய் இருக்கும்.

அவதாரிகை: பிரகிருதி சம்பந்தமற்ற பரம பதத்திலும், "நான் அனுபவிப்பவன் என்னும் எண்ணம் உண்டாகுமோ?" என்ன, செப்புகிருர்:

மூலம்: 181. "'மருந்தே நங்கள் போக மகிழ்ச்சிக்கு' என்ணுநின்றதிறே."

பொருள்: "உன்னை அநுபவிக்குங்கால், எங்களுக்கு உண்டாகும் ஆனந்தத்திற்கு நாங்கள் அநுபவிப்பவர்கள் என்னும் எண்ணம் உண்டாகி, எங்கள் சொரூபம் அழியாதவாறு எங்களைக் காக்கும் மருந்தானவனே," என்று நித்தியசூரிகள் பேசும் பாசுரமாய் ஆழ்வார் அருளிச்செய்ததை நோக்குக.

விளக்கம்: இங்ஙனம் பகவானுடைய அழகு முதலியவற்ருல் ஏற்படும் இன்பத்திற்கு இடந்தந்து நிற்றல் அப்பரமபதத்திலும் உண்டாதலால், இப்பதத்தில் குறிக்கும் பிரார்த்தனை எங்கும் என்றும் உண்டு என்பது தெளிவாகும். நித்தியசூரிகளுக்கு அஞ்ஞானத்தின் காரணமாய் இவ்வெண்ணம் உண்டாகாவிடினும், ஈசுவரனுடைய சௌந்தரியத்தின் பெருக்கினுல் அவர்களுக்கும் இவ்வெண்ணம் ஏற்படுகிறது. இங்ஙனம் இச்செய்கை பரம பதத்திலும் நடைபெறுகின்றமையின், இந்நமப்பதத்தில் சொல்லும் பிரார்த்தனை நித்திய சூரிகளுக்கும் இடைவிடாது நடைபெறும் என்பதில் ஐயமில்லை. இதனுலன்ரே முத்தரும் 'நமஃ' என்று எப்போதும் சொல்லிக்கொண்டிப்பர் என அறிகின்ருேம். இம்முறையில் அவ்விருவர் சேர்த்தியில் புரியும் கைங்கரியத்தையும், கைங்கரிய விரோதி நிவிருத்தியையும் சொல்லி இப்பகுதி முடிக்கப்பட்டது.

தொகுப்புரை: 178-ஆம் சூத்திரத்திலிருந்து 184-ஆம் சூத்திரம் வரையும் கூறியவற்ருல், 'நமஃ' என்பது கைங்கரியத்திலுள்ள குற்றங்களைப் போக்குகிறதென்றும்; அக்குற்றங்கள் இன்னவை என்றும்; அவற்றுள் ஆண்டாள் பாசுரத்தின்படி தனக்கென்ன பண்ணுமது தலைமையான குற்றமென்றும்; இக்கைங்கரியத்திற்கு ஈசுவரனுடைய அழகும், தன்னலத்தைக் கருதிச் செய்யும் கைங்கரியமும் தடையை உண்டாக்கக் கூடுமென்றும்; அதற்கு இடந்

1. திருவாய்மொழி—9, 3, 4.

தாராமல், கைங்கரியப் பிரார்த்தனை போலத் தடையைப் போக்க வேண்டுமென்னும் இப்பிரார்த்தனையும் என்றும் இடையறுமல் நடைபெற வேண்டுமென்றும்; இதற்கு ஆழ்வாருடைய "மருந் தேநங்கள்" என்னும் பாசுரமே தக்க சான்று என்றும் தெரிந்து கொண்டோம்.

ஆக, இத்துவயத்தில், புருஷகாரத்தையும், அப்பிராட்டியாரின் நித்தியமான சேர்க்கையையும், அச்சேர்க்கையினுல் மிளிரும் பகவானுடைய வாத்ஸல்யம் முதலிய குணங்களையும், அக்குணங்களை ஒளிரச் செய்யும் திவ்விய மங்கள விக்கிரகத்தையும், இவற்றை உடைய ஈசுவரனது உபாயத்தன்மையையும், இதனுடைய ஸ்வீகாரத்தையும், இதன் பலமான கைங்கரியத்தை ஏற்றுக் கொள்ளும் பொருள் ஒரு மிதுனம் என்பதையும், அப்பொருளினுடைய சர்வ சேஷித்துவத்தையும், அதனுடைய சிறப்பையும், கைங்கரியத்திற்குப் பகையாயுள்ளனவற்றின் நீக்கத்தையும் விளக்கமாக அறிந்தனம்.

துவயத்தின் பொருள் முற்றுப் பெற்றது.





ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## சரமசுலோகம்.

தோற்றுவாய்: ஸ்ரீ பிள்ளை லோகாசாரியர் முன்பு இயற்றிய மூன்று நூல்களைப் போலல்லாமல், முமுக்ஷுப்படி என்னும் இந்நூலில் திருமந்திரத்திற்கு அடுத்தபடியாய்த் துவயத்தையும், அதற்கு அடுத்தபடியாய்ச் சரமசுலோகத்தையும் வைத்துள்ளனர். அங்ஙனம் அமைத்ததற்குக் காரணம் இன்னதென்பதைத் துவயப் பகுதியின் தோற்றுவாயில் கூறியுள்ளோம். அத்துவயத்திற்கும் இச்சரமசுலோகத்திற்கும் உள்ள தொடர்பைப் பின்வரும் வாக்கியங்களில் தெளிவாகக் காணலாம்.

துவயத்தின் முன் வாக்கியம், 'எம்பெருமானை உபாயமாகப் பற்றுகிறேன்,' என்பதைச் சொல்லுகிறது. இதைத்தான் இச்சரமசுலோகத்தின் முன் வாக்கியம் விதி முகத்தான் விளக்குகிறது. இங்ஙனம் கட்டளை இடும் போது, பல தருமங்களை உபதேசித்து அவற்றை நிலை நிறுத்துபவனான, பகவானே, மற்றத் தருமங்களை விட்டுத் தன்னையே பற்று என்கையாலே, இஃது அவனுக்கு மிகவும் உகந்த தருமமென்பது புலப்படுகிறது. இவ்வாறு அவனைப் பற்றும் போது மற்றத் தருமங்களை விட்டே பற்ற வேண்டியிருத்தலின், அவற்றின் விடுகையையும், தான் எம்பெருமானைப் பற்றும் பற்றும் தன் பேற்றிற்கு உபாயமன்று, அவனே உபாயம் என்னும் அவன் உபாயத்தன்மையையும் இவ்வாக்கியம் தெளிவாகத் தெரிவிக்கின்றதை நாம் காணலாம்.

இத்துவயத்தின் பின் வாக்கியம், "பெரிய பிராட்டியாரும் எம்பெருமானுமாகிற சேர்த்தியில் எல்லா அடிமைகளும் செய்யப் பெறுவேனாக," என்பதைப் பகருகின்றது. இத்தொண்டு எம்பெருமானை அடைய ஒட்டாமல் தடை செய்யும் பாவங்கள் கழிந்த காலத்திலேயே ஏற்படும். அப்பாவங்களின் கழிவைச் சரமசுலோகத்தின் பின் வாக்கியம் தெளிவாகக் கூறுகின்றது. இம்முறைகளினால், துவயத்திற்குச் சரமசுலோகம் தொடர்புற்றது என்பது தேற நிற்கும். இது நிற்க.

பாரதத்தை ஐந்தாவது வேதமெனப் புகழ்ந்து பேசுவர். இது கடல் போன்று பரந்துள்ளது. இதைச் சார்ந்த கீதா சாத்திரம் உபநிஷத்தாகும். இதில் சரமசுலோகம், 'இதைக் காட்டிலும், மேற்பட்டதொன்றில்லை,' என்று புகழப்படுகிற பிரபத்தி தருமத்தைத் தெரிவிக்கின்றது. இங்ஙனம் சிறப்பு வாய்ந்த இந்தச் சுலோகத்தின் கருத்தை லோகாசாரியர், பரம கிருபையினால் விரிவாகவும் தெளிவாகவும் அருளிச்செய்கிறார்.

இச்சரமசுலோகத்தின் பொருளை அறிதற்பொருட்டே எதிராசர் திருக்கோட்டியூர்நம்பி பக்கல் பதினெண்முறை நடந்து இறுதியில் இதைப் பெற்றுப் பிறருக்கு உபதேசித்து மகிழ்ந்தார்.

வினா: மந்திரத்தின் பொருளை அறிய மிக்க விருப்பங்கொண்டவரையும், நம் பூருவாசிரியராகிய நம்பி, இங்ஙனம் பன்முறையும் அலக்கழித்ததற்குக் காரணம் என்னை?

விடை: ரஜஸ் தமஸ்கள் கலவாமல் சத்துவ குணமுடையனாய், பரமான்மாவினிடத்தில் அன்புடையனாய், வெளி விஷயங்களில் விருப்பற்றவனாய், வேதம் முதலிய சாத்திரங்களுக்கு வசப்பட்டவனாய், 'எல்லாத் தருமங்களையும் விட்டுத் தன்னையே உபாயமாய்ப் பற்றிய அதிகாரியை, எல்லாப் பாவங்களினின்றும் விடுவித்துத் தன்னைக் கிட்டுமாறு செய்யும் பரம புருஷனுடைய பெருமை கேட்கப்பட்டால், அது சிறந்த சத்தியுடைய பகவானுக்குத் தகும்,' என்னும் மிகுதியான நம்பிக்கையுடையனாய், ஆத்திகனாய் இருப்பான் ஒருவனே, இந்தச் சுலோகத்தின் அர்த்தத்தைக் கேட்பதற்கு அதிகாரியாவான். இத்தகைய அதிகாரி கிடைத்தல் அருமையாதலினாலும், இதன் பொருளின் சீர்மையினாலும் இதை வெளியிடாமல் பூருவாசாரியர்கள் மறைத்து வந்தார்கள். அவர்களையே பின் பற்றிய நம்பியும் அங்ஙனமே செய்து போந்தனர்.

கிருபையே கரை புரண்டோடுகிற இராமானுசருக்கோ, சமுசாரிகளின் துன்ப நிலையைக் கண்டு வாளா இருக்க முடியவில்லை. ஆதலின், அவர் மந்திரத்தின் அர்த்தச் சிறப்பை நோக்காது, மக்களின் அனர்த்தத்தையே பெரிதெனக் கருதி, தம் பரம கருணையால், அதைப் பலருக்கும் உபதேசித்தருளினார். ஈதன்றோ பரந்த உள்ளத்தின் பண்பு!

இங்ஙனம் இராமானுசர் வெளியிட்ட இம்மந்திரத்தின் பொருளை, 'எல்லாரும் அறிந்து உய்ய வேண்டும்,' என்னும் கிருபை

யினலேயே ஸ்ரீ பிள்ளை லோகாசாரியர், இதைப் பிறருக்கு உபதே சித்தது மட்டுமேயல்லாமல், கிரந்த மூலமாகவும் வெளியிடத் திருவுளம் பற்றிச் சில பிரபந்தங்களில் சுருக்கமாகவும், சில பிரபந் தங்களில் விரிவாகவும் அருளிச்செய்தனர். இவற்றுள் இம் முமுக்ஷுப்படியும் ஒன்று. இதை, குறைந்த அறிவுடையவரும், இளைஞரும் அறியும் முறையில் மிக எளிய நடையில் வெளியிட்டுப் போந்தனர்.

அவதாரிகை: இச்சரமசுலோகப் பகுதியின் முதலில், இத னுடைய சீர்மை யாவருடைய மனத்திலும் பதிதற்பொருட்டு, இதற்குச் சரமசுலோகம் என்று பேரமைந்ததற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார்:

**மூலம்: 185.** "கீழே சில உபாயவிசேஷங்களை உப தேசிக்க, அவை துச்சகங்களென்றும், ஸ்வரூப விரோதிகள் என்றும் நினைத்து சோகாவிஷ்டனான அர்ஜ்ஜுநனைக்குறித்து அவனுடைய சோக நிவ் ருத்யர்த்தமாக 'இனி இதுக்கு அவ்வருகில்லை' என்ன லாம்படியான சரமோபாயத்தை அருளிச்செய்கை யாலே, சரமச்லோகமென்று இதுக்குப் பேராயிருக் கிறது."

பொருள்: கண்ணன் அருச்சுனனுக்கு, இந்தச் சரமசுலோ கத்திற்கு முன் பல அத்தியாயங்களில், தன்னை அடைதற்கு வழி களாய் உள்ள கன்ம ஞான பத்திகளாகிற உபாயங்களை விரிவாய் உபதேசித்தான். இவற்றைச் செவியேற்ற அர்ச்சுனன், "இவை கள் உடலை மெலியச் செய்யுமாதலாலும், இந்திரியங்களை அடக்குதல் அரிதாதலாலும், வெகு காலம் இவற்றை உபாயமாகக் கடை பிடிக்க வேண்டி இருத்தலாலும் இவற்றை நாம் மேற்கொள்ளு தல் அரிது என்றும், அத்தியந்த பாரதந்திரியமாகிற சொரூபத்திற்கு நம் முயற்சியினல் செய்யும் இவைகள் விரோதிகள் என்றும், இவற்றால் நாம் இறைவனை அடைய முடியாதென்றும், இனி நாம் பகவானை இழக்க வேண்டியதே என்றும்" கருதி, துயரக் கடலில் ஆழ்ந்தான். ஆதலின், கண்ணன் அவனுடைய கலக்கத்தைப் போக்குதற்பொருட்டு, சேதனன், எளிமையாக முடிக்கக் கூடிய தும், சொரூபத்திற்கு ஏற்றதும், இனி இதற்கு மேற்பட்ட

உபாயம் மற்றொன்றுமில்லை என்னும்படியானதுமான பிரபத்தி மார்க்கத்தை இவனுக்குப் போதிப்பானானான். இஃது இறுதி உபாய மாயிருத்தலின், இதைத் தெரிவிக்கும் இச்சுலோகத்திற்குச் சரம சுலோகம் என்பது பெயராயிற்று.

விளக்கம் : வினா : நம் சித்தாந்தத்தில் ஆசாரியாபிமானமே இறுதி உபாயம் எனச் செப்பியிருக்க, நீங்கள் இந்த இரகசியத்தில் சொல்லப்படுகிற பிரபத்தியை இறுதி உபாயம் எனக் கூறுவது எவ்வாறு பொருந்தும்?

விடை : ஆசாரியாபிமானமும் இந்தச் சுலோகத்தில் சொல் லப்பட்ட பிரபத்தி உபாயத்தில் சேர்ந்ததாயிருக்கின்றமையின், இங்ஙனம் சொல்லத் தடையில்லை.

வினா : அஃதெங்ஙனம்?

விடை : ஒரு செல்வன் மற்றொருவனை அபிமானிக்கிறான். அவனுடைய செல்வம் இவனிடம் அணுகி இவனுக்கு இன்பத்தை உண்டாக்குகிறது. இவனுடைய இன்பத்திற்குக் காரணம் செல்வ மாயிருப்பினும், அச்செல்வம் இவனிடம் வந்து சேருதற்கு அச் செல்வனுடைய அபிமானம் வேண்டியிருக்கிறதன்றோ? அதைப் போன்றே, பரம புருஷனுடைய தொடர்பு பெற்றவன் ஆசாரியன்; அவ்வாசாரியன் அபிமானிக்கும்படியான நிலையில் இவன் இருக்கும் போதுதான் அவன் மூலமாய்ப் பகவத் சம்பந்தம் இவனைக் கிட்டி இவனுக்கு நன்மையை உண்டுபண்ணுகிறது. செல்வத்தைப் போன்று இவனுக்கு நன்மையை விளைவிப்பது பகவத் சம்பந்தமே ஆகும். இம்முறையை உற்று நோக்குங்கால், ஆசாரியாபிமான மும் பகவத் சம்பந்தமாகவே முடிவடைந்து நன்மையை உண்டு பண்ணுகிறதெனத் தேறுகின்றமையின், அச்சம்பந்தத்தை இதற்கு மேற்பட்டதில்லை எனச் சொல்வதற்குக் குறையில்லை. இச்சம்பந் தமே சரமசுலோகத்தின் பொருளாகும்.

அவதாரிகை : இனி, இந்தச் சுலோகத்திற்கு வாக்கியப் பொருளைத் தெரிவிக்கிறார் :

**மூலம் : 186. “இதில், பூர்வார்த்தத்தாலே அதிகாரி க்ருத்யத்தை அருளிச்செய்கிறான் ; உத்தரார்த்தத் தாலே உபாயக்ருத்யத்தை அருளிச்செய்கிறான்.”**

பொருள் : இச்சூத்திரத்தின் முன் வாக்கியத்தால், பிரபத்தி உபாயத்திற்கு அதிகாரி (சேதனன்) செய்ய வேண்டுவன இன்னவை என்பதையும், பின் வாக்கியத்தால் உபாய பூதனை தான் (ஈசுவரன்) தன்னைப்பற்றிய சேதனனுக்குச் செய்ய வேண்டிய செயல்கள் இன்னவை என்பதையும் தெரிவிக்கின்றான்.

விளக்கம் : வினா: சேதனனுக்கு ஈசுவரனே உபாயமாயிருக்க, இவன் செய்ய வேண்டுவன யாவுள ?

விடை : எம்பெருமானை உபாயமாகப்பற்றும் அதிகாரி, 'ஆகிஞ்சன்னியமும் அநந்யகதித்துவமும் உடையவனாய் இருத்தல் வேண்டும்,' என்பதை லோகாசாரியர் துவயப் பிரகரணத்தில் அருளிச்செய்திருக்கிறார் அல்லவா ? இவை இரண்டனுள் எம்பெருமானைத் தவிர மற்ற உபாயங்களில் தொடர்பற்றிருக்கையே ஆகிஞ்சன்னியமாகும். இது மற்றத் தருமங்களை விட்ட போதே இவனுக்குக் கைகூடும். இதையே கீதாசாரியன் "ஸர்வதர்மாந் பரித்ஜ்ய" என்னும் பகுதியில் தருமங்களில் தொடர்பு கூடாது என்று தெரிவிக்கிறான். வேறு இரட்சகப்பொருள் அற்றிருக்கையே அநந்யகதித்துவமாகும். இஃது அவனையே உபாயப்பொருளாகப் பற்றாதவனுக்குக் கைகூடாது. இதன்பொருட்டு அவனையே உபாயமாகப் பற்ற வேண்டும். இவ்விஷயத்தை "மாமேகம் சரணம் வ்ரஜ" என்பதில் அவன் அறிவிக்கிறான். இஃதன்றியும், பகவானைப் பற்றும் இப்பற்றுதலைத் தன் பேற்றிற்கு உபாயமாகக் கொள்ளில், எம்பெருமானின் வேறுபட்டதாகிய இப்பற்றுதலில் (வேறு உபாயத்தில்) இவனுக்குத் தொடர்பு ஏற்படுகின்றமையின், ஆகிஞ்சன்னியம் நழுவி விடும். ஆதலின், இப்பற்றுதல் உபாயமன்று என்பதை ஏக சத்தத்தால் வெளியிடுகிறான். ஆக, இச்சேதனனுக்கு எம்பெருமான் உபாயப் பொருளாயிருப்பினும், ஆகிஞ்சன்னியம் அநந்யகதித்துவம் ஆகிய இவ்விரண்டும் கைகூடுதற்பொருட்டு, இவன் மற்ற உபாயங்களை விடுகையும், அவனையே உபாயமாகப் பற்றுகையும், அவனைப் பற்றும் பற்றுதலை உபாயமாக நினையாமையும் இவனுக்கு இன்றியமையாது வேண்டற்பாலனவாகும். இந்த ஆகிஞ்சன்னியமும் அநந்யகதித்துவமும் சித்திப்பதற்காக இவன் செய்ய வேண்டுவன இவைகளே. இவற்றையே முன் வாக்கியம் தெரிவிக்கிறது.

அவதாரிகை : 'அதிகாரியான சேதனனுடைய கார்யம் எது?' என்ன, பகருகிறார் :

**மூலம் : 187. "அதிகாரிக்கு க்ருத்யமாவது—உபாய பரிக்ரஹம்."**

பொருள் : அதிகாரியான சேதனன் இங்கு இன்றியமையாது செய்ய வேண்டுவது, பகவானாகிற உபாயத்தைத் தனக்கு உபாய மாகப் பற்றி இருத்தலே ஆகும்.

அவதாரிகை : அங்ஙனமாயின், எம்பெருமானை உபாயமாகப் பற்ற வேண்டும் என்பதை மட்டும் சொல்லாமல், மற்ற உபாயங் களை விடுதலைப் பற்றியும் விளம்புதல் ஏன்? என்ன, புகலுகிறார் :

**மூலம் : 188. "அத்தை ஸாங்கமாக விதிக்கிறான்."**

பொருள் : ஈசுவரன், தன்னை உபாயமாகப் பற்றுதல் என் பதை, மற்ற உபாயங்களை விடுதலாகிற அங்கத்தோடு சேர்த்தே விதிக்கிறான்.

விளக்கம் : வினா : கீதா சாத்திரத்தில் இந்தச் சரமசுலோ கத்திற்கு முன், பல சுலோகங்களால் கன்ம ஞான பத்திகளைச் செய்ய வேண்டுமென்று கட்டளை இட்ட பகவான், இங்கு அவற்றை விட்டுத் தன்னையே உபாயமாகப் பற்ற வேண்டுமென்று சொல்லுதற்குக் கருத்து யாது?

விடை : பகவான் அருளிச்செய்த இவ்விஷயத்தை நோக் கிய சில ஆசாரியர், 'மற்ற உபாயங்களைச் செய்வதற்கேற்ற அறிவு ஆற்றல் உடையவர்கள் மற்ற உபாயங்களைச் செய்தே ஆகவேண்டு மென்றும், அவை அற்றவர்களே எம்பெருமானாகிற தன்னை உபாய மாகப் பற்ற வேண்டுமென்றும் அவன் சொல்லுகிறான்', எனக் கருதுகின்றனர். இஃதே அநுவாதபட்சமெனப்படும்.

சாத்திரம் எங்ஙனம், "தமோ குணத்தை உண்டாக்கும் பொருளை உண்ணலாகாது. ஒருவன் அறியாமையினால் அப்பொருளை உண்ணுவனேல், அக்குற்றம் நீங்குதற்காக இன்ன பிராயசித்தத் தைச் செய்ய வேண்டும்," எனச் செப்புகின்றதோ, அங்ஙனமே ஒருவன், "கன்ம ஞான பத்திகளைச் செய்ய அறிவு ஆற்றல்கள் அற்று அவற்றை விட்டிருப்பனேல், அவன் பிரபத்தி மார்க்கத்தை மேற்கொள்ளக் கடவன்" என்பது அநுவாத பட்சத்தினர் கருத்து.

லோகாசாரியரோ அங்ஙனம் திருவுள்ளம் பற்றினரில்லை; அவர், "மற்ற உபாயங்களைச் செய்தற்கு அறிவு ஆற்றல்கள் தமக்கு இருப்பினும், நமஃ பதத்தில் சொல்லுகிறபடி தம் அத்தியந்த பாரதந்திரிய நிலையை அறிந்த சான்றோர், அவற்றை விட்டே எம்பெருமானைப் பற்றுதல் பொருத்தமுடையது," என அபிப்பிராயப்படுகிறார். இதுவே விதிபட்சம்.

"சாத்திரம் எங்ஙனம், கைகால்களை அலம்பிக்கொண்டே ஆசமனம் செய்ய வேண்டும்," என்றும், "பகவானைத் தியானஞ் செய்துகொண்டே மந்திரத்தைச் செபிக்க வேண்டும்," என்றும் கூறுகின்றதோ, அங்ஙனமே கன்ம ஞான பத்திகளைச் செய்தற்கு அறிவு ஆற்றல்கள் இருப்பினும், அவற்றை விட்டே பகவானைப் பற்ற வேண்டும் என்பது விதிபட்சத்தினரின் கருத்து.

அவதாரிகை : எளிதில் மேற்கொள்ளக் கூடியதும், சேதனனுடைய சொரூபத்திற்குப் பொருத்தமானதுமான ஈசுவரனை உபாயமாகப் பற்றுதலாகிற இது, விருப்பத்தினாலேயே நடைபெறக் கூடியதாயிருக்க, இதைச் செய் என்று விதிக்கவும் வேண்டுமோ? என்ன, அருளிச்செய்கிறார் :

**மூலம் : 189. "ராகப்ராப்தமான உபாயந்தானே வைதமானால் கடுக பரிக்ரஹிக்கைக்கு உடலாயிருக்குமிறே."**

பொருள் : விருப்பத்தாலேயே நிகழக் கூடியதான சாதனத்திற்கு "இத்தைப் பற்று" என்னும் விதியும் ஏற்படுமானால், விரைவாகக் கைப்பற்றுதற்கு இடந்தருமன்றோ?

விளக்கம் : சுவையுள்ள பாலை, நோய்க்கு மருந்தாகக் கொள்ளும்படி கூறின், எங்ஙனம் நோயாளி அதை விரைவாக உட்கொள்ளுதற்கு இடமுண்டாகுமோ, அங்ஙனமே சொரூபத்திற்குச் சேராததாயும், சிரமப்பட்டுச் செய்யக் கூடியதாயுமுள்ள மற்றைய உபாயங்களைப் போலல்லாமல், எளிதாகச் செய்யக் கூடியதாயும் விரும்பத்தக்கதாயுமுள்ள இவ்வுபாயத்திற்குச் 'செய்' என்னும் கட்டளையும் ஏற்படின், விரைவில் மேற்கொள்ளுதற்கு இடந்தந்து நிற்குமன்றோ?

தொகுப்புரை : 'கீழே சில உபாய விசேஷங்களை உபதேசிக்க என்னும் சூத்திரத்திலிருந்து, 'ராகப் பிராப்தமான உபாயந்

தானே' என்னும் சூத்திரம் வரையும் (185—189) கூறியவற்ருல், இதற்கு மேலே வேருேர் உபாயமும் இல்லை என்னுமாறு இறுதி உபாயத்தை அருளிச்செய்தமையின், இதற்குச் 'சரமசுலோகம்' என்னும் பெயரமைந்தது என்றும்; இதன் முன் வாக்கியம் சேதனன் செய்ய வேண்டுவனவற்றையும், பின் வாக்கியம் ஈசுவரன் செய்ய வேண்டுவனவற்றையும் செப்புகின்றனவென்றும்; சேதனன் செய்ய வேண்டுவது எம்பெருமானை உபாயமாகப் பற்றுவதே என்றும்; அப்பற்றுதலை மற்றத் தருமங்களை விடுகையாகிற அங்கத்தோடு கூடியே செய்யக் கடவன் என்பதைக் கட்டளை இடுகின்ருன் என்றும்; விரும்பிச் செய்யக்கூடிய இவ்வுபாயத்திற்கு விதியும் ஏற்படின் விரைவில் மேற்கொள்ளுதற்கு இடந்தருமென்றும் அறிகின்ருேம்.

அவதாரிகை: இந்தச் சுலோகத்திற்குப் பதப்பொருளை அருளிச்செய்வதாகக் கருதி, முன்வாக்கியத்தின் பதங்களின் எண்ணைக் காட்டுகிருர்:

**மூலம்: 190. "இதில் பூர்வார்த்தம் ஆறு பதம்."**

பொருள்: இந்தச் சரமசுலோகத்தின் முற்கூற்றில், ஸர்வ தர்மாந், பரித்யஜ்ய, மாம், ஏகம், சரணம், வ்ரஜ என ஆறு பதங்கள் உள்ளன.

அவதாரிகை: இதில் முதல் பதத்தை எடுத்துப் பொருள் சொல்லுகிருர்:

**மூலம் 191. 'ஸர்வதர்மாந்—எல்லா தர்மங்களையும்'**

பொருள்: கன்மம், ஞானம், பத்தி முதலிய எல்லாத் தருமங்களையும்.

அவதாரிகை: 'ஸர்வதர்மாந்' என்னும் இப்பதத்தில், தர்ம சத்தம், அதன் மேல் அமைந்த இரண்டாம் வேற்றுமையின் பன்மை, சர்வ சத்தம் ஆக முப்பிரிவுகள் உள்ளன. இவற்றிற்குத் தனித்தனியே பொருளுரைப்பதாகக் கருதி, முதலில் தர்மம் இன்னது என்பதைச் செப்புகிருர்.

**மூலம்: 192. "தர்மமாவது பலஸாதநமாயிருக்குமது."**

பொருள் : இம்மை, மறுமை, உம்மைப் பயன்களுள் எதெதற்கு எதெது சாதனமோ, அதது தருமமெனப்படும்.

அவதாரிகை : 'ஸர்வ தர்மாந்' என்னும் இதில் உள்ள 'தர்ம' என்னும் சொல், இம்மை மறுமைகளுக்கு உபாயங்களாகிற வற்றைக் காட்டுகிறதன்று. உம்மை (வீட்டு)ப் பயனுக்கு உபாயங்களைக் காட்டுகிறதாகும் என்கிறார் :

மூலம் : 193. "இங்குச் சொல்லுகிற தர்மசப்தம் த்ருஷ்டபல ஸாதநங்களைச் சொல்லுகையன்றிக்கே, மோக்ஷபல ஸாதநங்களைச் சொல்லுகிறது."

பொருள் : இச்சூத்திரத்திற்குச் சிறிது விரிவாகவே பொருள் கூற வேண்டியிருக்கிறது. பகவான் கீதா சாத்திரத்தின் முதலில் கன்ம யோகத்தையும், அதன் பின்பு ஞான யோக பத்தி யோகங்களையும், இறுதியாய் இந்தச் சுலோகத்தில் பிரபத்தி யோகத்தையும் அருளிச்செய்திருக்கிறான். கன்ம யோகத்தை உபதேசிக்கும் போதே, இம்மை மறுமைகளைப் பயனாய்ச் சொல்லாமல், உம்மையையே (வீட்டின் பேற்றையே) பயனாய்த் தெரிவிக்கிறான். ஆதலின், இந்தச் சுலோகத்தின் 'ஸர்வ தர்மாந்' என்னும் இப்பதத்தில் உள்ள தர்ம சத்தம், புத்திரன், பசு, அன்னம் முதலிய இம்மைப் பயன்கள், சொர்க்கம் முதலிய மறுமைப் பயன்கள் ஆகியவற்றிற்குச் சாதனங்களைச் சொல்லுகையன்றிக்கே, மோட்சமாகிற உம்மைப் பயனுக்குச் சாதனங்களான தருமங்களையே குறிக்கிறது என்பது வெள்ளிடை மலையன்றோ !

அவதாரிகை : தரும சத்தத்தின் பொருளைக் கூறிய பின்பு பன்மையின் பொருளை அருளிச்செய்கிறார் :

மூலம் : 194. "அவைதான் ச்ருதி ஸ்ம்ருதி விஹிதங்களாய்ப் பலவாயிருக்கையாலே பஹுவசநப்ரயோகம் பண்ணுகிறது."

பொருள் : வீட்டின் பேற்றை அடைதற்கு மேற்கொள்ள வேண்டிய தருமங்கள், வேதம் ஸ்மிருதி ஆகிய இவற்றால் செய் எனக் கட்டளை இடப்பட்டவையாயும், பலவாயும் இருக்கையால் இங்குத் 'தர்மாந்' என்று பன்மையாய்ச் சொல்லப்பட்டுள்ளது.

அவதாரிகை : 'அவைதாம் யாவை?' என்ன, அருளிச்செய்கிறார் :

**மூலம் : 195.** "அவையாவன: கர்ம ஜ்ஞாந பக்தி யோகங்களும், அவதார ரஹஸ்யஜ்ஞாநம், புருஷோத்தம வித்யை, தேசவாஸம், திருநாமஸங்கீர்த்தநம், திருவிளக்கெரிக்கை, திருமாலையெடுக்கை தொடக்கமான உபாயபுத்த்யா செய்யுமவையும்."

பொருள் : அவைதாம், கன்ம யோகம், ஞான யோகம், பத்தி யோகம், அவதாரத்தின் உண்மையைப்பற்றிய அறிவு, ஸ்ரீமந் நாராயணனே மேற்பட்டவன் என்னும் ஞானம், அவன் உகந்தருளின நிலங்களில் வாசம், திருநாம சங்கீர்த்தனம், சன்னிதானங்களில் திருவிளக்கேற்றுதல், அவனுக்கு அழகிய மலர்களை இடுதல் முதலியன உபாயம் என்னும் எண்ணத்தோடு செய்யப்படுபவை. இப்பொருள் ("பரித்யஜ்ய" என்னும் பதத்தின் பொருளான) விட்டே என்பதோடு சேர்ந்து முடியும்.

விளக்கம் : கன்மயோகம் : இது, தன்னைச் செய்பவனாக (கர்த்தாவாக) நினையாமலும், இம்மை மறுமைகளான பசு புத்திரன் சுவர்க்கசுகம் முதலிய பலன்களுள் ஒன்றையும் விரும்பாமலும், 'இஃது என்னுடையது' என்னும் மமதா புத்தியைக் கொள்ளாமலும், சுருதி ஸ்மிருதி முதலிய சாத்திரங்களில் 'செய்' எனக் கட்டளை இடப்பட்டதும் தன்னிலைக்கேற்றதுமான தருமத்தைப் பகவதாராதனமாகச் செய்தலேயாகும். கன்மயோகத்தைப் பகவான் இவ்வாறு அர்ச்சுனனுக்கு உபதேசித்து, "அர்ச்சுனனே, சனகர் முதலான இராச ரிஷிகள் இதைச் செய்து முத்தி பெற்றார்கள். ஆதலின், நீயும் பலத்தில் விருப்பமற்றவனாயிருந்து இக்கன்ம யோகத்தைத் தினந்தோறும் செய்வாய்," என்று அருளிச்செய்திருக்கிறான்.

ஜனகரிடத்தில் கன்மம் முக்கிய சாதனமாகவும், ஞானமும் பத்தியும் அங்கங்களாகவும் (துணைபுரிவனவாகவும்) காணப்படுகின்றன. இது, ஸ்ரீ வசனபூஷணம் 265-ஆம் சூத்திர வியாக்கியானத்தில் மணவாளமா முனிகளால் அருளிச்செய்யப்பட்டிருக்கிறது.

ஞானயோகம் : மேற்குறிப்பித்தவாறு ஒருவன் கன்ம யோகத்தைச் செய்து வருவானுயின், அவன் மனம் தூய்மையடையும். இங்ஙனம் மனம் தூய்மை அடைந்தவனுக்குத்தான் மனத்தை ஆன்மாவிடம் சேர்த்துச் சிந்திக்க முடியும். இவ்வாறு சிந்திக்கும் சிந்தனையே ஞானயோகமாகும். இம்முறையில், கருமயோகந்தான் இந்த ஞானயோகமாய் உருக்கொண்டு முடிவடைகிறதென்றும், சீவான்மாவினுடைய குற்றங்களைப் போக்கி அதைத் தூய்மையாக்குகின்றவற்றுள் ஞானயோகம் தலை சிறந்ததென்றும், நெருப்பு விறகுகளை எரித்து நீறுக்குவது போன்று, ஞானயோகமானது புண்ணிய பாவங்களை எரித்து நீறுக்கிவிடுகிறதென்றும் இந்த ஞான யோகத்தின் பெருமையைப் பகவான் கீதையில் அருளிச்செய்திருக்கிறுன். இந்த ஞானயோகம் பரதன் முதலியவர்களிடத்தில் முக்கியமாய்க் காணப்படும். இந்த ஞானயோகத்திற்குக் கன்ம பத்திகள் உதவியாய் உள்ளன. இதுவும் ஸ்ரீ வசன பூஷணத்தின் மேற்கூறிய சூத்திர வியாக்கியானத்திலேயே சொல்லப்பட்டுள்ளது.

பக்தியோகம் : மேற்குறித்த ஞான யோகம் பத்தி யோகத்திற்கு உதவியாகும். ஒரு கிழிச்சீரைக்குள் இருக்கும் பொன்னைக் காண வேண்டுமென விரும்பும் ஒருவனுக்கு எங்ஙனம் முதலில் அக்கிழிச்சீரை கட்புலனுக வேண்டுவது இன்றியமையாததோ, அங்ஙனமே பரமான்வைக் காண வேண்டுமென விரும்புகின்றவனுக்கு முதலில் சீவான்மாவைக் காண வேண்டுவது அவசியமாகும். இங்குச் சீவான்மாவைக் கிழிச்சீரையாகவும் பரமான்மாவை அதற்குள்ளிருக்கும் பொன்னுகவும் கொள்ள வேண்டும். சீவான்மாவைப் பற்றிய சிந்தனையாகிற ஞானயோகம், அவனைக் காண்கையில் முடிவடைகிறது. இங்ஙனம் சீவனுகிற தன்னைக் கண்டவன் தான் தன்னிடத்தில் பொன் போல் அந்தராத்துமாவாயுள்ள பரம புருஷனைக் காண முடியும்! எங்ஙனம் கிழிச்சீரையைக் கண்டவன், அத்துடன் நின்றுவிடில் அதனுள்ளிருக்கும் பொன்னைப் பெற்று நலம் அனுபவிக்க முடியாதோ, அங்ஙனமே சீவான்மாவைக் கண்டவன் அத்துடன் நின்றுவிடில் அவ்வான்மாவிற்குள்ளிருக்கும் பரமான்மாவை அடைந்து இன்பந்துய்க்க முடியாது. அன்றியும், கிழிச்சீரைக்குள்ளிருக்கும் பொன்னைக் காண்பதற்குச் சில முயற்சிகள் வேண்டுவன போன்றே, பரமான்வைக் காண்பதற்கும்,

அவனை மனத்தினால் சிந்தித்தல், பூசித்தல், வணங்குதல் ஆகிய இம் முயற்சிகள் வேண்டற்பாலனவாகும். பத்தியோகத்திற்கு ஞான யோகம் உதவி செய்யும் முறையை இவ்வாறு கண்ணன் பகவத் கீதையில் கூறியுள்ளான். இந்தப் பத்தியோகம் பிரகலாதர் முதலிய வர்களிடம் முக்கியமாகக் காணப்படும். இதற்குத் துணை புரிவன கன்ம ஞானங்கள் என்பது நாம் அறிந்ததே. இதுவும் ஸ்ரீ வசன பூஷணத்தின் மேற்கூறிய சூத்திர விக்கியானத்திலேயே சொல்லப் பட்டுள்ளது,

அவதார ரகஸ்ய ஞானம்: சீவான்மாவிற்குக் கன்மமடியாக ஏற்படும் பிறவி எங்ஙனம் உண்மையோ, அங்ஙனமே தன் பிறவி யும் உண்மையென்றும், பிரகிருதியைப் போன்று, வடிவ வேறு பாடும் பண்பு வேறுபாடும், சமுசாரி சீவனைப் போன்று ஞானச் சுருக்கமும் விரிவும், முத்தனைப் போன்று ஒரு காலத்தில் ஞான விகாசமும், நித்தியனைப் போன்று அணுத்தன்மையும் இல்லாமல், தனக்குள்ள பெருமையோடுங் கூடியே சுத்த சத்துவமான விக்கிர கத்துடன் தன் இச்சையினாலேயே பிறக்கிறானென்றும், தருமத்திற் குக்குறைவும், அதருமத்திற்கு வளர்ச்சியும் ஏற்படுங்கால் உதிக் கிறானென்றும், சாதுக்களை இரட்சித்தல், துஷ்டர்களை அழித்தல், தருமங்களை நிலை நாட்டுதல் தன் பிறவிக்குப் பயன்கள் என்றும், தன் அவதாரத்தைப் பற்றிய இரகசியங்களை இவ்வாறு பகவான் அருளிச்செய்திருக்கிறான். இவற்றை நன்கு அறிகையே அவதார இரகசிய ஞானம் எனப்படும். 'இந்த ஞானத்தைப் பெற்றவன் மறுபடியும் பிறவான்,' என்பது பகவான் கருத்து. இதனால் முத்தி பெற்றவன் ததிபாண்டனாவான்.

புருஷோத்தம வித்தை: சமுசாரி சீவன், முத்த சீவன் ஆகிய இவ்விருவகைச் சீவான்மாக்களின் உள்ளிருந்து கட்டளையிட்டு நடத் திப் போகிறவன் தானே என்றும், இதனாலேயே புருஷோத்தமன் என்னும் திருநாமம் தனக்கு வாய்ந்ததென்றும் பகவானே அருளிச் செய்துள்ளான். இங்ஙனம் பரமனை அறிவதே புருஷோத்தம வித்தை எனப்படும். இதை அறிபவனே தன் கடமையைச் செய் தவனாவான்.

தேசவாஸம்: பகவான் உகந்து எழுந்தருளியிருக்கும் தேசங் களில் வாழ்வது தேசவாசமெனப்படும். சக்கரவர்த்தித் திருமகன் கானஞ்சென்ற போது, தண்டகாரணியத்தில் வசித்து வந்த மஹ

ரிஷிகள், "ஸ்ரீராமனே, உன் தேயத்தில் வாழும் எங்களைக் காக்க வேண்டுவது உன் கடமையாகும்," என விண்ணப்பித்துக் கொண்டார்கள். ஆதலின், பகவான் எழுந்தருளியிருக்கும் தேசத்தில் வாழ்தலே புண்ணியமாகும் என அறிகின்றோம்.

திருநாம ஸங்கீர்த்தனம்: விக்கிரகம், குணம், செயல் முதலியவற்றுள் ஒவ்வொன்றைக் குறிக்கும் சத்தமே திருநாமமெனவும், அதை அன்போடு சொல்வதே சங்கீர்த்தனம் எனவும் சொல்லப்படும். பண்டு அளவிறந்த பாப கன்மங்களைச் செய்துகொண்டு வந்த முற்கலன் என்னும் ஒருவன், ஒருகால், எள்ளினால் பசு போலச் செய்து, 'கிருஷ்ணாய' எனச் சொல்லித் தானஞ் செய்தான். அப்புண்ணியம், அவன் மரணமடைந்த பின்பு அவன் ஆன்மாவை யமபடர் துன்பப்படுத்திக் கொண்டு போக, அதைக் கண்ட யமன் அவர்களைத் தடுத்து, மரியாதையுடன் வரவேற்றுப் பெருமை செய்யும்படியான மேன்மையைத் தந்தது. இச்சிறப்பை நோக்கிய முற்கலன், 'மிக்க தீய கன்மங்களை இயற்றிய எனக்கு இப்பெருமை கிடைத்ததற்குக் காரணம் என்ன?' என்று, யமனைக் கேட்க, யமன், "உன் புண்ணியம் உனக்கும் தெரியாது. இந்த யமபடருக்கும் தெரியாது. நீ ஒரு முறை ஒன்றைத் தானஞ்செய்யுங்கால், 'கிருஷ்ணாய' என்று பகவான் திருநாமத்தைச் சொல்லித் தானஞ்செய்ததே இதற்குக் காரணம்," என விடையிறுத்தான். யமன் செப்பிய பகவானுடைய இத்திருநாமம் நரகில் இருந்தவர்களின் செவியில் விழுந்ததும், அந்நரகமும் போக பூமியாய்விட்டது என்னும் ஒரு சரிதம் உண்டு. பகவானுடைய திருநாமச் சங்கீர்த்தனத்தின் மகிமையை இச்சரிதத்தினால் அறியலாம்.

திருவிளக்கெரிக்கை: பகவானுடைய சன்னிதானத்தில் நெய், நல்லெண்ணெய் முதலியவற்றைக் கொண்டு விளக்கெரித்தல் பெரும் புண்ணிய காரியமாகும்.

'ஒருகால் தேவி ஆற்றங்கரையிலமைந்த பெருமாள் கோவிலிலிருந்த ஓர் எலி அங்கிருந்த விளக்கின் திரியைக் கவ்வி செல்லச் சென்ற போது, பூனையின் சத்தத்தைக் கேட்டு நடுங்கியது. அந்நடுக்கத்தினால், அவ்விளக்குத் தூண்டப்பட்டு ஒளி விட்டு எரிந்தது. அப்புண்ணியம் காரணமாக, அவ்வெலி மறு பிறவியில் ஓர் அழகிய மங்கையாய்ப் பிறக்க, அவள் ஓர் அரசனுக்கு வாழ்க்கைப்பட்டு,

அவனுடைய மற்ற எல்லா மனைவியரினும் சிறந்தவளாய், அரச னுக்கு மிக்க அன்புடையவளாய், பகவத்பத்தி வாய்ந்தவளாய் இன்புற்று வாழ்ந்தாள்,' என்னும் சரிதம் ஒன்று உள்ளது. இதை இங்கு நோக்குக.

திருமாலை எடுக்கை : மல்லிகை முல்லை முதலியவற்றுல் மாலை தொடுத்துப் பெருமாளுக்குச் சமர்ப்பித்தல் சிறந்த செயலாகும். இதன் சிறப்பைப் பின்வரும் சரிதம் காட்டும் :

கண்ணன், பலராமருடன் கஞ்சன் யாகசாலைக்குச் சென்ற போது, வழியில் கஞ்சனுக்காகக் கொண்டு சென்ற ஆடையையும் சந்தனத்தையும் வாங்கித் தான் தரித்துக்கொண்டான். ஆனல், மலரையோ, மாலாகாரர் இல்லத்தைத் தானே தேடிச்சென்று, அவ னிடமிருந்து பெற்றுச் சூட்டிக்கொண்டான். அதன்றியும், அதன் பொருட்டு அவனுக்கும், அவனைச் சார்ந்தவருக்கும் இம்மைச் சுகத் தையும், பரமபதத்தையும் ஈந்தான்.

அவதாரிகை : இனி 'ஸர்வ' சத்தத்தின் பொருளை அருளிச் செய்கிருர் :

மூலம் : 196. "ஸர்வ சப்தத்தாலே, அவ்வோஸாதந விசேஷங்களை அநுஷ்டிக்குமிடத்தில் அவற்றுக்கு யோக்யதாபாதகங்களான நித்ய கர்மங்களைச் சொல்லுகிறது."

பொருள் : தருமத்திற்கு அடைமொழியாய் அமைந்துள்ள 'ஸர்வ' என்னும் சொல்லினல், அவரவர்கட்கேற்ற கருமங்களை மேற்கொள்ளும் போது, அக்கருமங்களைச் செய்தற்குத் தகுதியை உண்டாக்கக் கூடிய நித்திய கருமங்கள் இன்னவை என்பது சொல்லப்படுகிறது.

விளக்கம் : வினு : அக்கருமங்கள் யாவை ?

விடை : அவை சந்தியாவந்தனம், ஐந்து மகா யாகங்கள் முதலிய நித்தியமும் நைமித்தியமும் ஆகிய கன்மங்களாகும்.

அவதாரிகை : முற்கூறிய ஐந்து சூத்திரங்களில் விரிவாய்ச் சொல்லிய, "ஸர்வ தர்மாந்" என்னும் சத்தத்தின் பொருளை, இந்தச் சூத்திரத்தில் சுருக்கமாய் அருளிச்செய்கிருர் :

மூலம்: 197. "ஆக, ச்ருதி ஸ்ம்ருதி சோதிதங்களாய், நித்யநைமித்திகாதி ரூபங்களான கர்ம யோகாத் யுபாயங்கள் என்றபடி."

பொருள்: ஆக, கீழ்க்கூறிய 'ஸர்வ தர்மாந்' என்னும் இப் பதத்தால், வேதம் ஸ்மிருதி இவைகளால் விதிக்கப்பட்டனவும், நித்திய நைமித்தியங்களை வடிவாய்க் கொண்டனவுமான கன்ம யோகம் முதலிய உபாயங்கள் சொல்லப்பட்டனவெனக் கொள்க.

விளக்கம்: கன்மயோகம் என்பது, நித்தியம் நைமித்திகம் முதலானவற்றை வடிவாகவுடையது. இவற்றுள் தினந்தோறும் குறிப்பிட்ட காலத்தில் செய்ய வேண்டிய சந்தியாவந்தனம் போன்றுள்ள கருமம் நித்திய கருமம் எனப்படும். கிரகணம் முதலிய காலங்களில் செய்யப்படும் சடங்குகள் நைமித்திகம் எனப்படும். நித்திய கருமங்களைப் போன்றே நைமித்திக கருமங்களையும் செய்தல் இன்றியமையாததாகும். அன்றேல், பகவானுடைய நிக்கிரகம் உண்டாகும்.

அவதாரிகை: சேதனனுடைய அத்தியந்த பாரதந்திரிய சொரூபத்திற்கு விரோதிகளாயுள்ள கன்மயோகம் முதலியவற்றைத் தருமங்கள் எனக் கூறுதற்குக் காரணம் இன்னதென அருளிச் செய்கிறார்:

மூலம்: 198. "இவற்றைத் தர்மம் என்கிறது, ப்ரமித்த அர்ஜ்ஜுநன் கருத்தாலே."

பொருள்: தனக்குரிய க்ஷத்திரிய தருமமான யுத்தத்தை அதருமம் என்றும், கன்ம ஞான பத்திகளைத் தருமம் என்றும் மயங்கிய அர்ச்சுனனுடைய நினைவாலே இவற்றைத் தருமங்கள் என்கிறான்.

வினா: மக்களுக்கு இதத்தையே நோக்கும் பகவான், பாரதந்திரிய சொரூபத்திற்கு மாறுபட்ட இவற்றைத் தருமங்கள் எனக் கூறுவது தகுதியுடையதாமா?

விடை: நம் லோகாசாரியர், ஸ்ரீ வசனபூஷணத்தில்[1] ஓர் உதாரண முகத்தான் இதற்குச் சமாதானம் பகருகிறார்: பிணியினால்

---

1. "ஔஷத ஸேவை பண்ணாதவர்களுக்கு அபிமதவஸ்துக்களிலே அத்தைக் கலசியிடுவாரைப்போலே, ஈசுவரனைக் கலந்து விதிக்கிறதித்தனை" ஸ்ரீ வசன பூஷணம்—128.

பீடிக்கப்பட்ட ஒரு சிறுவன், மருந்தை உண்பதற்கு விரும்பாமல் மறுக்கின்றான். எங்ஙனமேனும் அவன் பிணித்துன்பத்தை ஒழிக்க வேண்டுமென்னும் கருத்துடைய அருட்டாயானவள், அம்மருந்தை அவன் விரும்பும் வெல்லம் முதலியவற்றில் கலந்து அவனுக்கு ஊட்டுகின்றாள். அஃது அவனுடைய நோயைப் போக்கி, அவனுக்கு நலத்தை விளைவிக்கின்றது. அதைப் போன்றே, பரம காருணியனான பகவான், விரைவில் சமுசாரப் பிணியை ஒழிக்கும் (பகவானாகிற) தன்னை நேரே பற்றுமாறு கூறின், அளவு கடந்த காலமாய்த் தன் முயற்சியினாலேயே காரியஞ் செய்து போந்த சேதனன், எல்லாவற்றையும் அறவே விட்டுத் தன்னைப் பற்றுதற்கு இசைதல் அருமை. ஆதலின், அத்தகையவரையும் விட மனங் கொள்ளாத அப்பகவான், அவர்கள் விரும்புவனவாயும், அவர்கள் முயற்சியினாலேயே இயற்றக் கூடியனவாயுமுள்ள மற்ற உபாயங்களில் சித்தோபாயமான தன்னைக் கலந்து அவர்கட்கு மோட்சத்தின் சாதனமாய் அவற்றை விதிக்கின்றான் எனக் கொள்க.

வினா: அங்ஙனமாயின், கன்ம ஞான பத்திகளாகிற மற்ற உபாயங்களும் மோட்சத்தைத் தருமல்லவா?

விடை: தாரா. எங்ஙனம் வெல்லம் பிணியைப் போக்காது, அதனுடன் கலந்துள்ள மருந்தே அதை நீக்குகின்றதோ, அங்ஙனமே மற்றக் கன்ம ஞான பத்திகள் வீடாகிய பேற்றை அளியாமல், அவற்றுடன் கலந்திருக்கும் ஈசுவரனே உபாயமாய் நின்று அதை அளிக்கின்றான் என்பது உறுதி. அஃதன்றியும், எவ்வாறு வெல்லத்தோடு கலந்த மருந்து காலம் தாழ்த்துப் பயனளிக்கின்றதோ, அவ்வாறே கன்மம் முதலியவற்றோடுங் கலந்த பகவானும் தாமதித்தே பயனளிப்பான் என அறிதல் வேண்டும்.

தொகுப்புரை: 'இதில் பூர்வார்த்தம் ஆறு பதம்' என்னும் சூத்திரத்திலிருந்து, 'இவற்றைத் தருமம் என்கிறது' என்னும் சூத்திரம் வரையும் (190-198) இயம்பியவற்றால், முன் வாக்கியத்தில் ஆறு பதங்கள் உள்ளன என்பதும்; இவற்றுள் முதல் பதமான "ஸர்வ தர்மாந்" என்பதன் பொருள் இன்னதென்பதும்; இத் தரும சத்தம் மற்றப் பயன்களுக்கு ஏதுவானவற்றைக் குறிக்காமல், மோட்சத்திற்கு ஏதுவானவற்றையே இங்கு இயம்புகிறதென்பதும்; அவை பலவாயிருத்தலின், இவ்வார்த்தை பன்மையாகச் சொல்லப்பட்டிருக்கிறதென்பதும்; அவைகள் இன்னவை

என்பதும்; இவற்றைச் செய்வதற்கு ஏற்ற தகுதியை உண்டுபண்ணும் நித்திய கன்மாக்களை 'ஸர்வ' சத்தம் குறிக்கிறதென்பதும்; அக்கருமங்கள் வேதம் ஸ்மிருதி முதலியவற்றால் விதிக்கப்பட்ட நித்திய நைமித்தியங்கள் என்பதும்; இவற்றைத் தருமங்கள் எனச் செப்பியதற்குக் காரணம் இன்னதென்பதும் பெறப்பட்டன.

அவதாரிகை: இனி இரண்டாம் பதத்தைச் சொல்லுகிறார்:

**மூலம்: 199. "பரித்யஜ்ய"**

அவதாரிகை: இப்பதமும் இந்தச் சுலோகத்தின் முதல் பதம் போன்றே, த்யாகம், ல்யப்பு, பரி (உபஸர்க்கம்)[1] என மூன்று பிரிவுகளாய் உள்ளது. இப்பிரிவுகளுள் தியாகமாவது இன்னது எனப் பகருகிறார்:

**மூலம்: 200. "த்யாகமாவது—உக்தோபாயங்களை அநுஸந்தித்து, சுக்திகையிலே ரஜதபுத்தி பண்ணுவாரைப் போலேயும், விபரீத திசாகமநம் பண்ணுவாரைப் போலேயும் அநுபாயங்களிலே உபாயபுத்தி பண்ணினோமென்கிற புத்தி விசேஷத்தோடே த்யஜிக்கை."**

இச்சூத்திரத்திற்கு வினா விடையாகவே பொருள் கூற வேண்டியிருக்கிறது.

வினா: இங்குத் தியாகம் என்பதற்கு விடுகைதானே பொருள்?

விடை: அன்று.

வினா: பின்னை, 'தியாகம்' என்பது யாது?

விடை: பகவான், சரமசுலோகத்திற்கு முன்பு, பல அத்தியாயங்களின் பல சுலோகங்களில் கன்ம ஞான பத்திகளாகிற மற்ற உபாயங்களை அருளிச்செய்துள்ளான். அவ்வுபாயங்களுக்குச் சில இயல்புகள் உண்டு: அவை, தன் தோற்றத்தில் சேதனனுடைய முயற்சியையே எதிர்பார்த்திருத்தல், தான் அறிவில்லாததாயும் சத்தியற்றதாயும் இருத்தலால், பயனைக் கொடுக்குங்கால் பகவானையே நோக்கி நிற்றல், முன் சூத்திரத்தின் விளக்கத்தில் கூறியபடி, மருந்தை மறைக்கும் வெல்லத்தைப் போன்றிருத்தல்

---

1. உபஸர்க்கம் - வினைக்கு முன் வந்து அதனைத் தொடர்ந்து நிற்பது

முதலியன. இவ்வியல்புகளோடுஞ் சேர்ந்துள்ள அக்கன்ம ஞான பத்திகளைச் சிந்தித்தலையே, 'உக்தோபாயங்களை அனுசந்தித்தல்' என்னும் பகுதியில் குறிப்பிக்கிருர்.

இனி, பிற்பகுதியின் பொருள் இயம்பப்படுகிறது: சிப்பியை வெள்ளியென மயங்குவார்போன்றும், தாம் ஒரு பயனை விரும்பிச் செல்லக் கருதிய வழிக்கு மாருன திசையையே தாம் செல்ல வேண்டிய திசை என மயங்கிச் செல்பவர் போன்றும், 'ஈசுவரனை அடைவதற்கேற்ற உபாயத்தை மேற்கொள்ள வேண்டிய நாம், அதற்கு மாருய் உபாயமல்லாதவற்றிலே உபாயபுத்தி பண்ணினேமே!' என்கிற புத்தி விசேஷத்தோடுங்கூடியவனுய், விடுகையே இங்குத் தியாகம் எனப்படும். ஆனல், புத்தி விசேஷத்தையும் விடுதல் என்பது இங்குக் கருத்தன்று.

அவதாரிகை: இனி உபசர்க்கத்தின் பொருளை அருளிச் செய்கிருர்:

**மூலம்: 201. "'பரி' என்கிற உபஸர்க்கத்தாலே, பாதகாதிகளை விடுமாபோலே, ருசி வாஸனைகளோடும் லஜ்ஜையோடுங்கூட மறுவலிடாதபடி விடவேணுமென்கிறது."**

இந்தச் சூத்திரத்திற்குப் பொருள் விரிவாகவே சொல்லப்படுகிறது.

'பரி' என்னும் உபசர்க்கம் 'எல்லாம்,' 'மிகுதி' என்னும் இரு பொருள்களைத் தரினும், எல்லாம் என்னும் பொருள் சர்வ பதத்திலேயே கிடைக்கின்றமையின், அப்பொருளையே இங்குக் கூறுவதில் பயனில்லை. ஆதலின், 'மிகுதி' என்னும் பொருளைத் தெரிவிக்கும் இப்பதத்தால், ஒருவன் கள்ளுண்ணல், சூதாடுதல், திருடுதல், கொலை புரிதல் முதலிய பாவங்களை விடுங்கால், 'நாம் இவற்றைச் செய்கின்ருேமே!' என்னும் நாணத்தோடுங்கூடியவனுய், அவற்றின் தொடர்பிற்கு ஏதுவாயுள்ள ருசி[1] வாசனை[2]

1. ருசி - நாம் ஒருகாரியத்தைப் புத்தி அறிந்தே செய்கின்ருேம். அங்ஙனம் செய்யத் தூண்டுவது எதுவோ, அதுவே ருசியாகும்.

2. வாசனை - நாம் புத்தியறியாமல் ஒரு காரியத்தைச் செய்கின்ருேம். அங்ஙனம் செய்யத் தூண்டுவது எதுவோ, அதுவே வாசனையாகும்.

களோடும் அக்காரியத்தை விடுகிருனே, அங்ஙனமே மற்ற உபாயங்களையும் இன்றியமையாது விட்டே ஆகவேண்டும் என்பதை அறிக.

இன்னும், குற்றமாய்ச் சொன்ன உபாயங்களை விடுங்கால், ருசி வாசனைகளோடு விடுதல் மட்டுமேயல்லாமல், "பகவான் ஒருவனையே உபாயமாகக் கொள்ளுதலைச் சொரூபமாய் உடைய நாம் அதைக் கெடுத்தற்கான மற்ற உபாயங்களை மேற்கொண்டோமே! நம் அறியாமை என்னே!" என்னும் நாணம் இடைவிடாமல் தோன்றி, மறித்தும் இவ்வுபாயங்களில் தொடர்பு ஏற்படா வண்ணம் அறவே விடுதல் வேண்டும்.

விளக்கம் : வினு : சாத்திரங்களில் தருமங்கள் எனச் சொல்லப்படும் கன்ம ஞான பத்திகளை, திருடுதல் கொலை புரிதல் போன்ற பாதகங்கட்கு ஒப்பாய்ச் செப்புதல் யாங்ஙனம் பொருந்தும்?

விடை : அறநூல்களைக் கற்று நன்னெறியைக் கடைப்பிடித்து ஒழுகும் நீதிமானுக்குக் கொலை புரிதல் முதலியன எங்ஙனம் பாவச் செயல்களெனக் கருதப்படுகின்றனவோ, அங்ஙனமே தன் அத்தியந்த பாரதந்திரிய நிலையைத் தெள்ளிதின் அறிந்து அதற்கேற்ப ஒழுகும் பிரபன்னனுக்கும், ஈசுவரனைத் தவிரக் கன்ம ஞான பத்திகளாகிற மற்ற உபாயங்களை மேற்கொள்ளுதல் பாதகங்களெனவே கொள்ளப்படும்.

இதற்கு, ஒருகால் நமன் தருமனுக்கு, "பரதகுலத்தில் தோன்றிய தருமபுத்திரனே, இனி நீ மற்ற உபாயங்களைச் செய்கிறதாகிற பாவத்தைச் செய்ய அஞ்சினுயாகில், முழு மனத்தோடும் வேறு முயற்சியை விட்டு, ஸ்ரீமந்நாராயணனிடத்திலேயே, கருத்தூன்றியவனுக இருப்பாயாக," என அறிவுரை புகட்டியதே சான்ருகும். இதை,

> அத பாதகபீதஸ்த்வம் ஸர்வபாவேந பாரத
> விமுக்தாந்யஸமாரம்போ நாரயணபரோபவ

என்னும் சுலோகம் விளக்குகிறது.

அவதாரிகை : ல்யப்பின் பொருளை அருளிச்செய்கிருர் :

மூலம் : 202. "ல்யப்பாலே, 'ஸ்நாத்வா புஞ்ஜீத' என்னுமாப்போலே, உபாயாந்தரங்களை விட்டே பற்ற வேணும் என்கிறது."

பொருள் : த்யஜ்ய என்னும் ல்யப்பாலே, 'உணவு கொள்ளுங் கால் குளித்தே உணவு கொள்ளுதல் வேண்டும்,' என்னும் விதியைப் போன்று, ஈசுவரனுகிற உபாயத்தைப் பற்றுங்கால், 'கன்ம ஞானபத்திகளாகிற மற்ற உபாயங்களை விட்டே அவனைப் பற்ற வேண்டும்,' என்னும் கோட்பாடு தெளிவாய்த் தெரிகின்றது.

விளக்கம் : வினு : இதற்கு "புக்தவா சாந்த்ராயணம் சரேத்" என்பது போன்று பொருள் கொள்ளலாகாதோ ?

விடை : கொள்ளலாகாது.

வினு : ஏன் ?

விடை : ஏனெனில், அவ்வாக்கியத்தில் ஆல் அரசு முதலிய உண்ணத்தகாத இலைக் கலங்களில் அறிவின்மையால் உண்டிருப் பின், அதற்குப் பிராயச்சித்தமாகச் சாந்த்ராயண விரதத்தை மேற் கொள்ள வேண்டும் என விதிக்கப்பட்டுள்ளது. அங்ஙனம் இங்கும் பொருள் கொள்ளின், அறிவும் ஆற்றலும் இல்லாமையின் மற்ற உபாயங்களை விட்டிருப்பவன், எம்பெருமானைப் பற்றக் கடவன் என்னும் பொருள் கிடைக்கும். அங்ஙனமன்றி, ஞானமும் சத்தியுமுள்ள சில மகான்களும், மற்ற உபாயங்களை விட்டே எம்பெருமானைப் பற்றியிருப்பதால், பிள்ளை லோகாசாரியர் மேற் கூறியதைத் திருவுள்ளம் பற்றினரில்லை.

அவதாரிகை : இங்ஙனம் மற்ற உபாயங்களை விட்டே பகவானைப் பற்ற வேண்டும் என்னும் இதன் கருத்தை அருளிச் செய்கிறுர் :

**மூலம் : 203. "'சசால சாபஞ்ச முமோச வீரஃ'—என்கிற படியே இவை அநுபாயங்களானமாத்ரமன்றிக்கே கால்கட்டு என்கிறது."**

பொருள் : பெருமாளுடைய அம்புகளால் துளைக்கப்பட்டு நிலை கலங்கி நின்ற இராவணன், தன் கையில் வில் ஏந்தி நின்ற வரையும், பெருமாள் அவனைப் போக விட்டாரில்லை. அவன் அந்த வில்லைக் கீழே போட்ட பின்பே, அவனை நோக்கி, "நீ இன்று போய், போருக்கு நாளைவா," என்று விடையளித்தார். இம்முறையில் அவன் பிடித்திருந்த வில், எங்ஙனம் அவன் வெற்றிக்குக் காரணமாகாமற்போனது மட்டுமேயன்றி, அவ்விடத்தை விட்டு

விலகுவதற்கும் தடையாயிருந்ததோ, அங்ஙனமே வேறு உபாயங்களின் சிறு தொடர்பும் சேதனன் பேற்றுக்குக் காரணமாகாமற் போதல் மட்டுமேயன்றி, அவன் சமுசார பந்தத்திலிருந்து விலகி உயர்ந்த பேற்றைப் பெறுதற்கும் தடையாயுள்ளது. ஆதலால், மற்ற உபாயங்களின் தொடர்பு கூடாது என அறிகின்றோம்.

அவதாரிகை: இன்னும் மற்ற உபாயங்களின் தொடர்பு ஈசுவரனை இழப்பதற்குக் காரணமென்பதை உதாரண முகத்தான் அருளிச்செய்கிறார்:

**மூலம்: 204. "சக்ரவர்த்தியைப் போலே இழக்கைக் குறுப்பு."**

பொருள்: தசரத சக்கரவர்த்தியார் "முன்பு நாம் கைகேயிக்குக் கொடுத்த வரத்தை மறுக்க ஒண்ணாது," என்னும் (மேற்போக்கில் தருமமாகத் தோன்றும்) சாமானிய தருமத்தைக் கைப்பற்றி, பெருமாளாகிற சிறந்த தருமமாகும் பெரும்பேற்றை இழந்தாரல்லரா? அங்ஙனமே மேற்போக்கில் தருமங்கள் போன்று காணப்படும் கன்ம ஞான பத்திகளைப் பற்றின், அவற்றின் தொடர்பு ஈசுவரனாகிற உயர்ந்த பேற்றைப் பெறுதற்கு இடையூறாய் இருத்தல் மட்டுமேயன்றி, பகவத் விஷயத்தோடு சேர்ந்து வாழ்தலாகிய இன்பப் பேற்றையும் இழக்குமாறு செய்கிறது.

அவதாரிகை: இவ்வாறு இங்குச் சர்வ தருமங்களின் விடுகை கூறப்பட்டுள்ளது. இதன் கருத்தை அறியாதார் செய்யும் தூஷணத்தை நீக்குவதற்காக அவர்கள் அபிப்பிராயத்தை எடுத்துரைக்கிறார்:

**மூலம்: 205. "'ஸர்வ தர்மங்களையும் விட்டு' என்று சொல்லுகையாலே சிலர் 'அதர்மங்கள் புகுரும்' என்றார்கள்."**

பொருள்: தருமமானது, இதைச் செய் இதைச் செய்யாதே என இரு வகையாய்ப் பேசப்பட்டிருக்கின்றது. இம்முறையில் இவ்விரண்டிற்கும் பொதுவாய்த் தருமம் என்னும் சொல்லே வழங்கி வருகின்றது. 'இங்குத் தரும சத்தத்திற்கு இரு வகைப்பட்ட தருமங்களையும் பொருளாகக் கொள்ளின், நற்கருமங்களை விடுதல் போன்று தீக்கருமங்களைச் செய்யாமலிருத்தலை விடுதலும்

பொருளெனக் கொள்ள வேண்டி வருமன்ரே? அங்ஙனமாயின், கதவைத் திறந்துவைக்கின் நாய் முதலிய அசுத்தப் பிராணிகள் உட்புகுதல் போன்று, தீக்கருமங்கள் வந்து சேராவோ?' எனச் சிலர் கருதினர்.

அவதாரிகை: அதைப் பரிஹரிக்கிருர் (அச்சங்கையை நீக்குகிருர்):

மூலம்: 206. "'அது கூடாது; 'அதர்மங்களைச்செய்' என்று சொல்லாமையாலே."

பொருள்: அங்ஙனம் தீக்கருமங்கள் வந்து சேருதற்கு வழியில்லை. ஏன்? 'எல்லாத் தருமங்களையும் விடு,' எனச் செப்பியதன்றி, 'தீய கருமங்களைச் செய்' எனச் சொல்லாமையினுலெனக் கொள்க.

அவதாரிகை: 'சொல் அப்பொருளைத் தெளிவாய்க் குறிக்காவிடினும், ஏன் குறிப்பாகக் குறித்ததாகாது?' என்கிருர்:

மூலம்: 207. "தன்னடையே சொல்லிற்ருகாதோ என்னில்."

பொருள்: தரும சத்தத்திற்கு, தீயகருமங்களைச் செய்யாதிருத்தல் என்பது பொருளாயின், 'தருமங்களை விட்டே' என்னுமிடத்தில் தீயவற்றைச் செய்யாதிருத்தலை விடுதல் என்பது ஏன் சொல்லப்பட்டதாகாது? அங்ஙனமாயின், 'அதருமங்களைச் செய்' என்னும் பொருள் தோவில்லையா?

அவதாரிகை: அதற்கு விடை பகருகிருர்:

மூலம்: 208. "ஆகாது. தர்ம சப்தம் அதர்ம நிவ்ருத்தியைக் காட்டாமையாலே."

பொருள்: முற்சூத்திரத்தில் செப்பியபடி, 'தரும' சத்தம் தீய கருமங்களைச் செய்யாதிருத்தல் என்பதைத் தெரிவிக்காது; நற்கருமங்களையே குறிப்பதாகும்.

அவதாரிகை: 'அப்படி ஒருகால் காட்டிற்ருகினும், அஃது இங்குப் பொருந்தாது' என்கிருர்:

மூலம்: 209. "காட்டினுலும், அத்தை ஒழிந்தவற்றைச் சொல்லிற்ருமித்தனை."

**பொருள் :** இம்மைக்கு நன்மை தருவன, மறுமைக்கு நன்மை தருவன ஆகியவற்றைச் செய்யுமிடத்திலேயே தீய செயல்களைச் செய்யாதிருத்தல் ஏற்பட்டிருக்கிறது. அவற்றை விட்டுக் கன்ம ஞான பத்திகளைச் செய் எனக் கீழே உபதேசித்துள்ளான். அவற்றையும் விட்டுத் தன்னையே பற்றுமாறு இங்குக் கூறுகிறான். இந்நிலையில், 'ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய' என்னும் சொல்லிற்குப் பாவங்களைச் செய் என்பதையே கண்ணனுடைய கருத்தாய் எங்ஙனம் கொள்ளக் கூடும் ?

**அவதாரிகை :** 'இங்ஙனம் அதருமத்தை ஒதுக்கிப் பேசுதல் என்ன காரணத்தைக் கொண்டு ?' என்ன, அருளிச்செய்கிறார் :

**மூலம் : 210. "தன்னையும், ஈச்வரனையும், பலத்தையும் பார்த்தால் அவை புகுர வழியில்லை."**

**பொருள் :** இங்குச் சேதனனையும், ஈசுவரனையும், சேதனன் விரும்பும் பலத்தையும் ஊன்றி நோக்கின், அதருமங்கள் புகுதற்கு வழி இல்லை.

**விளக்கம் :** சேதனன் அதருமங்களை மேற்கொள்ளுதல் சேஷியாகிய ஈசுவரனுக்கு வெறுப்பை உண்டாக்குமாதலால், அவனுக்கு விருப்பத்தை விளைவிப்பன தவிர, வெறுப்பளிப்பவற்றை இயற்றுதல் சேதனன் சொரூபத்திற்குச் சேராது. அன்றியும், சேதனன் தன் உய்வின்பொருட்டுச் செய்யும் முயற்சிகளுள் ஒன்றையும் பொருத ஈசுவரனுடைய இயல்பை நோக்கினும் இவன் தீக்கருமங்களில் புகுர வழியில்லை. இவன் செயல் புரிதற்குப் பயன் ஈசுவரனுடைய முகமலர்த்தியேயாதலின், இத்தகைய பலத்தைக் காணினும், தீய செயல்களில் நுழைய இடமில்லை. தருமம் என்னும் சொல் மற்ற இடத்தில் அதரும நிவிருத்தியைக் காட்டினும், இந்த இடத்தில் அதை ஒழிந்தவற்றைச் சொல்லுவதாகவே கொள்ளுதல் வேண்டும். ஆகவே, முற்கூறிய தருமம் என்னும் சொல், நற்றருமங்களைச் செய்தல் என்பதைத்தான் தெரிவிக்கும் என அறிக.

**தொகுப்புரை :** 'பரித்யஜ்ய' என்பதிலிருந்து 'தன்னையும் ஈசுவரனையும்' என்பது வரையுமுள்ள (199—210.) சூத்திரங்களால், மற்றவற்றை விடும் விதம் இன்னது என்பதும்; கொடிய பாதகங்களை விடுதல் போன்று மற்றத் தருமங்களையும் விடுதல் வேண்டும்

என்பது, குளித்தே உணவு கொள்ள வேண்டுமென்பது போன்று, மற்ற உபாயங்களை விட்டே இவ்வுபாயத்தைப் பற்ற வேண்டுமென்பதும்; மற்ற உபாயங்களில் சிறிதும் தொடர்பு இருத்தல் கூடாது என்பதும்; சிறு தொடர்பு ஏற்படினும், சக்கரவர்த்தியைப் போன்று பேற்றை இழப்பதற்குக் காரணமாக நிற்குமென்பதும்; எல்லாத் தருமங்களையும் விடு என்பதனால், அதருமங்கள் வந்து சேராவோ என்னில், அதருமங்களைச் செய் எனக் கூறாமையின், அவை வந்து சேரா என்பதும்; இது தன்னடையே சொல்லிற்றாகாதோ என்னில், தருமம் என்னும் சொல் அதருமங்களின் விடுதலையைக் காட்டாமையின், அது பொருளாகாது என்பதும்; 'ஸர்வ' என்னும் சொல் தருமம் என்பதுடன் சேர்ந்திருத்தலால், இஃது அதருமங்களின் விடுதலையைக் காட்டினாலும், இந்த இடத்தில் அது வேண்டற்பாலதன்றாதலால், அஃதொழிந்தவற்றையே இங்குச் சொல்லுகிறதென்பதும்; அன்றியும், சேதனன், தன் நிலையையும், ஈசுவரன் இயல்பையும், தான் விரும்பி நிற்கும் பலத்தின் பண்பையும் நோக்கின், அவ்வதருமங்கள் நுழைவதற்கு வழியில்லை என்பதும் பகரப்பட்டன.

அவதாரிகை: பின்பு மூன்றாம் பதமான 'மாம்' என்பதை எடுத்துப் பொருள் அருளிச்செய்கிறார்:

மூலம்: 211. "மாம்—ஸர்வரக்ஷகனாய், உனக்குக் கையாளாய், உன்னிசைவு பார்த்து, உன் தோஷத்தைப் போக்யமாகக் கொண்டு, உனக்குப் புகலாய், நீர் சுடுமாப்போலே சேர்ப்பாரே பிரிக்கும் போதும் விடமாட்டதே ரக்ஷிக்கிற என்னை"

பொருள்: எல்லாரையும் காப்பவனாய், அர்ச்சுனனாகிய உனக்குத் தொண்டனாய், உன் உடன்பாட்டை நோக்கி, உன் குற்றத்தைக் குணமாய்க் கொண்டு, உனக்குத் தஞ்சமாய், குளிர்ந்த நீரே சுடுதல் போன்று கூட்டுவிப்பவரே பிரிக்குங்காலும், கைவிடமாட்டாமல் காக்கின்ற என்னை

விளக்கம்: 'மாம்' என்னும் சொல், என்னை என்னும் பொருளை மட்டுந்தான் தரும். ஆயினும், கண்ணன் அருச்சுனனை முன்னிலையாய் வைத்துச் சொல்லும் இந்த இடத்தில் யாவரையும்

காத்தல் முதலிய சிறப்புப் பொருள்களும் தோன்றுமென்பது லோகாசாரியர் திருவுள்ளம். இதை உலகானுபவத்திலும் காண லாம்.

'ஸர்வ ரக்ஷகனாய்': 'நமக்குச் சாரதியாகிய இவன் நம்மைக் காக்குமோ, கைவிடுமோ!' என ஐயங் கொள்ளாதவாறு, யாவரை யும் பாதுகாப்பதில் உறுதியுடையவன் எம்பெருமான் என்பதை இப்பதத்தில் தெரிவிக்கிறார்.

'உனக்குக் கையாளாய்': ஈசுவரன், பெருமிதத்தையும், நம் தாழ்மையையும் பார்த்து, 'இத்தகைய பெரியவன் நம்முடன் கலப் பற்று இருந்துவிடுமோ,' என எண்ணாதவாறு, இழிதொழிலை மேற்கொள்ளும் வேலையாளாய் இருக்கும் அவன் நிலையைத் தெரி விக்கிறது. அர்ச்சுனன், கண்ணனைப் பார்த்து 'இத்தேரை இங்கே நிறுத்து! அங்கே செலுத்து!' எனக் கூறிய போதெல்லாம் அவன் அக்காரியங்களைத் தடையின்றிச் செய்தமையால், பணியாளன் நிலையில் அவன் நடந்துகொண்டான் என்பது நன்றாய்த் தெரிகிறது. இதை ஊன்றி நோக்குங்கால், கண்ணனுடைய சீலம் வெளியாகும்.

'உன் இசைவு பார்த்து': தாயானவள் தன் மக்கள் கேளாத போதும், அவர்களுக்கு வேண்டியவற்றைத் தானே விரும்பிக் கொடுப்பவளாயிருப்பினும், அவர்கள் நோயுற்ற போது, அவர்கள் விரும்பிய காலத்திலேயே ஒன்றைக் கொடுத்துதவுதல் போன்று, ஈசுவரனும் சேதனனுடைய விருப்பத்தை நோக்கியே அவனுக்கு நன்மையை உண்டுபண்ணுகிறவன் என்பதைத் தெரிவிக்கிறது. இதனால், சேதனன் விரும்பும் போது கொடுப்பதுதான் நன்மையாய் முடியுமென்பதைத் தெளியலாம்.

'உன் தோஷத்தைப் போக்யமாகக் கொண்டு': 'பகவான் நம் குற்றத்தைக் கண்டு, நம்மைக் கைவிடுமோ;' என அஞ்ச வேண்டாதபடி கைக்கொள்ளுதற்குக் காரணமான அவனுடைய வாத்ஸல்யம் இங்கு வெளியாகிறது.

வினா: அர்ச்சுனனுக்கும் குற்றம் உண்டோ?

விடை: உண்டு. க்ஷத்திரியன் யுத்த பூமியில் சுற்றத்தா ரிடம் பற்று வைத்து, அவர்களிடம் கருணை காட்டுதல் குற்ற மன்றோ? அன்றியும், யுத்தம் தனக்குத் தருமமாயிருக்க, அதை அதருமம் என நினைத்தது குற்றமன்றோ? இவைகளைக்காட்டினும்,

அர்ச்சுனனுக்கு வேறொரு கொடிய குற்றமுமுண்டு. துச்சாதனன் சிறிதும் மனிதத்தன்மையின்றி, துரோபதையின் ஆடையைக் களையுங்கால், அவள், 'இங்குள்ளார் ஒருவரும் நம் மானத்தைக் காவார்,' என உணர்ந்து, கண்ணனிடம் சரணடைந்தாளல்லவா? அவ்வமயம் அவணிருந்த அர்ச்சுனன், அதற்கு முன் உதவி புரியா விடினும், "கண்ணனைச் சரணடைந்த பாகவதைக்கு நாம் உதவி புரிந்தே ஆக வேண்டும். இன்றேல், நாளைக்கு அக்கிருஷ்ணன் முகத்தில் விழிப்பது எவ்வாறு?" என நினையாமலும், சிறிதும் கலக்கமும் வேறுபாடும் தோன்றாமலும் முன் போலவே இருந்தானல்லவா? இஃது எத்தகைய பெருங்குற்றம்! இதையே கண்ணன் அர்ச்சுனனிடம் ஏற்பட்ட குற்றங்கள் எல்லாவற்றிலும் பிரதான மான குற்றமாய் நினைத்தான்.

'உனக்குப் புகலாய்': தனக்கு, தானும் பிறரும் புகலல்லாத போது, மக்கள் ஒதுங்கி வாழ்வதற்குப் புகலிடமாய் இருப்பவன் ஈசுவரன் என்னும் உண்மை வெளியாகிறது.

**'நீர் சுடுமாப்போலே சேர்ப்பாரே பிரிக்கும் போதும் விடமாட்டாதே ரக்ஷிக்கிற என்னை:'** 'குளிர்ச்சியையே இயல்பாய்ப் பெற்ற தண்ணீரே சுடத் தொடங்குவது போன்று, ஒருகால் உன்னைப் பற்றிப் புருஷாகாரஞ் செய்த அருளே வடிவெனக் கொண்ட பெரிய பிராட்டியாரோ, உன்னிடம் குற்றங் காட்டி அகற்றும் போதும், உன்னை விட மனமற்றவனாய், 'என்னடியார் அது செய்யார்,' என மறுத்து, ஊன்றி நின்று உன்னைப் பாதுகாப்பவனாய் இருக்கும் என்னை,' என இயம்புகின்றான். 'இதனால், பகவான் தன்னைப் பற்றினவரைக் காத்தற்கு ஒரு நிலையாய் நிற்பனோ நில்லானோ!' என்னும் ஐயப்பாடு நீங்குகிறது.

வினா: இச்சூத்திரத்தில் 'ரக்ஷகனாய்,' 'உனக்குப் புகலாய்' என்னும் இரண்டு இடங்களிலும் இரட்சகம் என்னும் கருத்தை யுடைய சொற்களே அமைந்திருத்தலின், இது 'கூறியது கூறல்' என்னும் குற்றத்தின்பாற்படாதோ?

விடை: இஃது இக்குற்றத்தின்பாற்படாது. ஏனெனில், 'ஸர்வரக்ஷகம்' என்பது, தன்னைப் பற்றினவர் நிலைக்கேற்ப அவரவர் வேண்டுவன கொடுத்துக் காக்கும் இரட்சகத்தைச் சொல்லுவதாகும்.

'உனக்குப் புகலாய்' என்பது, இச்சேதனனுக்கு, தானும் இரட்சகன் அல்லன், பிறரும் இரட்சகர் அல்லர் எனக் கருதித் தன் அருளால் இரட்சித்தலைத் தெரிவிக்கிறது.

அவதாரிகை: 'மாம்' என்னும் விபவ ரூபத்தை (கிருஷ்ணனாய் நிற்கும் நிலையை)க் காட்டுகையாலே, கழிக்கப்படுமவற்றை அருளிச்செய்கிறார்:

**மூலம்: 212. "இத்தால்—பரவ்யூஹங்களையும் தேவதாந்தர்யாமித்வத்தையும் தவிர்க்கிறது."**

பொருள்: விபவரூபத்தைக் கொண்டுள்ள தன்னை, பற்றப்படும் பொருளாய்ச் சொல்லிய இத்தால், பரத்துவ நிலையையும், வியூக நிலையையும், மற்றத் தேவதைகளிடத்தில் அந்தரியாமியாயிருக்கும் நிலையையும் கழிக்கிறது.

விளக்கம்: இங்ஙனம் கண்ணன் இவ்வுலகில் தோன்றி, அர்ச்சுனனுடைய கண்ணுக்கிலக்காய், அவன் அருகில் நிற்கும் தன்னைச் சுட்டிக் காட்டி, தானே சரணமாய் வரிக்கத் தகுந்தவன் எனக் கூறியதனால், சேதனரால் காணவும் அணுகவும் இயலாமலிருக்கும் பரமபதம் பாற்கடல்களிலுள்ள எம்பெருமான்களையும், தனக்கெனச் சிறப்பாய் அமைந்த திருமேனியன்றி, கன்ம ஞான பத்திகளாகிற வேறு உபாயங்களை மேற்கொண்டவர்கள் பற்றும் அங்கி இந்திரன் முதலிய தேவதைகளுக்கு அந்தரியாமியாய் இருக்கும் நிலையையும் ஒதுக்கிச் சொல்லுகிறான் எனக்கொள்க.

அவதாரிகை: தருமங்களை எல்லாம் விட்டுத் தன்னைப் பற்றச் சொல்லுகின்றமையின், இதில் கிடைக்கும் பொருளைச் சொல்லுகிறார்:

**மூலம்: 213. "தர்ம ஸம்ஸ்த்தாபநம் பண்ணப் பிறந்தவன்தானே 'ஸர்வ தர்மங்களையும் விட்டு என்னைப் பற்று' என்கையாலே, ஸாக்ஷாத் தர்மம் தானே என்கிறது."**

பொருள்: தருமத்தை நிலைநாட்டுதற்கெனவே வந்துதித்த அக்கண்ணனே, 'மோட்சத்திற்குச் சாதனங்கள் எனக் குறித்த எல்லாத் தருமங்களையும் விட்டு, என்னை ஒருவனையே பற்று,' எனக்

கூறுகின்றமையின் அவனே ஸாட்சாத் தருமம் என்பது தெரிகிறது. இதனல், அவை யாவும் நேரே பயனைக் கொடுக்கும் தருமங்கள் அல்ல என்பதும், இவன் ஒருவனே நேரே பயனைக் கொடுக்கக் கூடிய தருமம் என்பதும் தெள்ளிதின் புலப்படவில்லையா? ஈண்டு,

"அறவாழி யந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்த லரிது.."

என்னும் பொய்யாமொழியை நோக்குக.

அவதாரிகை: 'இதனல் சொல்லுகிறது யாது?' என்ன, அருளிச்செய்கிருர்:

**மூலம்: 214. "இத்தால் விட்ட ஸாதநங்களின் ஏற்றஞ் சொல்லுகிறது."**

போருள்: இதனல், விட்ட உபாயங்களாகிற கன்ம ஞான பத்திகளைக்காட்டிலும், ஈசுவரனுகிற இவ்வுபாயத்திற்கு உள்ள ஏற்றம் சொல்லப்படுகிறது.

அவதாரிகை: 'அதுதான் யாது? என்ன' அருளிச்செய் கிருர்:

**மூலம்: 215. "அதாவது-ஸித்தமாய் பரம சேதநமாய், ஸர்வ சக்தியாய், நிரபாயமாய், ப்ராப்தமாய், ஸஹாயாந்தர நிரபேக்ஷமாயிருக்கை."**

போருள்: ஈசுவரனுகிற இவ்வுபாயம், சேதனின் முயற்சியினல் கைகூடுவதாய் இல்லாமல், பழமையாயுள்ள தருமமாகையால், சித்தமாய், மேலான ஞானமுடையதாய், எல்லா வன்மைகளையும் பெற்றிருப்பதாய், சேதனனுல் இயற்றப்படாததாய் இருத்தலின், யாதோர் அபாயமுமற்றதாய், பாதந்திரனுன சேதனனுடைய சொரூபத்திற்கு ஏற்றதாய், வேருெரு துணையையும் விரும்பாததாய் இருப்பதாகும்.

அவதாரிகை: வேருெரு துணையும் வேண்டாமலிருப்பதை ஆதாரத்துடன் உறுதிப்படுத்திக் காட்டுகிருர்:

**மூலம்: 216. "மற்றை உபாயங்கள் ஸாத்யங்களாகையாலே, ஸ்வரூப ஸித்தியில் சேதநனை அபேக்ஷித் திருக்கும்; அசேதநங்களுமாய் அசக்தங்களுமாயிருக்**

கையாலே கார்ய ஸித்தியில் ஈச்வரனை அபேக்ஷித் திருக்கும் ; இந்த உபாயம் அவற்றுக்கு எதிர்த்தட் டாயிருக்கையாலே, இதர நிரபேக்ஷமாயிருக்கும்."

பொருள் : கன்மஞான பக்திகளாகிற மற்ற உபாயங்கள், முற்கூறியவாறு சேதனன் முயற்சியினுலேயே நிறைவேறத் தக்கனவாய் இருத்தலின், அவை, தாம் முற்றுப் பெறுதற்கு முயற்சி செய்பவனுன சேதனனை எதிர் நோக்காநிற்கும். அவை இச்சேதன னுக்குச் செய்ய வேண்டுவனவற்றை அறிகைக்கும், அவற்றைச் செய்து நிறைவேற்றுகைக்கும் தக்க ஞான சத்திகளைப் பெறுதிருத் தலின், சேதனன் வெறுப்பதைப் போக்கி, விரும்புவதைக் கூட்டி அவனைப் பாதுகாக்குங்கால், பேரறிவும் மிக்க வன்மையும் வாய்ந்த ஈசுவரனை எதிர்பாராநிற்கும். எம்பெருமானுகிற உபாயமோ, பேரறிவும் மிக்க வன்மையுமுடையதாயிருத்தலின், இவனைப் பாது காக்குங்கால், வேருென்றையும் எதிர் பார்க்க வேண்டுவதில்லை. ஆகையால், இது வேருெரு துணையையும் விரும்பாததாயுமிருக்கும்.

அவதாரிகை : இப்பதத்தில் பகவானைப் பற்றுதற்குறுப்பான குணங்கள் ஒளிருகிறபடியைப் பகருகிருர் :

மூலம் : 217. "இதிலே வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌசீல்ய ஸௌலப்யங்களாகிற குண விசேஷங் கள் நேராக ப்ரகாசிக்கிறது."

பொருள் : கண்ணன் தன்னைச் சுட்டிக் காட்டி என்னை (மாம்) எனக் கூறும் இப்பதத்தில், சேதனன் அவனைப் பற்றுதற்கு உதவி புரியாநிற்கும் வாத்ஸல்யம், ஸ்வாமித்துவம், ஸௌசீல்யம், ஸௌலப்பியமாகிற இந்நான்கு குணங்களும் நன்கு வெளிப்படு கின்றன.

விளக்கம் : அதரும புத்தியாலே க்ஷத்திரியனுகிய தனக்குத் தருமமாய் ஏற்பட்ட போரைச் செய்யப் பின்னடைந்து, குற்றம் தேடிக்கொண்ட அர்ச்சுனனுடைய பிழையைச் சிறிதும் நோக் காமல், அவனுக்கு இன்றியமையாது வேண்டற்பாலனவாகிய தேகான்ம விவேகம் முதல் பிரபத்தி ஈருயுள்ள சிறந்த அர்த்தங் களை அருளிச்செய்கையால், வாத்ஸல்யம் வெளிப்படுகிறது. தன் மேலான பரத்துவ நிலையைப் பன்முறையும் எடுத்துரைத்தது

மட்டுமேயல்லாமல், தன் விசுவரூபத்தையும் அர்ச்சுனன் காணு மாறு செய்ததனுல் ஸ்வாமித்துவம் ஒளிருகிறது. இத்துணைப் பெரியோன், அர்ச்சுனன், தன்னைக் 'கரியன், முடி சூடுதற்குத் தகுதியற்றவன்' என்னும் பொருள்பட 'ஹே கிருஷ்ண, ஹே யாதவ' என அழைக்குமாறு அவனேடு மிக எளிமையாய்க் கலந்து உறவாடுகையினுல், ஸௌசீல்யம் பிரகாசிக்கிறது. மனனசீலமுடைய முனிவராலும், மற்றும் பல பெரியோராலும் காண இயலாததும், அழிவற்றதும், ஒருவராலும் உண்டாக்கக் கூடாததுமான தன் திருமேனியை அர்ச்சுனன் கண்ணிற்கு இலக்காகுமாறு செய்தமையால், ஸௌலப்பியம் ஒளிர்கிறது. இதைக் குறித்துத் துவயப் பிரகரணத்தில் விரிவாகக் கூறியுள்ளோம்.

சேதனன் பற்றுதற்கு வேண்டற்பாலன என்பது தோன்ற, குண விசேஷங்கள் என்றும், தெளிவாய்ப் பிரகாசிக்கின்றமையின், நேராகப் பிரகாசிக்கிறது என்றும் லோகாசாரியர் கூறுகிருர்.

அவதாரிகை: இங்குச் சொல்லப்படும் ஸௌலப்பியம், இவ்வுலகில் யாவர் கண்ணிற்கும் காட்சி அளித்த அவதாரத்தளவோடு நில்லாமல், அதனினும் எளிமையாகச் செல்லுகிறது. அதை 'மாம்' என்னும் பதம் காட்டியமையைத் தெரிவிக்கிருர்:

**மூலம்: 218. "கையும் உழவுகோலும், பிடித்த சிறுவாய்க் கயிறும், ஸேநாதூளி தூஸரிதமான திருக்குழலும், தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய் நிற்கிற ஸாரத்ய வேஷத்தை 'மாம்' என்று காட்டுகிருன்."**

பொருள்: அர்ச்சுனனுடைய தேரிற்கட்டிய குதிரைகளைத் தூண்டி நடத்துவதற்கு ஒரு கையில் பிடித்த கசைக்கோலும், அவற்றை இடம் வலமாகத் திருப்புதற்கும் வேண்டும் இடத்தில் நிறுத்துதற்கும் மற்றொரு கையில் பிடித்த குதிரைவாய்க் கயிறும், சேனைகள் நடப்பதனுல் கிளம்பிய தூசு படிந்திருக்கும் குழலும், தேருக்குக் கீழே தொங்கவிட்ட சதங்கை அணிந்த திருவடிகளுமாய் நிற்கும் தன் தேர்ப்பாக வேடத்தையே, கண்ணன் 'மாம்' (என்னை) என்று சுட்டிக் காட்டுகிருன். இவற்ருல், சேதனன் ஈசுவரனைப் பற்றுதற்கு வேண்டிய குண விசேஷங்கள் யாவும் 'மாம்' என்னும் பதத்தில் தெளிவாய்ப் பிரகாசிக்கின்றன என்பதை அறிந்தோம்,

தொகுப்புரை : "மாம் ஸர்வரக்ஷகனாய்" என்னும் சூத்திரத்தி லிருந்து, "கையும் உழவு கோலும்" என்னும் சூத்திரம் வரையும் (211—218) செப்பியவற்றான், மாம் என்னும் பதத்திற்குப் பொருள் இன்னதென்றும்; இங்குக் கண்ணன் தன்னைச் சுட்டிக் காட்டுகின்றமையின், பகவானுடைய மற்ற நிலைகள் கழிக்கப்படு கின்றனவென்றும்; பரமபுருஷனாகிற பகவானே சிறந்த தருமம் எனப் புலப்படும் விதம் இஃது என்றும்; இதனால், மற்றத் தருமங் களைக்காட்டிலும் இதற்குள்ள ஏற்றங்கள் இன்னவை என்றும்; இப்பதத்தில் இன்ன குணங்கள் பிரகாசிக்கின்றன என்றும்; தன் சாரத்திய நிலையில் உள்ள எளிமையை 'மாம்' என்று காட்டுகின் றான் என்றும் அறிந்தாம்.

அவதாரிகை : மூன்றாம் பதத்தின் பொருளை முடித்த பின்பு நான்காம் பதத்தை எடுத்துப் பொருள் கூறுகிறார் :

**மூலம் : 219—220. "ஏகம்." "இந்த ஏக சப்தம் ஸத்தாந ப்ரமாணத்தாலே அவதாரணார்த்தத்தைக் காட்டுகிறது."**

பொருள் : 'ஏகம்' என்பது 'ஏ' என்பதன் பிரிநிலைப் பொரு ளைக் குறிக்கும். 'ஏகம்' என்னும் சத்தத்துடன் 'மாம்' என்னும் சொல்லையும் சேர்த்து நோக்கின், 'என்னை ஒருவனையே' என்னும் பொருளைத் தரும். இச்சத்தம் பிரணவத்தின் உகாரம் போன்றே பிரிநிலைப் பொருளைத் தந்து நிற்கிறது.

அவதாரிகை : "இங்கு 'ஏக' சத்தத்திற்கு பிரிநிலைப் பொரு ளைக் கொண்டதற்கு ஆதாரம் உண்டோ?" என்ன, அவ்வாதா ரங்களாகிற சான்றுகள் பலவற்றையும் எடுத்தியம்புகிறார் :

**மூலம் : 221. "'மாமேவ யே ப்ரபத்யந்தே', 'தமேவ சாத்யம்' 'த்வமேவோபாய பூதோமே பவ' 'ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்' என்று சொல்லுகிறபடியே."**

பொருள் : 'யாவர் சிலர் என்னையே பற்றுகிறார்களோ' என் றும், 'அந்த ஆதிபுருஷனையே பற்றி' என்றும், 'நீயே எனக்கு உபாயமாக வேண்டும் என்றும், 'எனக்கு உபாயம் தருகிற

இடத்தில் உன் திருவடிகளையே உபாயமாய் அளித்தாய்' என்றும் சொல்லுவதைப் போன்றே, இங்கும் ஏக சத்தத்திற்குப் பிரிநிலைப் பொருளே தேர்ந்த பொருளாய்ச் சொல்லப்பட்டுள்ளது.

விளக்கம் : இங்கு உதாரணமாய்க் காட்டப்பட்ட 'மாமேவ' 'தமேவ' 'த்வமேவ' 'நின்பாதமே' என்பன போன்றே 'மாமேகம்' என்பதையும் உற்று நோக்குக.

"முற்கூறிய இடங்களில், உபாயப் பொருளைக் குறிக்கும் சொல்லைச் சேர்ந்தே 'ஏவ' 'ஏ' என்னும் சத்தங்கள் இருப்பது போன்று, இங்கும் 'மாம்' என்னும் சொல்லைச் சேர்ந்தே 'ஏகம்' என்பது பார்க்கப்படுதலால், இதற்கும் பிரிநிலைப் பொருளைக் கொள்வதே பொருத்தமாகும்," என ஆசாரியர்கள் திருவுள்ளம் பற்றுகின்றார்கள்.

அவதாரிகை : இவ்வேக சத்தத்தால் கழிக்கப்படுவது இன்னது என்கிறார் :

**மூலம் : 222. "இத்தால், 'வ்ரஜ' என்கிற ஸ்வீகாரத்தில் உபாயபாவத்தைத் தவிர்க்கிறது."**

பொருள் : இவ்வேக சத்தத்தால், 'வ்ரஜ' என்னும் வினைச் சொல்லில் குறிக்கப்படும் பற்றுதலுக்குள்ள உபாயத்தன்மை கழிக்கப்படுகிறது.

விளக்கம் : வினா : இங்கு ஏக சத்தம் கன்ம ஞான பத்திகளைக் கழிக்கிறது என்று கொண்டால்தான் குற்றம் என்ன?

விடை : அங்ஙனங்கொள்ளின், இது 'ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய' என்னும் சொற்றொடரிலேயே கூறப்பட்டமையின், இங்கு அப்பொருளையே கொள்ளுதல் கூறியது கூறல் என்னும் குற்றத்தின்பாற்படும்.

வினா : அஃதிருக்கட்டும். இச்சொல் மற்றத் தேவதைகளை உபாயமாகப் பற்றுதலையே தவிர்க்கிறது என்னில் என்ன?

விடை : 'மாம்' என்று தனக்கெனச் சிறப்பாய் ஏற்பட்ட தன் அவதார வடிவத்தைச் சுட்டிக்காட்டிய அப்போதே அத்தேவதாந்தரங்கள் கழிக்கப்பட்டமையின் அஃதும் இங்குக் கொள்ளத் தக்கதன்று.

வினா: சரி, நீங்கள் சொல்லுகிறபடி பற்றுதலை உபாயம் என நினைக்க இடமுண்டோ?

விடை: 'ஈசுவரனைப் பற்றினால்தான் மோட்சம் உண்டாகும். பற்றவில்லையேல் அஃதுண்டாகாது' என்றிருத்தலின், பற்றுதல் தான் மோட்சமடைவதற்குச் சாதனம் என நினைப்பதற்கு இடமேற்படும். ஆதலின், இவ்வுபாய புத்தியைக் கழிக்க வேண்டுவது இன்றியமையாததாகும். அதைக் கழிப்பதற்குத்தான் இந்தச் சத்தம் இங்கு வந்துள்ளது.

அவதாரிகை: 'சேதனன் ஈசுவரனைப் பற்றினாலல்லாமல் ஈசுவரனாகிற உபாயம் பயனளியாமையின், இப்பற்றுதல் பேற்றிற்கு அவசியம் வேண்டற்பாலதாயிருக்க, இஃது உபாயமன்று எனக் கழித்தல் யாங்ஙனம்?' என்ன, அதற்கு விடை பகருகிறார்:

**மூலம்: 223. "ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது."**

பொருள்: சேதனன், ஈசுவரனைப் பற்றிய பின்பு இவன் துன்பம் நீங்கி இன்பம் பெறுதல் எங்ஙனம் அந்த ஈசுவரனாலேயே ஏற்படுகின்றதோ, அங்ஙனமே இவை இரண்டிற்கும் முன்புண்டான பற்றுதலும் அவனாலேயே உண்டாகின்றது என அறிக. ஆதலின், சேதனன் ஈசுவரனைப் பற்றுதலாகிய செயலும் உபாயமான எம்பெருமானாலேயே ஏற்படுகின்றமையின், அப்பற்றுதலுக்கு உபாயத்தன்மை இல்லையெனக் கொள்ளுதல் வேண்டும். இதைச் சுருங்கக் கூறின், துன்பம் நீங்கி இன்பம் பெறுதல் எங்ஙனம் ஈசுவரனாலேயே இவனுக்கு நிகழ்கின்றதோ, அங்ஙனமே இவன் பற்றும் பற்றுதலும் நிகழ்கின்றது எனத் தேறும்.

அவதாரிகை: 'அவனாலேயே நிகழும் என்பது எவ்வாறு பொருந்தும்?' என்ன, அருளிச்செய்கிறார்:

**மூலம்: 224. "ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷி பலம்."**

பொருள்: சிருஷ்டியாவது, சீவனுக்குக் கண்முதலிய இந்திரியங்களோடுங் கூடிய சரீரத்தை உண்டுபண்ணி அவ்வழியால் அறிவை மலரும்படி செய்தல்.

அவதாரமாவது - பரம புருஷன் இவ்வுலகில் இராமன் கிருஷ்ணன் என்னும் திவ்விய மங்கள விக்கிரகத்தோடு பிறத்தல்.

ஆதி என்பது, ஆழ்வாராசாரியர்களை அவதரிக்கும்படி செய்தலைக் குறிக்கும்.

இம்முறையில் ஈசுவரன் பண்ணின கிருஷிகளின் பலனே, இச்சேதனன் பற்றும் இப்பற்றுதலாகும்.

விளக்கம்: யாவருக்கும் சுவாமியான ஈசுவரன், நித்திய முத்தர்களோடு பரமானந்தத்தை அனுபவித்துக்கொண்டிருப்பினும், அவர்களைப் போன்றே தன்னை அனுபவித்தற்கு உரிமை வாய்ந்த இவ்வுலக மக்கள் பலர், அப்பேற்றை இழந்து துன்பத்திலுழன்று கொண்டிருக்கும் நிலையைக் கண்டு, மிக்க துக்கமுடையனாய், இவர்கட்குக் கரணகளேபரங்களைக் கொடுத்து, ஞானத்தை மலரச் செய்து, ஒரு காரியத்தைச் செய்தல் தவிர்தல் ஆகியவற்றிற்கு ஏற்ற வன்மைகளையும் தந்து, நன்மை தீமைகளை அறிதற்கேற்ற விளக்குப் போன்ற வேதம் முதலிய சாத்திரங்களையும் வெளியிட்டருளினான். இச்சாத்திரங்களைக் கற்பதற்குத் தகுதியும், நீண்ட காலமும், பொறுமையும், விடாமுயற்சியும் இன்றியமையாதனவாதலின், இச்சாத்திரங்கள் நம் போன்றார்க்குப் பயனளித்தல் அரிதாயின. இங்ஙனம் இவை பயன்படாத போது, தன் ஆணைகளுக்குக் கட்டுப்பட்டு நடவாத குடிகளைத் தானே நேரிற் சென்று அடக்கும் மன்னனைப் போன்று, பகவான் இராமகிருஷ்ணாதி அவதாரங்களை எடுத்து இவர்களோடு புரையறக் கலந்து திருத்த முயன்றான். அப்போதும் மக்கள் அப்பகவானைத் தம்மைப் போன்று பிறந்து இறக்கும் ஒருவனென்றே நினைத்தமையின், தன் இன்னருளால், மானைக் காட்டி மானைப்பிடிப்பாரைப் போன்று ஆழ்வார்களை அவதரிப்பித்தான். அவர்கள் பகவானுடைய சொரூப ரூப குண விபூதிகளை அவன் காட்டக் கண்டு அன்போடு அனுபவிக்குங்கால், அவ்வனுபவம் உள்ளடங்காமல் வெளிப்பட்ட வார்த்தைகளே அவர்களின் அருளிச்செயல்களாகும். இவ்வருளிச் செயல்களில், நாம் இன்றியமையாது தெரிந்துகொள்ள வேண்டுவனவாகிய அவ்வாழ்வார்களுடைய திருவுள்ளக் கருத்துகள் பொதிந்திருக்கின்றமையின், இவற்றின் பொருள் நுட்பங்களாகிய ஆழ்வார்களின் அகக்கருத்துகளை ஆசாரியர்களைக் கொண்டு வெளியிட்டருளினான். இவற்றின் மூலமாய் ஈசுவரன் பண்ணின கிருஷியின் பலனே, இச்சேதனன் அவனைப் பற்றும் இப்பற்றுதலாகும்.

அவதாரிகை : சேதனன் ஈசுவரனைப் பற்றுவதும் அப்பகவானுடைய அருளினலேயே ஆகும் என்பதற்குப் பிரமாணங் காட்டுகிருர் :

**மூலம் : 125. "அதுவும் அவனதின்னருளே."**

இச்சூத்திரத்தின் பொருளை அவதாரிகையிலேயே கூறிவிட்டமையின், இதற்கு விளக்கத்தைச் செப்புவாம் :

விளக்கம் : "ஞானத்தில் உயர்ந்த நித்திய சூரிகளுக்குத் தலைவனை அப்பகவானை அவனுடைய அருளால் அடைதற்பொருட்டு என் ஞானத்துள்ளே அவனை இருத்தினேன். அங்ஙனம் இருத்த வேண்டுமென்னும் ஞானம் எனக்குப் பிறந்ததும் அவன் கிருபையாலேயே ஆகும்," என்னும் கருத்தை ஆழ்வார் கீழ்ப்பாசுர வடிகளால் தெரிவிக்கிருர் :

"உணர்விலும்ப ரொருவனை யவனதருளா லுறற்பொருட்டென்
உணர்விலுள்ளே யிருத்தினே னதுவுமவன தின்னருளே."

இதிலிருந்து சேதனன் ஈசுவரனை உபாயமாகப் பற்றுதலும், அவன் அருளினலும், அவன் செய்யும் முயற்சியினலுமே ஏற்படுகிறதென அறியப்படுதலின், சேதனன் இப்பற்றுதலில் உபாய புத்தியை அறவே ஒழித்தல் வேண்டும் எனக் கொள்க.

அவதாரிகை : இங்ஙனம் இருத்தலின், இப்பற்றுதலில் உபாயத்துவ புத்தியை ஒழிக்கக் கடவன் என்கிருர் :

**மூலம் : 226. "இத்தை ஒழியவும், தானே காரியஞ் செய்யும் என்று நினைக்கக்கடவன்."**

பொருள்: இங்ஙனம் சேதனன், ஈசுவரனை அவனைப் பற்றுதற்கும், அவனே செயல் புரிபவனாய் இருத்தலின், "அவனைப் பற்றியதற்காகவன்று அவன் நமக்குக் காரியஞ் செய்வது! அவனைப் பற்ருவிடினும் நம் ஆன்ம உய்வில் கண்ணுங் கருத்துமாயுள்ள அவனே, நாம் துன்பங்கள் நீங்கி இன்பங்களடைதற்கேற்ற காரியங்களை நிச்சயமாகச் செய்வான்," எனச் சேதனன் உறுதியாக நினைக்கக் கடவன்.

அவதாரிகை: 'இங்ஙனம் சேதனன் நினைக்க வேண்டுமென்பது என்?' என்ன, அருளிச்செய்கிறார்:

மூலம்: 227. "அல்லாத போது உபாயநைரபேக்ஷ்யம் ஜீவியாது."

பொருள்: இச்சேதனன் இங்ஙனம் நினையாமல், 'ஈசுவரன் தனக்கு நன்மை புரிதற்குத் தன் பற்றுதலும் வேண்டும்,' என நினைக்கில், சிறு உதவியையும் விரும்பாத அபேட்சையற்ற தன்மை ஈசுவரனுக்கு நிலை நிற்காது.

அவதாரிகை: 'இம்முறையில் இவன் பற்றும் பற்றுதல் உபாயமன்று என்னில், இப்பற்றுதலினால் உண்டாகும் பயன் தானென்னை?' என்ன அருளிச்செய்கிறார்:

மூலம்: 228. (1) "இது ஸர்வ முக்தி ப்ரஸங்க பரிஹா ரார்த்தம்; (2) புத்தி ஸமாதாநார்த்தம்; (3) சைதந்யகார்யம்; (4) ராகப்ராப்தம்; (5) ஸ்வரூப நிஷ்டம்; (6) அப்ரதி ஷேதத் யோதகம்."

பொருள்: (1) சேதனனிடம் ஒரு செயலும் இன்றிக்கே இருக்க, ஈசுவரன் தானே சிலரை உய்யச் செய்யில், 'என் பகவான், எல்லாரையும் முத்தர் ஆக்குதல் கூடாது?' என்னும் வினாவைத் தடுத்தற்கு இப்பற்றுதல், இன்றியமையாது வேண்டற்பாலதாயுள்ளது.

(2) 'இத்தனை காலம் நம்மை இரட்சியாது கைவிட்டிருந்தவன், இன்று நம்மைப் பாதுகாப்பான் என நாம் நினைத்தல் எதைக் கொண்டு?' எனச் சேதனன் மனந்தளராமல், 'நாம் இப்போது ஈசுவரனைப் பற்றினோம். இனி நம் உய்விற்குக் குறைவில்லை,' என இவனுக்கு மனச் சமாதானம் ஏற்படுதற்குக் காரணமாயுள்ளது.

(3) இவனுடைய அறிவின் செயலாயுள்ளது.

(4) கன்ம ஞான பத்திகளைக்காட்டிலும் எளிதாயிருத்தலின், சேதனன் விரும்புமதாயிருக்கிறது.

(5) பரம புருஷன் ஒருவனுக்கே இரட்சயப் பொருளாயிருக்குந்தன்மை சொரூபமெனப்படும். அச்சொரூபத்தில் நிற்பதேயாகும்.

(6) ஈசுவரன் பண்ணின இரட்சணத்தை இதுகாறும் விலக்கிப் போந்த இவன், அது தவிர்ந்தமைக்கு அறிகுறியாயிருக்கிறது.

1. விளக்கம் : வினு : முதல் வாக்கியத்தின் பொருளில், 'ஈசுவரன் ஏன் எல்லாரையும் முத்தராக்குதல் கூடாது?' என்னும் வினவைத் தடுத்தற்கு என்றீர்கள், அதற்குக் கருத்து என்னே?

விடை : ஈசுவரன் யாவரையும் உய்விக்கவே முன்னிற்கிறுன். ஆனுல், சேதனன் அவ்வுய்விற்குத் தகுதியுடையவனுயிருத்தல் வேண்டியிருக்கிறது. ஆதலின், இப்பற்றுதல் சேதனனுடைய தகுதியைத் தெரிவிப்பதாகும். ஏனெனில், ஒருவன் ஒரு காரியத்திற்குத் தகுதியற்றவனுயின், அக்காரியம் அவனுக்குப் பயனளியாமல் போதல் மட்டுமேயன்றி, தீங்கையும் விளைவிக்கிறது. இதற்குச் திரிசங்கு சரிதமே சான்ருகும்.

திரிசங்கு ஒருகால் தன் குருவாகிய வஸிஷ்டரிடம் சென்று, தான் சரீரத்துடன் சுவர்க்கம் செல்ல விரும்புவதாகவும், அதற்கேற்ற காரியங்களைச் செய்து தன்னைச் சுவர்க்கத்திற்கேற்ற வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டான். அவர், 'இச்சரீரத்தோடு சுவர்க்கம் செல்வதற்கேற்ற தகுதி உன்னிடமில்லை. ஆதலின், நீ அதை ஆசைப்படுதல் நல்லதன்று' என்றனர். பின்பு, அவன் வஸிஷ்டர் புதல்வர்களிடம் சென்று தன் விருப்பத்தைத் தெரிவித்தான். அவர்களும் அங்ஙனமே சொல்லிவிட்டார்கள். அவர்களிடம் கோபங்கொண்ட திரிசங்கு, விசுவாமித்திரரிடம் சென்று தன் கருத்தை வெளியிட்டான். 'அவர், அவன் சுவர்க்கம் அடைதற்கீடான யாகத்தைச் செய்து அவனைச் சுவர்க்கத்திற்கேற்றினுர். ஆனுல், அவணிருந்த இந்திரன் முதலானேர் அவனைத் தலைகீழாகத் தள்ளிவிட்டனர்'. அவ்வமயம் விசுவாமித்திரர் தம் தவவன்மையினுல் அவனை அந்தரத்தில் நிறுத்தினுர். அதனுற் திரிசங்கு அப்பதவிக்குத் தகுதியற்றவனுயிருந்தமையின், அவன் தான் விரும்பிய சுவர்க்கப் பதவியை அடைய முடியாமற்போனது மட்டுமேயன்றி, என்றும் தலைகீழாய் அந்தரத்தில் தொங்கும் துன்ப நிலையும் அவனுக்கு ஏற்பட்டது. இங்ஙனமே, பத்தனுக்கும் பிரபன்னனுக்கும் பொதுவான தகுதியுடைமை முமுட்சுத்துவமாகும். பிரபன்னுக்கே உள்ள தகுதியுடைமையோ, ஆகிஞ்சன்னிய அனன்னியகதித்துவங்களாகும். இவன் ஈசுவரனை இம்முறையில் பற்றும் போது இத்தகுதியுடைமை இவனுக்குச் சித்தித்துவிடும்.

2. வினு: இரண்டாம் வாக்கியத்திற்கு நீங்கள் சொன்ன பொருளேக் காணுங்கால், இவன் பற்றுதல்கூட உபாயம் எனத் தோன்றுகிறதே! இதன் கருத்தென்னே?

விடை: பற்றுதல் உபாயம் என்பது பொருளன்று. "நெடுங் காலமாய்ப் பகவான் நம்மை இரட்சியாதொழிந்தது, நம் தகுதி யற்ற தன்மையாலேயேயாகும். ஆதலின், இப்பற்றுதலே நம் மைத் தகுதியுடையவனுகச் செய்கிறது," என்னும் நினைப்புத் தோன்றி, இவனுடைய மனக் கலக்கத்தைத் துடைக்கிறது. இஃதே இங்குக் கருத்தாகும்.

3. வினு: பகவானைப் பற்றுதல் ஞானத்தின் காரிய மென்று சொன்னீர்கள். அந்த ஞானம் எதை விஷயப் பொரு ளாய்க் கொண்டுள்ளது? அந்த ஞானத்தின் காரணமாய் இப்பற் றுதல் ஏற்படுதல் யாங்ஙனம்?

விடை: இதை ஓர் உதாரணமுகத்தான் விளக்குவோம்: வேல் வெட்டிப் பிள்ளை, நம்பிள்ளையை நோக்கி, 'சக்கரவர்த்தித் திருமகன் கடலைச் சரணம் புகுங்கால், தருப்பைகளைப் பரப்பி, கிழக்கு முகமாய்ச் சயனித்திருந்து பிரபத்தி செய்தமையால், கன் மம் முதலிய உபாயங்களைப் போன்றே, இதற்கும் சில நியமங்கள் வேண்டியிருக்கின்றனவோ?' என வினவினர். அதற்கு நம்பிள்ளை, 'பெருமாளிடம் காணப்பட்ட இந்நியமங்கள் பிரபத்தி உபாயத் திற்கு வேண்டுவனவல்ல. ஆனல் அவ்வுபாயத்தை மேற்கொண்ட பெருமாள் தம் குலத்திற்கும் இயல்பிற்கும் ஏற்பச்சில காரியங் களைமேற்கொண்டார் எனக் கொள்ளல் வேண்டும். ஏனெனில், அதே காலத்தில் பெருமாளைச் சரணடைய வந்த விபீஷணன் கடலில் ஒரு முழுக்கிட்டேனும் வந்தானில்லையே! ஆதலின், மக்கள், 'அவரவர்கள் நின்ற நிலையிலேயே பிரபத்திக்கு அதிகாரிகளாக லாம் என அறிதல் வேண்டும்,' என இயம்பினர்.

மேற்குறிப்பித்த பெருமாள் செயல் எங்ஙனம் பெருமாள் நிலைக்கு ஏற்பப் பார்க்கப்படுகின்றதோ, அங்ஙனமே சொரூப ஞானம் பெற்றவனுன இவன் செயலும் இவனுடைய அறிவிற் கேற்ப அமையும். ஆனல், இது சாதனமாகச் செய்யப்படுகிறது எனக் கொள்ளுதல் கூடாது.

அவதாரிகை: இனி 'மாம்' என்னும் பதத்திற்கு முன்னுள்ள பதங்களிலும், பின்னுள்ள 'ஏகம்' என்னும் இப்பதத்திலும் ஈசுவரனுடைய செயல்களை அருளிச்செய்கிறார்:

**மூலம்: 229. "கீழ் தானும் பிறருமான நிலையைக் குலைத்தான், இங்குத் தானும் இவனுமான நிலையைக் குலைக்கிறான்."**

பொருள்: 'மாம்' என்னும் பதத்திற்கு முன்னுள்ள "ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய" என்னுமிடத்தில் எல்லாத் தருமங்களையும் விடச் சொல்லுகின்றமையின், பலன் தரும் தானும், மற்றத் தருமங்களும் சேர்ந்திருக்கும் நிலையை அறவே ஒழித்தான். "ஏகம்" என்னும் இப்பதத்திலோ, உபாயபூதனான தானும், "நாம் ஈசுவரனைப் பற்றி னால்தான் பேறடையலாம்," எனத் தன் பற்றுதலை உபாயமாகக் கருதி நிற்கும் சேதனனும் கலந்திருக்கும் நிலையை முற்றும் ஒழிக்கிறான். இதனால், ஈசுவரன் உபாயமாகும் போது வேறோர் உபாயமும் வேண்டுவதில்லை என்பதை அறிந்தாம்.

"யான் என் ஆன்ம உய்விற்காக என்ன முயற்சியைச் செய்ய வல்லேன்! தம் காரியத்தையே தாமறியாதவர்களுள் எனக்கு இரட்சகர் ஆவார்தாம் யார்? இங்ஙனம் வன்மையற்றும், ஆதரவற்றும் இருக்கும் என்னை, என்ன செய்ய இருக்கிறாய்? யானோ, யாவரையும் காப்பவனும், எல்லா வன்மையும் வாய்ந்தவனுமான உன்னை ஒழிய, என் குறையைப் போக்குமாறு வேறு எவரையும் வேண்டி நில்லேன்," என ஆழ்வார் திருவாய் மலர்ந்தருளுகிறார். இக்கருத்தைக் கீழ்க் குறிப்பிடும் பாசுரத்தால் அறிக:

"என்னான் செய்கேன் யாரே களைகண்
என்னையென் செய்கின்றாய்
உன்னா லல்லால் யாவ ராலும்
ஒன்றும் குறைவேண்டேன்."[1]

அவதாரிகை: இவன் உபாயமெனக் கருதிச் செய்வதாகிய ஈசுவரனைப்பற்றும் பற்றுதலின் குற்றத்தை அருளிச்செய்கிறார்:

**மூலம்: 230. "அவனை இவன் பற்றும் பற்று அஹங்கார கர்ப்பம், அவத்யகரம்."**

---

1. திருவாய்மொழி—5: 8: 3.

பொருள் : ஈசுவரனைச் சேதனன் உபாயமாகப் பற்றும் பற்று, அகங்காரத்தைத் தன்னுள் கொண்டதாயும், குற்றத்தை விளைவிப்பதாயும் இருக்கும்.

விளக்கம் : அஹங்கார கர்ப்பம் : "ஈசுவரன் யாதொரு காரணத்தையும் கருதாமலே, அநாதி காலமாக நம்மைக் காக்கின்றவனாயும், நமக்குச் சுவாமியாயும் இருக்கிறான் ; அத்தகைய எம்பெருமான் நமக்குச் சொரூப ஞானத்தை மலரச்செய்து, அதன் மூலமாகத் தன் திருவடிகளைப் பற்றும்படி செய்கிறான்," என்று கருதாமல், "நாம் இப்பற்றுதலைச் செய்கிறோம்," என்று நினைப்பது இவனுக்குக் குற்றமேயாகும். இதைத்தான் சாத்திரத்தில் 'கர்த்ருத்வாநுசந்தானம்' என்று சொல்லுகிறார்கள்.

அவத்யகரம் : ஒரு மகன், தன்னைப் பச்சைப்பசுங்குழவிப் பருவத்திலிருந்து போற்றிவந்த தந்தையை நோக்கி, "நீ இப்போது என்னைக் காக்க வேண்டும்," எனக் கேட்க, அஃதே ஏதுவாக அத்தந்தை தன்னைக் காக்கின்றான் என்றிருப்பின், எங்ஙனம் இவ்விருவருக்கும் உள்ள தொடர்பு குற்றமுடையதாய் முடியுமோ, அங்ஙனமே இதுகாறும் தன்னைப் பாதுகாத்து வந்த ஈசுவரனை நோக்கி, "என் இரட்சணத்திற்காக உம்மைப் பற்றினேன். நீர் என்னைக் காத்தல் வேண்டும்," என இறைஞ்சுதல் இவ்விருவருக்குமுள்ள உறவிற்குக் குற்றமாய் முடியும்.

அவதாரிகை: 'இங்ஙனமாயின் சேதனனுக்கு இரட்சகந்தான் யாது?' என்ன அருளிச்செய்கிறார் :

**மூலம்: 231. "அவனுடைய ஸ்வீகாரமே ரக்ஷகம்."**

பொருள் : சேதனனைப் பாதுகாத்தற்கு உரியனான ஈசுவரன், "இவனை நாம் காப்பாற்றக் கடவோம்," என்று அபிமானித்துக் கொள்ளுகையாகிற பற்றுதலே, இவனுக்கு உண்மை இரட்சகமாகும்.

அவதாரிகை : சேதனனுடைய முயற்சிகளை ஈசுவரனாகிற உபாயம் பொறாது என்பதைத் தெளிவித்தற்பொருட்டு, மற்ற உபாயங்கட்கும், ஈசுவரனாகிற இவ்வுபாயத்திற்கும் உள்ள வாசியை (ஏற்றத் தாழ்வை)ப் பகருகிறார் :

**மூலம்: 232. (1) மற்றை உபாயங்களுக்கு, நிவ்ருத்தி தோஷம், (2) இதுக்கு ப்ரவ்ருத்தி தோஷம்."**

34

பொருள்: (1) கன்ம ஞான பத்திகளாகிற மற்ற உபாயங்கள் சேதனன் முயற்சியினாலேயே கைகூட வேண்டியிருத்தலின், அவற்றிற்கு இவன் முயலாதொழிதல் குற்றமாகும். (2) ஈசுவரனாகிற உபாயம், மற்றவருடைய சிறு உதவியையும் பொறுதாதலின், இவ்வுபாயத்தைப் பற்றின சேதனன், முயற்சியைத் தான் மேற்கொள்ளுதல் குற்றமாகும்.

அவதாரிகை: சேதனனுடைய செயல் ஒன்றும் வேண்டற்பாலதன்று என்பதற்கு மேற்கோளைக் காட்டுகிறார்:

மூலம்: 233. "சிற்ற வேண்டா."

பொருள்: இவ்வுபாயத்தில் இறங்குகிறவன் ஒரு செயலும் செய்தல் வேண்டாம். இக்கருத்தைச் 'சிற்றவேண்டா' என்னும் ஆழவார் திருவாக்கில் அறியலாம்.

விளக்கம்: "மற்றொன்றில்லை சுருங்கச் சொன்னோம் மாநிலத்தெவ்வுயிர்க்கும், சிற்றவேண்டா சிந்திப்பே யமையும்," என்னும் ஆழ்வார் திருவாக்கு, 'இவ்வுலகத்தில் வாழும் எத்தகைய உயிர்களும் (குறைவுடையவர், நிறைவுடையவர்) பல செயல்களை மேற்கொண்டு தளர்ச்சியை அடைய வேண்டிய அவசியமில்லை. எம்பெருமானைச் சிந்தித்திருத்தலே போதியதாகும்,' என்னும் கருத்தைத் தெரிவிக்கின்றது.

அவதாரிகை: இக்கருத்து இந்தச் சரமசுலோகத்தில் உள்ளது என்கிறார்:

மூலம்: 234. "நிவ்ருத்தி கீழே சொல்லிற்று."

பொருள்: ஈசுவரனைப் பற்றிய இவன் வேறு முயற்சிகளை மேற்கொள்வதை அறவே விடவேண்டும் என்பது, "ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய" என்பதிலே கூறப்பட்டுள்ளது.

அவதாரிகை: "ஆனால், ஈசுவரன் இவனுக்குச் செய்த உதவிகளுக்கு இவன், தன் நன்றியறிதலைக் காட்ட வேண்டாவா? இந் நன்றி அறிதல் உபாயத்தில் சேராதா?" என்ன, அருளிச்செய்கிறார்:

மூலம்: 235. "உபகாரஸ்ம்ருதியும் சைதந்யத்தாலே வந்தது; உபாயத்தில் அந்தர்ப்பவியாது."

பொருள்: சேதனன் ஞானம் வாய்ந்தவன். ஈசுவரன் தனக்கிழைத்த உதவிகளை நினைக்கச்செய்கிறது அந்த ஞானத்தின் செயலேயன்றி, இவன் நன்றி அறிதலினாலேயே ஈசுவரன் இங்ஙனம் செய்கிறான் என்பதில்லை. ஆதலின், இஃது உபாயத்தில் சேராது.

விளக்கம்: இங்கு, 'அமிருதத்தையும் நஞ்சையும் ஒருங்கே விரும்புமவரைப் போன்று, உன்னையும் விரும்பி, அற்பமான உலக இன்பங்களையும் விரும்பும் என் கொடிய நெஞ்சை நீக்கினாய்; யாதொரு பலனையும் கருதாது, உன் திருவடிகளிலேயே பொருந்தி அடிமை செய்யும் தூய மனத்தைத் தந்தனை,' என்னும் பொருளடங்கிய ஆழ்வார் திருவாக்குகளை நோக்குக:

"என்னைத் தீமனங் கெடுத்தாய்." [1]

"மருவித் தொழும் மனமே தந்தாய்." [2]

தொகுப்புரை: 'ஏகம்' என்னும் சூத்திரத்திலிருந்து, 'உபகார ஸ்ம்ருதியும்' என்னும் சூத்திரம் வரையும் சொல்லியவற்றால், (219—235) ஏகம் என்னும் சொல் பிரிநிலை ஏகாரத்தின் பொருளைக் காட்டுகிறதென்றும்; இன்னின்ன வாக்கியங்கள் இதற்குச் சான்றுகள் என்றும்; இதனால், இவன் பற்றும் பற்றுதல் உபாயமன்று என்றும்; இப்பற்றுதலும் பகவானாலேயே வந்தது என்றும்; இது பகவான் செய்த கிருஷியின் பயனே என்றும்; இதற்கு ஆழ்வார் திருவாக்கே பிரமாணம் என்றும்; இப்பற்றுதலை உபாயமென எண்ணக் கடவன் அல்லன் என்றும்; இங்ஙனம் எண்ணின் நேரும் குற்றம் இன்னது என்றும்; இப்பற்றுதலுக்குப் பயன்கள் இன்னவை என்றும்; இப்பதத்திலும் சாரமாக அறியப்படும் கருத்துகள் இன்னவை என்றும்; பகவானைச் சேதனன் பற்றும் பற்றுத் தீமையுடையதென்றும்; பகவான் வந்து இவனை அங்கீகரித்தலே இவனுக்கு இரட்சகம் என்றும்; மற்ற உபாயங்களுக்கும், பிரபத்தி உபாயத்திற்கும் முறையே முயற்சியை விட்டிருத்தலும் முயற்சியை மேற்கொள்ளலும் குற்றமென்றும்; இதை ஆழ்வார் பாசுரம் விளக்குகிறதென்றும்; இது "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்பதில் சொல்லப்பட்டுள்ளது என்றும்; ஞானத்தினால் ஏற்பட்ட நன்றி பாராட்டல் உபாயத்தில் சேராது என்றும் அறிந்தாம்.

---

1. திருவாய் மொழி—2 : 7 : 8.
2. ,, 2 : 7 : 7.

அவதாரிகை: இனி, ஐந்தாம் பதத்தை எடுத்துப் பொருள் கூறுகிறார்:

**மூலம்: 236.** "சரணம்—உபாயமாக."

போருள்: சரணம் என்பதற்கு உபாயம் என்பது பொருள்.

அவதாரிகை: சரணம் என்னும் பதம் வேறு பொருள்களைக் காட்டுவதாயிருப்பினும், இங்கு உபாயத்தையே காட்டுவதைக் காரணத்துடன் அருளிச்செய்கிறார்:

**மூலம்: 237.** "இந்த சரணசப்தம், ரக்ஷிதாவையும், க்ருஹத்தையும், உபாயத்தையும் காட்டக்கடவதேயாகிலும், இவ்விடத்தில் உபாயத்தையே காட்டுகிறது; கீழோடே சேர வேண்டுகையாலே.

பொருள்: இந்தச் சரண சத்தம், இரட்சிக்கின்றவனையும், வீட்டையும், உபாயத்தையும் தெரிவிப்பதாயிருப்பினும், இஃது இங்கு உபாயத்தையே காட்டுகிறது. அப்போதுதான் இஃது எல்லாத் தருமங்களையும் விட்டுத் தன்னையே பற்றச் சொல்லுகிற இப்பகுதிக்குச் சேருவதாகும்.

விளக்கம்: வினா: ஒரு பிணியாளனை நோக்கி, 'நீ அன்னத்தைப் புசியாதே, பழங்களைப் புசியாதே, பாலை உட்கொள்' என்றால், எங்ஙனம் மற்றவற்றை விட்டுப் பாலையே உணவாகக் கொள் என்னும் பொருள் கிடைக்குமோ, அங்ஙனமே, 'எல்லாத் தருமங்களையும் விட்டு என்னையே பற்று' என்னில், 'என்னையே தருமமாக (உபாயமாக)ப் பற்று', என்னும் பொருள் கிடைக்காதோ? இங்குச் சரணம் என்னும் சொல் வேண்டுமோ?

விடை: ஆம், வேண்டும். தசைகளை, உபாயதசை உபேய தசை என இரண்டாகப் பிரித்துக்கொள்ள வேண்டும். இவற்றுள் உபாயதசையைப் போன்றே உபேயதசையிலும், நதியைக் கடந்து கரையை அடைந்தவன் தெப்பத்தை விடுதல் போன்று, எல்லாத் தருமங்களையும் விட்டு, எம்பெருமானைக் கிட்டுதல் என்பது உண்டு. ஆனால், (உபாய தசையில் பகவானை உபாயமாகப் பற்றுகிறான். உபேயதசையில் பகவானைப் பயனாகக் கிட்டுகிறான்.) இவற்றை உற்று நோக்குங்கால், இஃது, உபாயதசை உபேயதசை இரண்டிற்கும் பொதுப்பட்டதாகத் தெரிகிறதன்றோ? இங்கு உபாய

நசைக்கு ஏற்ப எம்பெருமானை உபாயமாகக் கிட்டுவதைப் பற்றிச் சொல்ல வேண்டியிருத்தலால், இச்சரண சத்தம் இங்கு இன்றியமையாது வேண்டற்பாலதாகின்றது. இதையே சுருங்கச் சொல்லின், சரண சத்தம் இங்கு இன்றேல், "எம்பெருமானைச் சரணமாகப் பற்றக் கடவன்," என்னும் பொருள்தான் இவண் சொல்லப்படுகிறது எனக் கூறுவதற்கில்லை. ஆதலின், இச்சத்தமே இப்பொருளை இங்கு நிலைநிறுத்துகிறது எனக் கொள்ள வேண்டும்.

வினா: அங்ஙனம் நிலைநிறுத்தாது. ஏனெனில், 'தண்ணீரினால் கால்களை அலம்பிக்கொண்டு ஆசமனம் பண்ணக்கடவன். அஃது அவனுக்குச் சுத்தியை உண்டாக்கும்' எனச் சாத்திரம் கூறுகிறது. இங்கு, பயன், சாதனம், அங்கம் என மூன்று தத்துவங்கள் காணப்படுகின்றன. (பயன்—சுத்தி, சாதனம்—ஆசமனம், அங்கம்—கால் அலம்பல்) இம்மூன்றனுள் கால்களை அலம்புவது என்பது, ஆசமனம் என்பதற்கு அங்கமாய் (உபகாரகமாய்) அமைந்துள்ளது. இதை ஊன்றி நோக்கும் போது, அங்கம் என்பது சாதனத்தோடேயே சேர்ந்திருக்கும் தத்துவம் என்பது புலனாகும். இதைப் போன்றே, இந்தச் சரமசுலோகத்திலுள்ள 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய' என்னும் பகுதியும், எல்லாத் தருமங்களையும் விடுகையை அங்கமாகத் தெரிவிக்கின்றமையின், இங்குச் சரணசத்தமில்லாமலிருப்பினும், ஈசுவரன் உபாயம் என்பது தன்னடையே ஏற்படாதோ?

விடை: ஆம். ஆயினும், தன்னடையே கிடைப்பதைக் காட்டிலும், சத்தத்தால் குறிப்பது இன்னும் தெளிவை உண்டாக்குமன்றோ? ஆதலால், இங்குச் சரண சத்தம் இருப்பது நல்லது.

அவதாரிகை: இனி ஆறும் பதத்தை எடுத்துப் பொருள் கூறுகிறார்:

**மூலம்: 238. "வ்ரஜ—புத்தி பண்ணு."**

பொருள்: மனத்தால் உறுதியாகப் பற்று.

அவதாரிகை: புத்தி பண்ணு என்பதை விளக்கமாகக் கூறுகிறார்:

**மூலம்: 239. "கத்யர்த்தமாவது புத்யர்த்தமாய் அத்யவஸி என்றபடி."**

பேருள் : வ்ரஜ என்னும் வினைச்சொல் "வ்ரஜகதௌ" என்னும் அடிச் சொல்லிலிருந்து (தாதுவிலிருந்து) உண்டானது. 'போதல்' என்னும் பொருளுடைய அடிச்சொல் அறிவைப் பொருளாக உடையது என்று கூறுவர். ஆதலின், இங்கு, 'வ்ரஜ' என்னும் வினைச்சொல்லிற்கு, 'மனத்தால் உபாயமாகப் பற்று' என்பதே பொருளெனத் தேறுகிறது.

அவதாரிகை : "பற்று என்னும் பொருளைக் குறிக்கும் இப் பதம், மனம், வாக்கு, காயம் ஆகிய முக்கரணங்களினாலும் பற்றும் பற்றுதலைக் காட்டாநிற்க, 'மனத்தினால் பற்ற வேண்டும்,' என்று மட்டும் செப்புதற்குக் காரணம் என்னை?" என, அருளிச்செய் கிறார் :

மூலம் : 240. "வாசிக காயிகங்களும் இதுக்கு அபேக்ஷிதங்களாய் இருக்கச்செய்தேயும், ஜ்ஞாநம் மோக்ஷமாகையாலே மாநஸமான அநுஷ்டாநத்தைச் சொல்லுகிறது."

பொருள் : உபாயப் பொருளான எம்பெருமான், சேதனன் காரியஞ் செய்யும் போது, அதற்குச் சேர இவன் தகுதியுடையவனாய் இருத்தல் வேண்டும். மனம் வாக்குக் காயங்களினாலும் பற்றும் பற்றுதலே தகுதியாகும். இம்முறையில் இம்மூன்றும் வேண்டியிருப்பினும், ஞானத்தால் மோட்சம் எனச் சாத்திரம் கூறுகின்றமையின், இங்கு நெஞ்சினால் பற்றும் பற்றுதலைச் சொல்லுகிறார். இதுகாறும் முற்கூற்றிலுள்ள ஒவ்வொரு பதத்திற்கும் பொருள் கூறினார்.

அவதாரிகை : இனி முற்கூற்றில் கூறும் பொருளைத் தொகுத்துச் சொல்லி முடிக்கிறார் :

மூலம் : 241. "ஆக, த்யாஜ்யத்தைச் சொல்லி, த்யாக ப்ரகாரத்தைச் சொல்லி, பற்றப்படும் உபாயத்தைச் சொல்லி, உபாய நைரபேக்ஷ்யஞ் சொல்லி, உபாயத்வஞ் சொல்லி, உபாய ஸ்வீகாரம் சொல்லுகிறது."

பொருள் : ஆக, "ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ" என்னும் முற்கூற்றில், 'ஸர்வதர்மாந்' என்பது விடவேண்டியவற்றையும், 'பரித்யஜ்ய' என்பது விடும் முறையையும், 'மாம்'

என்பது பற்றப்படும் உபாயத்தையும், 'ஏகம்' என்பது இவ்வுபாயம் வேறொன்றையும் பொறுததையும், 'சரணம்' என்பது உபாயத் தன்மையையும், 'வ்ரஜ' என்பது பற்றுதலையும் சொல்லுகின்றன.

தொகுப்புரை: "சரணம்" என்னும் சூத்திரத்திலிருந்து "ஆக, த்யாஜ்யத்தை" என்னும் சூத்திரம் வரையும் (236—241) 'சரணம்' என்பது பல பொருள்களைக் காட்டுவதாயிருப்பினும், இங்கு உபாயம் என்னும் பொருளையே காட்டுகிறது என்பதும்; 'வ்ரஜ' என்பதற்கு இன்னது பொருள் என்பதும்; அதிகாரப் பூர்த்திக்கு முக்கரணங்களினாலும் பற்ற வேண்டுமேயாயினும், இங்கு நெஞ்சினால் பற்றும் பற்றே சொல்லப்படுகிறதென்பதும்; ஆக, இம்முக்கூற்றால் சொல்லப்பட்டவைகள் இன்னவை என்பதும் சொல்லி முடிக்கப்பட்டன.

அவதாரிகை: பிற்கூற்றிலுள்ள பதங்களுக்குப் பொருள் கூறுவதாகக் கோலி, முதல் பதத்தை எடுத்து அருளிச்செய்கிறார்:

**மூலம்: 242. "அஹம்"**

அவதாரிகை: 'இப்பிற்கூற்றில் பகவான் தான் புரியும் நன்மையை அருளிச்செய்கிறான்' என்கிறார்:

**மூலம்: 243. "ஸ்வக்ருத்யத்தை அருளிச்செய்கிறான்."**

பொருள்: கண்ணன், முற்கூற்றில் சேதனன் மேற்கொள்ள வேண்டிய காரியங்களை வற்புறுத்தினான்; பிற்கூற்றில் உபாயபூதனான தான் புரிய வேண்டிய செயல்களை வெளிப்படுத்துகிறான்.

அவதாரிகை: 'அஹம்' என்னும் பதத்திற்குப் பொருள் கூறுகிறார்:

**மூலம்: 244. "ஸர்வஜ்ஞனாய், ஸர்வசக்தியாய், ப்ராப்தனான நான்"**

பொருள்: 'ஒரே காலத்தில் யாவற்றையும் கண்கூடாக அறியும் ஞானமுடையவனாகவும், நினைத்ததைச் செய்து முடிக்கும் வன்மையுடையனாகவும் இருக்க, வகுத்த சேஷியான நான்' என்பது பொருளாகும்.

அவதாரிகை: 'எம்பெருமானுக்கு இன்னும் எத்தனையோ குணங்கள் இருக்க, இவ்வஹம் என்னும் சொல், அறிவு, வன்மை,

சேஷித்துவத்தொடர்பு ஆகிய இக்குணங்களை மட்டும் காட்டுகிற தற்குப் பயன் யாது?' என, அதை அருளிச்செய்கிறார் :

**மூலம் : 245. "கீழ் நின்ற நிலையும் மேல் போக்கடி அறிகைக்கும் அறிந்தபடியே செய்து தலைக்கட்டு கைக்கும் ஏகாந்தமான குண விசேஷங்களையும், தன் பேறாகச் செய்து தலைக்கட்டுகைக்கீடான பந்த விசேஷத்தையும் காட்டுகிறது."**

**பொருள் :** ஈசுவரன், சேதனனுக்குத் துன்பந் துடைத்து இன்பமீயுங்கால், சேதனன் முன்னிருந்த நிலையையும், இவன் இனிப் போகத்தக்க வழியையும் அறிகைக்கும், அறிந்தவாறே அவற்றைச் செய்து தலைக்கட்டுதற்கும் ஏற்றனவாயுள்ள எல்லாவற்றையும் அறியும் ஞானம், யாவற்றையும் செய்துமுடிக்கும் வன்மை ஆகிய குணங்களையும், பகவான் காரியஞ் செய்யுமிடத்தில் சேதனனுக்காக அல்லாமல், தன்னுடைய பேற்றிற்காகச் செய்து முடித்தற்கு ஏற்ற சேஷித்துவத்தொடர்பையும் பிரகாசிக்கச்செய்கிறது.

**விளக்கம்:** 'எல்லாத் தருமங்களையும் விட்டு, என்னையே உபாயமாகப் பற்று,' என்னும் இடத்தில் வந்த 'மாம்' என்னும் பதம், பற்றுதற்கு இன்றியமையாது வேண்டற்பாலனவாகிய குணங்களை ஒளிர்ச்செய்தல் போன்றே, உபாயமாகப் பற்றப்படும் ஈசுவரனுடைய செயலை அருளிச்செய்யும் இந்த இடத்தில் வந்த 'அஹம்' என்னும் பதமும், அச்செயலிற்கு ஏற்ற அவனுடைய ஞானம் முதலிய குணங்களை ஒளிர்ச்செய்ய வேண்டுமன்றோ?

**அவதாரிகை :** 'மாம்' என்னும் இடத்தில், சாரதியாய் நின்ற பாரதந்திரியத்திற்கு மாறான தன் சுவாதந்தரியம் ஒளிருகின்றமையை இங்கு அருளிச்செய்கிறார் :

**மூலம். 246. "தனக்காகக் கொண்ட ஸாரத்ய வேஷத்தை அவனையிட்டுப் பாராதே தன்னையிட்டுப் பார்த்து, அஞ்சின அச்சந்தீர தானான தன்மையை (அஹம்) என்று காட்டுகிறான்."**

**பொருள் :** கண்ணன் அர்ச்சுனனைப் பார்த்து, 'மாம்' என்று, தேர்ப்பாகன் கோலத்தோடு நிற்கிற 'தன்னைப் பற்று' எனப்,

பகர்ந்த போது, அர்ச்சுனன், 'நம்மைக் காத்தற்பொருட்டுத் தேர்ப் பாகன் கோலத்துடன் தாழ நின்றது இவன் சீரிய குணத்தினு லன்றோ!' என அவன் பெருந்தகைமை வாய்ந்த, ஆசிரித பாரதந் திரியமான அவனுடைய குணத்தை நோக்கிப்பாராதவனாய், 'இவன் நமக்கு இழிதொழில் புரியும் தேர்ப்பாகனல்லனோ!' எனத் தேரில் ஏறிச்செல்லும் தன் முதன்மை நிலையையே நோக்கி, 'இத் தகையோன் எல்லாத் தருமங்களையும் விட்டு என்னைப் பற்று எனக் கூறுகின்றனனே! இதன் பயன் என்னாகுமோ!' என்று எண்ணி அச்சங்கொண்டான். அவ்வச்சம் நீங்க, தனக்கே உள்ள பெரு மையை 'அஹம்' என்று சுட்டிக்காட்டுகிறான்.

விளக்கம்: எம்பெருமானார், சரணாகதிகத்தியத்தின் "ஸ்வா தீன த்ரிவித" என்னும் வாக்கியத்தில், பகவான் பெருமையை அழகாய் அருளிச்செய்திருக்கிறார்:

இவ்வாக்கியத்திற்கு, "பிரகிருதி, சுத்தசத்துவம், காலம் ஆகிய அசித்துத் தத்துவங்கள், நித்தியர், முத்தர், பத்தர் ஆகிய சித்துத் தத்துவங்கள், இவற்றின் வாழ்வு, இவற்றின் செயல்கள் யாவும் எவன் இட்ட வழக்காய் இருக்கின்றனவோ, அவன் புரு ஷோத்தமன்," என்பது பொருள். இதை ஊன்றி நோக்குங்கால், அவன் பெருமை தெள்ளிதின் விளங்கும்.

'யானைப் பாகனாலும் அடக்கி ஆள முடியாத மத்தகஜத்தைப் போன்று, எத்தகையவராலும் அடக்க முடியாத சுயேச்சையுடைய வன் பகவான்,' என்று வேதம் முதலிய சாத்திரங்கள் அவன் பெருமையைக் கூறியுள்ளன. இத்தகைய பெருமையே 'அஹம்' என்னும் பதத்தில் தோன்றுவதாகும்.

அவதாரிகை: சாரதியாய் நின்ற நிலையில் கண்ணனிடம் காணப்பட்ட பாரதந்திரியம் அவனுக்கு இயல்பாய் அமைந்ததன்று என்பதை அருளிச்செய்கிறார்:

**மூலம்: 247. "கீழில் பாரதந்த்ர்யமும் இந்த ஸ்வாதந் த்ர்யத்தினுடைய எல்லை நிலமிறே."**

பொருள்: முன்பு சாரதியாய் நின்ற பாரதந்திரியமும், தான் நினைத்ததைச் செய்யுங்கால், தன்னைத் தடுப்பவர் ஒருவருமில்லாத தன் சுதந்தரத்தன்மையினுடைய முடிவிடம் எனக் கொள்க.

அவதாரிகை : இனி இரண்டாம் பதத்தை எடுத்துப் பொருள் கூறுகிருர் :

மூலம் : 248. " த்வா—அஜ்ஞனய், அசக்தனய், அப்ராப்தனய், என்னையே உபாயமாகப் பற்றியிருக்கிற உன்னை. "

பொருள் : ஞானம், வன்மை, உரிமை இவைகள் அற்றவனய் என்னையே உபாயமாகப் பற்றியிருக்கிற உன்னை.

விளக்கம் : இரண்டாம் பதமான இதில், கண்ணன் அர்ச்சுனனை நோக்கி, " உன் காரியங்களின் போக்கை உள்ளபடி அறிதற்கு ஞானமற்றவனய், ஒருபோது அறியினும், அவற்றைத் தக்க முறையில் செய்து முடித்துக்கொள்ளுதற்கு வன்மை அற்றவனய், அவ்வன்மை சிறிது உண்டாயினும், உன்னை நீ பாதுகாத்துக்கொள்ளுவதில் உரிமையற்றவனய் இருத்தலின், எல்லாத் தருமங்களையும் விட்டு, வேருேர் உதவியையும் எதிர்பாராத என்னையே உபாயமாகப் பற்றி இருக்கும் உன்னை," என்று குறிப்பிடுகின்ருன்.

அவதாரிகை: இனி மூன்ரும் பதத்தை எடுத்துப் பொருள் கூறுகிருர் :

மூலம் : 249. " ஸர்வ பாபேப்ய:—மத்ப்ராப்தி ப்ரதி பந்தகங்கள் என்று யாவையாவை சில பாபங்களைக் குறித்து அஞ்சுகிருய், அவ்வோபாபங்கள் எல்லாவற்றில் நின்றும். "

இச்சூத்திரத்திற்கு விரிவாகவே பொருள் கூறவேண்டியிருக்கிறது.

ஸர்வபாபேப்ய: : இப்பதமும் 'ஸர்வதர்மாந்' என்னும் பதம் போன்றே, பாபசத்தம், பன்மை விகுதி, சர்வ சத்தம் ஆக மூன்று பிரிவுகளை உடையதாய் இருத்தலின், இம்மூன்றையும் மனத்திற்கொண்டு, முதலில் பாப சத்தத்திற்குப் பொருள் கூறுகிருர்.

பாபம் : சேதனன் விரும்புவனவற்றை அடைதற்குப் பகையாகவும், வெறுப்பனவற்றை அடைதற்குக் காரணமாகவுமுள்ளவை. அவை, அந்தந்த இடங்களுக்கு ஏற்ப வேறுபட்டிருக்கும். இது முமுட்சுவைப் பற்றிக் கூறும் இடமாதலின், இங்கு உண்டாகும் பாவங்கள் ஈசுவரனை அடைய ஒட்டாமல் தடுப்பனவேயாகும்,

வினு : முமுட்சுகளுக்கு இவைதாம் பாவமோ?

விடை : அன்று. இவர்கட்கு இன்னும் ஞானவிரோதி, ருசி விரோதி, உபாயவிரோதி ஆகிய பாவங்களும் உண்டு :

1. ஞான விரோதி பாவங்கள் : இங்கு ஞானம் என்பது, தத்துவம், இதம், பயன் ஆகியவற்றைப் பற்றிய அறிவாகும். தத்துவ ஞானமாவது, 'சேஷத்துவத்தைச் சொரூபமாகக் கொண்டுள்ளது ஆன்மதத்துவம்; எல்லா உயிர்களுக்கும் சேஷியாய் உள்ளது ஈசுவரதத்துவம்; ஞானம் சிறிதுமற்றது அசித்துத் தத்துவம்' என்பவற்றை அறிவதாகும். இதத்தைப்பற்றிய ஞானமாவது, சேதனன் ஈசுவரனை அடைவதற்கு வழியை அறிவதாகும். பயனைப் பற்றிய அறிவாவது, பகவானை அநுபவித்து அவன் மனம் மகிழு மாறு அடிமை செய்தலாகிற புருஷார்த்தத்தைப் பற்றிய ஞான மாகும். இவற்றைத் தடுக்குமவையே மேற்கூறிய பாவங்க ளெனப்படும்.

2. ருசி விரோதி பாவங்கள் : மேற்குறிப்பித்த தத்துவ இத புருஷார்த்தங்களில் உண்மையான ஞானம் சிலருக்கிருப்பினும், "நான் உய்வு பெறுதற்குப் பகவானைப் பற்ற வேண்டும்," என்னும் ருசி ஏற்படுதல் அருமை. இந்த ருசியைத் தடுப்பவையே மேற்கூறிய இப்பாவங்களாகும்.

3. உபாய விரோதி பாவங்கள் : ஈசுவரனுகிற உபாயத்தைப் பற்ற விடாமல் தடை செய்யுமவை.

வினு : முற்குறிப்பித்த பகைகளைப் பற்றி இங்குப் பேசாமல், எம்பெருமானை அடைய ஒட்டாமல் தடை செய்யும் (பிராப்தி) விரோதிகளை மட்டும் சொல்வதற்குக் காரணம் யாது?

விடை : முற்கூற்றில் "பரம புருஷனுகிய என்னையே உபாய மாகப் பற்று (மாமேகம் சரணம் வ்ரஜ)" என்று தான் கட்டளை இட்டபடி தன்னைப் பற்றியிருக்கும் சேதனனை, பிற்கூற்றில் த்வா என்னும் பதத்தால் குறிப்பிட்டுச் சொல்லி, அவன் விஷயத்தில் போக்கப்படும் பகைகளைச் ஸர்வபாபேப்ய: என்னுமிடத்தில் அருளிச் செய்திருக்கிறுன். இதை நாம் உற்று நோக்குங்கால், எம்பெரு மானைப் பற்றவிடாமல் தடை செய்யும் பாவங்கள் இச்சேதனனுக்கு இல்லை என்பது தெளிவாகும். அங்ஙனமன்றி அப்பாவங்கள் இருப் பின், இவன் ஈசுவரனைப் பற்றினவன் என எங்ஙனம் சொல்ல

இயலும்? அன்றியும், உபாயமாகப் பற்றுதற்குத் தடை செய்யும் பாவங்களே இங்கு இச்சேதனன் அளவில் இல்லை என்னும் போது, அதற்கு முந்தியுள்ள ருசி விரோதிகள், ஞான விரோதிகளாகிற பாவங்கள் இல்லை என்பதைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமா? ஆதலால், இங்கு எம்பெருமானை அடைய ஒட்டாமல் தடை செய்யும் பாவங்களைப் பொருளாகக் கொள்வதே பொருத்தமென்பது ஆசாரியர் கருத்து.

அவதாரிகை: இவ்வாறு பாப சத்தத்தின் பொருளைக் கூறி, பன்மையின் பொருளைச் செப்புகிறார்:

மூலம்: **250.** "'பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா வொழுக்கும் அழுக்குடம்பும்' என்கிறபடியே, அவித்யா கர்ம வாஸநா ருசி ப்ரக்ருதி ஸம்பந்தங்களைச் சொல்லுகிறது."

பொருள்: 'பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கும் அழுக்குடம்பும்' என்னும் ஆழ்வார் திருவாக்கின்படி சரீரமே ஆன்மா என்னும் மயக்கம், அதற்கேற்ற செயல், பழக்கம்(வாசனை), விருப்பம் (ருசி), சரீரத் தொடர்பு ஆகிய இவற்றைப் பன்மை குறிப்பதாகும்.

விளக்கம்: 'ஆன்மா அல்லாத இடத்தில் ஆன்மா என்னும் மயக்கமும், இப்பொய்யான மயக்கத்தினால் பிறர் பொருள் முதலியவற்றைக் கவர்தலாகிற கொடிய ஒழுக்கமும், இவற்றிற்கெல்லாம் காரியமும் அடிப்படையுமான ஹேய சரீரமும் ஆகியவற்றைப் போக்கியருளல் வேண்டும்,' என்பது ஆழ்வார் பாசுர அடியின் பொருளாகும்.

'பொய்ந்நின்ற ஞானம்': உடல், தோற்றம் அழிவுகளை உற்றது. ஆன்மாவோ, இவைகளையற்றது. இவ்விரண்டின் நிலைகளையும் உற்று நோக்குங்கால், இவ்விரண்டும் தனித்தனி பொருளென்னும் உண்மை விளங்குகிறதன்றோ? உண்மை இங்ஙனமிருக்க, சரீரத்தையே 'ஆன்மா' என எண்ணுதல் ஒரு வகை மயக்கம். இதைத்தான் லோகாசாரியர் அவித்தை என்கிறார்.

பொல்லா ஒழுக்கும்: தீச்செயல் நற்செயல் ஆகிய இரண்டுமே இதில் அடங்கும்.

வினு: தீச்செயலைப் பொல்லா ஒழுக்கு எனப் பகருதல் பொருந்தும்! ஆனல், நற்செயலையும் இத்துடன் சேர்ப்பது யாங்ஙனம்?

விடை: செயல்கள் அந்தந்த அதிகாரியின் நிலைகளுக்கேற்பவே தீச்செயல் நற்செயல்களாகின்றன. சான்ருக, ஒருவன், தானியம் விளைதற்கு வேண்டிய மழையைப் பெறுதற்பொருட்டு இந்திரனைக் குறித்து யாகம் செய்கிருன். இதை நற்செயலென்று தானே சொல்ல வேண்டும்? ஆயினும், எல்லா விருப்பங்களையும் விட்டு மோட்சத்திலேயே விருப்புற்றுள்ள ஒருவர் இக்காரியத்தைச் செய்யின், இது தீச்செயலாகக் கொள்ளப்படுகிறது. இதைத்தான் கர்ம என்கிருர் பிள்ளைலோகாசாரியார்.

அழுக்குடம்பும்: இது, மஹான், அஹங்காரம், பஞ்ச பூதங்கள் ஆகியவற்ருல் உண்டானமையின், மட்பாத்திரம் தன்னுள் உள்ள உயர்ந்த பொருளை மறைப்பதைப் போன்று, இஃதும் ஆன்மாவையும் பரமான்மாவையும் மறைத்துக்கெடுக்கின்றது. இதைத்தான் அவர் பிரகிருதி சம்பந்தம் என்கிருர்.

இப்பாசுரத்தில் வாசனையும் ருசியும் கூறப்படாவிடினும், உபலட்சணமாக இவற்றையும் கொள்ள வேண்டுமென்பது லோகாசாரியர் கருத்து.

இந்த ருசி வாசனைகளைப் பற்றித் திருமந்திரப்பகுதியில் அமைந்த, 'ஸம்ஸாரிகள் தங்களையும் ஈசுவரனையும் மறந்து' என்னும் ஐந்தாம் சூத்திரத்தில் கூறியுள்ளதைக் காண்க.

அவதாரிகை: இனி 'ஸர்வ' என்னும் சொல்லின் பொருளை அருளிச்செய்கிருர்:

**மூலம்: 251. "த்ருணச்சேத கண்டூயநாதிகளைப் போலே ப்ரக்ருதி வாஸனையாலே அநுவர்த்திக்குமவை யென்ன, லோகாபவாதபீதியாலும், கருணையாலும், கலக்கத்தாலும் செய்யுமவை என்ன, எல்லாவற்றையும் நினைக்கிறது."**

பொருள்: எவ்வாறு துரும்பைக் கிள்ளுதல், தினவு உண்டான இடத்தைச் சொறிதல் முதலியன தன் நினைவின்றியே நடைபெறுகின்றனவோ, அவ்வாறே சில பாவச் செயல்களும் எம்பெரு

மானே உபாயமாகப் பற்றிய பின்பும் பிரகிருதி வாசனையால் (பழக்கத்தினுல்) கருத்தின்றியே நடைபெறும். இதனுலும், 'கன்மம் முதலியவற்றை நாம் விடின், உலகம் நம்மைப் பழிக்குமே!' என்னும் எண்ணத்தினுலும், 'உலகினரும் நம்மைப் பார்த்து அவற்றை விடுவரேல் அதனுல் அவர்கள் நசித்துப் போவதைக் காணுங்கால், நமக்குத் துக்கம் ஏற்படுமே!' என்னும் கருத்தினுலும், அப்போதைக்கப்போது மாறிமாறி வரும் ரஜசு தமசுகளினுல் மயங்கி, விட்ட உபாயங்களை உபாயங்கள் என நினைத்துச் செய்யும் கலக்கத்தினுலும் புரியும் யாவற்றையும் நினைக்கிறது.

அவதாரிகை: 'பிரபன்னன், ஒரு செயலை வீட்டின்பத்திற்குச் சாதனம் என்று எண்ணிச் செய்கிருன் இல்லை; உலகப் பழிப்பிற்கு அஞ்சி ஒன்றைச் செய்கிருன். அங்ஙனம் செய்யப்படுவதும் சாதனமாகுமோ!' என்னும் ஐயம் இங்கு உண்டாகக் கூடும். அவ்வையத்தை முதலில் கூறி, 'ஆம்; அதுவும் சாதனக் கோடியிலே தான் சேரும்,' என்பதைத் தெரிவிக்கிருர்:

**மூலம்: 252. "உந்மத்த ப்ரவ்ருத்திக்கு க்ராம ப்ராப்தி போலே த்யஜித்த உபாயங்களிலே இவை அந்விதங்களாமோ என்று நினைக்க வேண்டா."**

பொருள்: பைத்தியங்கொண்ட ஒருவன், 'நாம் இன்ன நகரத்திற்குப் போகிருேம்,' என்னும் நினைவு சிறிதுமின்றியே யாதோ ஒரு வழியைப் பிடித்துச் செல்லினும், அப்பாதை ஏதேனும் ஒரு நகரத்திற்குக் கொண்டு விடுதல் போன்று, பிரபன்னனை இவன், தான் விட்ட கன்மயோகம் முதலியவற்றை, 'நாம் இன்ன பலத்தை அடையலாம்,' என்னும் எண்ணத்தைக் கொள்ளாமலே, உலகப் பழியை நீக்கிக்கொள்ளுதற்பொருட்டு மேற்கொள்ளினும் அவை சாதனங்களாகவே முடியும்.

விளக்கம்: ஆகாயத்தில் எறிந்த கல் ஆகாயத்திலேயே நில்லாமல் கீழ் நோக்கி வருதல் போன்று, காரியத்தின் இயல்பினுல் மேற்குறித்தவை பயனளித்தே தீரும். அங்ஙனமே பிரபன்னனுகிய இவன் ஆந்ருசம்ஸ்யத்தினுல் செய்யப்படுவனவும் பயனிலேயே முடிவடைகின்றமையின், இதுவும் பாவச் செயலேயாகும்.

ஆந்ருசம்ஸ்யத்தினுல் செய்வது என்பது, "பிரபன்னனை ஒருவன், ''நற்காரியங்களை நாம் விடின், நம்மைப் பார்த்து உலகின

ரும் விடுவர். அங்ஙனம் அவர்கள் விடின், அவர்கட்குத் துன்பங்கள் ஏற்படும். அவைகளை நாம் நோக்குங்கால், நமக்கு வருத்தம் உண்டாகும். நாம் அவ்வருத்தத்தில் துவளுதல் கூடாது," என்னும் தன்னலக் கருத்தினால் மேற்கொள்வதாகும். இக்கருத்தை லோகாசாரியர் தனி சரமத்தில் அருளிச்செய்திருக்கிறார்.

அவதாரிகை: "மற்றவை எங்ஙனமிருப்பினும், முன் செய்த பிரபத்தியையே மறுபடியும் செய்வதில் குற்றம் யாது?" என்ன, அருளிச்செய்கிறார்:

மூலம்: 253. "கலங்கி உபாயபுத்யா பண்ணும் ப்ரபத்தியும் பாதகத்தோடு ஒக்கும்."

பொருள்: "ஈசுவரனாகிற உன்னையே சரணாகப் பற்றினேன்" என நினைத்தல் பிரபத்தி என்பது. இதை நம்பிக்கையோடு ஒரு முறை செய்யினும், ஈசுவர அங்கீகாரத்திற்குப் போதியதாகும். இப்பிரபத்தி, தன்னை இரண்டாமுறை மேற்கொள்வதையும் பொறாது. இத்தன்மை வாய்ந்த இப்பிரபத்தியின் இயல்பறியாது, துன்பம் ஒழிதற்கோ, இன்பம் உண்டாதற்கோ, கலக்கத்தினால் 'இது நம் பேற்றிற்கு உபாயமாகும்,' எனக் கருதியோ, மறுபடியும் செய்யின் இது உபாயபுத்தியுடன் இயற்றும் கன்ம ஞான பத்திகளைப் போன்றே பாதகத்திற் சேருவதாகும்.

விளக்கம்: வினா: பிரபத்தியைப் பன்முறை செய்வது குற்றமெனக் கூறின், இதை ஆழ்வார்கள் பன்முறை மேற்கொண்டதைப் பற்றி என் இயம்புவது?

விடை: அளவு மீறிய பத்தியுடையவர்கட்குச் சாத்திரமும் இல்லை; முறையும் இல்லை. ஆழ்வார்களோ, இந்நிலையில் உள்ளவர்கள். அவர்கள் அடிக்கடி பகவானைச் சரணாகதி அடைவது, மேற்கூறியபடி கலங்கிய பத்தியின் செயலாகும். இங்குக் கலங்கிச் செய்வது என்பது அத்தகைய பிரபத்தியை அன்று.

வினா: ஒருவன் மகான்களை முன்னிட்டுப் பகவான் சன்னதியில் பிரபத்தியைப் பண்ணுகிறான். அது முன்பு செய்த பாவங்களைப்போக்கிவிடுகிறது. ஆயினும், பின்புள்ள நாட்களில் இவன் சில பாவங்களைச் செய்ய நேரிடுகின்றது. அவற்றைப் போக்கிக் கொள்ளத் திரும்பவும் இவன் பிரபத்தியைச் செய்ய வேண்டாவா? அங்ஙனம் செய்வதும் பாவமாகுமா?

**விடை:** ஒரு முறை செய்யும் பிரபத்தியே,

"போய பிழையும் புகுதருவா னின்றனவும்
தீயினில் தூசாகும்."

என்னும், ஆண்டாள் திருவாக்கின்படி எல்லாப் பிழைகளேயும் போக்குதற்குப் போதுமானதாகும். ஏனெனில், பாவங்களைப் போக்குதற்கு இவன் செய்யும் பிரபத்தி சாதனமன்று. இவன் பிரபத்தி செய்யுங்கால் ஈசுவரனே உபாயப் பொருளாயிருந்து எல்லாப் பாவங்களேயும் நீக்குகிறுன். அங்ஙனமிருத்தலின், பின் புள்ள காலங்களில்இவன் சில குற்றங்களைத் தெரியாமையினுல் செய்ய நேரிடினும், அக்குற்றங்களேயும் பொறுப்பவன் பகவானே ஆகிறுன். ஆதலின், இவன் குற்றங்களைப் பொறுத்தற்பொருட்டு அடிக்கடி பிரபத்தியைச் செய்ய வேண்டுவதில்லை. ஏற்கெனவே செய்த பிரபத்தியைச் சிந்தித்தலே போதியதாகும்.

**தொகுப்புரை:** 'அஹம்' என்னும் சூத்திரத்திலிருந்து 'கலங்கி உபாயபுத்யா' (242-253) என்னும் சூத்திரம் வரை புகன்றவற் ருல், கண்ணன் தான் புரியும் செயலே அருளிச்செய்கிறுன் என்றும்; 'அஹம்' என்னும் பதத்திற்கு, ஞானம், வன்மை, சேஷித்துவத் தொடர்பு ஆகியவைகளை உடைய பகவானுகிய தான் பொருளென் றும்; பகவானுக்கு மற்றக் குணங்கள் பல இருப்பினும், இங்கு இம்மூன்று குணங்களே மட்டும் எடுத்துக் காட்டுதற்குப் பயன் இன்னது என்றும்; அஹம் என்பது தன் சுதந்தரத்தன்மையைத் தெரிவித்து, அர்ச்சுனனுடைய கலக்கத்தைப் போக்குதற்குக் கருவி யாய் உள்ளது என்றும்; சாரதியாய் நின்ற பாரதந்திரியமும், தன் னுடைய சுதந்தரத்தன்மையின் முடிவிடம் என்றும், 'ஞானம் வன்மை, உரிமை இவை அற்றிருக்கும் உன்னை, என்பது 'த்வா' சத்தத்திற்குப் பொருள் என்றும்; பயனைத் தடை செய்யுமது பாவ சத்தத்தின் பொருளென்றும்; அவித்தை முதலியன பன்மை யின் பொருளென்றும்; 'போக்கிக் காக்கின்றேன்' எனக் கண்ணன் கூறுகின்ருனென்றும்; பிரகிருதி வாசனையாலும், லோகாபவாத பீதியாலும், கலக்கத்தாலும் செய்யும் யாவற்றையும் சர்வ சத்தம் குறிக்கிறது என்றும்; வீட்டின் பேற்றிற்கல்லாமல், உலகப் பழிப்பிற்கு அஞ்சிச் செய்பவையும் சாதன கோடியிலேயே சேரும் என்றும்; கலங்கி உபாயபுத்தியா பண்ணும் பிரபத்தியும், கன்ம

ஞான பத்திகளைப் போன்றே பாதகத்திற்கு ஒப்பாகும் என்றும் அறிகின்றோம்.

அவதாரிகை: நான்காவது பதத்தை எடுத்துப் பொருள் கூறுகிறார்:

**மூலம்: 254. "மோக்ஷயிஷ்யாமி = முக்தனும்படி பண்ணக்கடவேன்."**

பொருள்: "உன்னைப் பாவங்களிலிருந்து விடுவிக்கக் கடவேன்" அஃதாவது "மேற்கூறிய பாவங்கள் யாவற்றினின்றும் நீ விடுபட்டவனுகுமாறு செய்யக்கடவேன்," என்பதாகும்.

அவதாரிகை: இனி இஷ்யாமி என்பதன் பொருளை அருளிச் செய்கிறார்:

**மூலம். 255. "ணிச்சாலே நானும் வேண்டா; நீயும் வேண்டா; அவை தன்னடையே விட்டுப் போங்காண் என்கிறான்."**

பொருள்: 'மோக்ஷயிஷ்யாமி' என்னும் வினைச்சொல்லில் 'இஷ்யாமி' என்னும் பகுதியை 'ணிச்சு' என வடமொழியாளர் கூறுவர். "உன் பாவங்கள் நீங்குதற்கு நானும் யாதொரு முயற்சியும் செய்ய வேண்டா. அவைகள் அகல நீயும் முயல வேண்டா. உனக்கு என்னிடமுள்ள சம்பந்தத்தால், அவை தமாகவே உன்னை விட்டு விலகிப்போகும்," என அருளிச்செய்கிறான்.

விளக்கம்: வினு: இங்கு, 'உன்னை விடுவிப்பேன்' எனக் கூருது, 'விடுவிக்கக் கடவேன்,' என இயம்புவதை நோக்குங்கால், 'அரசன் கோவிலைக் கட்டுவித்தான்' என்ற இடத்தில், எங்ஙனம் ஏவுதற்கர்த்தாவாகிய மன்னன் தூண்டுதலால் அக்கட்டுந் தொழில் நிகழ்த்தப்படுகிறதோ, அங்ஙனமே ஏவுதற்கர்த்தாவாகிய ஈசுவரன் பெருமையால், எல்லாப் பாவங்களும் இவனை விட்டு விலகும் செயல் நிகழ்கிறது என்பது புலப்படுகின்றதன்றோ?

விடை: நீங்கள் சொல்லும் இவ்வுதாரணம் இங்குப் பொருத்தமானதன்று. ஏனெனில், மன்னன் தானே இருந்து கட்டுந் தொழிலைச் செய்யாவிடினும், கட்டுமாறு ஏவுகின்ற தொழிலையேனும் அவன் மேற்கொள்ள வேண்டியிருக்கிறது அல்லவா? பகவானே, இவன் பாவங்கள் போக, அத்தகைய

முயற்சி ஒன்றையும் செய்ய வேண்டுவதில்லை, என்றன்றோ சொல்லப்பட்டுள்ளது ?

வினா : அங்ஙனமாயின் இதற்குப் பொருத்தமான உதாரணந் தான் யாது ?

விடை : இவ்விஷயம் உம் மனத்திற் படுமாறு சில உதாரணங்களை இயம்புகின்றோம் :

சில மகான்கள் மிக்க பொருளுடன் ஒரு காட்டின் வழியே சென்றுகொண்டிருக்கின்றார்கள். அரச சேவகர்களும் அவர்களுடன் அவ்வழியே செல்கின்றார்கள். ஆனால், இவ்விரு திறத்தினருக்கும் யாதொரு தொடர்புமில்லை. அங்ஙனமிருப்பினும், இவ்வரச சேவகர்கள் உடன் செல்வதனாலேயே அக்காட்டிலுள்ள கள்வர் அம்மகான்களை அணுக அஞ்சித் தாமாகவே விலகுகின்றனர். இங்கு அக்கள்வர் விலகுதற்கு அம்மகான்களாவது, அரச சேவகர்களாவது ஏதேனும் முயன்றனரா ? இல்லையே !

இன்னும், ஒரு வீரச் சிங்கம் தன் குகையில் உறங்கிக்கொண்டிருக்கின்றது. அதன் பெருமூச்சைச் செவியேற்ற சிறு விலங்குகள் அவண் விட்டுத் தாமாகவே அகல்கின்றன. இதற்கு யாருடைய முயற்சியேனும் வேண்டியிருந்ததா ? இல்லையன்றோ !

மேலும், ஒருவன் அரசனுக்கு நட்பினனாகவோ, உறவினனாகவோ இல்லாமலிருப்பினும், அவ்வரசன் அரண்மனைக்குப் போக்கு வரத்து உடையவனாயிருக்கிறான். இச்செயலைக் கண்டவுடன், இவனை எங்ஙனமேனும் அழிக்க வேண்டுமென்றிருந்த இவன் பகைவர், இவனுக்குச் சிறு தீங்கு செய்தற்கும் அஞ்சி, இருந்த இடந்தெரியாமல் மறைகின்றனர். இதற்கு இவனேனும் அரசனேனும் செய்த காரியம் ஏதேனும் உண்டா ? இல்லையே ! இவைகளைப் போன்றே இச்சூத்திரத்தில் சொல்லும் பகவானுடைய கருத்தையும் கொள்ள வேண்டும்.

அவதாரிகை : இங்ஙனம் அருளிச்செய்ததன் கருத்தை வெளியிடுகிறார் :

மூலம் : 256. " 'என்னுடைய நிக்ரஹபலமாய் வந்தவை நான் இரங்கினால் கிடக்குமோ ?' என்கை "

பொருள் : சேதனன் தான் செய்த கன்மங்களின் பலன்களை அநுபவித்தல், ஈசுவரனுடைய அருள் இவன் மாட்டுப் பாயாத

போதேயாகும். இதை மனத்திற்கொண்டே எம்பெருமான், "என்னுடைய நிக்கிரகத்தின் பலமாய் உனக்கு ஏற்பட்ட துன்பங்கள், யான் உன்மாட்டு இரக்கங் கொள்ளுவனேல் நிற்குமோ? இருந்த இடம் தெரியாது மறையாவோ?" என்கிறான்.

விளக்கம்: சேதனன் செய்யும் பாவங்கள் தாமே நேராக இவனுக்குப் பயனைத் தரும் வன்மையுடையனவல்ல. அவை ஈசுவரனுடைய நிக்கிரகத்தை உண்டுபண்ணி, அதன் மூலமாகவே பயனைத் தருவனவாயுள்ளன. இது தெள்ளிதின் பொருளாதற்கு, பாவ கன்மங்கள், அவற்றை இயற்றும் சேதனன், அவற்றிற்குப் பயனளிக்கும் ஈசுவரன் ஆகிய முத்திறத்தினர் இயல்புகளையும் ஆராய்தல் வேண்டும். சேதனன் செய்யும் கன்மங்கள் அப்போதைக்கப்போது நசித்துப் போகும் இயல்புடையனவாதலின், அவை சில கணங்களுக்கு மேல் நிலைநிற்காமல் அழிந்து போகின்றன. சேதனன் சிற்றறிவு வாய்ந்தவனாதலின், தானியற்றியவற்றை உடனுக்குடனே மறந்துவிடுகிறான். ஆனால், ஈசுவரனோ, இவன் புரிந்த கன்மங்கள் யாவற்றையும் மனத்திருத்தி, தக்க காலத்தில் ஒன்றையும் விடாமல் இவன் துய்க்குமாறு செய்கிறான். இஃது அவனுடைய நிக்கிரக காரியமாகும். இத்தகைய ஈசுவரன் சேதனனிடம் அருள்பொழிய முற்படுவானேல், ஆதித்தனொளி பாய்ந்தவுடன் இருள் இருந்த இடம் தெரியாது ஓடுதல் போன்று, அந்நிக்கிரக பலனாய் வந்தவை நீங்கிவிடும் எனக் கூறின் குற்றம் என்னை?

அவதாரிகை: தன்னடையே விட்டுப்போம் என்கிற இடத்தில் பகவானுடைய கருத்து இன்னது என்பதைத் தெரிவிக்கிறார்:

மூலம்: 257. "அநாதிகாலம் பாபங்களைக் கண்டு நீ பட்ட பாட்டை அவை தாம் படும்படி பண்ணுகிறேன்."

பொருள்: கண்ணன் பார்த்தனைப் பார்த்து, "அர்ச்சுனனே, அநாதி காலமாகத் துக்கத்திற்கேதுவான பாவங்கள் வந்து உன்னைச் சாரும்போதெல்லாம் அவற்றைக் கண்டு நீ நடுங்கினாய் அல்லவா? அத்தகைய நடுக்கத்தை இப்போது அப்பாவங்கள் அடைந்து உன்னை விட்டு விலகிப் போமாறு செய்கிறேன்," என்கிறான்.

விளக்கம் : வினு : அப்பாவங்கள் தாமே விலகிப்போமாறு செய்கையாவது என்ன ?

விடை : "இப்பாவங்கள் முன்பொருகால் நம்மிடமிருந்தன. இப்போதுதான் நம்மை விட்டு நீங்கின," எனத் தோன்ருவண்ணம் போக்குதல்.

வினு : தோன்ருதிருத்தல் என்பது என்ன ?

விடை : ஒருகால் அப்பாவங்கள் நினைக்கப்படினும், எம்பெருமானுக்கே சேஷப்பட்டிருக்கும் தன் நிலையை நோக்கின், இப்பாவங்கள் சொப்பனம் போன்று, நடுவிற்ருேன்றி மறைந்தவை என்றிருத்தலும், அப்பாவங்களை நினைப்பதனுல் உண்டாகும் துக்கம் தன்னை வந்து அணுகாதிருத்தலும் ஆகும். இவரே இக்கருத்தைத் தனிசுலோகத்தில் அருளிச்செய்திருக்கிருர்.

அவதாரிகை : 'மோக்ஷ இஷ்யாமி' என்னும் வினைச்சொல்லில் அமைந்த தன்மை இடத்திற்கு ஓர் அழகிய பொருளை இங்கு விளக்குகிருர் :

மூலம் : 258. "இனி உன் கையிலும் உன்னைக் காட்டித் தாரேன். என்னுடம்பிலழுக்கை நானே போக்கிக்கொள்ளேனே ?"

இதற்கு வினுவிடையாகவே பொருள் கூற வேண்டியிருக்கிறது.

பொருள் : சேதனன் : எம்பெருமானே, இதுகாறும் என்னை இப்பாவங்களிலிருந்தும் விடுவியாமலிருந்ததற்குக் காரணம் யாது ?

ஈசுவரன் : இதுவரையும் நீ என்ன செய்துகொண்டிருந்தனை ? 'நம் காரியங்களைச் செய்துகொள்ளுதற்கு நாமே பொறுப்புடையேம்,' என்னும் அறியாமையினுல் மூடுண்டு, உன் செயல்களை முடித்துக்கொள்ளுதற்குப் பல வழிகளிலும் அலைந்து திரிந்தனை அல்லவா ? இதைக் கண்டயாலும், 'அவன் காரியத்தை அவனே செய்துகொள்ள முயல்கின்ருன். அவ்வாறே செய்துகொள்ளட்டும்,' எனப் பராமுகமாயிருந்தேன். இப்போதோ, நீ எனக்குச் சேஷப்பட்டவன் என்பதைத் தெள்ளிதின் உணர்ந்து, உன் இரட்சணப் பொறுப்பை என்மேலேயே சுமத்திவிட்டனை. ஆதலால், 'இனி உன் பாவங்கள் ஒழிவதற்கேற்ற முயற்சிகளை நீயே செய்து

கொள்,' என உன்னை உன் கையிலும் ஒப்புவிக்கமாட்டேன். ஏன்? நீ எனக்குச் சரீரபூதனல்லவா? அங்ஙனமாகிய உன் அஞ்ஞான அழுக்கைச் சரீரியான யான் போக்கிக்கொள்ளேனோ? அஃது என் கடமையன்றோ?

இங்ஙனம் கண்ணன் இயம்புதற்குக் காரணம், சேதனனுடைய நலனுக்காக முயல்பவனும், அதனால் பயன் பெறுபவனும் தானே என்பது தோற்றுதற்பொருட்டேயாகும். இஃதோர் உயர் தத்துவம். ஆதலின், சேதனன் ஈசுவரனைச் சார்ந்த பின்பு இவனுக்கு ஒரு விரோதியும் ஏற்படாதெனக் கொள்க.

வினா: பகை தொலைதல், இன்பம் அடைதல் இரண்டும் சேதனன் அடைய வேண்டிய பலன்களாக இருக்க, இவன் அஞ்ஞான அழுக்காகிய பகையைப் போக்குதலை மட்டும் கூறுவதன் கருத்தென்னை?

விடை: ஒன்றை இயம்பின், அதனுடன் இன்றியமையாத தொடர்புடைய மற்றொன்றையும் இயம்பியதாகுமாதலின், இங்கு இரண்டையும் கூறிற்றிலர்.

வினா: அங்ஙனமாயின், இவன் இன்பம் பெறுதலைப் பற்றிச் செப்பியிருக்கலாமே?

விடை: ஒருவர் இன்பம் பெறுவதைக்காட்டிலும், துன்பம் தொலைதலிலேயே கருத்துடையராயிருப்பராதலாலும், துன்பம் ஒழியின் இன்பம் உண்டாதல் இயல்பும் திண்ணமுமாதலாலும் இதைத் தனித்துச் சொல்ல வேண்டிய அவசியமில்லையன்றோ? ஆதலின், இங்குப் பகை ஒழிதல் மட்டும் பகரப்பட்டது.

தொகுப்புரை: 'மோக்ஷயிஷ்யாமி' என்னும் சூத்திரத்திலிருந்து, 'இனி உன் கையிலும்' என்னும் (254 - 258) சூத்திரம் வரை சொல்லிப் போந்தவற்றால், கண்ணன் அர்ச்சுனனைப் பார்த்து, 'உன்னை முத்தனும்படி பண்ணக் கடவேன்' என்பதும்; 'உன்னைப் பற்றிய பாவங்கள் யானும் நீயும் முயலாமலே தன்னடையே நீங்கிப் போகும்' என்பதும்; 'என்னுடைய நிக்கிரகத்தினால் வந்தவை, யான் இரங்குவனேல் ஓடி ஒளியாமல் நிற்குமோ?' என்பதும்; 'உன்னை நடுங்கச் செய்த பாவங்கள் எவையோ, அவைகளே இப்போது உன்னைக் கண்டு நடுங்கி விலகுமாறு பண்ணுகிறேன்.'

என்பதும்; 'இனி உன் கையிலும் உன்னைக் காட்டித்தாரேன் என்பதும்;' 'என் உடம்பிலழுக்கை யானே போக்கிக் கொள்ள மாட்டேனே?' என்பதும் வெளியிடப்பட்டன.

அவதாரிகை: இறுதிப் பதத்தை எடுத்துப் பொருள் கூறுகிறார்:

மூலம்: 259. "மாசுச: 'நீ உன் கார்யத்திலே அதிகரியாமையாலும், நான் உன் கார்யத்திலே அதிகரித்துக்கொண்டு போருகையாலும் உனக்குச் சோக நிமித்தம் இல்லைகாண்' என்று அவனுடைய சோக நிவ்ருத்தியைப் பண்ணிக்கொடுக்கிறான்."

பொருள்: "உன் காரியத்தில் நீயே முயலும் நிலையில் இருப்பின், 'அந்தோ! எங்ஙனம் நாம் திருத்தமாகச் செய்ய இயலும்! இது முடிவில் என்னாய் விளையுமோ!' என நீ கவலையுறுதற்கு இடமுண்டு. அன்றி, யான் உன் காரியத்தில் தலையிடாமல் இருந்தேனாகில், 'நம் செயலில் ஈசுவரன் பராமுகமாய் இருக்கின்றனனே. நாம் உய்தல் யாங்ஙனம்?' என நீ வருந்த வேண்டுவதுதான். அங்ஙனமன்றி, முயற்சி பலன் ஆகிய இரண்டிலும் தொடர்பற்ற உன் பாரதந்திரிய நிலையின் உண்மையை நீ நன்குணர்ந்து, உன் இரட்சணக் காரியத்தை நீ மேற்கொள்ளாமையாலும், உன் பாதுகாப்பில் முயற்சியும் பலனும் என்னுடையன எனக் கருதியுள்ள யானே, உன் இரட்சண காரியத்தை நோக்கிக்கொண்டு போதலினாலும் உனக்குக் கவலை கொள்ளுதற்கு வழியில்லை," எனக் கண்ணன் அர்ச்சுனன் கவலையைப் போக்குகின்றான்.

ஆக, கண்ணன், 'அஹம் த்வா' என்னும் இவ்விரு பதங்களாலும், பாதுகாக்கின்றவன் பாதுகாக்கப்படுகின்றவன் ஆகிய இருவருடைய இயல்புகளையும் பகர்ந்து, அர்ச்சுனனுடைய சோகத்தைப் போக்கியதை ஆசிரியர் அருளிச்செய்தார்.

அவதாரிகை: இனி, பாவத்தைப் போக்குபவனான தன்னுடைய இயல்பையும், போக்கத்தக்க பாவங்களுடைய இயல்பையும் சொல்லி, அர்ச்சுனனுடைய துக்கத்தைப் போக்கியதை அருளிச்செய்கிறார்:

மூலம்: 260. "நிவர்த்தகஸ்வரூபத்தைச் சொல்லி, 'நிவர்த்தயங்கள் உன்னை வந்து மேலிடாது' என்று சொல்லி, 'சோக நிமித்தம் இல்லைகாண்' என்கிறான்."

பொருள்: "உன் பாவங்களைப் போக்க முற்பட்டு நிற்கும் யானோ, சுத்தி ஞானம் முதலிய குணங்கள் நிறைந்தவன். உன்னை வந்தடையும் பாவங்களோ, உன்னைக் கண்டு அஞ்சி ஓடுமே அல்லாமல், என்னையே உபாயமாய்ப் பற்றி இருக்கும் உன்னை வந்தணுகா. இங்ஙனமாயின், நீ எதைக் கருதிக் கலங்க வேண்டும்? கலங்குதற்குச் சிறிதும் காரணமின்மையின், உன் கலக்கத்தை அறவே ஒழித்திடுக," என்கிறான்.

அவதாரிகை: இங்ஙனம் கண்ணன், தன்னைச் சரணடைந்தவன் எவனோ, அவனுடைய பாவ விரோதிகளை ஒழித்தற்குத் தான் ஒருப்பட்டு நிற்பதை அறிவித்து, அர்ச்சுனனுடைய துக்கத்தைப் போக்குவதை, லோகாசாரியர் திருமழிசையாழ்வார் பாசுரத்தை உதாரணமாகக் காட்டி, கண்ணன் அபிப்பிராயத்தை வெளிப்படுத்துகிறார்:

மூலம்: 261. "'எத்திறலிடர்க்கடற்கிடத்தி ஏழை நெஞ்சமே!' என்கிறான்."

இச்சூத்திரத்திற்கு விளக்கமாகவே பொருள் கூற வேண்டியுள்ளது.

விளக்கம்: திருமழிசையாழ்வார் தம் திருவுள்ளத்தை நோக்கி, "நெஞ்சமே, எம்பெருமான் நம்முடைய பாவங்களை ஒழித்து, நம்மை அடிமை கொள்ளும் செயலைத் தானே ஏற்றுக் கொண்டு நம்முள்ளத்தில் நுழைந்திருக்க, இனி நீ எதன் பொருட்டுத் துன்பக்கடலுள் அழுந்துகின்றனை?" "எம்பெருமான் சேதனருக்கு நித்திய விபூதி, லீலா விபூதி ஆகிய இரண்டன் நலங்களையும் ஈயும் வன்மையற்றவன் எனக் கருதியோ, தன்னை நாடி நிற்பவரிடம் மிக்க அன்புடையவன் (வத்ஸலன்) அல்லன் என எண்ணியோ, உயர்ந்தவனாகிய அவன் தாழ்ந்தவர்களோடு யாதொரு வேறுபாடுமின்றிப் புரையறக் கலக்கும் இயல்புடையவன் அல்லன் என நினைந்தோ, எல்லா உறவு முறையுமாய் இருந்து காரியஞ் செய்தற்குப் பொருத்தமுடையனல்லன் என உன்னியோ, தனக்குரிய பொருள்களுக்கு நன்மை புரிதலைக் கடமையாய்க் கொண்ட சாமி

அல்லன் எனக் கொண்டோ, சேதனர் தன்னை அடைதற்குத் தடையாக ஏற்படும் பாவங்களைப் பறக்கடிப்பவனல்லன் என யோசித்தோ, நம்மிடத்திலிருந்து கைங்கரியத்தைக் கொள்வதில் கருத்துடையன் அல்லன் எனக் கருதியோ?" எனச் சொல்லுவது போன்று, கண்ணன் அர்ச்சுனனைப் பார்த்துக் கூறுகின்றான் என ஆசாரியர் பகருகிறார்.

அவதாரிகை : அர்ச்சுனனுடைய சோகம் திரும்பவும் வாராத படி ஒழித்தற்கேதுவாகிய கண்ணன் அபிப்பிராயத்தை லோகா சாரியர் தெரிவிக்கிறார் :

**மூலம் : 262. "பாபங்களை நான் பொறுத்துப் புண்ய மென்று நினைப்பிடாநிற்க, நீ சோகிக்கக் கடவையோ ?"**

போருள் : 'நீ இயற்றிய பாவங்கள் யாவற்றையும் யான் மன்னித்தல்மட்டுமேயல்லாமல், உன்னிடம் எனக்குண்டான அளவு கடந்த அன்பினால் (வாத்ஸல்யத்தினால்), அவற்றை யான் பாவமாகக் கருதாமல், புண்ணியமென்று நினையாநிற்கும் போது, இனியும் நீ கவலைப்படுவையோ?' என்கிறான் கண்ணன்.

தோகுப்புரை : 'மாசுச:' என்னும் வாக்கியத்திலிருந்து 'பாபங்களை நான் பொறுத்து' (259 - 262) என்னும் வாக்கியம் வரை, 'உன் காரியத்தில் நீ முயலாமையாலும், அதை யான் மேற்கொண்டு நடத்துகையாலும் நீ கவலையுறுதற்கு மார்க்கமில்லை,' எனக் கண்ணன் அர்ச்சுனன் கவலையைப் போக்குகின்றான் என்பதும்; சேதனன் பாவங்களைப் போக்க முற்பட்டு நிற்கும் தன்னுடைய இயல்புகளையும், பாவங்கள் இவனை வந்தடையாமைக்குக் காரணத்தையும் எடுத்தியம்பி, இவன் துக்கப்படுதற்குக் காரணமில்லை எனக் கண்ணன் இயம்புகின்றான் என்பதும்; 'உன் பாவங்களை மன்னித்து, அவற்றைப் புண்ணியங்களென்று யான் கருதாநிற்க, நீ கவலையுற வேண்டுமோ?' எனப் பகவான் கழறுகின்றான் என்பதை லோகாசாரியர் அறிவிக்கிறார் என்பதும் பகரப்பட்டன.

ஆக, இப்பின் வாக்கியத்திலுள்ள ஐந்து பதங்களாலும், பாவங்களைப் போக்கும் உபாயபூதனான பகவானது இயல்பும், அப்பாவங்களுக்கு இருப்பிடமான சரணாகதனுடைய தன்மையும், பாவங்களின் இயல்பும், அவை ஒழியும் வகையும், அதன் காரண

மாகக் கொள்ளும் கவலையை விடவேண்டிய இன்றியமையாமை யும் வெளிப்படுத்தப்பட்டன.

இனி, இந்தச் சுலோகத்தின் பொருளில் ருசி ஒருவனுக்கு உண்டாவதில் உள்ள அருமையையும்; இந்தச் சுலோகத்திற்கு இன்னதிலே நோக்கு என்பதையும்; இதில் விசுவாசம் பிறப்ப தன் அருமையையும்; பகவான் முதலில் இதை உபதேசியாமைக்குக் காரணத்தையும்; வேதம், மற்றக் கன்மம் முதலிய உபாயங்களை விதிப்பதற்கு மூலத்தையும்; உபாயங்களை அற விட்டுவிடினும் குற்ற மில்லை என்பதையும்; அவை வேறொரு வகையில் செய்யப்பட்டவை யாகுமாதலின், அவை விடப்பட்டவை ஆகா என்பதையும்; பேற்றுக்குச் சாதனமும், பலம் கைகூடுதற்கு இவன் பக்கல் வேண்டுவதும் இன்னவை என்பதையும்; ஈசுவரனுக்கு இவ னுடைய புண்ணியங்கள் விருப்பமற்றவை என்பதையும்; இப் பொருள்களில் நம்பிக்கை ஏற்படின் உய்தலும், நம்பிக்கை ஏற்படாவிடின் அழிதலும் உண்டாகும் என்பதையும்; நம்பிக்கை இல்லாதவன் இதில் நுழைதல் நாசத்திற்கு ஏதுவாகுமென்பதை யும்; இதற்கு அதிகாரிகள் இன்னர் என்பதையும் பிள்ளை லோகா சாரியர் முறையே அருளிச்செய்து இதை முடிக்கிறார்.

அவதாரிகை:- முதலில் இதில் ஒருவனுக்கு ருசி பிறப்பதில் உள்ள அருமையைக் காட்டுவதற்காக ஓர் இதிகாசத்தை (சரிதத்தை) அருளிச்செய்கிறார்:

**மூலம்: 263. "உய்யக்கொண்டார் விஷயமாக உடை யவர் அருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது."**

பொருள்: இந்தச் சூத்திரத்திற்கு விளக்கமாகவே பொருள் கூற வேண்டியிருக்கிறது.

உய்யக்கொண்டார், பத்தியையே கைப்பற்றி இருந்தமையின், இவரைப் பிரபத்தி நிஷ்டராகச் செய்ய வேண்டுமெனக் கருதிய உடையவர், இவருக்கு இந்தச் சுலோகத்தின் பொருளை விளக்கமாக எடுத்துரைத்தார். இதைக் கேட்ட உய்யக்கொண்டார், "பகவா னுக்குப் பாதந்திரமான இவ்வான்மா, உபாயாந்தரங்களை விட்டு, அவ னையே பற்றுகை என்னும் பொருள் மிக அழகாகத்தானிருக்கிறது! ஆயினும், பத்தியை விட்டுப் பிரபத்தியைப் பற்ற என்க்கு ருசி உண்டாகவில்லையே," என விடை இறுத்தார். இதைச் செவியேற்ற

உடையவர், "நீ நன்கு படித்த பண்டிதனுகையால், பொருளின் பெருமையை உணர்ந்து ஒப்புக்கொண்டனே; ஆனல், எம்பெருமான் அருள் வெள்ளம் உன் மாட்டுப் பாயாமையின், உனக்கு அதில் ருசி ஏற்படவில்லே," என இயம்பினர். ஆதலின், இந்தச் சுலோகத்தின் பொருளில் விருப்பம் ஏற்படுவதன் அருமை அறிந்தாம்.

வினு: இந்த உய்யக்கொண்டார் யார்?

விடை: இவர் நாதமுனிகளின் சிஷ்யரான உய்யக்கொண்டாரல்லர். எம்பெருமானுர் காலத்தில், தத்துவ நிர்ணயத்தைப் பண்ணின உய்யக்கொண்டாராவர்.

அவதாரிகை: இந்தச் சுலோகத்திற்கு இன்ன பொருளிலே நோக்கு என்பதை அருளிச்செய்கிருர்:

மூலம்: 264. "இதுக்கு ஈச்வா ஸ்வாதந்த்ர்யத்திலே நோக்கு."

பொருள்: இந்தச் சுலோகம் ஈசுவரனுடைய சுதந்தரத்தன்மையில் கருத்துடையதாய் (நோக்குடையதாய்) உள்ளது.

விளக்கம்: மற்றச் சாத்திரங்கள் யாவும் ஒரு வகையாகவும், இந்தச் சரமசுலோகம் மற்ருெரு வகையாகவும் காணப்படுகின்றன: "சேதனன் நூல்களில் விதிக்கப்பட்ட எல்லாத் தருமங்களேயும் மேற்கொண்டு முயன்றே பேறு பெற வேண்டும்," என மற்றச் சாத்திரங்கள் கூறுகின்றன. இந்தச் சரமசுலோகமோ, ஈசுவரன் சாத்திரங்களில் விதிக்கப்பட்ட எல்லாத் தருமங்களிலிருந்தும் சேதனனே விடுவித்து, இவனுக்கு (சேதனனுக்கு) மற்ருென்றின் உதவியும் வேண்டாமலே, தானே சாதனப் பொருளாய் நின்று, தன்னே அடைதற்குத் தடையாய் நிற்கும் சேதனனுடைய பாவங்கள் யாவற்றையும் போக்கி, தன்னே அடையப் பண்ணிக் கொடுத்து, எல்லாவற்றையும் தன் வசத்தில் நிற்கச் செய்யும் ஈசுவரனுடைய சுதந்தரத் தன்மையிலேயே நோக்காய் நிற்கிறது.

வினு: சாத்திரங்களும் ஈசுவரனுடைய கட்டளேகள் தாமே? அங்ஙனமிருக்க, "அச்சாத்திரங்களில் சொன்ன தருமங்களிலிருந்து இவனே விடுவித்து, தானே சாதனப் பொருளாயிருந்து, இவனே இரட்சிக்கின்றுன்," எனப் பகருதற்குக் கருத்து என்னே?

விடை: ஆன்மாவையும் சரீரத்தையும் சேர்த்து நோக்கு கின்ற அதிகாரிகளுக்குச் சாத்திரங்கள் இன்றியமையாது வேண்டும். அவ்வாறன்றி, சரீரத்தை வேறுபடுத்தி ஆன்மாவை மட்டும் நோக்கும் அதிகாரிக்கு அவை அவசியமானவை அல்ல. ஏனெனில், அப்பிரபன்னர்களைப் பகவான் அத்தருமங்களிலிருந்து விடுவித்து, அவர்கட்குத் தானே நலங்களை உண்டாக்குகிறான்.

அவதாரிகை: இது பகவானாலே விதிக்கப்பட்டது என்பதில் நம்பிக்கை பிறத்தலின் அருமையை அருளிச்செய்கிறார்:

மூலம்: 265. "'இதுதான் அநுவாதகோடியிலே' என்று, வங்கிப்புரத்து நம்பி வார்த்தை."

இதற்குப் பொருளை விரிவாகவே கூற வேண்டியிருக்கிறது. இதன் பொருளை அறிவதற்கு முன்பு விதி அநுவாதம் என்பவற்றைப் பற்றித் தெரிந்துகொள்ளுதல் வேண்டும்.

விதி: முன்பு 'அறியப்படாத ஒரு பொருளைத் தெரிவித்து, இதைச் செய்' எனக் கட்டளை இடுதல்.

அநுவாதம்: அறிந்ததொரு அர்த்தத்தையே திருப்பிச் சொல்லுதல்.

வினா: அங்ஙனமானால், 'ஸர்வ தர்மாந்' என்னும் இவ்வாக்கியம் விதியா, அநுவாதமா?

விடை: பிரபன்னர்களுள் தலைசிறந்தவரும், மிகவும் நம்பத் தகுந்தவரும், யாவராலும் மதிக்கப்பட்டவருமான வங்கிப்புரத்து நம்பி என்பவர், "எல்லா உபாயங்களையும் விட்டு, ஈசுவரனைப் பற்ற வேண்டும்," எனக் கூறும் இந்தச் சுலோகத்தை, அர்ச்சுனன் அறிந்ததையே கண்ணன் இரண்டாமுறை எடுத்துக் கூறினான் எனக் கொண்டு, இதை அநுவாத சுலோகம் எனப் பகர்ந்தனர்.

அவதாரிகை: "அர்ச்சுனன் அறிந்ததையே கண்ணன் சொல்லுகிறான் என்பது யாங்ஙனம்?" என, இயம்புகிறார்:

மூலம்: 266. "அர்ஜுநன் க்ருஷ்ணனுடைய ஆனைத் தொழில்களாலும், ரிஷிகள் வாக்யங்களாலும், க்ருஷ்ணன் தன் கார்யத்திலே அதிகரித்துக் கொண்டு போருகையாலும், 'இவனே நமக்குத்

தஞ்சம்,' என்று துணிந்த பின்பு தன்னைப் பற்றச் சொல்லுகையாலே."

இதற்குப் பொருள் விரிவாகவே கூறுதல் வேண்டும்.

பொருள் : அர்ச்சுனன், இளமை தொடங்கி ஒன்றோடொன்று சேராத பொருள்களை ஒன்று சேர்க்கும் திறம் வாய்ந்தவனும், மனிதரால் இயற்ற இயலாதவற்றை இயற்றக் கூடியவனுமான கண்ணனுடைய அரிய செயல்களை நன்குணர்ந்தவன். கோவர்த்தனத்தைக் குடையாய்ப் பிடித்தல், காளியனுடைய ஆயிரம் பணங்களில் குதித்து நடித்தல், மரித்த ஆசாரியன் புத்திரனையும், வைகுண்டம் சென்ற வைதிக புத்திரர்களையும் மீட்டுக் கொடுத்தல் முதலியவைகளே ஆனைத் தொழில்கள் எனப் பகரப் படும். அன்றியும், அவன் ஈசுவரனுடைய உண்மைத் தத்துவத்தைத் தெரிந்துரைத்த முனிவர்கள் வாக்கியங்களையும் கேட்டறிந்தவன்.

முனிவர்கள் வாக்கியங்கள் : திருப்பாற்கடலை இடமாக வுடைய பெரிய பிராட்டியாரோடுங் கூடிய இந்தக் கிருஷ்ணன், ஆதிசேஷனாகிய கட்டிலை (பலராமனை) முன்னாக விட்டு, மதுரை நகரத்திற்கு எழுந்தருளினனல்லவா?

அணுதியாயும், சர்வாந்தரியாமியாயும் உள்ள ஸ்ரீகிருஷ்ணன் எந்த இடத்தில் இருக்கிறானோ, அந்த இடத்தில் எல்லா உலகங்களும், எல்லாத் தீர்த்தங்களும், எல்லாத் தேவாலயங்களும் இருக்கின்றன.

இந்தக் கோவிந்தன், பவித்திரங்களுக்கெல்லாம் பவித்திரமும், புண்ணியங்களுக்கெல்லாம் புண்ணியமும், மங்களங்களுக்கெல்லாம் மங்களமும் ஆவான்.

உலகங்களையெல்லாம் படைக்கின்றவனும், காக்கின்றவனும், அழிக்கின்றவனும் கிருஷ்ணனே. எல்லாச் சேதநாசேதநங்களும் கிருஷ்ணனை உத்தேசித்தே உண்டானவைகளாகும்.

இன்னும் அர்ச்சுனன், தாங்கள் நாட்டில் உறைந்த போதும், காட்டில் திரிந்த போதும் தங்களுக்கு ஏற்படும் துன்பங்களைத் துடைத்து இன்பங்களை ஊட்டும் காரியத்திலேயே கண்ணும் கருத்துமாக இருக்கும் கண்ணன் செயலைக் கண்கூடாகக் கண்டவன்; ஆதலின், "கண்ணன் சொல்லும் மற்ற உபாயங்கள்

நமக்குத் தஞ்சமல்ல. இவனே நமக்குத் தஞ்சம்," என நன்கு அறிந்தனன். இம்முறையில் அர்ச்சுனன் அறிந்த விஷயத்தையே கண்ணன் திருப்பிச் சொல்லுவதாகக் கொண்டு, இதை அநுவாத வாக்கியம் என்று வங்கிப்புரத்து நம்பி அபிப்பிராயப்படுகிறார்.

இங்ஙனம் அர்ச்சுனன் அறிந்த இதையே, கண்ணன் திருப்பிச் சொல்லுமுகத்தான், "அங்ஙனம் எல்லா உபாயங்களையும் விட்டு என்னையே உபாயமாகப் பற்றினையானால், யான் உன்னுடைய எல்லாப் பாவங்களையும் போக்கி, உனக்கு மோட்சத்தைக் கொடுக்கக் கடவேன். நீ அஞ்ச வேண்டா," எனக் கூறினான் என்னும் கருத்து கொள்ளக்கிடக்கின்றமைதான், வங்கிப்புரத்து நம்பி இதை அநுவாத வாக்கியமாகச் செப்ப இடந்தந்தது.

அவதாரிகை : இப்பிரபத்தி தருமத்தை அர்ச்சுனனுக்கு முதலிலேயே உபதேசம் செய்யாமைக்குக் காரணத்தைப் பகருகிறார் :

**மூலம் : 267. "புறம்பு பிறந்தது எல்லாம் இவன் நெஞ்சைச் சோதிக்கைக்காக."**

பொருள் : தனக்கு அன்பு நிறைந்த சிஷ்யனை அர்ச்சுனனுக்குக் கண்ணன், உபதேசத் தொடக்கத்திலேயே இப்பிரபத்தி உபாயத்தை உபதேசியாது, கன்ம ஞான பத்திகளைப் பரக்க உபதேசித்தது, "அர்ச்சுனன் கன்ம ஞான பத்திகளாகிற உபாயங்களுள் ஒவ்வொன்றுமே சிறந்த உபாயமெனக் கருதி, அவற்றுள் ஏதாவதொன்றிலேயே நிலைத்து நின்று விடுகின்றானோ! அன்றி, அவற்றின் குற்றங்களை அறிந்து, (நாமாகிற) சித்தோபாயத்தைப் பற்றுதற்கு அதிகாரி ஆகின்றானோ!" என அவன் மனத்தைச் சோதித்தறிதற் பொருட்டே என அறிக.

அவதாரிகை : "கண்ணன் அர்ச்சுனன் மனத்தைச் சோதித்தற்பொருட்டு இவற்றை உபதேசித்திருக்கலாம். ஆயினும், வேத புருஷன் இவ்வுபாயாந்தரங்களை ஏன் விதித்தல் வேண்டும்?" என்ன, அதை இயம்புகின்றார் :

**மூலம் : 268. "வேதபுருஷன் உபாயாந்தரங்களை விதித்தது, கொண்டிப் பசுவுக்குத் தடி கட்டி விடுவாரைப் போலே, அஹங்கார மமகாரங்களால் வந்த களிப்பற்று ஸ்வரூபஜ்ஞாநம் பிறக்கைக்காக."**

பொருள் : ஒருவருக்கும் அடங்காமல் தன்னிச்சையில் ஊரெங்கும் மேய்ந்து திரியும் பட்டிப்பசுவை அதனின்றும் விலக்கித் தம் வசப்படுத்தற்கு, அதன் கழுத்தில் தடி கட்டி விடுவாரைப் போன்று, அகங்கார மமகாரங்களால் தன்னிச்சையில் செருக்கித் திரியும் சாமானிய மனிதனுக்கு, அதை நீக்கிச் சொரூப ஞானத்தைப் பிறப்பித்து அவனை நல்வழிப்படுத்தற்கே வேத புருஷன் உடலை வருத்திச் செய்யும் அருஞ்செயல்களாகிற கன்ம ஞான பத்திகளை விதித்தனன். இவற்றால், மக்கட்கு அகங்கார மமகாரங்களால் உண்டாகும் செருக்கு ஒழிந்து, உண்மையான சொரூபஞானம் பிறக்கும் என்பதே அவன் கருத்து.

அவதாரிகை : "இங்ஙனம் சொரூபஞானம் ஏற்படுதற்குக் காரணமாயிருக்கும் இவற்றை விடுதல் குற்றமாகாதோ ?" என்ன, இயம்புகிறார் :

மூலம் : 269. "ஸந்யாஸி முன்புள்ளவற்றை விடுமாப் போலே, இவ்வளவு பிறந்தவன் இவற்றை விட்டால் குற்றம் வாராது."

பொருள் : துறவு நிலையை அடைந்த சன்னியாசி ஒருவன், முன்னிருந்த மற்ற நிலைகளில் தான் கடைப்பிடித்தொழுகிய அறங்களை அறவே விடுதல் போன்று, மற்றத் தருமங்களை மேற்கொள்ளுதல் தன் அத்தியந்த பாரதந்திரிய நிலைக்குச் சேராதென்றும், ஈசுவரனைப் பற்றுதலே தன்னிலைக்கு ஏற்றதென்றும் கருதக்கூடிய இத்துணை உயரிய ஞானம் பிறந்தவன், கன்ம ஞான பத்திகளாகிற உபாயாந்தரங்களை விட்டு விடுதல், குற்றமாகாது.

அவதாரிகை : ஆயினும், இத்தருமங்களை இவன் அற விட்டிலன் என்பதைக் கூறுகிறார் :

மூலம் : 270. "இவன்றான், இவை தன்னை நேராக விட்டிலன்."

பொருள் : மற்ற யாவற்றையும் விட்டு, ஈசுவரனையே உபாயமாகப் பற்றும் இத்துணைச் சீரிய ஞானம் பிறந்த இவன், கன்ம ஞான பத்திகளை அறவே கைவிட்டானில்லை.

விளக்கம் : வினா : அறவே விட்டிலன் 'என்பதற்குக் கருத்து என்னை ?

விடை : விடுதல் என்பது, சொரூபத்தியாகம், புத்தித்தியாகம் என இரு வகைப்படும். இவற்றை முதலில் தெரிந்துகொண்டால்தான் அதன் கருத்து விளங்கும்.

வினு : அங்ஙனமானுல், இவ்விரு தியாகங்கட்கும் பொருள் என்னே ?

விடை : இவ்விரு தியாகங்களேயும் ஒவ்வொன்ருக விளக்குவோம் : இவற்றுள் சொரூபத்தியாகம் என்பது இரு வகைப்படும் :

1. சோரூபத்தியாகம் : பிரபன்னன் ஒருவன், கைங்கரியரூபமாகச் சந்தியாவந்தனத்தைச் செய்கிருன். பிரபன்னன் அல்லாத மற்ருெருவன், தன் சரீர நலங்களேக் குறித்து மேற்படி சந்தியாவந்தனத்தைச் செய்கிருன். இவ்விரு திறத்தினர் செயல்களும் ஒரு தன்மைத்தாய் நமக்குக் காணப்படினும், பகவானுடைய முகமலர்த்திக்காகச் செய்யப்படும் சந்தியாவந்தனமும், தன் தேஜசு முதலியவற்றைக் கருதிச் செய்யப்படும் சந்தியாவந்தனமும் வெவ்வேறு வகைப்பட்டனவே ஆகும். இதை, "உத்தேச்ய பேதாத் கர்ம பேதஃ" என்று சாத்திரமறிந்தவர் கூறுவர்.

இம்முறையில் முன்னவன், பின்னவன் செய்யும் சந்தியாவந்தனத்தை அற விட்டுவிடுகிருன். இஃது ஒரு வகைச் சொரூபத்தியாகம் எனப்படும். இதைத் தருமியை அற விடுவதாகவே கொள்ளலாம்.

2. சோரூபத்தியாகம் : சொரூபமென்பதற்கு, தருமி தருமம் என இரு பொருள்களேயும் கூறலாம். முற்சொன்ன தியாகத்திற்குத் தருமியை விடுதல் என்பது பொருள். இரண்டாவது சொல்லும் தியாகத்திற்குத் தருமத்தை விடுதல் என்பது பொருள். இவை பின்னர் விளக்கப்படும்.

அதிகாரிகள், இம்மை மறுமைப் பயன்களே விரும்பும் சாமானியர், உம்மைப் பயனே விரும்பும் பத்தர், பிரபன்னர் என முத்திறப்படுவர். பிராமண வகுப்பைச் சார்ந்த இம்முத்திறத்தினரும் சந்தியாவந்தனம் என்னும் கருமத்தை மேற்கொள்ளுகின்றனர். இவர்களுள் முதலதிகாரி, "நாம் உடலொளி முதலியவற்றைப் பெற வேண்டும்" என்னும் கருத்துடனும், பத்தன், "இது நமக்கு மனத்தூய்மையை உண்டாக்கிப் பத்திக்குத் துணே புரிய வேண்டும்," என்னும் எண்ணத்துடனும் இதைச் செய்கின்றனர்,

பிரபன்னனோ, "பகவானுக்கு முகமலர்ச்சி உண்டாகவேண்டும்," என்னும் நினைவினாலேயே இதைப் புரிகின்றான்.

இம்முறையில் செயல் புரியும் மூவர் குலமும் ஒன்றே. அக்காரியத்திற்காக இம்மூவர் செய்யும் முயற்சியும் ஒரு திறத்ததே. ஆயினும், முயற்சியின் பயனாகப் பெறும் பேறு வெவ்வேறாய் உள்ளது. முதலதிகாரி செய்யும் செயல் ஐசுவரியத்தையும், பத்தன் செய்யும் செயல் பத்திக்குத் துணை புரிதலையும், பிரபன்னன் செய்யும் செயல் பகவானுடைய முகமலர்ச்சியையும் சாதித்துக் கொடுக்கின்றன. இதை நோக்கின், அந்தந்த அதிகாரி செய்யும் செயலுக்கு, ஐசுவரிய சாதனத்தன்மை முதலியன உண்டெனை அறியலாம்.

எங்ஙனமெனின், ஐசுவரியார்த்தி, பத்திக்குத் துணை புரிதல், பகவான் முகமலர்ச்சியை உண்டு பண்ணுதல் ஆகியவற்றையும், பத்தன் ஐசுவரியத்திற்குச் சாதனமாயிருத்தல், பகவானுடைய கைங்கரியமாயிருத்தல் ஆகியவற்றையும் விட்டுவிடுகின்றனர். பிரபன்னனோ, பகவான் முகமலர்ச்சியை உண்டு பண்ணுதல் என்பதைத் தவிர, மற்ற இருவர் விரும்புவனவற்றையும் அறவே விடுகின்றான். ஆனால், முயற்சியினால் சாதிக்கப்படுவதாய் இருக்கை என்னும் தன்மையோ, மூவர் புரியும் செயலிலும் உண்டு என்பது தெரிகிறது.

வினா : இதுகாறும் சொரூபத்தியாகத்தை இரு வகையாகப் பிரித்துக் காட்டினீர்கள். இதை ஊன்றி நோக்குங்கால், பிரபன்னனிடத்தில் இவ்விரு வகைச் சொரூபத்தியாகங்களும் உண்டு எனத் தெரிகிறது. லோகாசாரியர் சூத்திரத்தை நோக்கினாலோ, சொரூபத்தியாகம் இல்லை என்பது தெரிகிறது. இவ்விரு கருத்துகளும் பொருந்துதல் யாங்ஙனம்?

விடை : சொரூபத்தியாகம் என்னும் சொல்லிற்கு, தருமித்தியாகம் (ஒரு செயலை அறவே விட்டுவிடுதல்) எனப் பொருள் கொள்ளும் போது, பிரபன்னன் அல்லாதவன் செய்யும் சந்தியாவந்தனத்தைப் பிரபன்னன் அறவே விட்டுவிடுகிறான். ஆதலின், இவனிடம் மேற்கூறிய தருமித் தியாகம் உண்டு என்றும் சொல்லலாம். ஆனால், இப்பிரபன்னன் சந்தியாவந்தனம் என்னும் செயலைக் கைவிடாமல் தன்னிலைக்கேற்ப ஆர்வத்துடன் செய்து வருகின்றமையின், "இவன்தான் இவற்றை நேராக விட்டிலன்," என்னும் லோகாசாரியரின் கருத்தும் இங்கு நன்கு பொருந்துவதாகும்.

சொரூபத்தியாகம் என்னும் சொல்லிற்கு, தருமத்தியாகம் என்னும் பொருளைக் கொள்ளும் போது, பிரபன்னன் செய்யும் சந்தியாவந்தனத்தில், ஐசுவரிய சாதனத்தன்மை பத்திக்குத் துணை புரியுந் தன்மை ஆகியவை இல்லையாதலின், மேற்கூறிய சொரூபத் தியாகம் இவனிடத்தில் உண்டு என்று சொல்லலாம். முயற்சியி னாலே சாதிக்கப்படுவதாயிருத்தல், பகவான் முகமலர்ச்சிக்கு ஏது வாயிருத்தல் என்னும் இத்தன்மைகள் இதில் இருக்கின்றமையின், சொரூபத்தியாகம் இல்லை என்னும் கருத்துள்ள 'இவன்றான் இவைதன்னை நேராகவிட்டிலன்' என்னும் லோகாசாரியர் சூத்திர மும் இவனுக்குப் பொருந்துவதாகும். இப்பொருத்தம், இச்சூத்தி ரத்தை ஊன்றி நோக்கின் தெள்ளிதின் புலப்படும்.

வினா: அஃதெப்படி?

விடை: ஒருவன் தாயை அன்புடன் உபசரித்து வருகின் றான். அவனுக்கு யாரேனும், 'தாயை உபசரி' என்று கட்டளை யிடுவரோ? (தாயை உபசரியாதவனிடமல்லவா இக்கட்டளை பிறக் கும்.) அதைப் போன்றே, இஃது அன்பும் ஆதரவும் கொண்டு ஈசுவர கைங்கரியத்தைப் புரியும் பிரபன்னனைக் குறித்துச் சொல்லப் படுவதாதலின், லோகாசாரியர், 'செய்யக் கடவன்,' எனச் சொல் லாமல், 'விட்டிலன்' என இயம்புகின்றார். இப்போது பொருத் தம் தெரிகின்றதன்றோ?

அவதாரிகை: "பிரபன்னன் அன்புடனும் ஆதரத்துடனும் செய்வன் என்பது எங்ஙனே?" என்ன, இயம்புகின்றார்:

**மூலம்: 271. "(1) கர்மம்—கைங்கர்யத்திலே புகும்; (2) ஜ்ஞாநம்—ஸ்வரூப ப்ரகாசத்திலே புகும்; (3) பக்தி—ப்ராப்ய ருசியிலே புகும்; (4) ப்ரபத்தி— ஸ்வரூபயாதாத்ம்ய ஜ்ஞானத்திலே புகும்."**

(1) **கர்மம்—கைங்கரியத்திலே புகும்:** பிரபன்னன், தன் நிலைக்கு ஏற்ப, சாதனபுத்தியை விட்டுப் பிறர் நன்மையின் பொருட்டே செய்யும் கன்மங்கள் கைங்கரியத்தில் அடங்கும்.

(2) **ஜ்ஞானம்—ஸ்வரூப ப்ரகாசத்திலே புகும்:** ஞானயோ கத்தை ஆழ்வார் நுண்ணறிவு என அருளிச்செய்கிறார். இந்த ஞானம், சேதனன் தன் அடிமைத் தன்மையை அறிந்து, பின்பு

எம்பெருமானுடைய தலைமைத் தன்மையைக் கண்கூடாக் காண்கைக்குக் காரணமாயுள்ளதாகும். ஆனால், பிரபன்னனோ, இந்த ஞானம் அதற்குக் காரணம் என நினைக்கமாட்டான். இது சேதனனுடைய அடிமைத் தன்மையை ஒளிரச்செய்வதாகும்.

(3) பக்தி—ப்ராப்ய ருசியிலே அடங்கும்: மிக உயர்ந்த விஷயத்தில் தாழ்ந்தவன் செய்யும் அன்பு பத்தியாகும். இப்பத்தியைத்தான், ஈசுவரனை அடைதற்குச் சிறந்த ஏதுவாக வேதாந்தங்கள் கூறுகின்றன. இத்தகைய பத்தியைப் பிரபன்னன், தன் உய்விற்குச் சாதனமெனக் கருதி மேற்கொள்ளமாட்டான். ஆதலின், இஃது, உணவிற்கு முன் ஏற்படும் பசியைப் போன்று, கைங்கரியத்திற்கு முன் ஏற்படும் வேட்கையிலடங்கும்.

(4) ப்ரபத்தி—ஸ்வரூப யாதாத்ம்ய ஜ்ஞாநத்திலே புகும்: ஈசுவரனையே உபாயமாகப் பற்றும் பற்றுதலாகிற இப்பிரபத்தியில் 'ஏகம்' என்னும் பதத்தில் சொல்லுகிறபடியே உபாயத்துவ புத்தி நீங்கினவுடன், எம்பெருமானுக்கே அத்தியந்த பரதந்திரமாயிருத்தலின், அநந்யசரணத்துவமாயுள்ள தன் ஆன்மாவின் உண்மைச் சொரூபத்தை உணரும் உயர்ந்த ஞானத்தில் இது சேருவதாகும்.

விளக்கம்: வினா: 'ஸர்வ' என்ற சத்தத்திற்குப் பொருள் சொல்லுங்கால், 'உபாய புத்தியைக் கொள்ளாமல், கருணையினாலும் கலக்கத்தினாலும் செய்யும் கன்மங்களும் பாபத்திலேயே சேருவதாகும்,' என இயம்பிவிட்டு, இச்சூத்திரத்தின் முதலில் 'பிறர்மாட்டுண்டாகும் கருணையினால் செய்யுமவை கைங்கரியத்தில் அடங்கும்,' எனச் சொல்லுவது யாங்ஙனம் பொருந்தும்?

விடை: அங்குக் கேவலம் தன் நலத்தைக் கருதிச் செய்வதைச் சொல்லிற்று. இங்கோ, 'நாம் பிறர்பொருட்டு நமக்கு ஏற்ற தருமங்களைச் செய்துகொண்டு போருதல்தான் ஈசுவர முக உல்லாசத்திற்கேதுவாகும்,' என்னும் எண்ணத்தினால் இயற்றுவதைக் காட்டுகிறது. ஆதலின், இரண்டிடங்கட்கும் வேறுபாடு உள்ளதெனக் கொள்க.

பகவான் அர்ச்சுனனுக்கு உபதேசிக்குங்கால், கன்ம ஞான பத்தி பிரபத்தி என்னும் இவற்றை ஒன்றன்பின்னொன்றாக உபதேசித்தான். இம்முறையை மேற்கொண்டே லோகாசாரியர் இச்சூத்திரத்தை அமைத்திருக்கின்றார். ஆனால், ஞானயோகத்தால் தன்

அடிமைத்தன்மையை அறிந்து, பிரபத்தி யோகத்தில் எம்பெருமானே உபாயம் என உறுதி உற்றவன், பத்தி யோகத்தாலே வேட்கை தலையெடுத்துக் கன்மயோகத்தாலே பகவத்கைங்கரியத்தில் தொடர்புற்று இன்பத்தைத் துய்ப்பன் எனக்கொள்வது இங்குப் பொருட்சுவை தருவதாகும்.

அவதாரிகை: "பத்தி பிரபத்திகளையுங்கூட இங்ஙனம் கழித்து விடின், சேதனனுக்குப் பலத்தைக் கொடுப்பதுதான் எது?" என்ன, பகருகிறார்:

**மூலம்: 272. "ஒரு பலத்துக்கு அரிய வழியையும், எளிய வழியையும் உபதேசிக்கையாலே, இவை இரண்டும் ஒழிய பகவத் ப்ரஸாதமே உபாயமாகக் கடவது."**

பொருள்: எம்பெருமானாகிற பலத்தை அடைதற்கு அரிய வழியாகிற பத்தியையும், எளிய வழியாகிற பிரபத்தியையும் கண்ணன் அர்ச்சுனனுக்கு உபதேசிக்கின்றமையின், அருமை எளிமைகளில் நோக்கின்றியே, இவ்விரண்டையும் மேற்போக்காகக் கொண்டு, பயனைத் தரும் ஈசுவரனுடைய அருளையே முக்கியமாகக் கொள்ள வேண்டியிருத்தலின், இவை இரண்டும் நீங்க, பகவானுடைய அருளே உபாயமாகக்கடவது.

விளக்கம்: மேற்குறிப்பித்த இரு வழிகளுள் பத்தி, பல பிறவிகளில் செய்யும் கன்ம ஞானங்களால் மனத்தூய்மை பெற்றவனுக்கே கைகூடுமாதலால், இஃது அரிய வழியாகும். எல்லாத் தருமங்களையும் அறவே விட்டு, பகவான் திருவடிகளையே உபாயமாகப் பற்றுதலாகிற இப்பிரபத்தியோ, இப்பிறவியிலேயே கூடுமாதலின், இஃது எளிய வழியாகும். ஆயினும், இவற்றின் அருமை எளிமைகளில் நாம் மனத்தைச் செலுத்த வேண்டிய அவசியமே இல்லை.

வினா: ஏன்?

விடை: என்னெனில், பொருளில் இயம்பியவாறு எம்பெருமான், நாம் செய்யும் பத்தியையும் பிரபத்தியையும் மேற்போக்காகக் கொள்ளுகின்றனனே தவிர, இவற்றை முதன்மையாகக் கொண்டு காரியஞ் செய்தலில்லை. ஆகலின், "சேதனன் பயனடைதற்குப்

பத்தி பிரபத்திகளாகிற இவை இரண்டும் உபாயமாகாமல் கழிந்து, எம்பெருமான் அருளே உபாயமாகிறது,'' என அறிதல் வேண்டும்.

அவதாரிகை: “ஆயினும், சேதனன் புருஷார்த்தத்தைப் பெறுதற்கு இவனிடம் ஏதேனும் ஒரு முயற்சி ஏற்பட வேண்டாவோ?” என்ன, இயம்புகிறார்:

**மூலம்: 273. “பேற்றுக்கு வேண்டுவது - விலக்காமையும் இரப்பும்.”**

பொருள்: எம்பெருமான் சேதனனைப் பாதுகாக்க வருங்கால், தன் முயற்சியினால் அவனைத் தடுக்காமையும், அப்பேறு புருஷார்த்தமாதற்பொருட்டு இரத்தலும் ஆகிய இவ்விரண்டுமே இவனுக்குப் போதியனவாகும்.

அவதாரிகை: இங்ஙனன்றிக்கே, ஈசுவரன் நம்மைப் பாதுகாத்தற்கு நம்மிடமும் சில நலன்கள் வேண்டும் என இவன் எண்ணில், அஃது எம்பெருமான் வெறுப்பிற்கிடமாகும் என்கிறார்:

**மூலம்: 274. “சக்கரவர்த்தித் திருமகன் பாபத்தோடே வரிலும் அமையுமென்றான்; இவன் புண்யத்தைப் பொகட்டு வரவேணுமென்றான்.”**

பொருள்: சக்கரவர்த்தித் திருமகன், ‘சேதனன் இயற்றிய பெரும் பாவத்தோடு வரினும், ஏற்றுக்கொள்ளுகிறேன்,’ என்றான். கண்ணனே, ‘புண்ணியங்கள் யாவற்றையும் விட்டே என்னைப் பற்ற வேண்டும்,’ என்றான்.

விளக்கம்: ஸ்ரீராமபிரான், விபீடணன் தன்னைச் சரணம் பற்றி நிற்கும் போது, அவனை அழைத்துவரச் சுக்கிரீவனை ஏவுங்கால், “அவன் விபீடணன் அல்லனாய், உலகத்தாரைத் தன் கொடுஞ்செயலால் கதறச்செய்யும் இராவணனாகவே இருப்பினும் அழைத்து வாரும்,'' எனச் செப்புகிறான். ஆதலின், பாவம் பேற்றை இழப்பதற்குக் காரணமாகாது'' என்பதை அறிந்தாம்.

கண்ணனே, ‘ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய’ என்று, “பேற்றிற்குக் காரணமாயுள்ள புண்ணியங்களையும் அறவே விட்டு என்னைப் பற்ற வேண்டும்,'' என இயம்புகிறான். இதனால், “வேறொரு

உதவியையும் விரும்பாத ஈசுவரனுக்கு, இவனிடம் ஏற்படும் நற் கருமங்களாலும் பயனில்லை,'' எனத் தெரிந்து கொண்டோம்.

அவதாரிகை: "இப்பொருளின் நுட்பத்தை அறிந்தவன் ஆத்திகனாய் உய்தல், அல்லது நாத்திகனாய் நசித்தல் தவிர, இடையில் வேறொரு நிலையும் இல்லை,'' என்பதைப் பூர்வாசாரியர் வாக்கால் அறிவிக்கிறார்:

**மூலம்: 275. "'ஆஸ்திகனாய் இவ்வர்த்தத்தில் ருசி விச்வாஸங்களுடையனாய் உஜ்ஜீவித்தல், நாஸ்திகனாய் நசித்தல் ஒழிய நடுவில் நிலையில்லை' என்று பட்டருக்கு எம்பார் அருளிச்செய்த வார்த்தை."**

பொருள்: இச்சூத்திரத்திற்கு விளக்கமாகவே பொருள் சொல்ல வேண்டியிருக்கிறது. எல்லாத் தருமங்களையும் அறவே விட்டு ஈசுவரனையே உபாயமாகப் பற்றுதலென்னும் நுட்பப் பொருளை மனங்கொண்டவன், "ஈசுவரனுடைய வன்மையினால் எக்காரியந்தான் முடியாது! எல்லாம் கூடும்,'' என உறுதி கொண்டு இப்பிரபத்தி விஷயத்தில் ருசியும், இது தவறாது என்னும் நம்பிக்கையும் பெற்று ஆத்திகனாய் உய்வடைதல் ஒரு வழி. அன்றி, "மற்றச் சாத்திரங்களெல்லாம் கரும ஞான பத்திகளைப் பரக்க அறையா நிற்க, இச்சரமசுலோகம் மட்டும் அவைகளை அறவே விட்டுவிட்டு எம்பெருமானைப் பற்று என அறைவதால், இது சாத்திரத்தில் நிச்சயிக்கப்பட்டதென நம்புதல் யாங்ஙனம்?'' என ஐயங்கொண்டு நாத்திகனாய், இதைக் கைவிட்டு நசித்தல் மற்றொரு வழி. ஆகிய இவ்விரு வழிகளுள் ஏதாவதொன்றில் சேதனர் நுழைந்து நிற்பர். இங்ஙனம் சேதனர், இவ்விரண்டனுள் ஒன்றில் நிற்றல் தவிர, ஐசுவரிய கைவல்யங்களில் புகுதல் இல்லை.

வினா: என்?

விடை: ஆத்திகர், தாம் கருத்தா என்னும் எண்ணத்தைக் கொண்டும், பலத்தைக் கருதியும் கன்மம் முதலிய உபாயங்களைச் செய்யாமையின், இவர்களுக்கு ஐசுவரிய கைவல்லியங்கள் உண்டாதல் இல்லை.

நாத்திகனோ, 'ஈசுவரன், நான் செய்யும் எளிய செயலிற்கும் ஐசுவரியம் கைவல்லியம் முதலிய பெரும்பலன்களைக் கொடுக்

வல்லவன்,' எனக் கூறும் பொருளில் நம்பிக்கை கொள்ளாமை யின், இவனுக்கும் அந்த ஐசுவரிய கைவல்லியங்கள் ஏற்படுதல் இல்லை. இவ்வர்த்தத்தைச் சகல சாத்திரங்களிலும் வல்லுனரான பட்டருக்கு, ஆப்தர்களில் சிறந்த எம்பார் அருளிச்செய்தனர்.

அவதாரிகை : 'நம்பிக்கை அற்றவனுக்கு இப்பிரபத்தியின் தொடர்பு நாசத்திற்குறுப்பாகும்,' என்பதை உதாரணமுகத்தான் விளக்குகிறார் :

**மூலம் : 276. "வ்யவஸாயம் இல்லாதவனுக்கு இதில் அந்வயம், ஆமத்தில் போஜநம் போலே."**

பொருள் : இச்சரமசுலோகத்தில் குறிப்பிடும் எல்லாத் தருமங்களை விட்டே ஈசுவரனைப் பற்றுதலாகிய பிரபத்தியினிடம் ஊன்றிய நம்பிக்கை அற்றவனுக்கு, இதில் உண்டாகும் தொடர்பு, செரியாத போது உண்ட உணவு மரணத்தை உண்டாக்குதல் போன்று, அழிவிற்குக் காரணமாய் முடியும்.

அவதாரிகை : இதற்கு அதிகாரிகள் இன்னார் என்பதை அருளிச்செய்கிறார் :

**மூலம் : 277. "'விட்டுசித்தர் கேட்டிருப்பர்' என்கிற படியே, அதிகாரிகள் நியதர்."**

பொருள் : 'விட்டுசித்தர் கேட்டிருப்பர்' என்னும் ஆண்டாள் பாசுரத்தின்படியே, இவ்விஷயத்தில் நம்பிக்கை வைத்து ஒழுகும் அதிகாரிகள் மிகச் சிலரேயாவர்.

விளக்கம் : வினா : அங்ஙனமாயின், இதற்குத் தக்க அதிகாரிகள்தாம் யாவர் ?

விடை : மனம் வாக்குக் காயங்களாகிற திரிகரணங்களாலும் செவ்வியனும் கோவிலில் சாய்ந்தருளியவனுமாகிய கண்ணன், தேர்த் தட்டிலே நின்று அருளிச்செய்ததும், சத்தியமானதும், சீரியதும், எளிமையானதுமான "மாமேகம் சரணம் வ்ரஜ" என்னும் வார்த்தையைக் கேட்டு அதன்படி ஒழுகுபவராய் இருக்கும் பெரியாழ்வாரைப் போன்ற அதிகாரிகள், இதன்படியே நடக்கும் நியதி உள்ளவராய் இருப்பர்.

இக்கருத்தை,

"செம்மை யுடைய திருவரங்கர் தாம்பணித்த
மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்.[1]"

என்னும் ஆண்டாள் பாசுரத்தில் காண்க.

அவதாரிகை: இப்பொருளைப் பின்பற்றிய ஆழ்வார்களுடைய அருளிச்செயலில், இதற்கு அர்த்தமாக அநுசந்திக்கப்படுமவற்றை அருளிச்செய்து இதுதன்னை முடிக்கிறார்:

**மூலம்: 278. "'வார்த்தையறிபவர்' என்கிற பாட்டும், 'அத்தனாகி' என்கிற பாட்டும் இதுக்கு அர்த்தமாக அநுஸந்தேயம்."**

பிள்ளை லோகாசாரியர் திருவடிகளே சரணம்.

பொருள்: 'வார்த்தை அறிபவர்' என்னும் திருவாய்மொழிப் பாசுரமும், 'அத்தனாகி' என்னும் திருச்சந்தவிருத்தப் பாசுரமும் இதற்குப் பொருளாக அநுசந்திக்கக்கடவன.

விளக்கம்: மக்கள் வாழ்க்கையை ஊன்றி நோக்கில், பரணிக் கூடு போன்று, பல பிறவிகள் ஆன்மாவைச் சூழ்ந்துகொண்டுள்ளன. பிறவியில் நுழைந்ததும், நோய்களும், முதுமையும், மரணமும் ஒன்றன்பின்னொன்றாகத் தொடர்கின்றன. இங்ஙனம் பல சூழல்களில் அகப்பட்டுச் சஞ்சலப்பட்டுக்கொண்டிருக்கும் மனிதனிடம் இறைவன் இரக்கங் கொள்ளுகின்றான்; அதனால் அவன், கூர்ந்த மதியுடையவனும், தொழில் செய்ய வல்லவனுமான ஒருவன் பெரிய சுவரையும் ஓர் இமையில் தள்ளிவிடுதல் போன்று, மேற்கூறிய இவன் தொல்லைகள் பலவற்றையும் ஒரு விநாடியில் போக்கிவிடுகின்றான்; அன்றியும், கைவல்லியமாகிற பெருந்துக்கத்தையும் வாசனையோடு ஒழித்து, பாதரேகையைப் போன்று தன் திருவடிகளில் இவன் சேருமாறு செய்து திரும்பவும் பிறத்தலை ஒழித்து இரட்சிக்கின்றான். இங்ஙனம் எம்பெருமான் தனக்குச் செய்த நலங்களை நன்குணர்ந்தவர், அத்தகையவனுக்கு அல்லாமல் மற்றவருக்கு ஆளாவரோ! என்னும் கருத்தை ஆழ்வார் கீழ்ப் பாசுரத்தில் தெரிவிக்கிறார்.

---

1. நாய்ச்சியார் திருமொழி—10; 10.

"வார்த்தை யறிபவர் மாயவற் காளன்றி யாவரோ
போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பிவை
பேர்த்து பெருந்துன்பம் வேரற நீக்கித்தன் தாளின்கீழ்ச்
சேர்த்து, அவன்செய்யும் சேமத்தை எண்ணித் தெளிவுற்றே."[1]

எம்பெருமான், ஆன்மாக்கள் யாவும் ஒருதன்மையனவாயிருப்பினும், தேவர், மனிதர், நரகர் என்னும் முறையால் வேறுபட்டிருக்கும் பல வகைப்பட்ட பிறவிகளையும் போக்கி, என்றும் சமுசாரிகளாய் உழன்றுகொண்டிருக்கும் நம்மை நித்திய சூரிகளின் கோர்வையில் சேர்க்கின்றான். அன்றியும், அச்சூரிகள் புரியும் ஈசுவரக் கைங்கரியத்தில் நாம் நுழையுமாறு செய்து, நமக்கு இதத்தைப் புரியும் தந்தையாயும், பிரியத்தையே செய்யும் தாயாயும், அடிமையைக் கொள்ளும் சுவாமியாயும் இருக்கின்றான்.

"இங்ஙனம் எல்லாவிதச் சுற்றமாய் நம்முடைய தாழ்வையும், தன்னுடைய பெருமையையும் நோக்காது, எல்லாப் பாரத்தையும் தாமே ஏறிட்டுக்கொண்டு, அற்பத் தன்மை வாய்ந்த நம்முள்ளே புகுந்து ஒரு நீராகக் கலந்துள்ளான். அங்ஙனமிருக்க, அறிவிலியான நெஞ்சே, நீ எதன்பொருட்டுத் துன்பக் கடலில் கிடக்கின்றனை!

"அன்றி, நமக்கு எது நன்மை என அறிதற்கு நாம் ஞானிகளோ! அவன் அறிவினனே! நம் நலத்தைத் தேடிக் கொள்ளுதற்கு நாம் வன்மையுற்றவரோ! அவன் வன்மையற்றவனே! நமக்கு ஆக வேண்டிய காரியங்களைச் செய்துகொள்ளுதற்கு நாம் உரியவரோ! அவன் உரிமையற்றவனே! தன் மேன்மையையும் பாராது தாழநின்று நமக்கு உதவிபுரிதற்கு எம்பெருமானாகிய அவன் இருக்குங்கால், நெஞ்சே, நீ ஏன் வருந்த வேண்டும்?" என்கிறார்:

"அத்த னாகி யன்னை யாகி யாளு மெம்பி ரானுமாய்
ஒத்தொவ் வாத பல்பி றப்பொ ழித்து நம்மை யாட்கொள்வான்
முத்த னார்மு குந்த னார்பு குந்து நம்முள் மேவினார்
எத்தி னாலி டர்க்க டல்கி டத்தி யேழை நெஞ்சமே,"[2]

சரம சுலோகத்தின் பொருள் முற்றுப் பெற்றது.

---

1. திருவாய்மொழி—7 : 5 : 10.
2. திருச்சந்த விருத்தம்—115.

ஸ்ரீ:

# மூல முதற்குறிப்பகராதி

—— :o: ——

# பிழையும் திருத்தமும்.

| பக். | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| ii | 21 | முற்கூறியபடி | |
| 8 | 3 | தன்னையும் | ஈசுவரனுகிற தன்னையும் |
| 10 | 5 | சிஷயன் | சிஷ்யன் |
| 11 | 4 | எனெனில் | |
| 13 | 26 | சிறந்ததாய் | சிறந்தனவாய் |
| 15 | 2 | மதத்தினர் | மதத்தினரும் |
| ,, | 26 | இச்சத்தத்திற்கு | ஆதலின் இதற்கு |
| 17 | 21 | வியுற்பத்தியில் | கர்த்தரிவியுற்பத்தியில் |
| 18 | 10 | பகவற் சத்தம் | பகவச் சத்தம் |
| ,, | 21, 28 | சத்தை | சத்தையை |
| 19 | 6 | தைத்ரியோபநிஷத்து | தைத்திரீயோபநிஷத்து |
| 21 | 14 | நாராயணன் | நாரணன் |
| 22 | 2 | ஹ்ரஸ்தனுனும் | ஹ்ரஸ்த்தனுனும் |
| ,, | 6 | சொன்வர்களுடைய | சொன்னவர்களுடைய |
| 24 | 15 | பிரேமத்தோடே | ப்ரேமத்தோடே |
| ,, | ,, | வேண்டும் | வேணும் |
| 33 | 2 | முதல்வாக்கியம் | முதல் வாக்கியத்தில் |
| 34 | 4 | என்பது | என்பதை |
| ,, | 13 | உபாயருகினுன் | உபாயமாகிறுன் |
| 35 | 22 | அவ்வர்த்தகங்களை | அவ்வர்த்தங்களை |
| 38 | 30 | தோற்றுதுவித்தான் | தோற்றுவித்தான் |
| 40 | 26 | சித்தாத்தம் | சித்தாந்தம் |
| 43 | 8 | பிரகிருதி சத்தியினுலும், நாராயண பதத்திற்கு ஸங்க்ரஹமாயிருப்பதனுலும் அகாரம் காரணப் பொருளான எம்பெருமானைக் குறிக்கிறதெனக் கொள்ள வேண்டும் | |
| 44 | 17 | ஓட்டுகின்றதில்லை | ஒட்டுகின்ற தில்லை |

| ப-ம். | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| 45 | 1 | கீழ்ச் சூத்திரத்தில் | முன்பு |
| ,, | 5 | ஈசுவரனுகவே உள்ளான் | ஈசுவரனே ஆவான் |
| 50 | 8 | ச்ரியத | ச்ரீயத |
| 55 | 29 | ஆகப் பிரிந்து | ஆகப் பிரித்து |
| 56 | 27 | முப்பத்திரண்டாம் சூத்திரத்திலிருந்து நாற்பத்தேழாம் சூத்திரம் (32—47) வரையும் பகர்ந்தவற்ருல், இத்திருமந்திரத்திற்கு முதல் பதமான பிரணவத்தில், அ, உ, ம என்னும் மூன்று அட்சரங்கள் அமைந்துள்ளனவென்றும்; இம்மூன்று எழுத்துகளும் மூன்று வேதங்களிலிருந்து எடுக்கப்பட்டமையின் இப்பிரணவம் எல்லா வேதங்களின் ஸாரமென்றும் | முப்பத்தைந்தாம் சூத்திரத்திலிருந்து நாற்பத்தேழாம் சூத்திரம் (35—47) வரை பகர்ந்தவற்ருல் |
| 61 | 25 | விளக்கம் | பொருள் |
| ,, | 26 | வேற்றுமையினுல் | வேற்றுமையில் |
| 65 | 12 | ஆக்ரம் | ஆகாரம் |
| ,, | 14 | ஆக்ரம் | ஆகாரம் |
| 71 | 3 | என்பதை | என |
| 72 | 1 | உகார | உகார: |
| ,, | ,, | சித்ஸ்வரூப யா: | சித்ஸ்வரூபாயா: |
| 73 | 32 | தேவர்களுக்கு சேஷமான | தேவர்களுக்குச் சேஷமான |
| 74 | 1 | ஸம்ஸாரிகளுக்கு சேஷமாக்குகை | ஸம்ஸாரிகளுக்குச் சேஷமாக்குகை |
| ,, | 18 | எம்முறையிலும் | எம்முறையிலேனும் |
| 84 | 31 | ஞானத்திற்கிருப்பிடமாயுமிருத்தலின் | ஞானத்தைக் குறிப்பதாயுமிருத்தலின் |
| 85 | 15 | பாவத்தின் தொடர்பு | பாவமாகிய தொடர்பும் மிதுன சேஷித்துவமும் |
| 94 | 30 | என்பது இதில் | என |
| 96 | 22 | ஸத்தாஸ்திகளும் | ஸத்தாஸ்திதிகளும் |

| ப-ம். | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| 98 | 8 | முன்னர் செப்பியவாறு | |
| 116 | 31 | சுதந்திர | சுதந்தர |
| 133 | 25 | சொலுகிறார் | சொல்லுகிறார் |
| 135 | 17 | இயல்பி | இயம்பி |
| ,, | 32 | நடைபெற | நடக்க |
| 147 | 12 | கொண்டதே | கொண்டே |
| 166 | 9 | ஸக்ஷாத் | ஸாக்ஷாத் |
| 176 | 12 | அருடன்மை | அருட்டன்மை |
| 183 | 5 | சேஷத்துவத் தொடர்பு | சேஷித்துவத் தொடர்பு |
| 184 | 27 | அரச்சாவதாரமோ | அர்ச்சாவதாரமோ |
| ,, | 30 | யாவருடய | யாவருடைய |
| 192 | 6 | சொல்லி பழித்த | சொல்லிப் பழித்த |
| 194 | 12 | சரணம் என்னும் சொல்லுக்கு | ஸ்ரீமந் நாராயண சரணௌ என்னும் சொற்றொடருக்கு |
| 199 | 31 | இககேள்விக்கு | இக்கேள்விக்கு |
| 203 | 19 | இவன | இவன் |
| 206 | 16 | என்றார் | என்றான் |
| 210 | 2 | தான் | இவர் முன்னிலையில் |
| 212 | 11 | நாராயணப் பதப்பொருள் | நாராயண பதப்பொருள் |
| 218 | 3 | எனக் அருளியபடியே | என அருளியபடியே |
| 226 | 15 | பரித்ஜ்ய | பரித்யஜ்ய |
| 245 | 1 | என்பது | என்பதும் |
| 247 | 20 | பிராட்டியாரோ | பிராட்டியாரே |
| 248 | 4 | என்னும் | என்று |
| 256 | 4 | 125 | 225 |
| 258 | 12 | இதற்குச் திரிசங்கு | இதற்குத் திரிசங்கு |
| 267 | 28 | இருக்க | இருக்கும் |
| 268 | 28 | அச்சந்திரதானை | அச்சந்திரத்தானை |
| 276 | 28 | போக்கிக் காக்கின்றேன் எனக் கண்ணன் கூறுகிறானென்றும் | |
| 278 | 19 | ஆசனுக்கு | அரசனுக்கு |
| 279 | 10 | பயனளிக்ரும் | பயனளிக்கும் |
| 298 | 10 | கொள்ளக் கிடக்கின்றமை தான் | கொள்ளக் கிடக்கின்றமையால் |

# திருமலை-திருப்பதி தேவஸ்தானத்தின் வெளியீடுகள்.

—∞∞—

## தமிழ்.

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| திருவேங்கட தலபுராணம் (வசனம்) | ... | 0 | 8 |
| ,, (செய்யுள்) | ... | 1 | 0 |
| ஸுப்ரபாதம் | ... | 0 | 1 |
| திருவேங்கடமுடையான் விஷயமாக—ஆழ்வார்களின் அருளிச் செயல்கள் (தமிழ்) | ... | 0 | 4 |
| "திருப்பாவை" திருப்பள்ளியெழுச்சியுடன் | ... | 0 | 2 |
| நித்யாநுஸந்தானம் (தமிழ்) வடகலை | ... | 0 | 8 |
| ,, ,, தென்கலை | ... | 0 | 10 |
| திருக்குறள் காமத்துப்பால் | ... | 2 | 0 |
| ,, பொருட்பால் (அறத்துப்பால் பகுதியுடன்) | ... | 4 | 0 |
| செவ்வைச்சூடுவார் பாகவதம் (முதல் ஒன்பது கந்தங்கள்) | ... | 8 | 0 |
| ,, (2-பாகம்) | ... | அச்சில் | |
| சங்கரவிலாசம் | ... | 3 | 4 |

## இங்கிலீஷ்.

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| திருப்பதி சரித்திரம் 2-வால்யம் செட் | ... | 5 | 0 |
| ,, பிரதி 1-க்கு | ... | 3 | 0 |
| திருப்பதி—(A guide book) | ... | 0 | 4 |
| திருப்பதி தேவஸ்தானத்தின் சிலாசாசனங்களைப் பற்றிய அறிக்கை, (இங்கிலீஷ்) | ... | 4 | 0 |
| திருப்பதி தேவஸ்தானத்தின் சிலாசாசனங்கள், தொகுதி 1-லிருந்து 5, 6-ல் பாகம் 1, 2-ம் பிரதி 1-க்கு | ... | 3 | 0 |

N.B:—இதர ஸம்ஸ்கிருத, தெலுங்கு புஸ்தகங்களும் கிடைக்கும். விவரங்களுக்கு எக்ஸிக்யூடிவ் ஆபீஸர் திருமலை—திருப்பதி தேவஸ்தானம், திருப்பதிக்கு எழுதவும்.